## ஆசிரியர் முன்பு வெளியிட்ட நூல்கள்

- சந்திரமௌலீசர் ஆலய வரலாறு
- ஆனைவிழுந்தான் விநாயகர் ஆலய வரலாறு
- கந்தபுராணச் சிந்தனைகள்
- மகா சிவராத்திரி
- மூவர் தமிழ்
- சூரசங்காரம்
- திருமுறை போற்றுந் தெய்வம்
- திருமந்திரத்தில் வாழ்வியல்
- பன்றித்தலைச்சியில்
  கண்ணகி வழிபாட்டுக் கோலங்கள்

உ
சிவமயம்

# சிவஞானபோதச் சிற்றுரை

எளிய நடையில் எழுதப்பட்டது

மட்டுவில் ஆ.நடராசா

வெளியிடுபவர் :
நூலாசிரியர்

சிவஞானபோதச் சிற்றுரை
எளியநடையில் எழுதப்பட்டது



முதற்பதிப்பு - 2008

ISBN 978-955-99808-1-0

இலங்கைத் தேசிய நூலகம் -
வெளியீடுகளில் உள்ள பட்டியற் தரவு

நடராசா, ஆ
சிவஞானபோதச் சிற்றுரை : எளியநடையில் எழுதப்பட்டது / ஆ.நடராசா. - வெள்ளவத்தை : நூலாசிரியர், 2008. - ப. 304; ச.மீ. 21

ISBN 978-955-99808-1-0 விலை : 400.00

i. 294. 5513 டிடிசி21 ii. தலைப்பு

1. சிவசமயம்

அச்சகம் : றெக்னோ பிரின்ட்
55, ஈ.ஏ.கூரே மாவத்தை
கொழும்பு - 06, ஸ்ரீலங்கா

வெளியீடு: நூலாசிரியர் மட்டுவில் ஆ.நடராசா
25 1/2, ஈ.எஸ். பேணான்டோ மாவத்தை
கொழும்பு - 06, ஸ்ரீ லங்கா

## நூற்சிறப்பு

வேதம் பசுவதன்பால் மெய்யா கமநால்வ
ரோதுந் தமிழதனி னுள்ளூறு நெய் - போதமிகு
நெய்யி னுறுசுவையா நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்ததமிழ் நூலின் றிறம்.

உ

குருபாதம்


**நல்லை திருஞானசம்பந்தர் ஆதீனம்**

**ஸ்தாபகர் ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாததேசிக ஞானசம்பந்த பரமாச்சாரிய சுவாமிகள் குருமஹா சந்நிதானம்ஆதிமுதல்வர். ஆதீனமுதல்வர் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரதேசிக ஞானசம்பந்த பரமாச்சாரிய சுவாமிகள் இரண்டாவது குருமஹா சந்நிதானம்**

**பருத்தித்துறை வீதி, நல்லூர், யாழ்ப்பாணம். இலங்கை.**


# அருளாசிச் செய்தி

அன்புசார் பெருந்தகையீர்,

சிவஞான போதச் சிற்றுரை நூல் வெளியிடுவதையிட்டு மகிழ்ச்சி அடைகின்றோம். சைவ சமயத்தின் ஆணி வேராகத் திகழும் சிவஞானபோதம் இன்றைய தலைமுறையினருக்கு விளங்கும் வகையில் இலகு தமிழில் எழுதப்பட்டு வெளிவருவது அனைவரது மனத்துக்கும் மகிழ்ச்சியைத் தருவதாகும்.

பல அறிவு சார்ந்த நூல்களை எழுதி வெளியிட்ட பெருமைக்-குரிய, யாழ்ப்பாணத்தில் மட்டுவில் கிராமத்திற் பிறந்த திரு. ஆ.நடராசா அவர்களின் சிந்தனையில் உதித்த சிவஞானபோத உரைநூல் மெய்-கண்ட தேவரால் அருளிச் செய்யப்பட்ட பன்னிரண்டு சூத்திரங்களை-யுடையது. குரு லிங்க சங்கம வழிபாட்டை உணர்த்தும் வகையில் சிவஞானபோதங் கூறுங் கருத்துக்கள் அரிய பிறவியாகிய மானிடராகப் பிறந்தவர்களின் ஆன்ம ஈடேற்றத்துக்குரிய வழியை வெளிப்படுத்திக் காட்டுவனவாகும். சமய பொக்கிசமான சிவஞான போதத்தைப் படித்துப் பயன்பெறுவது அனைவரதுங் கடமையாகும். இதனை வெளிக்கொணரும் திரு.ஆ.நடராசா அவர்களை வாழ்த்திப் பாராட்டுகின்றோம். இந்நூல் சிறப்பாக வெளிவந்து அனைவரும் பயன்பெற இறைவன் ஆசீர்வதிப்பாராக.

என்றும் வேண்டும் இன்ப அன்பு

**ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர பரமாச்சாரிய சுவாமிகள்**

08-05-2007

உ
சிவமயம்

துர்க்கா துரந்தரி, சிவத்தமிழ்ச் செல்வி
கலாநிதி செல்வி தங்கம்மா அப்பாக்குட்டி, J.P அவர்கள் வழங்கிய

# வாழ்த்துரை

இந்த மண்ணை அணிசெய்பவர்கள் அறிஞர்கள் ஆவர். சைவச் சான்றோனும் சிந்தாந்தப் பேரறிஞனுமாக விளங்குகின்ற பெரியார் உயர்திரு ஆ.நடராசா அவர்களை நான் மனமாரப் பாராட்டுகிறேன். ஆழ்ந்த சித்தாந்த அறிவினாலும் கட்டுரை எழுதும் சிறப்பினாலும் முதன்மை பெற்ற பேரறிஞர்கள் சிலரை மட்டுவில் மண் எமக்குத் தந்துள்ளது.

பண்டிதமணி சி.கணபதிப்பிள்ளை ஐயாவைப் போன்ற ஒரு சிலரை நான் குறிப்பிடாமல் இருக்க முடியாது. பெரும்புலவர் மட்டுவில் க.வேற்பிள்ளை அவர்கள் கற்றறிந்தோர் அனைவராலும் உச்சிமேற் கைவைத்து வணங்குதற்குரியவர். இந்த வகையில் தற்போது மட்டுவில் ஆ.நடராசா அவர்களை நான் பாராட்டிப் போற்றுகிறேன். திருமுறைகளையும் புராணங்களையும் நன்கு கற்றுத் தெளிந்தவர் இவர். அத்துடன் சைவ சித்தாந்த சாத்திரங்களில் ஊறித் திளைத்தவர் இவர். "தோத்திரமும் சாத்திரமும் ஆனாய் நீயே" என்ற பாடல் அடிக்கு ஏற்ப சிவ பரம்பொருளை தோத்திர சாத்திர வடிவில் கண்டு களித்தவர் இவர். இப்பெரியாரால் எழுதி வெளியிடப்பட்ட மூவர் தமிழ், திருமுறை போற்றுந்தெய்வம், சூரசங்காரம் ஆகியவை எடுத்துக் காட்டாக அமைந்துள்ளன.

இதன் விளைவாக சிவஞானபோதம் என்ற சைவசித்தாந்த சாத்திர நூலுக்கு சிற்றுரை ஒன்றை மிக விரிவாக எழுதி வெளியிடும் பாக்கியம் இவருக்குக் கிடைத்துள்ளது. சிவஞானபோதம் இறுதிச் சூத்திரம் படிப்பவர்கள் மனதை பெரிதும் ஈர்ப்பதாகும்.

*"செம்மலர் நோன்றாள் சேரலொட்டா*
*அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ*
*மாலற நேய மலிந்தவர் வேடமும்*
*ஆலயந் தானும் அரனெனத் தொழுமே"*

நூலின் பன்னிரண்டாம் சூத்திரம் இதுவாகும். சிவனடியார் வேடத்தையும் திருக்கோயில்களையும் சிவனெனவே கண்டு வழிபட வேண்டும் என்பது மெய்கண்டார் அருட் கட்டளை ஆகும். அந்த வகையில் மட்டுவில் ஆ.நடராசா அவர்களை எனது மனம் வாக்கு காயம் மூன்றினாலும் வழிபட்டு நிற்பது ஒன்றே எனது தலையாய கடனாகும்.

வணக்கம்.

**கலாநிதி, செல்வி.தங்கம்மா அப்பாக்குட்டி**
சமாதான நீதிபதி,
தலைவர், ஸ்ரீ துர்க்கா தேவி தேவஸ்தானம்,
தெல்லிப்பழை, ஸ்ரீ லங்கா.

06-05-2007

உ
சிவமயம்

# முன்னுரை

புறச்சந்தான பரம்பரையின் முதல்வர் மெய்கண்டதேவ நாயனார். அவரால் அருளிச் செய்யப்பட்டது சிவஞானபோதம்.

சனகர் முதலிய முனிவர்கள் நால்வருக்கும் வேத வேதாந்தங்களைக் கற்றுத் தீராத மலைவைத் தீர்த்தற் பொருட்டு, கல்லால மரநிழலில் எழுந்தருளியிருந்த தட்சணாமூர்த்தியின் திருக்கரத்தில் இருந்தது சிவஞான போதம்.

மாணிக்கவாசக சுவாமிகளுக்கு அருள்புரியும் பொருட்டு எழுந்தருளி வந்து குருந்தமர நீழலில் வீற்றிருந்த குருமூர்த்தி தன் திருக்கரத்தில் தரித்திருந்தது சிவஞானபோதம்.

நந்தியெம் பெருமானுக்கு ஆகமங்கள் கூறும் பொருள் வேற்றுமை பற்றி ஐயமுண்டானபோது, அதை நீக்குவதற்குச் சிவபெருமானால் உபதேசிக்கப்பட்டது சிவஞானபோதம்.

சீகண்ட உருத்திரரிடத்துச் சிவஞான போதத்தைக் கேட்டருளிய நந்திபெருமான், அதைச் சனற்குமார முனிவருக்கும் சனற்குமாரர் சத்தியஞான தரிசனிகளுக்கும் சத்தியஞானதரிசனிகள் பரஞ்சோதி முனிவருக்கும் அருளிச் செய்தனர்.

பரஞ்சோதி முனிவர் சாமுசித்தராய் அவதரித்துத் திருவெண்ணெய் நல்லூரில், தன் மாமனார் வீட்டில் வீற்றிருந்த மெய்கண்ட தேவரிடம் வந்து, சத்தியஞான தரிசனிகளிடம் தாம் கேட்டவாறு இந்நூலை மெய் கண்டாருக்கு உபதேசித்தார்.

மெய்கண்டார் சிவஞானபோதத்திலுள்ள பன்னிரண்டு சூத்திரங்களையும் தமிழில் மொழிபெயர்த்து, அதற்குக் கருத்துரை,



ஏது, திருட்டாந்தம் முதலியவற்றோடு கூடிய வார்த்திகப் பொழிப்புரையுஞ் செய்து, அவற்றை அருணந்தி சிவாசாரியாருக்கு உபதேசித்தார். அருணந்தி சிவாசாரியார் அதை மறைஞான சம்பந்த சிவாசாரியருக்கும் மறைஞான சம்பந்த சிவாசாரியர் உமாபதி சிவாசாரியருக்கும் உபதேசித்தனர். (திருட்டாந்தம் - உதாரணம்)

உமாபதி சிவாசாரியரால் அருணமச்சிவாய தேசிகருக்கு உபதேசிக்கப்பட்ட இந்நூல், ஒருவர்பின் ஒருவராகச் சித்தர் சிவப்பிரகாச தேசிகருக்கும் நமச்சிவாய மூர்த்திகளுக்கும் திருவாவடுதுறை ஆதீனத்துக் குருமூர்த்திகளுக்கும் உபதேசிக்கப்பட்டு வருகிறது.

சிவஞானபோதச் சூத்திரங்களை மாத்திரமன்றி, மெய்கண்டார் செய்த வார்த்திகப் பொழிப்புரையையுமே இலகுவில் விளங்கிக் கொள்ள முடியாதாகையால், வார்த்திகப் பொழிப்புரைக்கே உரையெழுத வேண்டிய தேவை ஏற்பட்டது.

அதனால், திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து மாதவச் சிவஞானசுவாமிகள் சிவஞானபோதச் சூத்திரங்களுக்கும் வார்த்திகப் பொழிப்புரைக்கும் சிற்றுரையும் பாடியம் எனப்படும் பேருரையுஞ் செய்தார். சிவஞானபோதத்தைக் கற்போருக்கும் கற்பிப்போருக்கும் சிவஞானபோதம் பற்றி எழுதுவோருக்கும் உறுதுணையாய் உள்ளன இவ்வுரைகளேயாகும்.

சிவஞான முனிவர் எழுதிய உரைகள் பேராசிரியர், நச்சினார்க்கினியர், சேனாவரையர் முதலியவர்களுடைய உரைகளோடொத்த தரமுடையவை. அதனால் இவ்வுரைகளை நிரம்பிய இலக்கண இலக்கிய அறிவுள்ளவர்களாலன்றி விளங்கிக்கொள்ள முடியாது.

இன்று சிவஞானபோதத்தைக் கற்க விரும்புவோரின் தொகை அருகி வருவதற்குரிய காரணங்களில் இதுவே முதன்மையானது. இரண்டாவது காரணம் சிவஞானபோதச் சிற்றுரையையோ மாபாடியத்தையோ என்னவிலை கொடுத்தும் இங்குள்ள புத்தகக் கடைகளில் வாங்க முடியாதிருப்பது. இக்குறைகளை நீக்க வேண்டியது இன்றைய காலத்தின் தேவையாகும்.

அதனால் சிவஞான போதச் சிற்றுரையை எளிய நடையில் எழுத வேண்டுமெனவும் கற்க விரும்புவோருக்குச் சிவஞானபோதத்தைக் கிடைக்கச் செய்யவேண்டுமெனவும் சைவசித்தாந்தத்தை வளர்க்கக் கருதுவோரிற் சிலர் விரும்புகின்றனர்.

அவர்களின் விருப்பம் தூண்டுகோலாயமைய இவ்வுரையை எழுதினேன். எழுதுவதற்குச் செலவிட்ட காலத்திலும் பார்க்க இதை அச்சிடுவதா இல்லையா என்பதைத் தீர்மானிப்பதற்கே நீண்ட காலஞ் சென்றது. காலங் கடந்தபோதிலும் இப்பொழுது இந்நூல் வெளிவருகிறது.

இந்நூலுக்கு ஆசியுரை வழங்கிய நல்லை திருஞானசம்பந்தர் ஆதீன முதல்வர் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர தேசிக ஞானசம்பந்த பரமாச்சாரிய சுவாமிகள் அவர்களுக்கும் வாழ்த்துரை வழங்கிய துர்க்கா துரந்தரி, சிவத்தமிழ்ச்செல்வி. செல்வி தங்கம்மா அப்பாக்குட்டி அவர்களுக்கும் பணிவன்புடன் கூடிய எனது நன்றி உரித்தாகுக.

**ஆ.நடராசா**

25 1/2, E.S.பெர்ணான்டோ மாவத்தை
கொழும்பு - 06.



# மெய்கண்டார் வரலாறு

தென்தமிழ் நாட்டிலுள்ள நடுநாட்டில், திருப்பெண்ணாடகத்தில், பரம்பரைச் சைவ வேளாளர் குலத்திற் பிறந்தவர் அச்சுதர் களப்பாளர். கல்விச் செல்வமும் பொருட் செல்வமும் நிரம்பப்பெற்ற அவர் சிவபக்தியும் சிவனடியார் பத்தியுமுடையவர்.

அவருக்கு நெடுங்காலம் பிள்ளைப்பேறு கிடைக்கவில்லை. அதனால் அப்பேற்றைப் பெறுவதற்குரிய விரதம் முதலியவற்றை ஆதிசைவரும் சகலாகம பண்டிதருமாகிய தமது குலகுருவிடங் கேட்டறிந்து அநுட்டித்து வந்தார். அதனாலும் புத்திரப்பேறு கிடைக்கவில்லை. அதனால் அவர் மீண்டுஞ் சகலாகம பண்டிதரிடஞ் சென்று தனது குறையை முறையிட்டார்.

அதைக்கேட்ட சகலாகம பண்டிதர், தமிழ்வேதமாகிய தேவாரத் திருப்பதிகத் திருவேட்டை முறைப்படி அருச்சித்து வணங்கி, அச்சுதர்களப்பாளரை அத்திருவேட்டிலே கயிறு சாத்தும்படி கூறினார். கயிறு சாத்தியவிடத்தில் திருஞானசம்பந்தப் பிள்ளையார் அருளிய திருவெண்காட்டுப் பதிகத்துள்,

***"பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளநினை***
***வாயினவே வரம்பெறுவ ரையுறவேண் டாவொன்றும்***
***வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்***
***தோய் வினையா ரவர்தம்மைத் தோயாவாந் தீவினையே"***

என்னுந் திருப்பாசுரங் காணப்பட்டது.

அப்பாசுரத்தின் பொருளை யுணர்ந்த சகலாகம பண்டிதர், திருவெண்காட்டுக்குச் சென்று அங்குள்ள சோம, சூரிய, அக்கினி என்னும் முச்சுடர்களின் பெயர் பெற்ற மூன்று குளங்களிலும் விதிப்படி

நீராடி சுவேதாரணியரையும் பிரமவித்தியா நாயகியாரையும் வழிபடும்படி அச்சுதர்களப்பாளருக்குக் கூறினார்.

அவ்வாறு வழிபடும் நாளில் ஒருநாள் சுவேதாரணியர் அச்சுதர் களப்பாளருக்குக் கனவிலே தோன்றி, "உனக்கு இப்பிறவியிலே பிள்ளைப் பேறு அரிது. ஆனாலும் இம்மை மறுமைப் பேறுகளைத் தரத்தக்கதும் நமக்கு மிக்க பிரீதியுடையதாயுமுள்ள தேவாரங்களைப் பிரமாணமாகக் கொண்டு நீ வழிபடுகின்றமையால், உனக்குத் தேவா-ரத்தைப் பாடிச் சைவத்தாபனஞ் செய்த ஞானசம்பந்தனைப் போன்று, சைவ சித்தாந்த சாத்திரத்தை வெளிப்படுத்திச் சைவத்-தாபனஞ் செய்யவல்லதொரு சற்புத்திரனைத் தருவோம்" என்று அருளிச் செய்து மறைந்தருளினார். உடனே விழித்தெழுந்த அச்சுதர்களப்பாளர் அச்செய்தியைத் தமது மனைவியாருக்குத் தெரிவித்தார்.

அச்சுதர்களப்பாளரும் மனைவியாரும் சுவேதாரணியரையும் பிரமவித்தியா நாயகியாரையும் வழிபட்டு வாழும் நாளிலே, சுவேதாரணியருடைய திருவருளினாலே அச்சுதர்களப்பாளருடைய மனைவியார் கருப்பமுற்றார்.

அதனையறிந்த அச்சுதர்களப்பாளர் பெருமகிழ்ச்சியோடு சிவாகம விதிப்படி பத்துமாதமுஞ் செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்து மகிழ்ந்துவரும் நாளிலே, பொய்ச்சமய இருள் நீங்கவும் 'அத்து-விதம்' என்னுஞ் சொல்லின் உண்மைப் பொருளை உலகம் அறிந்துய்-யவும் சிவநெறி சிறக்கவும் ஒரு சற்புத்திரர் திருவவதாரஞ் செய்தார். இச்சற்புத்திரர் அச்சுதர்களப்பாளருக்குச் சுவேதவனப் பெருமான் திருவருளாற் பிறந்தமையால் அவருக்குச் சுவேதவனப் பெருமாள் எனப் பெயரிட்டனர்.

அதன்பின் அச்சுதர்களப்பாளரும் மனைவியாரும் சுவேதனப் பெருமானையும் பிரமவித்தியாநாயகியாரையும் வணங்கி விடைபெற்றுக்கொண்டு தமதருமைத் திருக்குமாரரோடு தம்மூராகிய திருப்பெண்ணாடகத்தை யடைந்தனர். சுவேதனப்பெருமாளென்னும் பிள்ளைத் திருநாமமுடைய அக்குழந்தை பிறைமதிபோல் வளர்ந்து வரும் நாளில், திருவெண்ணெய் நல்லூரில் வசித்து வந்த அவரது நன்மாமனார் அவரைத் தன்வீட்டுக்கு எடுத்துக் கொண்டு சென்று பேரன்போடு வளர்த்து வந்தார். சுவேதவனப் பெருமாள் இரண்டு வயதிற்றானே மெய்யுணர்வுடையவராய் எழுந்தருளியிருந்தார்.



அந்நாளில் பரஞ்சோதி முனிவர் திருக்கைலாச மலையிலிருந்து திருவெண்ணெய் நல்லூருக்கு வந்து, சுவேதனப் பெருமாளைச் சந்தித்து, அவருக்குச் சிவஞானபோதத்தை உபதேசித்து "இதனை இந்நாட்டிலுள்ளோர் உணர்ந்துய்யும் பொருட்டுத் தமிழில் மொழிபெயர்த்துப் பொழிப்புரையுஞ் செய்க" என்று அருளிச் செய்து, தமது ஆசிரியராகிய சத்தியஞான தரிசனிகளின் திருநாமத்தை மொழிபெயர்த்து, 'மெய்கண்ட தேவர்' என்னுஞ் சிறப்புத் திருநாமத்தையுஞ் சூட்டிச் சென்றார்.

மெய்கண்டதேவர் திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளி-யிருக்கின்ற சுயம்பு மூர்த்தியாகிய பொல்லாப் பிள்ளையாருடைய, சந்நிதியில் தாம் பரஞ்சோதி முனிவரிடங் கேட்டவாறே சிந்தித்துத் தெளிந்து, சிவஞானபோதத்தைத் தமிழில் மொழிபெயர்த்து, அதற்கு வார்த்திகப் பொழிப்புரையுஞ் செய்து தம் மாணாக்கருக்கு உப-தேசித்து வந்தார்.

இவ்வரலாற்றைக் கேள்வியுற்ற சகலாகம பண்டிதர், இவர் நம்மை வந்து பார்க்கவில்லையே யானாலும் நாமே அவரைப் போய்ப் பார்ப்போ மென்றெண்ணி, தம்மெண்ணத்தைத் திருவெண்ணெய் நல்லூரிலிருக்குந் தம் மாணாக்கருக்குத் தெரிவித்தார்.

அதனைக் கேட்ட மாணாக்கர் மனம் மகிழ்ந்து, தம்மூரை அலங்-கரித்து, சகலாகம பண்டிதரை வரவேற்பதற்கான ஆயத்தங்களைச் செய்தனர். ஆகம ஏடுகளை ஏற்றிய வண்டிகளுடனும் விருதுகளுட-னும் சகலாகம பண்டிதர் திருவெண்ணெய் நல்லூருக்குச் சென்றார். அவர் வெண்ணெய் நல்லூரை அண்மித்தவுடன் அங்குள்ளார் அவருக்கு முன் சென்று, அவரைப் போற்றித் துதித்துப் பல உபசார மொழிகளைக் கூறி அழைத்துச் சென்றனர். அவ்வூருக்குச் சென்ற சகலாகம பண்டிதர் முதலில் திருக்கோயிலுக்குச் சென்று வழிபாடு செய்தார். அதன்பின் மாணாக்கர்கள் அவரைத் திருமடத்துக்கு அழைத்துச் சென்று அமுது செய்வித்தனர். சிவபெருமானுடைய பாதத்தாமரைகளிற் பதிந்த சிந்தையுடைய மெய்கண்டதேவர் அப்போதும் அவரை வந்து பார்க்கவில்லை.

சகலாகம பண்டிதர் தாமே மெய்கண்டார் இருக்குமிடத்துக்குச் சென்று அவரைப் பார்க்கக் கருதி அவர் இருக்குமிடத்துக்குச் சென்று அங்கே உலாவிக் கொண்டு நின்றார். அப்போது மெய்கண்டதேவர் தம் மாணாக்கருக்கு ஆணவத்தின் தன்மை பற்றிப் படிப்பித்துக்

கொண்டிருந்தார். சகலாகம பண்டிதர் மெய்கண்ட தேவரை நோக்கி "ஆணவத்தின் இலக்கணம் என்ன?" என்று கேட்டார். மெய்கண்ட-தேவர் கிருபா நோக்கஞ் செய்து, தம்முடைய சுட்டுவிரலால் சகலா-கம பண்டிதரைச் சுட்டிக் காட்டினார்.

அவ்வளவில் சகலாகம பண்டிதர் ஆணவம் நீங்கப் பெற்று மெய்கண்ட தேவரை வணங்கினார். மெய்கண்ட தேவர் தமது குருபரம்பரையின் முதல்வராகிய நந்திதேவருடைய திருநாமத்தைச் சகலாகம பண்டிதருக்குச் சூட்டக் கருதி, அவருக்கு 'அருணந்தி' என்னும் தீட்சா நாமத்தைச் சூட்டி, சிவஞானபோதத்தை உபதேசித்தார். அவரைத் தம் மாணாக்கருள் முதல் மாணாக்கராக ஏற்றுக் கொண்டார்.

சில நாட்களின் பின் மெய்கண்டதேவர் சிவயோகத்திலமர்ந்து ஐப்பசி மாதச் சுவாதி நட்சத்திரத்தில் சிவபெருமானுடைய திருவடியிலே இரண்டறக் கலத்தலாகிய சுத்தாத்துவித முத்தி-யடைந்தார்.

**சந்தான குரவர் குருபூசைத்தினம்**

***சித்திரை யத்த முமாபதி யாவணித் திங்கடனி***
***லுத்திரஞ் சீர்கொண் மறைஞான சம்பந்த ரோதுகன்னிச்***
***சுத்தமெய்ப் பூர மருணந்தி யைப்பசிச் சோதிதனில்***
***வித்தக மெய்கண்ட தேவர் சிவகதி மேவினரே***





**மெய்கண்ட தேவ நாயனார்**

**<u>துதி</u>**

***பண்டை மறை வண்டரற்றப் பசுந்தேன் ஞானம்***
***பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்***
***கண்டஇரு தயகமல முகைக ளெல்லாம்***
***கண்திறப்பக் காசினிமேல் வந்தஅருட் கதிரோன்***
***விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெய் மேவு***
***மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்***
***புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்***
***பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வாம்.***

உ
சிவமயம்

## பொருளடக்கம்





# சிவஞான போதம்

### சிறப்புப்பாயிரம்

*மலர்தலை யுலகின் மாயிரு டுமியப்*
*பலர்புகழ் ஞாயிறு படரி னல்லதைக்*
*காண்டல் செல்லாக் கண்போ லீண்டிய*
*பெரும்பெயர்க் கடவுளிற் கண்டுகண் ணிருடீர்ந்*
*தருந்துயர்க் குரம்பையி னான்மா நாடி*
*மயர்வற நந்தி முனிகணத் தளித்த*
*வுயர்சிவ ஞான போத முரைத்தோன்*
*பெண்ணைப் புனல்சூழ் வெண்ணெய்ச் சுவேதவனன்*
*பொய் கண் டகன்ற மெய்கண்ட தேவன்*
*பவநனி வன்பகை கடந்த*
*தவரடி புனைந்த தலைமை யோனே.*

**இ-ள் :** மலர்தலை உலகின்மா இருள் துமிய - விரிந்த இடத்தை-யுடைய உலகத்திற் பொருந்திய பெரிய புறவிருள் கெடும்படி, பலர் புகழ் ஞாயிறு படரின் அல்லதை - பலராலும் புகழப்படுகின்ற சூரியன் உதயகிரியிலிருந்து புறப்பட்டாலன்றி, காண்டல் செல்லா கண்போல் - காணமாட்டாத கண்ணொளிபோல, அருந்துயர்க் குரம்பையின் ஆன்மா நாடி - பொறுத்தற்கரிய துன்பங்களுக்கெல்லாம் இருப்பிட-மாகிய (நிணம், இரத்தம், இறைச்சி, நரம்பு, எலும்பு, மச்சை, சுக்கிலம் எனப்படும் ஏழு தாதுக்களாற் கட்டப்பட்ட) கூடாகிய (காணப்படு-கின்ற) உடம்பாலே (காணப்படாத) ஆன்மாவையும் பரமான்மா-வையும் அநுமானப் பிரமாணத்தால் ஆராய்ந்து அவற்றது தடத்த இலக்கண மெனப்படும் பொதுவியல்பை உணர்ந்து, கண் இருள் தீர்ந்து - (அவ்வுணர்ச்சியாலே) கருதியுணரப்படும் அகவிருளாகிய ஆணவமலம் நீங்கப்பெற்று, ஈண்டிய **பெரும் பெயர்க் கடவுளிற்**

கண்டு - எல்லா நூல்களின் பொருளும் தன் பொருளேயாகத் திரண்டு கூடிய பெரும்பெயரெனப்படும் ஒரு வார்த்தையாகிய மகாவாக்கியத்தால் எடுத்தோதப்படும் முதற்கடவுளது திருவருளாலே சீவான்மா பரமான்மாக்களது சொரூப இலக்கணமெனப்படும் சிறப்பியல்பை அனுபவத்தாற் கண்டுணர்ந்து, மயர்வு அற - மயக்கவாசனையற்றுச் சிவாநுபவம் பெறுதற் பொருட்டு, நந்தி முனிகணத்து அளித்த - சீகண்ட தேவர் பாற் கேட்டருளிய நந்தியெம் பெருமான் சனற்குமாரர் முதலிய முனிவர்களுக்கு உபதேசித்த, உயர் சிவஞானபோதம் உரைத்தோன் - சரியை கிரியை யோகம் என்னும் மூன்று பாதப் பொருள்களை ஆராயும் நூல்களின் மேம்பட்ட சிவஞான போதமென்னும் வடநூலை மொழிபெயர்த்துக் கூறி அதற்குக் கருத்துரை, மேற்கோள், ஏது திருட்டாந்தங்களைக் கொண்ட வார்த்திகப் பொழிப்புரையுஞ் செய்தோன், பெண்ணைப் புனல்சூழ் வெண்ணெய்ச் சுவேதவனன் - பெண்ணையாற்று நீர் சூழ்கின்ற திருவெண்ணெய் நல்லூரிற்றிருவவதாரஞ் செய்த சுவேதவனப் பெருமாள் என்னும் பிள்ளைத் திருநாமமுடையான், பொய்கண்டு அகன்ற மெய்கண்ட தேவன் - பொய்ச் சமயங்கள் கூறும் பொருள் இதுவிதுவென்று கண்டு கழிப்பித்த காரணத்தால் மெய்கண்ட தேவனென்னும் சிறப்புத் திருநாமமுடையான், பவம் நனி வன்பகை கடந்த தவர் அடி புனைந்த தலைமையோனே - பிறவியாகிய மிகுந்த வலிய பகையினை வென்ற தவத்தோர் தமது திருவடிகளைச் சிரமேற் சூடிக்கொள்வதற்கேற்ற தலைமைப்பாட்டையுடையோன் எ-று.

துமிதல் - கெடுதல், கண் இருள் - கருதியுணரப்படும் இருள், கண்ணுதல் - கருதுதல். பவம் - பிறப்பு.

இச்சிறப்புப் பாயிரத்தில் இடம்பெறும் உவமான உவமேயங்கள் வருமாறு:-

| **உவமானம்** | **உவமேயம்** |
|---|---|
| கண் | உயிர் |
| இருட்கேடு | மலநீக்கம் |
| பொருட்காட்சி | சிவப்பேறு |
| சூரியன் | சிவஞான போதம் |

சூரியனது வரவு நிருவிகற்ப சவிகற்பக் காட்சிகளுக்கு இன்றியமையாத தென்பதை விளக்குவதற்காக, ஞாயிறு படரிற் காண்டல் செல்லுங் கண் எனக் கூறவேண்டியதை, ஞாயிறு படரின் அல்லதைக் காண்டல் செல்லாக் கண்ணென எதிர்மறையாகக் கூறினார்.



நிருவிகற்ப சவிகற்பக் காட்சிகளுக்குச் சூரியனது வரவு இன்றியமையாதவாறு போல, மலநீக்கத்துக்கும் அனுமானப் பிரமாணத்தால் சீவான்மாவினதும் பரமான்மாவினதும் பொதுவியல்புகளை யறியும் ஆராய்ச்சி அறிவுக்கும் திருவருளால் அவற்றின் சிறப்பியல்புகளை யறியும் அனுபவ அறிவுக்கும் சிவஞானபோதம் இன்றியமையாது வேண்டப்படு மென்பதை இந்த உவமான உவமேயங்கள் விளக்குகின்றன.

நிருவிகற்பக் காட்சி - பொருளைப் பிண்டமாகக் காணுங் காட்சி.

சவிகற்பக்காட்சி - பொருளைச் சாதி, பெயர், குணம், குறி முதலியனவாகப் பகுத்துக் காணுங்காட்சி.

தலைமை பற்றி அருந்துயர்க் குரம்பை என்று கூறினாரேனும் இனம்பற்றிப் புவனபோகங்களுங் கொள்ளப்படும். உடம்பில் வைத்து அனுமானப் பிரமாணத்தால் ஆராய்ந்தறியப்படுவதாகிய பதி பசு பாசங்களின் பொதுவியல்பு முதல் ஆறு சூத்திரங்களாலும் இறைவனது திருவருளால் அநுபவித்தறியப்படுவதாகிய அவற்றின் சிறப்பியல்பு பின் ஆறு சூத்திரங்களாலும் அறியப்படும்.

நாடி என்றதனால் அனுமானப் பிரமாணத்தால் அறியப்படும் என்பதும் கண்டு என்றதனால் அனுபூதியால் அறியப்படுமென்பதும் பெறப்படும்.

பொதுவியல்பு பிரமாணவியல், இலக்கணவியல் என்னும் இரண்டியல்களாற் கூறப்பட்டு, கேட்டல் சிந்தித்தல் என்னும் இரு திறத்தால் உணரப்படும். சிறப்பியல்பு சாதன முகத்தாலும் பயன்முகத்தாலுங் கூறப்பட்டு, கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை கூடுதல் என்னும் நான்கு திறத்தாலும் உணரப்படும்.

இச்சிறப்புப் பாயிரத்திற் கூறப்பட்டிருப்ப தென்னவென்றால்: - பதி, பசு, பாசங்களின் பொதுவியல்பு சிறப்பியல்புகளைக் கூறும் ஆகமங்கள் பொருள்கள் ஏழு, ஆறு, ஐந்து, நான்கு, மூன்று என்று வேறு வேறு விதமாகக் கூறுதலால், ஆகமங்களைக் கற்போர் அவற்றின் பொருளொற்றுமை உணரமாட்டாது, ஒவ்வொரு ஆகமப் பொருளையே கைக்கொண்டு ஐக்கவாத முதலான பல சமயவாதிகளாக வேறுபட்டுத் தம்முள் மாறுபட்டு மயங்குவர். அவ்வாறு மயங்காது அவ்வாகமங்களின் பொருளொற்றுமை உணர்த்துதற் கெழுந்தது இந்நூல். சிவஞான போதமென்பது இக்காரணத்தால் வந்த பெயரென்பதை, வடமொழிச் சிவஞானபோதத்தின் இறுதிச் சூத்திரத்தில்

இந்தப்பிரகாரம் சைவார்த்த நிர்ணயத்தைச் சிவஞான போதத்தில் அறிகவென்று கூறப்பட்டிருப்பதனால் அறிக.

சுவாயம்புவம் சிவம், பதி, பசு, ஆணவம், கன்மம், சுத்தமாயை, அசுத்தமாயை எனப்பொருள்கள் ஏழென்றும், பௌட்கரம் பதி, பசு, ஆணவம், கன்மம், சுத்தமாயை, அசுத்தமாயை எனப் பொருள்கள் ஆறென்றும், பராக்கியை முதலியன பதி,பசு, ஆணவம் கன்மம், மாயை எனப் பொருள்கள் ஐந்தென்றும், சர்வஞானோத்தரம் சிவம், பதி, பசு, பாசம் எனப் பொருள்கள் நான்கென்றும், மிருகேந்திரம் முதலியன பொருள்கள் மூன்றென்றுங் கூறும்.

சரியை, கிரியை யோகம் என்னும் மூன்று பாதப் பொருளையும் ஆராயும் நூல்கள் சோமசம்பு பத்ததி முதலியன. சிவஞான போதம் அந்நூல்களின் மேற்பட்ட நூலாதலால் அந்நூல்களைக் கற்றுணர்ந்த பின்பே சிவஞான போதத்தைக் கற்க வேண்டுமென்பது பெறப்படும். எனவே, தீக்கை பெற்றுச் சிவாகமங்களை ஓதி, அதன்பின்னர் சரியை முதலியவற்றை ஆராயும் நூல்களைக் கேட்டு, அந்நூல்களின் வழியொழுகி மனந் தூய்மையுடையராய், நித்த அநித்தப் பொருள்களின் உணர்வுண்டாகிப் பிறவிக்கஞ்சி நிலையான வீடுபேற்றை அடைய வேண்டுமென்னும் விருப்பமிக்குடையராய் வந்த அதிகாரிகளுக்கு இச்சிவஞானபோத நூலை உணர்த்துகவெனக் கூறியதாகக் கொள்க.

இப்பாயிரத்தில் நந்தி முனிகணத்தளித்த என்றதனால் வழியும் வெண்ணெய்ச் சுவேதவனன் மெய்கண்டதேவன் என்றதனால் தமிழ் வழங்கும் நிலமே இந்நூல் வழங்கும் நிலமென எல்லையும் ஆக்கியோன் பெயரும் சிவஞானபோதமென்றதனால் நூலின் பெயரும், ஆகமத்தின் பொருளொருமை உணர்த்துதலாகிய கருதிய பொருளும் உயர் சிவஞானபோத மென்றதனால் எந்தெந்த நூல்களைக் கேட்டபின்னர் இந்நூலைக் கேட்க வேண்டுமென்னும் யாப்பும், சரியை, கிரியை, யோக பாதங்களைக் கூறும் நூல்களைக் கேட்டோரே இந்நூலைக் கேட்டற்குரியரெனக் கேட்போரும் நாடித் தீர்ந்து கண்டு மயர்வற என்றதனால் நூற்பயனுங் கூறியவாறு காண்க.

வடநூலார் யாப்பை ஆனந்தரியமென்றும் நுதலிய பொருளை விடயமென்றும் கேட்போரை அதிகாரிகளென்றும் பயனைப் பிரயோசன மென்றுங் கூறுவர்.

இச்சிறப்புப் பாயிரத்தைச் செய்தவர் அருணந்தி சிவாசாரியரென்பது செவிவழிச் செய்தி.





# சிவஞான போதம்

## மங்கல வாழ்த்து

காமியம் முதலிய சைவாகமங்களுள் ஞானபாதத்திற் கூறப்படும் பொருள் பற்றிய ஐயத்தை அகற்றி, அவற்றின் உண்மைப் பொருளைப் பொதுவியல்பு சிறப்பியல்பென இருவேறு வகைப்படுத்திக் காட்டிப் போதிப்பதற்கு இரௌரவ வாகமத்தில் எழுந்த சிவஞானபோத நூலைத் தமிழுலகம் உய்தற் பொருட்டு மொழிபெயர்ப்புச் செய்து அதற்குப் பொழிப்புரையுங் கூறத் தொடங்கிய ஆசிரியர், இடையூறு புகுதற்குரிய சாக்கிரமெனப்படும் நனவுநிலையிற்றானே துரியாதீத நிலை கைவரப் பெற்ற தமக்கு இடையூறு சிறிதும் அணுகாதென்பதை அறிந்தாராயினும், சாக்கிரத்தில் அதீதத்தைப் புரிந்த பெரியோர் இடையூறு நிகழாவண்ணம் கடவுள் வாழ்த்துக் கூறியுள்ளனராதலால் அவர்களது வழக்கத்தைப் பின்பற்றியும் கடவுள் வாழ்த்துக் கூறவேண்டுமென்பதைத் தமது மாணாக்கருக்கு அறிவுறுத்தற் பொருட்டும் முதற்கண் விநாயகக் கடவுளை வாழ்த்துவதாகிய மங்கல வாழ்த்துக் கூறுகின்றார்.

**வஞ்சித்துறை**

***கல்லா னிழன்மலை***
***வில்லா ரருளிய***
***பொல்லா ரிணைமலர்***
***நல்லார் புனைவரே***

**இ-ள் :** கல்லால் நிழல் - அருள்வடிவாகிய கல்லால விருட்சத்தின் நிழலின் கண்ணே, மலைவு இல்லார் - இந்நூலால் நந்திபெருமானுக்கு மலைவு தீர்த்தருளிய முதலாசிரியராகிய சிவபெருமான், அருளிய - மேலும் மேலும் கருணை கூர்ந்து அருள் செய்யும் பொருட்டு, பொல்லார் இணைமலர் - பொல்லாப் பிள்ளையாருடைய ஞானசக்தி கிரியாசக்தியென்னும் இரண்டு பாதத் தாமரைகளையும்,

நல்லார் - கேட்டுச் சிந்தித்துத் தெளிந்த மெய்யன்பர், புனைவர் - தம்முடைய ஞானசக்தி கிரியா சக்திகளுக்கு வியாபகமாகக் கொண்டு அடங்கி நிற்பர் எ-று.

மலைவு - மயக்கம்

நல்லார் புனைவரெனவே கேட்டுச் சிந்தித்துத் தெளிந்த மெய்யன்பர் அல்லாதாருக்கு விநாயகப் பெருமானது திருவடிகளில் அடங்கி நிற்றல் கூடாதென்பது பெறப்படும். திருவடிகளில் அடங்கி நிற்றலாவது ஆன்மாவாகிய தன் அறிவுக்கு அவர் அறிவையின்றி அறியுந்தன்மை உண்டாகா தென்றும் தனது கிரியாசக்தி அவருடைய கிரியா சத்தியின் தொழிற்பாடின்றித் தொழிற்படாதென்றும் அறிந்து தற்போதமற்று அருள்வழி நிற்றல்.

வாழ்த்து, வணக்கம், பொருளியல்புரைத்தல் எனப்படும் மூவகை வாழ்த்துள் இது பொருளியல் புரைத்தல் என்ற வகையைச் சேர்ந்தது. வாழி என்று கூறுவது வாழ்த்து. போற்றி, வணங்குவாம், துதிப்போம் எனக் கூறுதல் வணக்கமாகும்.

அருளிய என்னும் வினையெச்சம் புனைவர் என்னும் வினை-கொண்டு முடிந்தது. சிவபெருமான் அருள் செய்யும் பொருட்டு விநாயகப் பெருமானது திருவடிகளை நல்லார் புனைவர் என்பது இதன் கருத்து.

அருளிய என்பதைப் பெயரெச்சமாகக் கொண்டால், அருளிய என்பது, பொல்லார் என்னும் பெயர் கொண்டு 'அருளிய பொல்லார்' என முடியும். இவ்வாறு முடிந்தால், மலைவில்லார் அருளிய பொல்லார் என்பதற்கு, மலைவு தீர்த்தருளிய சிவபெருமான் தந்தருளிய பொல்லாப் பிள்ளையார் என்பது பொருள்.

பொல்லார் - பொள்ளார்

பொள்ளாத பிள்ளையார் என்றால் உளியினாற் செதுக்கப்படாது தாமாகவே தோன்றிய சுயம்பு மூர்த்தி என்பது கருத்து. சுயம்பு விநாயக மூர்த்திகள் திருவெண்ணெய் நல்லூரிலும் வேறுஞ்சில தலங்களிலுமுண்டு.

இல்லார் இல்லையாகச் செய்தவர். இல்லார் என்பதில் இன்மை பண்பு இல்லாமற் செய்தல் வினை. செய்தவர் என்பது பெயர். ஆகவே இல்லார் என்பது பண்படியாகப் பிறந்த தொழிற்பெயர்.

மலைவில்லார் அருளப் பொல்லார் தாள் புனைவரெனவே சிவபெருமானுக்கும் விநாயகப் பெருமானுக்கும் தம்முள் வேற்றுமை



இல்லையென்பது பெறப்படும். புதல்வர்களுக்குச் செய்யும் வழிபாடு அவர்களுடைய தாய் தந்தையருக்குப் பெரும் மகிழ்ச்சியைக் கொடுக்கும் என்னுங் கருத்தினால் சிவனருளைப் பெறும் பொருட்டு விநாயகக் கடவுளுடைய பாதங்களை வணங்குவாமெனக் கூறினா-ரென்பதும் பொருந்தும்.

## அவையடக்கம்

***தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வா***
***ரெம்மை யுடைமை யெமையிகழார் - தம்மை***
***உணரா ருணரா ருடங்கியைந்து தம்மிற்***
***புணராமை கேளாம் புறன்.***

**இ-ள் :** தம்மை உணர்ந்து - இறைவனுக்கு உடைமைப் பொருளா-யிருக்கும் ஆன்மாவாகிய தம்மியல்பினை அறிந்து, தமை உடைய தன்(ஐ) உணர்வார் - தம்மை அடிமையாகவுடைய தலைவனை உணருஞ் சித்தாந்த சைவர், எம்மை உடைமை (இன்) எமை இகழார் - எம்மை அடிமையாக உடையராகலின் தமது உடைமைப் பொருளாகிய எம்மைக் குற்றங்கள் நீக்கிப் பாராட்டுவதன்றி இகழமாட்டார். (ஆதலால் எம்மாற் செய்யப்படும் நூலையும் பாராட்டுவதன்றி இகழமாட்டார்), தம்மை உணரார் உணரார் - தம்மை உணராதார் தம்மை உடையானாகிய தலைவனையும் உணரமாட்டாராதலால், உடங்கியைந்து - ஒன்றாகக் கூடி, தம்மிற் புணராமை (இன்) - தம்மிற்றாமே இணங்காது முரண்படுதலான், புறன் கேளாம்- அவர்கள் எம்மையும் எம்மாற் செய்யப்படும் நூலையும் இகழ்ந்துரைக்கும் புறங்கூற்று மொழியைப் பொருட்படுத்த மாட்டோம் எ-று.

'ஆதலால் எம்மாற் செய்யப்படும் நூலையும் பாராட்டுவதன்றி இகழமாட்டார்' என்பது குறிப்பெச்சம். இது செய்யுளில் இல்லை-யானாலும், எம்மை உடைமை எமை இகழார் என்றதனாற் குறிப்-பாகக் கொள்ளும்படி எஞ்சி நின்றது.

தன் உணர்வார் என்றதில் 'ஐ' உருபு தொக்கு நின்றது. அதை விரித்து, 'தன்னை' எனக் கொள்க. தன்னை - தலைவனை.

எம்மை உடைமை, தம்மிற் புணராமை என்ற இடங்களில் 'இன்' உருபை விரித்து, எம்மை உடைமையின், தம்மிற் புணராமையின் எனக் கொள்க.

தம்மை உணரார் என்பதில், தாம் ஒரு பொருள் என்றுணராத உலகாயதரும் தம்மைக் குணத்தையுடைய குணிப் பொருளென்-றுணராத புத்தர் சாங்கியர் மாயாவாதிகளும் தாம் முதல்வனது உடைமையென்றுணராத ஏனைய சமயத்தாரும் அடங்குவர்.

உலகாயதர் உடம்பின் வேறாய் உயிரென்றொரு பொருள் இல்லை யென்பர்.

குணி - குணத்தையுடையது, உயிருக்குக்குணம் அறிவு இச்சை செயல்கள், புத்தர் குணமே உயிரென்பர். சாங்கியர், உயிர் அறிவு மாத்திரமான குணமேயன்றிக் குணிப்பொரு ளன்றென்பர். மாயாவாதிகள் உயிர்குணிப்பொருளன்று குணமேயென்பர். ஆதலால் இவர்கள் தம்மை உணராதவரே யாவர்.

பாஞ்சராத்திரிகளும் சிவாத்துவித சைவரும் தம்மை இறைவனது உடைமைப் பொருளெனக் கொள்ளினும் பாஞ்சராத்திரிகள் உடைமைப் பொருளாகிய உயிர் அணு பரிமாணமுடைய தென்ப-துடன் இறைவனுக்குப் பரிணாமமுங் கூறுவர். உடையானாகிய நாரா-யணனே பல அவதாரங்களை யெடுத்தான் என்பது அவர்களுடைய கொள்கை. இப்பாஞ்சராத்திரிகள் உடையானல்லாத நாராயணனை உடையானெனக் கூறி மயங்குவர்.

பரிணாமம் - உருத்திரிதல், இயற்கையினின்றும் மாறுபடுதல்
பரிமாணம் - அளவு

சிவாத்துவித சைவர் பசு பாசங்கள் தனிப்பொருள்களன்று, சிவசக்தியின் பரிணாமமே யெனவும், உடலிற் கட்டுப்பட்டிருக்கும் உயிர் சிவத்தின் வேறாகாமையால் உயிரின் பொருட்டுண்டாகும் தோற்றக் கேடுகள் சிவத்துக்கேயாமென்பர்.

புறன் என்பதை இரட்டுற மொழிந்து, புறச்சமயத்தார் இகழ்ந்-துரைக்கும் மொழியெனவும் புறங்கூற்று மொழியெனவுங் கொள்க. புறங்கூற்று மொழியாவது சித்தாந்த சைவர் முன்னன்றிப் புறத்தே அவர்களை இழித்துரைக்கும் மொழியாகும்.

இரட்டுற மொழிதலாவது ஒரு சொல்லை இரண்டு பொருள்-படக் கூறுதல்.

சித்தாந்த சைவர் எம்மை இகழாராதலால் எம்மாற் செய்யப்-படும் நூலையும் இகழார். உண்மையை உணராமையால் சித்தாந்த சைவரல்லாதார் எம்மையும் எம்மாற் செய்யப்படும் நூலையும் இகழ்ந்துரைப்பதை நாம் பொருட்படுத்த மாட்டோம் என்பது இவ்வெண்பாவின் கருத்து.



உ
சிவமயம்

# சிவஞான போதம்

## பொதுவதிகாரம்

## பிரமாணவியல்

### முதற்சூத்திரம்

நூலாசிரியர் இந்நூலில் வடமொழிச் சிவஞானபோதத்திற் கூறப்படும் ஞானபாதப் பொருள் எல்லாவற்றையும் பொதுவதிகாரம் உண்மையதிகாரமென இரண்டதிகாரங்களாகத் தொகுத்து, பொது-வதிகாரத்தைப் பிரமாணவியல் இலக்கணவியலென இரண்டியல்-களாகவும் உண்மையதிகாரத்தைச் சாதனவியல் பயனியலென இரண்டியல்களாகவும் வகுத்து, பிரமாணவியலை மூன்று சூத்திரங்-களாற் கூறத்தொடங்கி, முதலில் உலகத்துக்கு முதற்கடவுள் உண்-டென்பது பொதுவும் அக்கடவுள் சிவனென்பது சிறப்புமாதலால், சிறப்புவகையால் முதற்கடவுளாகிய சிவபெருமான் உண்டென்னும் ஆகமப் பிரமாணத்தை வலியுறுத்துவதாய அநுமானப் பிரமாணங் கூறுகின்றார்.

ஆகமத்திற் கூறப்படும் பொதுவியல்பு பிறபொருளோடு சம்பந்தப்பட்டிருத்தல்; சிறப்பியல்பு பிறபொருளோடு சம்பந்தப்-படாது தனித்திருத்தல். பொதுவியல்பு தடத்தலக்கணமெனப்படும். சிறப்பியல்பு சொரூப இலக்கணமெனப்படும். பதிக்குப் பொது-வியல்பு ஆன்மாக்களோடு ஒன்றாய் வேறாய் உடனாய் நிற்றல்; சிறப்-பியல்பு சச்சிதானந்தமாய் நிற்றல்.

அநுமானப் பிரமாணம் - கருதலளவை.

கருதலாவது நேரே அறியப்படாது மறைந்து நிற்கும் பொருளை அதனோடு தொடர்புடைய ஏதுவைக் கொண்டறியும் ஆன்மாவின்

அறியுஞ் சக்தி. இதற்கு உதாரணம்: ஓரிடத்திற் புகை தோன்றுவதைக் கண்டு அங்கே நெருப்புண்டென்று கருதுதல்.

***அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்***
***றோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதா***
***மந்த மாதி யென்மனார் புலவர். என்பது சூத்திரம்***

**கருத்துரை :**

சங்கார காரணனாயுள்ள முதலையே முதலாகவுடைத்து இவ்வுலகம் என்பதுணர்த்துதனுதலிற்று.

**கருத்துரையின் பொருள்:**

நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை என்னுங் கலைகளுக்குட்பட்ட ஐவகைச் சங்காரத்துள் இறுதிக் கண்ணதாகிய மகாசங்காரத்தைச் செய்யும் சதாசிவரை அதிட்டித்து நிற்கும் பரமசிவனையே அவன் அவள் அதுவென்று சுட்டியறியப்படும் உலகம் முதற்கடவுளாக வுடையதென்று வேதாகமங்களுட் கூறப்படுவதை அநுமான அளவையால் உணர்த்துதல் இச்சூத்திரத்தின் கருத்து எ-று.

மேலே கூறப்பட்ட ஐந்து கலைகளிலும் தத்துவங்களும் புவனங்களும் உண்டு. அவற்றை முறையே பிரமன் முதலிய ஐந்து கடவுளர் சிவபெருமானது ஆணையினாற் சங்கரிப்பர். அது பற்றிய விபரம் வருமாறு:-

| **கலைகள்** | **சங்காரக் கடவுளர்** | **கலைகளில் அடங்கும் புவனங்கள்** | **கலைகளில் அடங்கும் தத்துவங்கள்** |
|---|---|---|---|
| நிவிர்த்தி | பிரமா | 108 | பிருதிவி தத்துவம் |
| பிரதிட்டை | விஷ்ணு | 56 | அப்பு தத்துவம் முதல் பிரகிருதி தத்துவம் வரை |
| வித்தை | உருத்திரன் | 27 | புருடதத்துவம் முதல் மாயா தத்துவம்வரை |
| சாந்தி | அனந்தர் | 18 | சுத்தவித்தை முதல் சதாசிவ தத்துவம் வரை |
| சாந்தியதீதை | சதாசிவர் | 15 | சத்திசிவ தத்துவங்கள் |



நிவிர்த்தி கலையில் அடங்குந் தத்துவங்களையும் புவனங்களையும் சங்கரிக்குங் கடவுள் பிரமா. இவ்வாறே மற்றைய கலைகளில் அடங்குந் தத்துவங்களையும் புவனங்ளையுஞ் சங்கரிக்கும் கடவுளரையும் கண்டு கொள்க.

இந்த ஐந்து கடவுளரில் சிவபெருமான் சதாசிவரை அதிட்டிக்க சதாசிவர் அனந்தரையும் அனந்தர் உருத்திரனையும் உருத்திரன் விஷ்ணுவையும் விஷ்ணு பிரமாவையும் அதிட்டிக்க ஐவரும் தத்தம் மேல் எல்லை வரையும் சங்காரத் தொழிலைச் செய்வர்.

அதிட்டித்தல் - நிலைக்களமாகக் கொண்டு செலுத்துதல்.

இக்கருத்துரையில் முதலையே என்றதிலுள்ள ஏகாரம் பிரிநிலை. இது இயைபின்மை நீக்குதற்கும் பிறிதினியைபு நீக்குதற்கும் பொதுவாய் நின்றது. இயைபின்மை நீக்குதல் - சங்காரக் கடவுளுக்கும் படைத்தல் காத்தற் றொழில்களுக்கும் தொடர்பில்லை என்பதை நீக்குதல். பிறிதின் இயைபு நீக்குதல் - சங்காரக் கடவுளைத் தவிர்ந்த ஏனைய கடவுளருக்குச் சங்கரிக்கும் உரிமை உண்டென்பதை நீக்குதல்.

சங்காரக் கடவுளுக்கும் படைத்தல் காத்தற்றொழில்களுக்கும் தொடர்பில்லை என்பதை நீக்கினால், சங்காரக்கடவுளுக்கும் படைத்தல் காத்தற் றொழில்களுக்குந் தொடர்புண்டென்பது பெறப்படும்.

சங்காரக் கடவுளைத் தவிர்ந்த ஏனைய கடவுளருக்குச் சங்கரிக்கும் உரிமை யுண்டென்பதை நீக்கினால், சங்காரக் கடவுளைத் தவிர்ந்த மற்றைய கடவுளருக்குச் சங்கரிக்கும் உரிமையில்லை யென்பது பெறப்படும். இதனால் மூன்று தொழில்களையுங் செய்யும் உரிமை சிவனுக்கே யுண்டென்பது வலியுறுத்தப்படுகின்றது.

இந்நூலிற் சூத்திரம், கருத்துரை, மேற்கோள், ஏது, திருட்டாந்தம் என்பன ஆசிரியராற் கூறப்பட்டவை.

**நூலாசிரியர் அருளியது :** "இதன் பொழிப்பு உரைத்துக் கொள்க" இவ்வாக்கியத்தின் பொருள் வருமாறு:- பிண்டப் பொழிப்புரை வார்த்திகப் பொழிப்புரை என்னும் இருவகைப் பொழிப்புரைகளுள், கண்ணழித்து (பதங்களைப் பிரித்து ஒவ்வொரு முடிபையும் ஒவ்வொரு அதிகரணமாக வகுத்து, மேற்கோள் ஏது திருட்டாந்தங்களுடன்) யாம் கூறும் வார்த்திகப் பொழிப்புரையைக் கொண்டு பிண்டப் பொழிப்புரை செய்து கொள்க.

"இதன் பொழிப்பு உரைத்துக் கொள்க" என ஆசிரியர் ஆணை தந்தமையினால், கண்ணழித்துரை பற்றிச் சூத்திரத்துக்குப் பதப்பொருள் கூறப்படுகின்றது.

**சூத்திரத்தின் பொருள் :** அவன் அவள் அது எனும் அவை - அவ-னென்றும் அவளென்றும் அதுவென்றும் சுட்டியறியப்படும் சொல்லும் அச்சொல்லாற் குறிக்கப்படும் பொருளுமாகிய இரண்டு பிரிவு-களையுடைய பிரபஞ்சத்தொகுதி, மூவினைமையின் - தோன்றுதல் நிலைத்தல் ஒடுங்குதல் என்னும் முத்தொழில் உடைமையாலும் அறிவற்ற சடமாகிய பிரபஞ்சம் தானே தோன்றி நின்று ஒடுங்க-மாட்டாதாதலாலும், தோற்றிய திதியே - ஒருவனாற் றோற்றப்பட்ட உள்பொருளேயாம், ஒடுங்கி(இன்) அது தோன்றும் போது தான் ஒடுங்குதற்குக் காரணமாய் நின்ற கடவுளினின்றும், மலத்து (ஆல்) உளதாம் - ஆணவ மலம் நீங்காமையால் மீளத் தோன்றுவதாம், அந்தம் ஆதி என்மனார் புலவர் - இவ்வாறு தோன்றுதலால் சங்காரத் தொழிலைச் செய்யுங் கடவுளே உலகிற்கு முதற்கடவுள், ஏனையோர் முதற்கடவுளரல்லர் என அளவை நூலுணர்ந்தோர் கூறுவர் எ-று.

அவை என்பது, அவன் அவள் அது என்னுந் தொகுதியைக் குறிக்கின்றது. தொகுதி - கூட்டம், வினைமை- வினையுடைமை.

பிரபஞ்சத் தொகுதியைத் தோன்றிய திதியெனத் தன்வினைவாய்-பாட்டாற் கூறாமல், தோற்றிய திதியெனப் பிறவினை வாய்பாட்டாற் கூறியமையால், அதைத் தோற்றுவித்தவர் யார் என்னும் வினா அதற் குரிய விடையை அவாவி நின்றது. அவ்வவா நிலை காரணமாக ஒருவ னாற் றோற்றப்பட்ட உள்பொருளேயாமென உரை செய்யப்பட்டது.

திதி என்பதற்குக் காவல் என்பது பொருள். காவல், காத்தற்குரிய உள்பொருளுக்கே யாதலால் இவ்விடத்தில் திதியென்பதற்கு உள்பொருளேயாம் என உரை செய்யப்பட்டது.

தோன்றி நின்று ஒடுங்குதலாகிய முத்தொழிலும் உடைமையால் பிரபஞ்சம் உள்பொருளேயாகு மென்பதையும் உள்பொருளாகிய பிரபஞ்சத்தைத் தோற்றுவித்து நிலைபெறச் செய்து ஒடுக்குவதற்கு ஒரு கருத்தா வேண்டப்படுமென்பதையும் வலியுறுத்துவதற்காக மூவினைமையிற் றோற்றிய திதியே என்றார்.

திதியே என்றதிலுள்ள ஏகாரம் உள்ள பொருளேயாகுமென உறுதியாகக் கூறுதலால் தேற்றம். ஒடுங்கி என்பது பிரபஞ்சம் ஒடுங்குதற்கு ஆதாரமாய் நின்ற கடவுளைக் குறிக்கின்றது.



ஒடுங்கி என்பதில் இன் உருபும் மலத்து என்பதில் ஆல் உருபும் தொக்கு நின்றன. அவ்வுருபுகளை விரித்து, ஒடுங்கியின் எனவும் மலத்தால் எனவும் உரை செய்யப்பட்டது.

பிரபஞ்சத்துக்கு அந்தத்தைச் செய்யும் அந்தமில்லாத கடவுளை அந்தமென்றது உபசாரம்.

உலகம் கண்ணாற் காணக்கூடிய பொருள். கடவுள் கண்ணாற் காண முடியாத பொருள். உலகம் காணப்படுதலால் அதை ஆக்கியவன் ஒருவன் இருத்தல் வேண்டுமென்னும் அனுமானப் பிரமாணங் கொண்டு, கடவுள் உண்டெனச் சாதிக்கக் கருதிய நூலாசிரியர் "தோற்றிய திதியே" என்றும், உலகம் தான் ஒடுங்குதற்கு நிலைக்களமாகிய கடவுளில் ஒடுங்கி, அக்கடவுளால் மீளத் தோன்றுமெனக் குறிப்பிடுவதற்காக, "ஒடுங்கி யுளதாம்" எனவும் உலகின்மேல் வைத்துக் கூறினார்.

கருத்துரையில், சங்கார காரணனாகிய முதலையே முதலாக-வுடைத்து இவ்வுலகமெனக் கூறியதும் காணப்பட்ட உலகத்தைக் கொண்டு கடவுள் உண்டென்பதை உணர்த்தக் கருதியதாலேயாம்.

இச்சூத்திரம் மூன்று அதிகரணங்களையுடையது. அவனவளது-வெனுமவை மூவினைமையின் என்பது ஓரதிகரணம். 'தோற்றிய திதியே யொடுங்கி யுளதாம்' என்பது மூன்றதிகரணத்தை உள்ளடக்-கியதோர் அதிகரணம். 'அந்தமாதி யென்மனார் புலவர்' என்பது ஓரதிகரணம்.

அதிகரணம் - கூறு

இம்மூன்று கூறுகளும் முறையே ஒன்றுக் கொன்று ஏதுவும் பயனுமாய் ஒரு பொருள்மேல் வருதலால் ஒரு சூத்திரமாகக் கூறினார். இதில்,

அவனவளது வெனு மவை மூவினைமையின் என்பது ஏது. தோற்றிய திதியே ஒடுங்கி யுளதாம் என்பது பயன்.

தோற்றிய திதியே ஒடுங்கி உளதாம் என்பது ஏது. அந்தமாதி யென்மனார் புலவர் என்பது பயன்.

அதிகரணத்தில் மேற்கோள், ஐயப்பாடு, பிறர்கூறும் பக்கம், ஏது, திருட்டாந்தம் எனப்படும் ஐந்து உறுப்புகள் அடங்கும்.

**மேற்கோள்** - தன்னாற் கூறப்படும் பொருள்.

**ஏது** - பிறர் கூறும் பக்கத்தை மறுத்துரைக்கும் சித்தாந்தத்துணிவு, காரணம்.

**திருட்டாந்தம்** - உதாரணம், இயைபு.

மேற்கோளில் ஐயப்பாடும் பிறர்கூறும் பக்கமும் அடங்கும்.

## முதலதிகரணம்

### உலகம் முத்தொழில் உடையது எனக்கூறும் மேற்கோள்

**'ஈண்டு உளதாய் ஒருவன் ஒருத்தி ஒன்று என்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசமுடைத் தென்றது'**

மேற்கோளில் ஐயப்பாடும் பிறர் கூறும் பக்கமும் அடங்குமென முன்னர்க் கூறப்பட்டது. இம்மேற்கோளில் பிரபஞ்சம் உற்பத்தி, திதி, நாசமென்னும் முத்தொழிலுடையதோ இல்லையோ என்பது ஐயம். இவ்வையப் பாட்டின் கண் நித்தமாய்க் காணப்படும் பிரபஞ்சம் தோன்றி, நின்று ஒடுங்குமெனக் கூறுதல் பொருந்தாதென மீமாஞ்சகரும் உலகாயதருங் கூறுவர். இது பிறர் கூறும் பக்கம். இவர்களது கூற்றை மறுக்குமுகமாகச் சூத்திரத்தின் முதற்கூற்றைப் பதச்சேதஞ் செய்து பிரபஞ்சம் முத்தொழிலுடைத்தென இந்தமேற்கோளிற் கூறப்படுகின்றது.

இம்முதலதிகரணம், ஒருவனென்றும் ஒருத்தியென்றும் ஒன்றென்றும் பகுக்கப்படுகின்ற பிரபஞ்சம் அவயவப் பகுப்புடைத்தாயும் அப்பகுப்பு ஒவ்வொன்றும் பலவேறு வகைத்தாய்ச் சடமாயும் சுட்டியறியப்படுவதாயு மிருத்தலின், இம்மூன்று ஏதுவாலும் பிரபஞ்சம் தோன்றி நின்று அழியுமெனத் துணியலாமெனக் கூறவேண்டி, உளதாய்ச் சுட்டப்பட்ட பிரபஞ்சமெனக் கூறாது ஒருவன் ஒருத்தி ஒன்றென்று உளதாய்ச் சுட்டப்பட்ட பிரபஞ்சமென உடம்பொடு புணர்த்திக் கூறினார்.

உடம்பொடு புணர்த்தலென்பது ஒரு வாக்கியத்தில் அதற்குரிய பொருளை மாத்திரமன்றிக் குறிப்பால் வேறொரு பொருளையுஞ் சேர்த்துக் கூறுதல். இதில் வாக்கியம் உடம்பும் பொருள் உயிருமாகும். இவ்வாக்கியத்தில் ஒருவன் ஒருத்தி ஒன்று என்ற பிரபஞ்சம் என்பதனோடு அவயவப்பகுப்பும் சடமும் சுட்டியறியப்படுதலுமாகிய ஏதுப் பொருள்களைப் புணர்த்திக் கூறியிருத்தல் காண்க. இம்மூன்று ஏதுவாலும் பிரபஞ்சம் முத்தொழிற்படுமெனக் கூறினார் எ-று.

இந்த மேற்கோளை, 'ஈண்டு ஒருவன் ஒருத்தி ஒன்றென்று உளதாய்ச் சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசமுடைத்தென்றது' எனக் கொண்டு கூட்டுக.



ஒருவன் என்பது அவன் என்று சுட்டப்படும் உடம்பையும் ஒருத்தி என்பது அவளென்று சுட்டப்படும் உடலையும் ஒன்றென்பது அது என்று சுட்டப்படும் உடலையுங் குறிக்கும்.

உளதாய்ச் சுட்டப்படுதல் முயற்கொம்பு, கயிற்றரவு முதலியன போலத் திரிபு ஐயங்களின்றி மெய்யாகச்சுட்டப்படுதல்.

திரிபு - விபரீதம்; ஒன்றை வேறொன்றாகக் கருதுதல். ஐயம்- சந்தேகம் முயலின் செவியைக் கொம்பெனக் கருதுதல் திரிபுக் காட்சி அல்லது விபரீதக் காட்சி எனப்படும். இருட்டு வேளையில் வழியில் வளைந்து கிடக்கும் பொருளைக் கண்டு இது கயிறோ அல்லது பாம்போ என்றெண்ணுதல் ஐயம். உண்மையை உணர்ந்தபோது விபரீதமாய்க் காண்பதும் ஐயமாய்க் காண்பதும் இல்பொருள்களாய் முடியும். முயற்கொம்புக்கும் கயிற்றரவுக்கும் தோற்றம் நிலை இறுதிகள் இல்லை. பிரபஞ்சத்துக்குத் தோற்றம் நிலை இறுதிகள் உண்டு. ஆதலால் அது உள் பொருளேயாகும். எ-று.

### உலகம் முத்தொழிற்படும் என்பதற்குக் காட்டும் ஏது

***'தோற்றமும் ஈறும் உள்ளதன்பாலே கிடத்தலின்'***

உலகாயதர் காட்சியளவை ஒன்றை மாத்திரமே கொள்பவர். அனுமானப் பிரமாணத்தையும் ஆகமப் பிரமாணத்தையும் கொண்டு உலகம் முத்தொழிற்படுமெனக் கூறினால் அவர் அதை ஒப்புக்கொள்ளார். அதனால் உலகம் முத்தொழிற்படுமென மேற்கோளிற் கூறப்பட்டதைக் காட்சியளவையினால் வலியுறுத்துகின்றது இவ்வேது. ஆகவே இவ்வேது பிறர் கூறும் பக்கத்தை மறுத்துரைக்கும் சிந்தாந்தத் துணிபாயிற்று.

**இ-ள் :** உற்பத்தியும் நாசமும் காணப்படுகின்ற உள்பொருளிடத்தே காணப்படுதலால், பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசமுடைத்தென்று மேற்கோளிற் கூறப்பட்டது. எ-று.

### தோற்றமும் நாசமும் உள்ளதன் பாலே காணப்படு மென்பதற்குக் காட்டும் உதாரணம்

***பூதாதி யீறு முதலுந் துணையாகப்***
***பேதாய் திதியாகும் பெற்றிமையி - னோதாரோ***
***வொன்றொன்றிற் றோன்றி யுளதா யிறக்கண்டு***
***மன்றென்று முண்டென்ன வாய்ந்து.***

**கொண்டுகூட்டு :** பேதாய் பூதாதி (கு) திதி ஈறும் முதலும் துணை ஆக ஆகும். ஒன்று ஒன்றின் பெற்றிமையின் தோன்றி உளதாய் இறக்கண்டும் என்றும் அன்று உண்டு என்ன ஆய்ந்து ஓதாரோ.

உள்ளதன் பால் ஈறும் தோற்றமும் கிடத்தல் எவ்வாறு என்னும் வினாவை ஆசிரியர் தாமே எழுப்பி, ஈறுந் தோற்றமும் உள்ளதன்பாலே கிடக்குமென்னும் ஏதுவை இவ்வுதாரணத்தின் மூலம் வலியுறுத்துகின்றார்.

**இ-ள் :** பேதாய் - பிரபஞ்சம் தோன்றியழிவதைக் கண்டும் அது முத்தொழிற்படும் என்பதை உணராத அறிவில்லாதவனே, பூதாதிக்கு -பூதத்தை முதற்காரணமாகவுடைய பிரபஞ்சத்திற்கு, திதி ஈறும் முதலும் துணையாக ஆகும் - இருத்தல் நிகழும்போது அது நாசத்தையும் உற்பத்தியையும் துணைக் காரணமாகக் கொண்டே நிகழும் (அவ்வாறாயினும் ஒன்று தோன்ற ஒன்று நிற்க ஒன்று அழிவதன்றி ஒருங்கே தோன்றி ஒருங்கே நின்று ஒருங்கே அழியக் கண்டிலமென்னின்) ஒன்று ஒன்றின் பெற்றிமையின் தோன்றி உளதாய் இறக்கண்டும் - ஒவ்வொரு காலத்தில் ஒருசாதியில் பயிர்களும் செந்துக்களும் ஒருங்கே தோன்றி ஒருங்கே நின்று ஒருங்கே அழியக் கண்டும், என்றும் - என்றாயினும், அன்று உண்டு என்ன ஆய்ந்து ஓதாரோ- பிரபஞ்சத்திற்கும் ஒருங்கே அழிவதற்குரிய காலம் வருமென்று அறிவுடையோர் ஆராய்ந்து பார்த்துச் சொல்லார்களோ? சொல்லுவர் எ-று.

பூதாதி - பூதத்தை முதற்காரணமாகவுடைய பிரபஞ்சம். பெற்றிமை - தன்மையுடைமை. அது பொதுவான தன்மையுடைய ஒரு சாதியைக் குறிக்கின்றது. அன்று - அதற்குரிய காலம், இறுதிக்காலம்.

பூதாதி என்பது அன்மொழித்தொகை. அது பூதத்தை முதற்காரணமாகவுடைய பிரபஞ்சத்தைக் குறிக்கின்றது. பூதாதி என்பதற்குப் பூதத்துக்குமேலுள்ள தத்துவங்களென்று பொருள் கொள்ளக் கூடாதோவெனின், அவ்வாறு கூறுதல் பொருந்தாது. இவ்விடத்தில் உலகாயதர் மதம் பற்றி ஆராயப்படுகின்றது. உலகாயதர் பூதத்துக்கு மேல் தத்துவங்கள் உண்டென்பதை ஒப்புக்கொள்ளார்.

பூதாதி என்பதில் நான்காம் வேற்றுமை யுருபு தொக்கு நின்றது. அதை விரித்து, பூதாதிக்கு எனக் கொண்டு, பிரபஞ்சத்திற்கு என உரை செய்யப்பட்டது.

பூதாதிக்கு என்பது நான்காம் வரியிலுள்ள, அன்று உண்டு என்ன ஆய்ந்து ஓதாரோ என்பதனோடுஞ் சேரும். அதனால், பிரபஞ்சத்திற்கும் ஒருங்கே அழிவதற்குரிய காலம் வருமென்று அறிவுடையோர் ஆராய்ந்து பார்த்துச் சொல்லார்களோவென உரை செய்யப்பட்டது.



ஓதாரோ என்பதில் வரும் ஓகாரம் எதிர்மறை. அதனால், ஓதாரோ என்பதற்கு ஓதுவர் எனப் பொருள் கொள்க.

ஒன்றொன்றின் என்பது அடுக்குமொழி. என்றும் அன்று உண்டு என்பதில், அன்று என்பது அதற்குரிய காலம் என்னும் பொருளைத் தருகின்றது. ஒன்றொன்றின் என்பதற்கு ஒவ்வொரு காலத்தில் என உரை செய்யப்பட்டது.

ஒருங்கே என்பது செய்யுளில் இல்லை. ஆனாலும், தோன்றி உளதாய் இறக்கண்டும் என்னுஞ் சொற்றொடர், ஒருங்கேதோன்றி ஒருங்கே நின்று ஒருங்கே அழிவதைக் கண்டும் என்னும் பொருளைத் தருதலால், ஒருங்கே என்பதைச் சொல்லெச்சமாக வருவித்துப் பொருள் கூறப்பட்டது.

பிரபஞ்சம் ஒருங்கே அழிதலால் ஒடுங்கிய பிரபஞ்சமே சற்காரிய முறைப்படி மீளத் தோன்றுமெனக் கொள்க.

ஒரே காலத்தில் ஒரே சாதித் தாவரங்கள் ஒன்றாகத் தோன்றி ஒன்றாக நின்று ஒன்றாக அழியுமென்பதை "பயில் வித்தெல்லாம் காரிடமதனிற் காட்டு மங்குரங் கழியும் வேனில்" எனச் சிவஞான சித்தியார் கூறுவதாலுமறிக. காரிடம் - மழைக்காலம், மாரிகாலம். அங்குரம் - முளை, கழியும் -அழியும்.

காண்டல், கருதல் உரை என்னும் மூன்று பிரமாணங்களுள் காண்டல் சிறந்தமையால், இறக்கண்டும் என்பதிலுள்ள உம்மை சிறப்பும்மை.

காண்டலைப் பிரத்தியட்சமென்றும் கருதலை அனுமானமென்றும் உரையை ஆகமப் பிரமாணமென்றும் கூறுவதுண்டு.

## இரண்டாம் அதிகரணம்

### உலகம் முத்தொழிற்படுமாயினும் கருத்தாவேண்டாம் என்பாரை மறுத்து உலகத்துக்குக் கருத்தா வேண்டப்படும் எனக்கூறும் மேற்கோள்

***இனி இல்லதற்குத் தோற்றமின்மையின் உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின் ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தியில்லை என்றது.***

இவ்வாறு சொற்சுருக்கமாகக் கூறினாரேனும் பொருளியைபுக்-கேற்ப இவ்வதிகரணத்தை மூன்றதிகரணமாக வகுத்துக் கூறுவதே ஆசிரியரின் கருத்தாகும்.

இந்த மேற்கோள் சூத்திரத்திற் கூறப்பட்ட தோற்றிய திதியே ஒடுங்கி உளதாம் என்பதைப் பொருளியைபுக்கேற்ப மூன்று பிரிவுகளாகப் பிரித்துக்கூறுகின்றது. இதில்,

திதி என்பதற்கு இல்லதற்குத் தோற்றமின்மையின் என்றும், தோற்றிய என்பதற்கு உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினை-யின்மையின் என்றும்; ஒடுங்கியுளதாம் என்பதற்கு ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தியில்லையென்றுங் கூறப்பட்டிருக்கின்றது.

இவற்றில்,

1. இல்லதற்குத் தோற்றமின்மையின் என்பதும்,

2. உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின் என்பதும் ஏதுக்களாகவும், ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தியி-லில்லையென்பது மேற்கோளாகவும் அமைந்திருக்கின்றன.

இவ்வதிகரணத்தை மூன்றதிகரணங்களாக வகுத்துக் கூறுவதே ஆசிரியரின் கருத்தானாலும் இந்த மூன்று அதிகரணங்களும் உலகத்துக்குக் கருத்தா உண்டென்பதையே வலியுறுத்துகின்றன.

இதிற் கூறப்பட்டிருக்கும் ஏதுக்களுக்கு மேற்கோள்களையும் மேற்கோள்களுக்கு ஏதுக்களையுங் கூறினால், மூன்றதிகரணங்களும் பின்வருமாறு மேற்கோள்களையும் ஏதுக்களையுங் கொண்டிருக்கும்:

### உலகம் உள்பொருளெனக் கூறும் முதலாவது மேற்கோள்

***இனி உலகம் உள்ளது என்றது.***

இந்த மேற்கோளில் முத்தொழிற்படுமெனக் கூறப்படும் உலகம் இல்பொருளோ உள்பொருளோ என்பது ஐயம். இவ்வையப் பாட்டின் கண் இல்பொருளாகிய உலகம் தோன்றி நின்று அழியினும், ஒரு மரம் நிற்க வேறொரு மரம் அழிவதும் நிற்கும் மரத்திலிருந்து வேறொரு மரந் தோன்றுவதும் போலத் தத்தம் சார்பிற் றோன்றி யழிதலே இயல்பு. அது தன்னைத் தோற்றுவிப்பான் ஒருவனை யுடைத்தென்றல் செல்லாதென்பது பிறர் கூறும்பக்கம். இவ்வாறு கூறுவோர் புத்த நூலார். அவர்களது கூற்றை மறுக்கு முகமாக, சூத்திரத்தைப் பதச்சேதஞ் செய்து உலகம் உள்பொருளென இந்த மேற்கோளிற் கூறப்படுகின்றது.



### உலகம் உள்பொருள் என்பதற்குக் காட்டும் ஏது

***இல்லதற்குத் தோற்றமின்மையின்***

உலகம் உள்பொருளென்ப தெவ்வாறென்னும் வினாவுக்கு விடைகூறுமுகமாக, இல்லாத பொருள் தோன்றாதாதலின் உலகம் உள்பொருளேயாகுமெனக் கூறி மேற்கோளை வலியுறுத்துகின்றது இவ்வேது.

**இ-ள்:-** முயற்கொம்பு இல்பொருள், அது தோன்றினதுமில்லை, தோன்றுகின்றதுமில்லை; தோன்றப் போவதுமில்லை. முயற்கொம்-புக்குப் போலன்றி உலகத்துக்கு உற்பத்தி காணப்படுதலால், அது உள்பொருளேயாகும் எ-று.

### உலகம் உள்பொருளாயினும் அதனைத் தோற்றுவிப்பதற்கு ஒரு கருத்தா வேண்டாம் என்பாரை மறுத்து, கருத்தா வேண்டுமெனக் கூறும் மேற்கோள்

***இனி உலகம் செய்வோனை உடைத்து என்றது.***

இந்த மேற்கோளில் உலகத்தைத் தொழிற்படுத்துவதற்கொரு கருத்தா வேண்டுமோ வேண்டாமோ என்பது ஐயம். இவ்வையப் பாட்டின் கண் உள்பொருளெனப்பட்ட பிரபஞ்சம் தத்தம் முதற்காரணத்தினின்றும் தானே தோன்றியழியும். அதற்குத் தோற்ற நாசங்களைச் செய்வதற்கொரு கருத்தா வேண்டாமென்பது பிறர் கூறும்பக்கம். இவ்வாறு கூறுவோர் சாங்கியர். அவர்களது கூற்றை மறுக்குமுகமாகச் சூத்திரத்தைப் பதச் சேதஞ் செய்து, உலகத்தைத் தொழிற்படுத்துவதற்கொரு கருத்தா வேண்டுமென இந்த மேற்கோளிற் கூறப்பட்டிருக்கிறது.

### உலகத்துக்குக் கருத்தா வேண்டும் என்பதற்குக் காட்டும் ஏது

***'உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினை இன்மையின்'***

உலகம் உள்பொருளாயினும் அதை உண்டாக்குவதற்கொரு கருத்தா வேண்டுமென்பதற்குப் பிரமாணமென்ன வென்று கேட்போருக்குக் காண்டல் அளவையால் உலகம் செய்வோனை யுடைத்தென்னும் மேற்கோளை வலியுறுத்துகின்றது இவ்வேது.

**இ-ள் :** மண் முதலியவற்றிற் சூக்குமமாயுள்ள குடம் முதலிய பொருள்கள் தூலமாய் வெளிப்பட்டுத் தோன்றுதற்கு, குயவன் முதலிய செய்வோரையின்றி வனைதல் முதலிய தொழில்கள் நிகழா. இவ்வியல்பிற்றாய் மாயையிற் சூக்குமமாய் ஒடுங்கியிருக்கும்

உலகமும் தூலமாய் வெளிப்பட்டுத் தோன்றுதற் கொரு கருத்தா வேண்டுமென்னும் மேற்கோளை வலியுறுத்துகின்றது இவ்வேது.

### உலகத்துக்குக் கருத்தா உண்டாயினும் அக்கருத்தா பிரமன் முதலியோராதல் அமையுமென்பாரை மறுத்துச் சிவனே கருத்தா எனக் கூறும் மேற்கோள்

***இனி ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தியில்லை என்றது.***

இந்த மேற்கோளில், உலகத்தைத் தோற்றுவிக்குங் கருத்தா சங்காரக் கடவுளோ, காத்தற் கடவுள் படைத்தற் கடவுளரில் ஒருவரோ என்பது ஐயம். இவ்வையப் பாட்டின்கண் உலகத்துக்குக் கருத்தா திதிகருத்தா சிருட்டி கருத்தா முதலியோரில் ஒருவரென்பதே பொருந்து மென்பது பிறர் கூறும் பக்கம். கருத்தா விட்டுணு என்போர் பாஞ்சராத்திரிகள். பிரமன் என்போர் இரணியகருப்பர். அவர்களது கூற்றை மறுக்கு முகமாக, ஒடுங்கியுளதா மென்னுஞ் சூத்திரக் கூற்றைப் பதச்சேதஞ்செய்து, உலகத்துக்குக் கருத்தா சங்காரக் கடவுளேயென இந்த மேற்கோளிற் கூறப்படுகின்றது.

**இ-ள்:** உலகம் தான் ஒடுங்குதற்கு நிலைக்களமான சங்கார கருத்தாவினின்றன்றி உளதாகாது எ-று.

ஒடுங்கின என்னும் பெயரெச்சம் சங்காரம் என்னும் இடப்பெயரோடு முடிந்தது. சங்காரம் என்பது சங்காரக் கடவுளைக் குறித்தலால் ஆகுபெயர்.

உற்பத்தி சங்காரக் கடவுளைத் தவிர்ந்த ஏனைய கடவுளரால் நிகழாதென்பதை வலியுறுத்துவதற்காக, உற்பத்தி சங்காரத்தினல்ல தில்லையென எதிர்மறை முகத்தாற் கூறினார்.

இந்த மேற்கோளில், பிரபஞ்சம் சங்கார கருத்தாவில் ஒடுங்குத லால் ஒடுங்கின சங்கார கருத்தாவிலிருந்தல்லது தோன்றாதென, பிரபஞ்சம் சங்கார கருத்தாவிலிருந்து தோன்றுவதற்குரிய ஏது குறிப்பா கக் கூறப்பட்டிருக்கிறது. அதை, ஏதுவில் வெளிப்படையாகக் கூறுகின்றார்.

### ஏது

***'ஆண்டு ஒடுங்குதலின்'***

சங்காரக் கடவுளே முதற் கடவுள் என்பதற்குப் பிரமாணமென்ன என்னும் வினாவுக்கு விடைகூறுமுகமாக, பிரபஞ்சம் சங்காரக்



கடவுளிடத்து ஒடுங்குதலினால், சங்காரத்தினல்லது உற்பத்தியில்லை என்னும் மேற்கோளை வலியுறுத்துகின்றது இவ்வேது,

**இ-ள்:** எப்பொருள் எவ்விடத்தில் ஒடுங்குகின்றதோ அப்பொருள் ஒடுங்கிய அவ்விடத்திலிருந்தே உற்பத்தியாகும். குடம் உடையும்போது குடத்தின் தன்மை மண்ணிடத்து ஒடுங்கி, குடம் மீளத் தோன்றும்போது மண்ணிலிருந்து தோன்றுவது போல, பிரபஞ்சம் சங்கார காரணனிடத்தில் ஒடுங்கி மீளத் தோன்றும்போது சங்கார காரணனிலிருந்தே தோன்றுமெனக் கூறி, மேற்கோளை வலியுறுத்துகின்றது இவ்வேது.

### உலகம் உள்ளதென்பதற்குக் காட்டும் உதாரணம்

***இலயித்த தன்னிலில யித்ததாம லத்தா***
***லிலயித்த வாறுளதா வேண்டும் -***

**கொண்டுகூட்டு :** இலயித்தது இலயித்த தன்னில் ஆம் மலத்தால் இலயித்தவாறு உளது ஆ வேண்டும்.

உலகம் உள்பொருளாயின் உள்ளதற்கு உண்டாக வேண்டிய-தில்லை. ஆதலால் ஒடுங்கிய உலகம் மீளத் தோன்றுமென்பது பொருந்தாதெனப் புத்தர்கூறுவர். அவர்களது கூற்றை மறுக்கு முகமாக, இல்லதற்குத் தோற்றமின்மையின் என ஏதுவிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**இ-ள் :** இலயித்தது - உள்பொருளாய்ச் சங்காரகாலத்தில் ஒடுங்கிய உலகம், இலயித்த தன்னில் ஆம்- தான் ஒடுங்குவதற்கு இடமாகிய சங்காரக் கடவுளிலிருந்து படைப்புக்காலத்தில் மீள உண்டாகும், (ஒடுங்கிய உலகம் ஒடுங்கியவாறே இருக்காது மீண்டும் உண்டாக வேண்டியதில்லை. மீள உண்டாக வேண்டுமாயின் முன்னர் ஒடுங்காதிருந்திருக்கலாம். அவ்வாறின்றி ஒடுங்கி மீள உண்டாவது எதற்காகவெனின்) மலத்தால் - கன்ம மலம் பரிபாகமாதற் பொருட்டு ஒடுங்கி ஆணவமலம் பரிபாகமாதற்பொருட்டு மீளவுமுண்டாகும். (அவ்வாறாயினும் முன்பிருந்த உலகம் சங்கார காலத்தில் அழிந்து போகப் படைப்புக்காலத்தில் வேறுலகந் தோன்றுமென்று சொல்லாமல் ஒடுங்கிய உலகம் மீளத் தோன்றுமென்றதற்குப் பிரமாணமென்ன வெனின்) இலயித்தவாறு உளது ஆ வேண்டும் - எந்தப் பொருள் எவ்வாறு நின்று ஒடுங்கியதோ அந்தப்பொருள் ஒடுங்கியவாறே மீண்டும் உளதாதல் எல்லாராலும் விரும்பப்படும் எ-று.

ஒடுங்கியதே தோன்றும் நியமம் இல்லையாயின் நெல்லிலிருந்து கமுகும் கமுகிலிருந்து நெல்லுந் தோன்றக்கூடும். அவ்வாறின்றி நெல்லிலிருந்து நெல்லும் கமுகிலிருந்து கமுகும் தோன்றுவதற்குக் காரணம் நெல்லின் தோற்றமே நெல்லிடத்தும் கமுகின் தோற்றமே கமுகிடத்தும் ஒடுங்கியிருப்பதேயாகும். இவ்வாறே ஒடுங்கிய உலகமும் மீளச் சங்காரக் கடவுளிலிருந்து தோன்றும் எ-று.

நெல்லும் கமுகும் ஆகு பெயர்கள். அவை அவற்றின் விதைகளைக் குறிக்கின்றன.

இவ்வுதாரணத்தால் இல்லதும் உள்ளதுமல்லாத பொருள் தோன்றுமென்னும் சூனியான்மவாதி மதமும், இல்லதும் உள்ளது மாய பொருள் தோன்றுமென்னும் அநேகாந்தவாதி மதமும், மறுக்கப்பட்டன.

உடம்பெடுப்பதற்கு முன் சீவன் உண்டோ இல்லையோ என்று கேட்டால், உண்டாம், இல்லையாம், உண்டும் இல்லையுயாம் என்று பலவிதமாக அநேகாந்தவாதி விடை கூறுவான். அநேகாந்தவாதி - ஆருகதர்.

கன்ம மல பரிபாக மென்பது நல்வினை தீவினைகளின் காரியமாகிய இன்ப துன்பங்களைப் பலகாலம் அனுபவிப்பதால் அவற்றில் வெறுப்புத் தோன்றுதல். அதனால் கன்ம மல பரிபாகம் உண்டாகும் பொருட்டு உயிர் நெடுங்காலம் இன்பதுன்பங்களை அனுபவிக்கவேண்டும். அதனால் எடுத்த உடலோடு கூடி அனுபவிக்க வேண்டிய இன்பதுன்பங்களை அனுபவித்த பின் அவ்வுடலை ஒடுக்கி, பக்குவமாயிருக்கும் கன்மபலனை அனுபவிக்கச் செய்யும் பொருட்டு உயிருக்கு அவ்வனுபவத்திற்கேற்ற உடல் முதலியவற்றை மீண்டும் கொடுக்க வேண்டும். அதனால் ஒடுக்கம் கன்மமல பரிபாகத்தின் பொருட்டு நிகழ்கின்றது. ஆணவமலம் ஆன்மாவுக்கு அறியாமையைச் செய்வது. ஆன்மாவின் அறிவை மறைக்கும் ஆணவமல சக்தி, அதன் அறிவை மறைக்க முடியாமல் வலிகெட்டுப் போதல் ஆணவமல பரிபாகமெனப்படும்.

**உலகம் ஒடுங்குதற்கு ஆதாரமாகிய சங்காரக் கடவுளே உலகத்திற்கு முதற்கடவுள் என்பதற்குக் காட்டும் உதாரணம்**

***- இலயித்த தத்திதியி லென்னி னழியா தவையழிவ தத்திதியு மாதியுமா மங்கு***



**கொண்டுகூட்டு:-** இலயித்தது அத்திதியில் என்னின் அவை அழியாது. அத்திதியும் ஆதியும் ஆம் அங்கு அழிவது.

சற்காரியவாதம், காரியங்கள் ஒடுங்குங்கால் அதனதன் முதற்காரணத்தில் ஒடுங்குமெனக் கொள்ளும். உலகிற்கு முதற்காரணமாகிய மூலப்பகுதி வாசுதேவ னுருவாதலால் உலகம் அவனிடத் தொடுங்குமென்பதே பொருந்தும். அவ்வாறன்றி முதற்காரணத்தின் வேறாய் உலகிற்கு நிமித்த காரணனெனக் கொண்ட சங்கார கருத்தாவிடத்து, ஒடுங்குமென்றல் பொருந்தாதென்பர் பாஞ்சராத்திரிகள். அவர்களது கூற்றை மறுக்கு முகமாகச் சங்கார கருத்தாவினிடத்து ஒடுங்குமெனக் கூறி, ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தியில்லையென்ற மேற்கோளில் உள்ள ஒடுங்குதலினால் என்னும் குறிப்பேதுவையும் இலயித்த தன்னில் என்னும் உதாரணத்திற்கூறப்பட்ட இலயித்ததனால் என்னும் குறிப்பேதுவையும் இலயித்த தன்னில் என்னும் உதாரணத்திற் கூறப்பட்ட இலயித்ததனால் என்னும் குறிப்பேதுவையும் வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**இ-ள்:** இலயித்தது அத்திதியில் என்னின்- உலகம் ஒடுங்கியது அந்த மூலப்பகுதி வடிவான திதி கருத்தாவிடத்தென்னில், அவை அழியாது - மூலப்பகுதிக்குமேல் வித்தியா தத்துவம் சிவதத்தவங்களிலுள்ள உலகங்கள் மூலப்பகுதியினால் வியாபிக்கப்படாமையால் மூலப் பகுதியின் கீழுள்ள உலகங்கள் மாத்திரமே மூலப்பகுதியில் ஒடுங்குவதன்றி, மாயாகாரியமான உலகம் முழுவதும் மூலப்பகுதியில் ஒடுங்காது, அத்திதியும் ஆதியும் ஆம் அங்கு அழிவது - அவ்வாறாயின் மாயாகாரியத் தொகுதி முழுவதும் எங்கே ஒடுங்குமெனின் அந்தக் காத்தற் கடவுளாகிய விட்டுணுவும் படைத்தற் கடவுளாகிய பிரமாவும் தோன்றுவதற்குக் காரணமாகிய சங்காரக் கடவுளித்தே அவ்விருவ ரோடும் ஒடுங்கும் எ-று:

சைவசித்தாந்திகள் தத்துவங்கள் முப்பத்தாறென்பர். அசுத்தமாயையிற் றோன்றும் கலாதத்துவத்திலிருந்து மூலப்பகுதி தோன்றி, மூலப்பகுதியிலிருந்து ஆன்மதத்துவங்கள் இருபத்து நான்குந் தோன்றும். பாஞ்சராத்திரிகள் மூலப்பகுதியே பிரபஞ்சத்துக்கு முதற்காரணமெனவும் அது வாசுதேவனுருவெனவுங் கூறுவர்.

இவ்வெண்பாவுக்கு இரண்டதிகரணப் பொருள்படுமாறு இரண்டு தொடராக வைத்துப் பொருள் கூறப்பட்டது. முதற்-

றொடரால் உலகம் உள்ளதெனவும் இரண்டாந் தொடரால் சங்காரக் கடவுளே முதற்கடவுளெனவுஞ் சாதிக்கப்பட்டது.

இலயித்ததென்றது, இலயித்ததாகலான் என்னும் ஏதுப் பொருளுணர நின்ற பெயர்ச்சொல். ஒடுங்கும்போது ஒடுக்கப்படுங் காரியத்தின் சத்திக்கூட்டமாய் சூக்குமமாய் நிற்பதொன்றுண்டு. அதுவே பிரபஞ்சத்துக்கு முதற்காரணமாகிய மாயை. பிரபஞ்சத்துக்குக் கருத்தா உண்டென்று கூறிய இவ்வெண்பாவில் மாயை உண்டென்பதுங் கூறப்பட்டது.

உளதா வேண்டும் என்பதில் 'ஆ' என்பது முதனிலைத் தொழிற்பெயர். இதில் வரும் 'ஆ' என்பது ஆதல் என்னும் பொருளைத் தருகின்றது. முதலாவது தொடரிலுள்ள வேண்டும் என்பது வேண்டப்படும் என்னும் பொருளைத் தருகின்றது.

வேண்டப்படும் -விரும்பப்படும்.

அவை அழிவது என்பதிலுள்ள அவை என்பது பிரபஞ்சத் தொகுதியைக் குறிக்கின்றது. திதியும் ஆதியும் ஆகுபெயர்கள். திதி என்பது காத்தலைச் செய்யும் விட்டுணுவையும் ஆதி என்பது ஆதியைச் (படைத்தலைச்) செய்யும் பிரமாவையும் குறிக்கின்றன. இதனால் விட்டுணுவே முதற்கடவுளென்னும் பாஞ்சராத்திரிகளும் பிரமாவே முதற் கடவுளென்னும் இரணியகருப்பரும் மறுக்கப்பட்டனர்.

### உலகம் ஒரு கருத்தாவை உடையது என்பதற்குக் காட்டும் உதாரணம்

***வித்துண்டா மூல முளைத்தவா தாரகமா***
***மத்தன்றா ணிற்ற லவர்வினையால் - வித்தகமாம்***
***வேட்டுவனா மப்புழுப்போல் வேண்டுருவைத் தான்கொடுத்துக்***
***கூட்டானே மண்போற் குளிர்ந்து.***

உலகம் தனக்கு முதற்காரணமாகிய மாயையில் ஒடுங்குவதன்றி, உலத்துக்கு நிமித்த காரணனொருவன் உண்டெனக் கொள்ளினும் அவனிடத்தில் ஒடுங்குமென்பது பொருந்தாது. எப்பொருள் எவ்விடத்தில் ஒடுங்குகின்றதோ அப்பொருள் அதனிடத்திலிருந்து, உற்பத்தி யாகுமாதலால், மாயையில் ஒடுங்கிய உலகத்தை மாயையே தோற்றுவிக்கும். அதற்கோர் இறைவன் வேண்டாமெனச் சாங்கிய நூலார் கூறுவர். அவர் கூற்றை மறுக்குமுகமாக உள்ளதற்குச்



செய்வோரின்றிச் செய்வினை யின்மையின் என ஏதுவிற் கூறப்பட்டதை வலியுறுத்துகின்றது. இவ்வுதாரணம்.

**கொண்டுகூட்டு:** மண் குளிர்ந்து வித்து உண்டா மூலம் முளைத்தவா தாரகம் ஆம் அத்தன்தாள் நிற்றல் அவர் வினையால் வித்தகம் ஆம் வேட்டுவன் ஆம் அப்புழுப்போல் வேண்டு உருவை தான் கொடுத்துக் கூட்டானே.

**இ-ள்:** மண்குளிர்ந்து வித்து உண்டா மூலம் முளைத்தவா - மாயைவித்தும் உலகம் முளையும் போலுமாகலின் வித்துக்கு ஆதாரமாகிய நிலம் குளிர்ந்தவழி அதனிடத்து வித்து உள்ளதாக அதிலிருந்து முளை தோன்றியவாறு போல, தாரகமாம் அத்தன்தாள் நிற்றல் (இன்) - மாயை தனக்கு ஆதாரமான இறைவனது சத்தியின் கண் உள்ளதாய் நிற்றலால், அவர் வினையால் வித்தகம் ஆம் - சக்தி சங்கற்பித்தவழி அவரவர் வினைக்கீடாக அவ்வக் காரியங்களைத் தோற்றுவிக்கும் சாமர்த்தியம் உண்டாம், சத்தி சங்கற்பிக்காதவிடத்து மாயைக்குக் காரியங்களைத் தோற்றுவிக்கும் சாமர்த்தியம் கிடையாது. ஆதலால் மாயையில் ஒடுங்கித் தோன்றிய உலகம் அதற்காதாரமாகிய இறைவனது சத்தியிலொடுங்கித் தோன்றியதேயாம். எ-று.

தாரகம் - ஆதாரம். தாள் - சக்தி

உரையில், ஆதலால் என்பது தொடக்கம் தோன்றியதேயாம் என்பது வரையுள்ள பகுதி குறிப்பாகக் கொள்ளுமாறு எஞ்சி நின்றமையாற் குறிப்பெச்சம். மாயையிலிருந்து தோன்றிய உலகை அதற்காதாரமாகிய சத்தியிலிருந்து தோன்றியதெனக் கூறுதல், கிழங்கிலிருந்து தோன்றிய தாமரையைக் கிழங்குக்கு ஆதாரமாகிய சேற்றிலிருந்து தோன்றியதென்னும் பொருளைத் தரும் பங்கசமெனக் கூறுவதோடொக்கும்.

பங்கம் - சேறு, ஜம்- தோன்றுதல்.

இதிற் கூறப்பட்டிருப்பது போலவே சிவஞான சித்தியாரில் "உயிரவை ஒடுங்கிப் பின்னும் உதிப்பதென் அரன்பால்" என்றும், "உலகவ னுருவிற் றோன்றியொடுங்கிடும்" என்றும், வாதுளாகமத்தில் உலகம் அவனுருவிற் றோன்றி யொடுங்குமாறு, வகுத்தோதப் பட்டிருத்தலுங் காண்க. இவ்வெண்பாவில்,

| உவமானம் | உவமேயம் |
|---|---|
| வித்து | மாயை |
| முளை | உலகம் |
| மண் | சக்தி |

இவ்வெண்பாவில் மண்குளிர்ந்தவிடத்து முளை தோன்று-மெனக் கூறப்பட்டிருக்கிறது. மண்ணுக்குக் குளிர்தலாகிய வினை கூறப்பட்டது போல, உவமேயமாகிய சத்திக்கு வினை கூறப்பட-வில்லை. அதனால் அதற்குரிய வினையை வருவித்து, சத்தி சங்கற்பித்தவழி என உரை செய்யப்பட்டது.

உவமேயத்தில் தாரகமாம் என்பதைச் சத்திக்கு அடையாகக் கூறியது போல, உவமானத்தில் மண்ணுக்கு அடையாகத் தாரகமாம் என்பதைக் கூறவில்லை. உவமேயத்திற்குக் கூறிய அடை உவமானத்துக்கும் பொருந்துமாதலால் அதைச் சேர்த்து, வித்துக்கு ஆதாரமாகிய நிலம் என உரைசெய்யப்பட்டது.

பரிணாம வாதிகள், மாயை என்றொரு பொருளில்லை, பிரமமே உலகமாகத் தோன்றுமென்பர். வித்தில்லாத வழி நிலத்திலிருந்து முளை தோன்றாதவாறு போல மாயை இல்லாதவழி பிரமத்திலிருந்து உலகந் தோன்றா தென்றதால் பரிணாம வாதிகள் மறுக்கப்பட்டனர்.

மாயா வாதிகள் மாயை அநிர்வசனமென்பர். அநிர்வசனம் - உறுதியாகக் கூறமுடியாதது. இவ்வெண்பாவில் மாயை உள்பொரு ளென உறுதியாகக் கூறியதனால் மாயாவாதிகள் மறுக்கப்பட்டனர்.

பாஞ்சராத்திரிகளும் சிவாத்துவித சைவரும் மாயை இறைவனின் வேறன்று என்பர். மாயை இறைவனின் வேறென்று கூறியதனால் பாஞ்சராத்திரிகள் மறுக்கப்பட்டனர்.

சத்தி சங்கற்பித்தவிடத்து மாயையிலிருந்து பல்வேறு விதமாக உலகந் தோன்று மென்றதனால், இவ்வாறு பல்வேறு வகைப்படச் சங்கற்பிப்பதற்குக் காரணமென்ன வென்னும் வினாவை ஆசிரியர் தாமே வினாவி அவ்வினாவுக்கு விடையாக அவர் வினையால் என்றார்.

வித்தகம் - விசித்திரம், சாமர்த்தியம்

தன் வயத்தானன்றி வினைவயத்தாற் பிரபஞ்சத்தைத் தோற்றுவிப்பவன் இறைவனாவானோ எனின், அதற்குரிய விடை வெண்பாவின் பிற்பகுதியிற் கூறப்பட்டிருக்கின்றது.



தன்வயம் - சுதந்திரமுடைமை.

**வெண்பாவின் பிற்பகுதியின் பொருள்:** வேட்டுவன் ஆம் அப்புழுப்போல் வேண்டுருவைத் தான் கொடுத்துக் கூட்டானே - வேட்டுவனாதலை விரும்பும் புழுவுக்கு, அது விரும்பிய வடிவத்தை வேட்டுவன் (வேட்டைவாளிக் குளவி) கொடுப்பது போல இறைவனும் அவரவர் வேண்டும் உருவினைக் கொடுத்து அவரவர் வினைக்குத் தக்க பயன்களையும் கூட்டமாட்டானோ? கூட்டுவன்.

இவ்வாறு வினைப்பயனைக் கூட்டுஞ் சுதந்திரம் உண்டாதலால் இறைவன் தன் வயத்தனாவான் என்பதற்குத் தடையில்லை எ-று.

அப்புழுப்போல் என்றதிலுள்ள போல் என்பது அசை. மண்போல் குளிர்ந்த வழி என நிற்க வேண்டியது குளிர்ந்து எனத் திரிந்து நின்றது.

இரண்டாம் வரியிலுள்ள, நிற்றல் என்பதில் ஏதுப் பொருளைத் தரும் 'இன்' உருபு தொக்கது. அதை விரித்து சத்தியின்கண் உள்ளதாய் நிற்றலான் என உரை செய்யப்பட்டது.

கூட்டானே என்பதிலுள்ள ஏகாரம் எதிர்மறை அது கூட்டுவன் என்னும் பொருளைத் தருகின்றது.

## இறைவன் முத்தொழில் செய்தும் வேற்றுமை அடையான் என்பதற்குக் காட்டும் உதாரணம்.

***நோக்காது நோக்கி நொடித்தன்றே காலத்திற்***
***றாக்காது நின்றுளத்திற் கண்டிறைவ - னாக்காதே***
***கண்ட நனவுணர்விற் கண்ட கனவுணரக்***
***கண்டவனி லிற்றின்றாங் கட்டு.***

முன்னைய உதாரணத்திற் கூறியபடி உலகிற்கு முதற்கடவுள் உண்டெனக் கொள்ளினும், அவன் படைப்பு முதலிய தொழில்-களைச் செய்வானாயின் விகாரமெய்தி அத்தொழில்களிற் கட்டுப்படுவன். தொழில் செய்யானாயின் கருத்தாவாக மாட்டானெனக் கூறுவோரை மறுக்குமுகமாக ஏதுவிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்:

**கொண்டு கூட்டு:** இறைவன் காலத்தில் தாக்காது நின்று ஆக்காதே கண்டு நோக்காது நோக்கி நொடித்து அன்றே இன்று ஆம் கட்டு. உளத்தில் கனவு கண்ட கண்ட நனவு உணர்வில் உணரக் கண்டவனில் இற்று.

**இ-ள் :** இறைவன் - முதல்வன், காலத்தில் தாக்காது நின்று - இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலமென வேறுபட்டு நின்று எல்லாத் தொழிலுஞ் செய்தும் விகாரமின்றி நிற்கும் காலதத்துவம் போல விகாரப்படாது நின்று, ஆக்காதே கண்டு - பிரபஞ்சத்தைக் கருவி கரணங்களாற் படையாது இஃதிவ்வா றாகுகவென வெண்ணும் சங்கற் பத்தாற் படைத்து, நோக்காது நோக்கி நொடித்து - அவ்வாறே காவாது காத்து அழியாது அழித்தலால், அன்றே இன்று ஆம் கட்டு - அந்த முதல்வனுக்குப் பந்தமின்றாதல், உளத்தில் - கற்ற நூலிலுள்ள சொல்லும் அச் சொல்லாற் குறிக்கப்படும் பொருளும் உள்ளத்திற் றோன்றுங்கால் உள்ளம் அவற்றிற் கட்டுப்படாதவாறு போலும், கனவுகண்ட கண்ட நனவு உணர்வில் உணரக் கண்டவனின் இற்று - கனவிற் கண்டவற்றைப் புறத்து விடயங்களைக் கண்டு வந்த நனவுணர்வில் விளக்கமாக அறிந்தவன் அப்பொழுது அவற்றிற் கட்டுப்படாதவாறு போலும் இத்தன்மைத்து எ-று.

சங்கற்பத்தாற், செய்வதால் செய்பவருக்குப் பந்தமின்றாகு மென்பதை விளக்குவதற்காக இவ்வெண்பாவில் இரண்டு உதாரணங்கள் தரப்பட்டுள்ளன.

I கனவிற் கண்டதை நனவுணர்வில் விளக்கமாக அறிதல். துப்பாக்கியாற் சுடப்பட்டதாகக் கனவு கண்ட ஒருவன் விழித்தெழுந்து தான் கண்டது கனவென்பதை அறிந்தபின் சுடப்பட்டதற்காக வருந்துவதுமில்லை. சூட்டுக்காயத்துக்கு மருந்து கட்டுவிப்பதுமில்லை.

II கற்ற நூற் சொல்லும் பொருளும் உள்ளத்தில் தோன்றுதல். ஒருவருக்குச் சிறைச்சாலையைப் பற்றிய எண்ணமோ அல்லது அழகிய பூஞ்சோலையைப் பற்றிய எண்ணமோ தோன்றினால், அப்போது அவர் அவற்றை யடைந்து அனுபவிப்பதாக உணர்வதில்லை.

ஆக்குதல் - படைத்தல், காண்டல். நோக்குதல் -காத்தல் நொடித்தல் - அழித்தல்.

வெண்பாவில் ஆக்காதே கண்டு நோக்காதே நோக்கி எனக் கூறப்பட்டமையால், அதற்கேற்ப நொடியாதே என்பதை வருவித்து, நொடியாதே நொடித்தெனக் கொண்டு, அதற்கு அழியாது அழித்தலால் என உரை செய்யப்பட்டது.



முதலாம் வரியிலுள்ள அன்றே என்பது அசை. அதற்கு அநாதியே எனப் பொருள் கூறினும் பொருந்தும்.

காலத்தின், உளத்தின், கண்டவனின் என்னும் இடங்களிலுள்ள 'இன்' மூன்றும் உவம உருபுகள். அதனால் அவற்றுக்கு முறையே, காலதத்துவம் போல, உள்ளம் அவற்றிற் கட்டுப்படாதவாறு போலும், அறிந்தவன் அப்பொழுது அவற்றிற் கட்டுப்படாதவாறு போலும் என உரை செய்யப்பட்டது.

## மூன்றாம் அதிகரணம்

### சங்காரக் கடவுள் ஒன்றே எனக்கூறும் மேற்கோள்

***இனிச் சங்காரமே முதலென்றது.***

இந்த மேற்கோளில் சங்காரக் கடவுள் ஒன்றோ பலவோ என்பது ஐயம். இரண்டாம் அதிகரணத்தில் ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தியில்லை யெனக் கூறியதனால், சங்கார கருத்தாவே உலகிற்கு முதற் கடவுளெனச் சாதிக்கப்பட்டது. ஆயினும் தேர் முதலிய-வற்றைப் பலர் கூடிச் செய்வதால், அவற்றினும் அதி விசித்திரமான உலகத்துக்கு முதற்கடவுளர் பலர் உண்டெனக் கொள்வோம் என்பது பிறர் கூறும் பக்கம். இவ்வாறு கூறுவோர் அநேகேசுரவாதிகள். அவர்களது கூற்றை மறுக்கு முகமாக அந்தமாதி என்னும் சூத்திரக் கூற்றைக் கண்ணழித்துச் சங்காரக் கடவுள் ஒன்றேயெனக் கூறுகின்றது இந்த மேற்கோள்.

**இ-ள் :** சங்கார கருத்தா ஒருவனே உலகிற்கு முதற்கடவுள் எ-று:

சங்காரம் என்பது ஆகுபெயர். அது சங்காரத்தைச் செய்யுங்-கடவுளைக் குறிக்கின்றது. சங்காரமே என்பதிலுள்ள ஏகாரம் ஏனை-யோர் முதற் கடவுளராகாரெனப் பிரித்தமையால் பிரிநிலைக்கண்-வந்தது.

### சங்கார கருத்தா ஒருவனே என்பதற்குக் காட்டும் ஏது

***'சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் சுட்டுணர்வின்றி நின்ற சங்காரத்தின் வழியல்லது சுதந்திரமின்றி நிற்றலான்'***

சங்கார கருத்தா ஒருவனே என்பதற்குப் பிரமாண மென்ன-வென்னும் வினாவுக்கு விடை கூறுமுகமாகப் பிரமாணங் கூறி மேற்கோளை வலியுறுத்துகின்றது. இவ்வேது.

**இ-ள் :** ஒவ்வொன்றாய்ச் சுட்டியறிவதாகிய உருவும் அருவுமென்னும் இருவேறு வகைப்பட்ட சேதனப் பிரபஞ்சமாகிய உயிர், சுட்டியறிதலின்றி எவ்வுலகும் ஒன்றாயறிந்து நிற்கும் சங்கார கருத்தாவின் வசப்பட்டு நிற்பதல்லது, தனக்கெனச் சுதந்திரமுடையதாய் நிற்பதன்று. ஆதலால் சங்கார காரணன் ஒருவனே உலகிற்கு முதற்கடவுளன்றி ஏனையோர் முதற்கடவுளரல்லர் என மேற்கோளிற் கூறப்பட்டது எ-று.

இதில் தூல சரீரத்தோடு கூடிய உயிரை உருவென்றும் சூக்கும சரீரத்தோடு கூடிய உயிரை அருவென்றும் கூறப்பட்டிருக்கிறது. சகலர், பிரளயாகலர், விஞ்ஞானாகலர் எனப்படும் மூவகை உயிர்களில், பிரளயாகலரும் விஞ்ஞானாகலரும் சகலரிற் பிரமா விட்டுணு முதலிய தேவர்களும் சூக்கும சரீரம் உடையவர்கள், ஏனையோர் தூல சரீரமுடையவர்கள். சூக்கும சரீரம் கண்ணுக்குப் புலப்படாமையால் அருவென்றும் தூல சரீரம் கண்ணுக்குப் புலப்படுவதனால் உருவென்றுங் கூறப்பட்டது.

சுட்டுணர்வுடைமையால் உயிருக்குச் சுதந்திரம் இல்லையென்பதை வலியுறுத்த வேண்டிச் சுட்டுணர்வாகிய பிரபஞ்சமெனவும் சுட்டுணர்வின்மையால் சங்கார காரணனுக்குச் சுதந்திரம் உண்டென்பதை வலியுறுத்த வேண்டிச் சுட்டுணர்வின்றி நின்ற சங்கார மெனவுங் கூறினார். சுட்டுணர்வுடைய பிரபஞ்சம் என்று கூறவேண்டியதைச் சுட்டுணர்வு என்றது உபசாரம். இவ்விடத்திற் பிரபஞ்சம் என்றது சேதனப் பிரபஞ்சமாகிய உயிரை.

**சேதனம்** - அறிவுள்ளது.

தேர் முதலியன பலராற் செய்யப்படினும் செய்வோரனைவரும் ஒருவனது ஏவலின் வழி நின்றே செய்வர். வேதத்தில் உலகத்துக்குக் காரணங் கூறும் வாக்கியங்களிற் சுட்டுணர் வுடையோராகிய நாராயணன், இரணியகருப்பன், இந்திரன், அக்கினி, சூரியன் முதலியோரைக் காரணமென்றது மண்ணிலிருந்து குடந்தோன்றுவதற்குக் காரணம் குயவன் என்றது போல இடைப்பட்ட காரணமாதலாலாகும். இவர்களுள் சங்கார காரணன் ஏவுதற்கருத்தா. நாராயணன் முதலியோர் இயற்றுதற் கருத்தாக்கள்.

பிரமன் முதலியோரைக் காரணமென்று கூறிய வாக்கியங்களெல்லாம் ஆகுபெயராய்ச் சங்கார காரணனாகிய முதற்கடவுளையே குறிக்கும். இயற்றுதற் கருத்தாவாய் நின்று செய்தும் ஏவுதற்



கருத்தாவாய் நின்று செய்வித்தும் எல்லாத் தொழிலுக்கும் நிமித்த காரணனாய் நிற்கும் சங்கார காரணனே முதற்கடவுளென்பது இதன் தாற்பரியம்.

**சங்கார கருத்தா ஒருவனே என்பதற்குக் காட்டும் உதாரணம்.**

***ஒன்றலா வொன்றா லுளதாகி நின்றவா***
***றொன்றலா வொன்றிலவை யீறாத - லொன்றலா***
***வீறே முதலதனி னீறலா வொன்றுபல***
***வாறே தொழும்பாகு மங்கு.***

சங்கார கருத்தாவே முதற்கடவுளாயினும் சுட்டியறிவதாகிய உயிர் பலவானாற் போலச் சுட்டுணர்வின்றி நின்ற சங்காரக் கடவுளரும் பலரெனக் கொள்வோம். அவ்வாறன்றிச் சங்கார கருத்தா ஒருவனேயெனக் கொள்வதற்குப் பிரமாண மென்னவென்னும் வினாவுக்கு விடையளிக்கும் முகமாக, ஏதுவிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** அவை ஒன்று அலா ஒன்றால் உளதாகி நின்றவாறு ஒன்று அலா ஒன்றில் ஈறாதல் ஒன்றலா ஈறே முதல் அதனின் ஈறுஅலா ஒன்று அங்கு பலவாறே தொழும்பு ஆகும்.

**இ- ள் :** அவை- சேதனப் பிரபஞ்சத் தொகுதி, ஒன்று அலா ஒன்றால் - அரு உரு என்னும் இரண்டு வகையான பிரபஞ்சத்துள் ஒன்றல்லாத பரம் பொருளாலே, உளதாகி நின்றவாறு - படைக்கப்பட்டு நிலைபெற்றது போலவே, ஒன்றலா ஒன்றில் ஈறாதல் - அந்தப் பரம்பொருளின் கண்ணே ஒடுங்குதலால், ஒன்றலா ஈறேமுதல் - அச்சங்காரக் கடவுள் ஒருவரே உலகிற்கு முதற்கடவுள். (அவ்வாறாயினும் முத்தொழிற்படும் சேதனப் பிரபஞ்சமாகிய உயிர் வீடு பெற்றவிடத்துச் சுட்டுணர்வின்றிச் சிவசமமாய் நிற்குமென வேதாகமங்களிற் கூறப்படுதலால். வீடுபெற்ற விடத்து அவையும் முதற் கடவுளாமெனக் கூறலாகாதோவெனின்) அதனின் ஈறலா ஒன்று - அப்பரம் பொருள் போல அழிவின்றி நித்தமாயிருக்கும் சேதனப் பிரபஞ்சமாகிய உயிர், அங்கு - வீடுபேற்றின் கண்ணும், பலவாறே தொழும்பாகும் - பலவாற்றானும் பரம்பொருளுக்கு அடிமையாகும் எ-று.

மாயையின் காரியமான உலகம் சடமாகலானும் சேதனப் பிரபஞ்சம் அறியாமையைச் செய்யும் மலத்தாற் கட்டுப்பட்டுச் சுட்டுணர்வுடையதாய் நிற்றலானும் இவற்றைத் தொழிற்படுத்துவதற்கு, இவற்றின் வேறாய் ஒரு முதற்கடவுளுண்டென்பது

பெறப்படும். பெறப்படவே பிரபஞ்சம் விசித்திர காரியமாய்க் காணப்படுதலின் அதைத் தொழிற்படுத்தும் முதற்கடவுள் முற்றுணர்வு, அளவிலாற்றல் பேரருள் சுதந்திரம் முதலிய மாறுதலடையாத அதிசய குணங்கள் உடையவனென்பதும் பெறப்பட்டது. அதனால் இத்தன்மையை யுடைய முதற் கடவுள் ஒருவனேயாதல் அமையும். வேறும் அத்தன்மையுடைய கடவுளர் உண்டெனக் கொள்ளின் அது மிகையென்னுங் குற்றத்தின் பாற்படும். அன்றியும், இலக்கணத்துள் வேற்றுமை யில்லாதவிடத்து, அவ்விலக்கணத்தையுடைய இலக்கியம் ஒன்றாதலே யன்றிப் பலவாதல் கூடாது. அவ்வாறே சங்கரிக்கும் இலக்கணத்தையுடைய கருத்தா ஒருவனே யன்றி, அவ்விலக்கணமில்லாத பலர் கருத்தாவாதல் கூடாது. அதனால் ஒன்றலாவொன்று என வரையறுத்துக்கூறினார்.

இவ்வெண்பாவில் ஈறே முதலென்றது மேற்கோளிற் சங்காரமே முதலென்று கூறியதை முடித்துக் காட்டியதனால் முடிந்தது முடித்தல். ஈறு ஆகுபெயர். அது ஈறுசெய்யுங் கடவுளைக் குறிக்கின்றது.

வெண்பாவின் இறுதியிலுள்ள அங்கு என்பதில் உம்மை தொக்கு நின்றது. அதை விரித்து அங்கும் - வீடு பேற்றின் கண்ணும் - என உரை செய்யப்பட்டது. இவ்வும்மை பெத்தநிலையில் மாத்திரமன்றி என்னும் பொருளைத் தந்து பெத்த நிலையையுந் தழுவி நிற்றலால் இறந்தது தழீஇய எச்சவும்மை.

பலவாறே தொழும்பாகும் என்றதில், பலவாறாவன:-

I இருள் நீங்கிய விடத்தும் கண்ணுக்குக் காணுந்தொழில் சூரியனையின்றி உண்டாகாது. அதுபோல மலம் நீங்கிய முத்திநிலையிலும் உயிருக்கு இன்பாநுவம், துணையாய் உடன்நின்றறிவிக்கும் முதல்வனையின்றி உண்டாகாது.

II கண் பளிங்கு ஆகாயம் முதலியவற்றைப் போலச் சார்ந்ததன் வண்ணமாய் நிற்பதன்றி, உயிர் முதல்வனைப் போலத் தனித்து நில்லாது.

III உயிர் ஐந்தொழில் செய்யும் உரிமையின்றி முத்தி நிலையிலுஞ் சிவானுபவம் ஒன்றினுக்கே உரித்தாயிருக்கும்.

IV முதல்வனோடு கலந்து நிற்கும் போது முதல்வனுக்குரிய வியாபகம் போலச் சமவியாபகமாய் நிற்பினும் முதல்வனைப் போலன்றி, ஆன்மாவின் அறிவு துணை கொண்டறியும் தூல அறிவாதலால், விளக்கொளியோடு கலந்து நிற்கும் கண்ணொளி போல முதல்வனின் வியாபகத்துள் வியாப்பியமாய் அடங்கி நிற்கும்.



அவ்வாறானால் முத்திநிலையில் ஆன்மாச் சிவசமமாமென்னுஞ் சுருதிக்குப் பொருள் என்னவெனில், அது மலம் நீங்கினமையால் முத்தொழிற் படாமையேயாகும். இதுபற்றி உண்மையதிகாரத்திற் கூறப்படும்.

இவ்வெண்பாவினால் அநேகேசுரவாதி மதம் மாத்திரமன்றிச் சிவசமவாதி, உற்பத்திவாதி, ஆவேசவாதி மதங்களும் மறுக்கப்பட்டன.

முத்தியடைந்த ஆன்மாவால் ஐந்தொழில் செய்ய முடியாதென்றதனால் சிவசமவாதி மதம் மறுக்கப்பட்டது.

தொழும்பாகும் என்றதனால் ஆவேசவாதி மதம் மறுக்கப்பட்டதுடன் சிவசங்கிராந்த வாதி மதமும் மறுக்கப்பட்டது. சிவம் ஆவேசித்தால் உயிரால் எல்லாஞ் செய்ய முடியுமென்பன் ஆவேசவாதி. ஆவேசமென்பது தன்வசமற்று ஆவேசித்த பொருளின் வசமாய் நிற்றல். பேயால் ஆவேசிக்கப்பட்டவனை (பிடிக்கப்பட்டவனை) நீ யார் என்று கேட்டால் அவன் தன்பெயரைக் கூறாமல் தன்னைப் பிடித்த பேயின் பெயரையே கூறுவான்.

முத்தி நிலையில் உயிர் சிவத்துடன் கலந்து ஒன்றாய்ப் போகுமென்பது சங்கிராந்தவாதி மதம்.

ஆன்மா ஈறாலா ஒன்று என்றதனால் உற்பத்திவாதி மதம் மறுக்கப்பட்டது. ஆன்மாவுக்கு உற்பத்தி உண்டென்று கூறுபவன் உற்பத்திவாதி.

இச்சூத்திரத்தில் பதியுண்மைக்குப் பிரமாணங் கூறத்தொடங்கிய ஆசிரியர் ஒடுங்கிய உலகம் மீளத் தோன்றுவதற்குக் காரணம் மலம் என்பதைக் குறிப்பிடுவதற்காக, மலத்துளதாம் எனக் கூறியதன் மூலம் மலம் உண்டென்பதற்குப் பிரமாணமுங் கூறினார். மலத்தைப் பற்றிக் கூறும் அதிகரணத்துக்குரிய ஐயம் முதலியனவெல்லாம் சகச மலத்துணராதென நான்காஞ் சூத்திரத்தில் மலத்தின்இலக்கணங் கூறுமிடத்துக் கூறப்படுமாதலால் அதுபற்றி இவ்விடத்திற் கூறப்படவில்லை.

முதற்சூத்திரம் முற்றிற்று.

★★★

# இரண்டாஞ் சூத்திரம்

## பாச உண்மை

உலகம் சங்காரக் கடவுளிலிருந்து தோன்றுதலால் உலகத்துக்கு முதற்கடவுள் சங்கார காரணனேயென முதலாஞ் சூத்திரத்திற் கூறிய ஆசிரியர், இந்த இரண்டாஞ் சூத்திரத்தில் உலகத்துக்கு முதற்காரண-மாகிய மாயையும் துணைக்காரணமாகிய சத்தியால் வரும் கன்மமும் உண்டென அனுமானப் பிரமாணத்தாற் கூறுகின்றார்.

***'அவையே தானே யாயிரு வினையிற்***
***போக்கு வரவு புரிய வாணையி***
***னீக்கமின்றி நிற்கு மன்றே' என்பது சூத்திரம்***

**கருத்துரை**

***புனருற்பவம் வருமாறுணர்த்துத னுதலிற்று.***

**இ-ள் :** ஒடுங்கிய உலகம் சங்காரக் கடவுளினின்றும் மீளத்தோன்றும் முறைமையினை உணர்த்து முகமாக, துணைக்காரணம் முதற்காரணம் முதலியன இல்லாதவிடத்து இறைவன் உலகிற்கு நிமித்த காரணனாதல் எவ்வாறென்னும் வினாவை வினாவி, அதற்கு விடையாக, முதற்காரணமாகிய மாயையும் துணைக்காரணமாகிய சத்தியால் வரும் கன்மமும் உண்டென்பதற்குப் பிரமாணங் கூறுகின்றது இச்சூத்திரம்.

முதற்சூத்திரத்தில் சங்காரக் கடவுளே உலகத்துக்கு முதற்-கடவுளென்று கூறி, இச்சூத்திரத்தில் முதற்காரணமும் துணைக்-காரணமும் உண்டென்று கூறுதலால் சூத்திரங்களுக்கிடையேயுள்ள தொடர்பு பெறப்பட்டது.



முதற் சூத்திரத்தில் ஒடுங்கி உளதாம் என்றவிடத்து, ஒடுங்கியினின்று - சங்காரக் கடவுளிலிருந்து - உலகம் மீளவுண்டாவ தெவ்வாறென்னும் வினா அதற்குரிய விடையை வேண்டி நிற்றலால், உலகம் மீளவுண்டாவதாகிய புதுச் சிருட்டியே இச்சூத்திரத்திற் கூறப்பட்டது.

**இச்சூத்திரத்தின் பிண்டப் பொழிப்பு :** முதற்சூத்திரத்திற் கூறப்பட்ட சங்கார காரணனாகிய முதல்வன் உடலினிடத்து உயிர்கலந்து அவ்வுடலேயாய் நிற்பதுபோல உயிர்களோடு கலந்து நிற்றலால் அவ்வுயிர்களேயாய், கண் காண்பதற்குத் துணையாய் நிற்கும் சூரியன் கண்ணின் வேறாதல் போல உயிர்கள் அறிவதற்குத் துணையாய் நின்றும் பொருட்டன்மையால் அவற்றின் வேறுமாய், ஒரு பொருளைக் காண்பதற்கு ஆன்மாவின் அறிவு கண்ணொளியோடு கூடிப் பொருளிடத்துஞ் செல்வதுபோல உயிர்க்குயிராதற் றன்மையால் உயிர்கள் இன்பதுன்பங்களை அனுபவிப்பதற்கு வேண்டப்படும் பொருள்களிடத்தும் செல்லுதலால் உடனுமாய் நின்று, ஆணையெனப்படும் சிற்சத்தியாற் செலுத்தப்படும் இருவினை காரணமாக இறத்தல் பிறத்தல்களைச் செய்யும் வண்ணம் அவ்வாணையாகிய சிற்சத்தியிற் பிரிப்பின்றிச் சமவேதமாகிய திரோதான சத்தி வடிவாய் நிற்பன் எ-று.

இச்சூத்திரத்துக்கு 'அவையே ஆய் தானே ஆய் அவையே தானே ஆய் ஆணையின் இருவினையின் போக்குவரவு புரிய ஆணையின் நீக்கமின்றி நிற்குமன்றே' எனக் கொண்டு கூட்டிப் பொழிப்புரை கூறப்பட்டது.

இதில், அவையேயாய் என்பது இறைவன் உயிர்களோடு ஒன்றாய் நிற்றலையும் தானேயாய் என்பது இறைவன் உயிர்களின் வேறாய் நிற்றலையும் அவையே தானேயாய் என்பது இறைவன் உயிர்களோடு உடனாய் நிற்றலையும் குறிக்கும்.

முதற் சூத்திரத்தில் அந்தமாதி என்றவிடத்துத் தொக்கிருந்த - மறைந்திருந்த - பிரிநிலை ஏகாரத்தை விரித்து அந்தமே ஆதியெனப் பொருள் கொள்ளப்பட்டது.

அந்தம்- அந்தத்தைச் செய்யும் சங்காரக் கடவுள். ஆதி - முதற்கடவுள், அந்தத்தைச் செய்யும் கடவுளே ஆதியெனக் கூறியதனால், ஆதியன்றென விலக்கப்பட்டு நின்றது உயிராகிய சேதனப் பிரபஞ்சமேயாகும். அந்தச் சேதனப் பிரபஞ்சத்தையே இச்சூத்திரத்தில் அவையெனச் சுட்டிக் கூறினார்.

போக்கு - இறத்தல், வரவு - பிறத்தல், புரிதல் - எப்பொழுதும் செய்தல்.

சூத்திரத்திலுள்ள ஆணையின் என்பது முன்னும் பின்னும் பார்க்கும் சிங்க நோக்குப்போல, முன்னுள்ள போக்குவரவு புரிய என்பதனோடும் பின்னுள்ள நீக்கமின்றி நிற்கும் என்பதனோடும் பொருந்தி ஆணையின் இருவினையின் போக்குவரவு புரிய ஆணையின் நீக்கமின்றி நிற்குமன்றே எனப்பொருள் கொள்ளும்படி நின்றது.

ஆணையின் என்றவிடத்திலுள்ள இன்னுருபு முதலில் ஆணையினால் என ஏதுப்பொருளையும் பின்பு ஆணையின் நீக்கமின்றியென நீக்கப்பொருளையும் தந்தது.

நீக்கமின்றி நிற்றல் -சிற்சத்தியிற் பிரிப்பின்றிச் சமவேதமாகிய திரோதான சத்தி வடிவாய் நிற்றல். சமவேதமாவது சமவாய சம்பந்தத்தாலிருப்பது. சமவாய சம்பந்தமாவது ஒற்றுமைச் சம்பந்தம். இது குணி குண சம்பந்தமெனவும் கூறப்படும். குணி- குணத்தை-யுடையது. இதற்கு உதாரணம் நெருப்புக்கும் சூட்டுக்குமுள்ள சம்பந்தம்.

அன்றே என்பது அசை. அன்றே என்பதற்கு அநாதியே எனப் பொருள் கொள்ளினும் பொருந்தும்.

அவையே தானேயாய்ப் போக்குவரவு புரிய நிற்கும் எனக் கூறியதனால் அச்செயல்கள் எல்லாவற்றையும் முதல்வன் கரணத்தாலன்றிச் சங்கற்பத்தாற் செய்வன் என்பது பெறப்பட்டது.

முதற் சூத்திரத்தில் அந்தமென்று உத்தேசமாய் எடுத்துக்கொண்ட முதல்வன் உயிர்களுடன் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்பனென்றும், உயிர்கள் போக்குவரவு புரியச் சத்தியுடன் பிரிப்பின்றி நிற்பனென்றும் இச்சூத்திரத்திற் கூறப்பட்டது. இது தடத்தலக்கண மெனப்படும் பொதுவியல்பு. இந்நிலையில் இறைவன் பதியெனப்படுவன். இச்சூத்திரத்தில்,

அவையே தானேயாய் என்பதோரதிகரணம்;
ஆணையின் இருவினையின் என்பதோரதிகரணம்;
போக்குவரவு புரியவென்பதோரதிகரணம்;
ஆணையின் நீக்கமின்றி நிற்குமன்றே என்பதோரதிகரணம்.
எல்லாமாக இச்சூத்திரத்தில் நான்கு அதிகரணங்கள் உண்டு.



## முதலதிகரணம்

### இறைவன் உயிர்களோடு பிரிப்பின்றி அத்துவிதமாய் நிற்பன் எனக்கூறும் மேற்கோள்

***'ஈண்டு இவ்வான்மாக்கள் பலவும் முதல்வன்றானேயாய் நிற்கும் என்றது.'***

இந்தமேற்கோளில் முதலாஞ் சூத்திரத்தில் அந்தமே என்றதி-லுள்ள பிரிநிலை ஏகாரத்தால் முதற்கடவுளல்லவென விலக்கப்பட்டு நின்ற சேதனப் பிரபஞ்சமாகிய உயிரும் முதல்வனும் பொன்னும் ஆபரணமும் போல் அபேதமோ, இருளும் வெளியும்போற்பேதமோ, சொல்லும் பொருளும்போற் பேதாபேதமோ என்பது ஐயம். இவ்வையப் பாட்டின் கண் பேதம் என்பதும் அபேதமென்பதும் பேதாபேத மென்பதும் பிறர்கூறும் பக்கம்.

உயிரும் முதல்வனும் அபேதமென்போர் ஏகான்ம வாதிகள். உயிரும் இறைவனும் பேதமென்போர் மாத்துவர். உயிரும் முதல்வனும் பேதாபேதமென்போர் பாஞ்சராத்திரிகள். அவர்களது கூற்றை மறுக்கு முகமாகச் சூத்திரத்தின் முதற் கூற்றைப் பதச்சேதஞ் செய்து, இறைவன் உயிர்களோடு அபேதம், பேதம், பேதாபேத மென்-னும் மூன்றுமாய் நிற்பனென இந்த மேற்கோளிற் கூறப்படுகின்றது.

முதல்வன் கலப்பினால் இவ்வுயிர்களேயாய் பொருட்டன்மை-யால் ஆன்மாக்களின் வேறுமாய் உடனாய் நிற்றலினால் இவ்வுயிர்-கள் பலவும் தானேயாய் நிற்பன் என்பது இந்த மேற்கோளின் பொருள்.

இந்த மேற்கோளுக்கு முதல்வன் இவ்வான்மாக்கள் பலவுமாய், தானேயாய், ஆன்மாக்கள் பலவுந் தானேயாய் எனக் கொண்டு கூட்டிப் பொருள் கொள்க.

ஒரு பொருளைக் காணும்போது ஆன்மாவின் அறிவு, கண்-ணொளியென்றும் தானென்றும் பிரிப்பின்றி உடனாய் நின்று காண்-பது போல, முதல்வன் புதுச் சிருட்டி செய்யும்போது உயிர்களோடு உடனாய் நின்று செய்வனென்பது இந்த மேற்கோளினாற் பெறப்பட்டது.

## இறைவன் உயிர்களோடு பிரிப்பின்றி நிற்பன் என்பதற்குக் காட்டும் ஏது

***அத்துவித மென்ற சொல்லானே ஏகமென்னில் ஏகமென்று சுட்டுவதுண்மையின் அத்துவித மென்ற சொல்லே அந்நிய நாத்தியை உணர்த்துமாயிட்டு.***

முதல்வன் உயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்பனென்பதற்குப் பிரமாணமென்ன வென்னும் வினாவுக்கு விடைகூறுமுகமாக மேற்கோளை வலியுறுத்துகின்றது இவ்வேது.

**இ-ள் :** அத்துவிதம் என்னுஞ்சொல் அ+து விதம் எனப் பிரிக்கப்படும். துவிதம் - இரண்டு, இந்தச் சொல்லில் முன்னுள்ள அகரம் இன்மை, அன்மை, மறுதலைப் பொருள்களைத் தரும். அவற்றுள் இன்மைப் பொருள்பற்றி, அத்துவிதமென்பதற்கு, பொருள் ஒன்றேயெனப் பொருள் கொள்ளலாமோவெனில், ஒன்றாகிய அந்தப் பொருள் தன்னைத் தானே ஒன்றெனக் கருதவேண்டியதில்லை. எனவே அதை ஒன்றெனக் கருதும் பொருள். வேறுண்டென்பது பெறப்படும். அதனால் அத்துவிதம் என்பதன் கருத்து ஒன்று என்று கூறுதல் பொருந்தாது. எண்ணுப் பெயருக்கு முன்வரும் அகரம் அன்மைப் பொருளை மாத்திரமே தருவதன்றி ஏனைய சொற்களின் முன்வரும் அகரம்போல இன்மை மறுதலைப் பொருள்களைத் தரும் வழக்கமில்லை. ஆகவே அத்துவிதம் என்னுஞ்சொல் பிரிப்பின்றி நிற்கும் என்னும் பொருளையே தரும். அதனால், ஈண்டிவ் வான்மாக்கள் பலவும் முதல்வன் றானேயாய் நிற்குமென மேற்கோளிற் கூறப்பட்டது எ-று.

பிரிப்பின்றி நிற்குமென்றதனால் கலப்பால் ஒன்றாதலும் பொருட்டன்மையால் வேறாதலும் உயிர்க் குயிராய் நிற்றலால் உடனாதலும் பெறப்படும்.

இன்மைப்பொருள் கொண்டு பிரமத்துக்கு வேறாகிய பசுபாசங்கள் இல்லை; பிரமம் ஒன்றே உள்பொருள் என்பர் ஏகான்மவாதிகள்.

மாத்துவர் மறுதலைப் பொருள் கொள்வர். நீதி உண்டெனக் கொண்டால், அதன் மறுதலையாகிய அநீதியும் உண்டெனக் கொள்ள வேண்டியிருப்பது போல, இரண்டின் மறுதலையாகிய ஒன்று உண்டெனக் கொண்டால் இரண்டும் உண்டெனக் கொள்ளவேண்டும். நீதியும் அநீதியும் வேறு வேறாதல் போல, ஒன்றாகிய கடவுளும் இரண்டாவதாகிய உயிரும் வேறு வேறாகுமென்பது அவர்களது கொள்கை.



அப்பிராமணன் என்னுஞ் சொல் பிராமணனல்லாத பிறசாதியாரைக் குறியாது, பிராமணனாயிருந்தும் பிராமணத் தன்மையில்லாதவனைக் குறித்தலால் அன்மைப் பொருளைத் தருகின்றது. அதுபோல துவிதத்தின் முன்நின்ற அகரமும் இரண்டன்மையைக் குறிக்கின்றது. கடவுளும் உயிர்களும் பொருளால் இரண்டாயினும் இரண்டின் தன்மையாய்ப் பிரித்தறியவாராது, கண்ணொளியும் ஆன்ம போதமும் போலப் பிரிப்பின்றி நிற்குமென்கின்றது சைவசித்தாந்தம்.

ஆகலான் என்பதற்குப் பதிலாக ஆயிட்டென்பது அக்கால வழக்குப் போலும். ஏகமென்று சுட்டுவதுண்மையின், அந்நிய நாத்தியை உணர்த்துமாயிட்டு என்னும் இடங்களில் எண்ணும்மைகள் தொக்கன. அவற்றை விரித்து ஏகமென்று சுட்டுவதுண்மையானும் அந்நியநாத்தியை உணர்த்துமாகலானும் எனக் கொள்க.

அந்நிய நாத்தி - வேறன்மை

அந்நியநாத்தி என்பதற்கு வேறாதலின்றி உடனாதல் என்றே பொருள் கொள்ளப்படுமானாலும் கடவுளும் உயிரும் பொருட்டன்மையால் வேறென்பதும் கலப்பினால் ஒன்றென்பதும் பெறப்படும்.

## உயிர்களோடு இறைவன் ஒன்றாய் நிற்றற்குக் காட்டும் உதாரணம்

***கட்டு முறுப்புங் கரணமுங் கொண்டுள்ள***
***மிட்டதொரு பேரழைக்க வென்னென்றாங் - கொட்டி***
***யவனுளமா கில்லா னுளமவனா மாட்டா***
***தவனுளமா யல்லனுமா மங்கு.***

ஒரு பொருள் ஒன்றாதல் வேறாதல் உடனாதல் என்னும் மூவகை இயல்புடையதாய் நிற்றல் எவ்வாறென்னும் வினாவுக்கு விடைகூறு முகமாக அவற்றுள் ஒன்றேயாதற்கு உவமைகூறி, சூத்திரத்தில் அவையேயாய் எனக் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** உள்ளம் கட்டும் உறுப்பும் கரணமும் கொண்டு இட்டது ஒரு பேர் அழைக்க என் என்றாங்கு ஒட்டி அங்கு அவன் உளம் ஆகில்லான் உளம் அவனாமாட்டாது அவன் உளமாய் அல்லனும் ஆம்.

**இ-ள் :** உள்ளம் - உயிர், கட்டும் உறுப்பும் கரணமும் கொண்டு - நரம்பு முதலியவற்றாற் கட்டப்படும் உடம்பினையும் மெய் வாய் கண் மூக்கு செவி முதலிய கருவிகளையும் கொண்டு நின்று, இட்டது ஒரு பேர் அழைக்க என் என்றாங்கு - உடம்புக்கு வைத்த பெயராற் கூப்பிட என்னவென்று கேட்டுக்கொண்டு வந்துநின்றாற் போல, (இருவர் கைகோத்து நிற்கும்போது அவர்களுள் ஒருவரை அழைத்தால் அழைக்கப்பட்டவரேயன்றி மற்றவர் என்னென்று கேட்பதில்லை. இவ்வாறு உடலுக்கிட்ட பெயரால் அழைக்கும் போது அவ்வுடலோடு கூடிய உயிர் என்னென்று கேட்பதற்கு வேறெந்தக் காரணமுமின்மை-யால், அருத்தாபத்திப் பிரமாணத்தால், அவ்வுயிர் உடம்பெனத் தானென வேற்றுமையின்றி அபேதமாய் - நிற்றலேயாகுமென்பது பெறப்படும்) ஒட்டி - முதல்வன் உயிர்களோடு வேறறக்கலந்து நிற்போனாவன், அங்கு அவன் உளம் ஆகில்லான் - அவ்வாறு கலந்து நின்றவிடத்தும் முதல்வன் உயிராக மாட்டான், உளம் அவனா மாட்டாது - உயிர் முதல்வனாக மாட்டாது; அவன் உளம் ஆய்அல்ல னும் ஆம் - முதல்வன் உயிராயும் உயிரின் வேறாயும் நிற்பன் எ-று.

உயிர் உடம்போடு கலந்து வேறற நிற்பினும் உயிர் ஒரு பொருள். உடம்பு உயிரின் வேறானதொரு பொருள். உயிர் உடம்பாக மாட்டாது. உடம்பு உயிராக மாட்டாது. அவ்வாறாயினும் உயிர் உடம்பாயும் உடம்பின் வேறாயும் நிற்கும். உடம்பு உயிராயும் உயிரின் வேறாயும் நிற்கமாட்டாது. அதுபோல முதல்வன் உயிராயும் உயிரின் வேறாயும் நிற்பன். உயிர் முதல்வனாயும் முதல்வனின் வேறாயும் நிற்கமாட்டாது. என்பது கருத்து.

அருத்தாபத்திப் பிரமாணம் குறிப்பினாற் பொருள் கொள்ளும் படி நிற்பது. அது, பகலில் உண்ணாதவன் பருத்திருக்கிறான் என்றவிடத்து, அவன் இரவில் உண்பவன் எனப் பொருள் கொள்வது போன்றது.

அவனுளமாகில்லான் உளமவனா மாட்டாது அவனுளமாய் அல்லனுமா மங்கு என்றது, இறைவன் உயிர்களோடு ஒன்றாய் நிற்பினும் இறைவனும் உயிரும் ஒன்றல்ல என்பதற்கு அனுபவங் காட்டியது.

உறுப்பு ஆகுபெயர். அது உடம்பைக் குறிக்கின்றது.

ஒட்டி என்பது பெயர். அது ஒட்டி நிற்போனாகிய முதல்வனைக் குறிக்கின்றது. ஒட்டி என்பதை வினையெச்சமாகக் கொள்ளினும் பொருந்தும். அங்கு- அதுபோல,



**உயிர்களோடு இறைவன் வேறாய்நிற்றற்குக் காட்டும் உதாரணம்**

***ஒன்றென்ற தொன்றேகா ணொன்றே பதிபசுவா***
***மொன்றென்ற நீபாசத் தோடுளைகா - ணொன்றின்றா***
***லக்கரங்க ளின்றா மகர வுயிரின்றே***
***லிக்கிரமத் தென்னு மிருக்கு.***

வேதத்துள் பிரமம் அத்துவிதம் என்று மாத்திரமன்றி ஏகமென்-றும் கூறப்படுகின்றது. அதற்கு மாறாகப் பிரமம் உயிர்களோடு ஒட்டி நிற்குமெனப் பிரமமெனவும் உயிரெனவும் வேறுபடுத்திக் கூறுவதேன் என்னும் வினாவை ஆசிரியர் தாமே வினாவி, அதற்கு விடையாக, ஏகமென்பதன் தாற்பரியத்தைக் கூறுமுகத்தால் தானேயாதலை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :**இருக்கு ஒன்று என்றது ஒன்றேகாண் ஒன்றே பதி ஒன்று என்ற நீ பசு ஆம் காண் பாசத்தோடு உளை. அகர உயிர் இன்றேல் அக்கரங்கள் இன்று ஆம் இக்கிரமத்து ஒன்று இன்று என்னும்.

**இ-ள்:** இருக்கு ஒன்று என்றது ஒன்றே காண் - வேதம் ஒன்று என்றதன் பொருள் ஒன்றென்பதே யாம் அதற்கு வேறு பொருள் இல்லை, ஒன்றே பதி -பதி ஒன்றே இரண்டில்லை என்பதே அதன் தாற்பரியம், ஒன்று என்ற நீ பசு ஆம்காண் - இஃதறியாது ஒன்றென்று சொல்லுகின்ற நீ பசுவென்று அறிவாயாக, (பதியும் அறிவுடைய பொருள் ஆன்மாவாகிய யானும் அறிவுடைய பொருளாக விருந்தும் என்னைப் பசுவென்பதற்குக் காரணம் என்னவெனில்) பாசத்தோடு உளை-நீ மலத்தோடுகூடி நிற்கின்றாயாதலால் பசுவெனப் படுகின்றாய், (இவ்வாறு பதிக்கும் பசுவுக்கும் வேற்றுமை கூறின் பிரமம் இல்லையாயின் ஒரு பொருளும் இல்லையென்று வேதம் கூறுவதன் தாற்பரியம் என்னவெனின்) அகர உயிர் இன்றேல் அக்கரங்கள் இன்று ஆம் - அகர உயிர் இல்லையானால் மற்றைய எழுத்துக்கள் இல்லையாகும், இக்கிரமத்து ஒன்று இன்று என்னும் - இந்த முறைமையால் பிரமப் பொருள் இல்லையாயின் ஒரு பொருளுமில்லையென்று வேதங்கள் கூறும் எ-று.

அக்கரம் - எழுத்தொலி

அகரவொலியினாலே ஏனைய அக்கரங்கள் எல்லாம் இயங்கு-கின்றன. அகரவுயிர் இல்லையாயின் ஏனைய அக்கரங்கள் இயங்கா. அதுபோலப் பிரமத்தினாலேதான் எல்லாப் பொருள்களும்

இயங்குகின்றன. பிரமம் இல்லையாயின் மற்றைய பொருள்கள் இயங்கா என்பதே செய்யுளில் ஒன்றின்றா லக்கரங்களின்றா மகவுயிரின்றே லிக்கிரமத்தென்னும் இருக்கு என்று கூறியதன் தாற்பரியம்.

இக்கிரமத்து என்பதுடன் ஆல் உருபைச் சேர்த்து இக்கிரமத்தால் எனக் கொள்க. இக்கிரமத்தால் - இந்த முறைமையால்.

பாசத்தோடுளை காண் என்ற இடத்திலுள்ள காண் என்பதைப் பசுவாம் என்பதோடு கூட்டிப் பசுவாம் காண் எனக் கொள்க.

ஒன்றின்றால் = ஒன்று + இன்று + ஆல். இதில் ஆல் என்பது அசை.

### உயிர்களோடு இறைவன் உடனாய் நிற்றற்குக் காட்டும் உதாரணம்

***பண்ணையு மோசையும் போலப் பழமதுவு***
***மெண்ணுஞ் சுவையும்போ லெங்குமா - மண்ணறா***
***ளத்துவித மாத லருமறைக ளொன்றென்னா***
***தத்துவித மென்றறையு மாங்கு.***

வேதம் ஒன்றாகிய பிரமத்தை ஏகமென்று கூறிய அவ்வளவில் நில்லாது பிரமம் அத்துவித மெனவும் சில இடங்களிற் கூறுதலால், அத்துவித மென்னுஞ்சொல் இருபொருட்களின் கலப்பைக் குறிக்குமெனக் கூறுதல் பொருந்தா தென்பர் சிலர். அவர்களது கூற்றை மறுக்குமுகமாக, ஏகமென்றதும் அத்துவிதமென்றதும் முரணாதெனக் கூறிச் சூத்திரத்திற் கூறப்பட்ட அவையேதானே-யாதலை வலியுறுத்துகின்றது. இவ்வுதாரணம்.

வெண்பாவின் கடைசி வரியிலுள்ள என்றறையு மாங்கு என்பதை, என்று ஆங்கு அறையுமெனக் கொண்டு கூட்டுக.

**இ-ள்:** பண்ணையும் ஓசையும் போல - பண்ணும் அதனின் வேறா காத இசையும் போலவும், பழம் அதுவும் எண்ணும் சுவையும் போல் - பழமும் அதனோடு பிரிப்பின்றி நிற்பதாகக் கருதப்படும் சுவையும் போலவும், எங்கும் ஆம் அண்ணல் தாள் அத்துவிதம் ஆதல் - எங்கும் வியாபகமாய் நிற்கும் முதல்வன் திருவருள் உயிர்களோடு வேற்றுமை யின்றி நிற்பதாதலால், அருமறைகள் ஒன்று என்னாது - வேதங்கள் பிரமம் ஏகமென்றதோ டமையாது, அத்துவிதம் என்று ஆங்கு அறையும் - பிரமம் அத்துவிதமென்று அவ்விடங்களிற் கூறும் எ-று.



வேதங்களில் பிரமம் அத்துவிதம் என்றது பிரமம் உயிர்களோடு பிரிப்பின்றி நிற்கும் என்பதைக் குறிப்பதற்கேயாம். அதனால் அத்துவிதமென்றது ஏகமென்பதனோடு முரண்படாது.

பண்ணை என்பதிலுள்ள ஐகாரம் பண்ணென்னும் பகுதிப் பொருளையே குறித்து நிற்றலால் பகுதிப் பொருள் விகுதி. பண் பாலைப் பண் முதலியன.

அண்ணல் தாள் என்பதை. எங்குமாம் அண்ணல் தாளெனச் சிறப்பித்துக் கூறியது, குணமும் குணியும் போல உயிரும் முதல்வனும் பிரிப்பின்றி உடனாய் நிற்பினும், இறைவன் குணியும் உயிர் குணமுமாகாது, குணம் குணியுள் அடங்கி நிற்பது போல முதல்வனது வியாபகத்துள் உயிர் வியாப்பியமாய் அடங்கி நிற்குமென்பதைக் குறிப்பிடுவதற்கேயாம்.

### உயிர்களோடு இறைவன் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்பன் என்பதற்குக் காட்டும் உதாரணம்

***அரக்கொடு சேர்த்தி யணைத்தவக் கற்போ***
***லுருக்கி யுடங்கியைந்து நின்று - பிரிப்பின்றித்***
***தானே யுலகாந் தமியே னுளம்புகுதல்***
***யானே யுலகென்ப னின்று.***

ஒன்றாய் வேறாய் உடனாய் நிற்றலாகிய மூன்றுக்கும் வெவ்வேறு உவமை எடுத்துக் காட்டினால், அது அநேக முடிபுகளையுடைய வாதமாகாதா வென்னும் வினாவுக்கு விடைகூறுமுகமாக, அது அநேகாந்த வாதமாகாதென்பதை வேறோர் உவமையினால் விளக்கி அம்மூன்றனையும் ஒருங்கே வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டுகூட்டு :** உருக்கி அரக்கொடு சேர்த்தி அணைத்த அக்கல் போல் உடங்கு இயைந்து நின்று பிரிப்பு இன்றி தானே உலகு ஆம். இன்று தமியேன் உளம்புகுதல் யானே உலகு என்பன்.

**இ-ள்:** உருக்கி அரக்கொடு சேர்த்தி அணைத்த அக்கல்போல் - அரக்கை உருக்கி அதனோடு சேர்த்துக் கலந்த கற்பொடி அவ்வரக்கோடு ஒன்றாய்க் கலந்து நீக்கமின்றி நின்றாற் போல, உடங்கு இயைந்து நின்று பிரிப்பு இன்றி தானே உலகு ஆம்- முதல்வன் உயிர்களோடு ஒன்றாய்க்கூடி நீக்கமின்றி நிற்றலால் தானேயாம் உலகேயாம் தானே உலகேயாம், (அவ்வாறானால் வாமதேவ முனிவன் முதலியோர் யானே உலகெல்லா மாயினே

னெனக் கூறுதலானும் சர்வஞ்ஞானோத்தரத்தில், யானே எல்லாமாய் அல்லனுமாய் உடனுமாய் நிற்பேன் என்று உயிர்கள் மேல் வைத்துக் கூறுதலாலும் உயிர்களும் முதல்வன்போல் ஒன்றாய் வேறாய் உடனாய் நிற்கும் இலக்கணமுடையன வெனக் கொள்ளலாமோ வெனின்) இன்று தமியேன் உளம் புகுதல் யானே உலகு என்பன் - இம்முத்திக் காலத்துப் பாசக் கூட்டத்தினின்று நீங்கித் தனித்து நின்ற உயிராகிய என்னகத்து முதல்வன் சிவோகம் பாவனையாற் புகுந்து உயிர்வேறு தான்வேறென்னும் வேற்றுமையின்றி நிற்றலால், யானே உலகெல்லா மாயினேன் என்பன். ஆதலால் அம்முத்தி நிலைபற்றி உயிர்களும் ஒன்றாய் வேறாய் உடனாய் நிற்கும் இலக்கண முடையனவெனக் கூற முடியாது.

ஆதலால்....... கூற முடியாது என்பதுவரை குறிப்பாகக் கொள்ளுமாறு எஞ்சி நிற்பதாற் குறிப்பெச்சம்.

அருச்சுனனுக்குக் கீதையை உபதேசித்த கண்ணன் யானே உலகெல்லாமாயினேன் என்று கூறியதும், முதல்வனது விசுவரூபத்தைத் தான் காட்டியதும், ஏனையவற்றைக் கைவிட்டு என்னையே வழிபடுக வென்றதும், கண்ணனது உபதேசத்தை உறுதியாகப் பற்றிக் கொண்ட அருச்சுனன் அவன் கூறியதன் கருத்தைப் புரிந்து கொண்டு சாகும்வரை சிவபூசை செய்ததும், அருச்சுனன் கண்ணன்மேலிட்ட மலர்களைச் சிவபெருமானது திருமுடிமேற் கண்டதும் கண்ணன் சிவோகம் பாவனையாற் சிவமாய் நின்ற ஒற்றுமை பற்றியேயாகும்.

கண்ணன் உபமன்னிய முனிவரிடத்துச் சிவதீட்சை பெற்றுத் தன்னையும் தலைவனையும் உணர்ந்தோனாதலால் சிவோகம் பாவனை செய்தானென்பதறிக.

கலப்பாய் நிற்றலால் உலகேயாம் எனக் கூறவேண்டி உடங்கியைந்து எனவும், பொருட்டன்மையால் வேறாய் நிற்றலால் தானேயாமெனக் கூறவேண்டி நின்று எனவும், உயிர்க்குயிராய் நிற்றலால் தானேயுலகாம் எனக் கூறவேண்டிப் பிரிப்பின்றி எனவும் இவ்வெண்பாவிற் கூறினார். தானே உலகாம் என வெண்பாவிற் கூறியதை இரட்டுறமொழிந்து, தானேயாம் உலகேயாம் தானே உலகேயாம் எனக் கொள்க.

பிரிப்பின்றி என்றதிலுள்ள இன்றி என்பது காரண காரியப் பொருளில் வந்தது. பிரிப்பின்மையால் தானே உலகாம் என்பது கருத்து.



இவ்வதிகரணத்தில் முதல்வனும் உயிரும் பேதமென்றும் அபேதமென்றும் பேதாபேதமென்றுங் கூறி ஒருவரோடொருவர் முரண்படுகின்ற சமயவாதிகளை மறுத்து, பேதம் அபேதம் பேதாபேத மென்னும் மூவகை இயல்பும் விளங்குதற்குரிய அத்துவிதத் துண்மை ஏதுக்களாலும் உவமைகளாலும் விளக்கப்பட்டிருக்கிறது. புடை நூலாசிரியரும் சிவப்பிரகாசத்தில்,

*"புறச்சமயத் தவர்க்கிருளா யகச்சமயத் தொளியாய்ப்*
*புகலளவைக் களவாகிப் பொற்பணிபோ லபேதப்*
*பிறப்பிலதா யிருள் வெளிபோற் பேதமுஞ்சொற் பொருள்போற்*
*போதாபே தமுமின்றிப் பெருநூல் சொன்ன*
*அறத்தினால் விளைவதா யுடலுயிர்கண் ணருக்க*
*னறிவொளிபோற் பிறிவருமத் துவித மாகுஞ்*
*சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாஞ் சைவ*
*சித்தாந்தத் திறனிங்குத் தெரிக்க லுற்றாம்"*

என்று கூறியிருக்கிறார்.

## இரண்டாம் அதிகரணம்

### உயிர்களுக்கு வினைப்பயனை இறைவன் கூட்டுவன் எனக்கூறும் மேற்கோள்

***இனி இவ்வான்மாக்களுக்கு இருவினை முதல்வன் ஆணையின் வரும் என்றது.***

இந்த மேற்கோளில், ஒரு காரியத்தைச் செய்யும் போது எமக்கு முதற்காரணமும் துணைக்காரணமும் வேண்டப்படுவது போல, முதல்வன் உயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயுங் கூடிநின்று புதுச் சிருட்டி செய்யும் போது அவனுக்கு முதற்காரணமும் துணைக்காரணமும் வேண்டப்படுமோ வேண்டப்படாதோ என்பது ஐயம். இந்த ஐயப்பாட்டின் கண் முதல்வனுக்கு முதற்காரணமும் துணைக் காரணமும் வேண்டப்படுமாயின் அது அவன் அளவிலாற்றல் உடையவன் என்பதற்கு இழுக்காகும். அதனால் அவனுக்கு முதற் காரணமும் துணைக்காரணமும் வேண்டப்படா என்பது பிறர் கூறும் பக்கம். இவ்வாறு கூறுவோர் பரிணாமவாதிகள். அவர்கள் பிரமமே உலகமாயிற்றென்பர். அவர்களது கூற்றை மறுக்கு முகமாகச் சூத்திரத்தின் இரண்டாம் பகுதியைப் பதச் சேதஞ் செய்து

முதல்வனுக்கு முதற்காரணமும் துணைக்காரணமும் வேண்டப்படும் என்கின்றது இந்த மேற்கோள்.

இந்த மேற்கோளில் இருவினை என்றது முற்பிறவிகளிற் செய்யப்பட்டு மாயையிற் கட்டுப்பட்டுக் கிடந்த புண்ணிய பாவங்களாகிய சஞ்சித வினையை எனக் கொள்க. இதனால் மாயை உண்டென்பது பெறப்பட்டது. உலகத்தைத் தோற்றுவிப்பதற்கு முதற்காரணமாகிய மாயையும் துணைக்காரணமாகிய இருவினையும் வேண்டப்படுமாயினும் இருவினை முதல்வன் ஆணையால் வருமாதலால் முதல்வன் சுதந்திரமுடையவன் என்பதற்கு இழுக்காகாது.

### உயிர்களுக்கு வினைப்பயன் இறைவன் ஆணையால் வரும் என்பதற்குக் காட்டும் ஏது

***'ஒரு நகரியைக் காப்பான் பாடிகாவலிட்டாங்கு அவை அவனதாக்கினையாகலான்.'***

புதுச் சிருட்டியைச் செய்வதற்கு முதல்வன் ஆணையே போதும். இருவினை வேண்டுமென்பது எதற்காக என்னும் வினாவுக்கு விடைகூறு முகமாக மேற்கோளை வலியுறுத்துகின்றது இவ்வேது.

**இ-ள்:** ஒரு பட்டினத்தைக் காக்கும் அரசன், பாசறையிற் காவலில்வைத்துத் தண்டிக்குந் தொழிலை அதற்குரிய அதிகாரியிடம் ஒப்புவித்தாற்போல, எல்லா அறிவும் எல்லா முதன்மையும் எல்லா அநுக்கிரகமுமுடைய முதல்வன் புதுச் சிருட்டியைச் செய்வதாகிய தனது ஆணையை இருவினைகளிடமாக வைத்துச் செலுத்துதலே முறையாதலால், இனி இருவினை முதல்வன் ஆணையால் வருமென மேற்கோளிற் கூறப்பட்டது. எ-று.

முதல்வன் செய்யும் செயலெல்லாம் உலகத்தை ஆளும் அரசனொருவன் தனது ஆணையை அதிகாரிகளுக்கூடாகச் செலுத்துவதுபோல நிகழ்வனவாகலான், இவ்விடத்தில் அரசனது செயல் முதல்வனது செயலுக்கு உவமையாகக் கூறப்பட்டது.

பாடி காவலாவது, அரசன் தண்டஞ் செய்பவனைக் கொண்டு, தண்டிக்கப்பட வேண்டியவனைப் பாசறையிற் காவலில் வைப்பித்தலாகும். இதனை, "கோடிகாவனைக் கூறாத நாளெலாம் பாடிகாவலிற் பட்டுக் கழியுமே" என்னும் அப்பர் தேவாரத்தால் அறிக. இத்தேவாரத்தில் பாடி காவல் என்றது பாசறை போன்ற உடம்பிற் கட்டுப்பட்டிருப்பதைக் குறிக்கின்றது.



### வினை உண்டென்பதற்குக் காட்டும் உதாரணம்

***உள்ளதே தோற்ற வுயிரணையு மவ்வுடலி***
***லுள்ளதா முற்செய்வினை யுள்ளடைவே - வள்ளலவன்***
***செய்பவர் செய்திப் பயன்விளைக்குஞ் செய்யேபோற்***
***செய்வன் செயலணையா சென்று.***

வினை உண்டென்பதற்கும் அந்த வினையே உயிருக்கு இன்ப துன்பப் பயனாய் வரும் என்பதற்கும் பயனை அனுபவிக்கும்போது ஆகாமியம் எனப்படும் மேல்வினை ஏறுமென்பதற்கும் அது முதல்வனையின்றிப் பயன்தராதென்பதற்கும் பிரமாணம் என்னவென்னும் வினாவுக்கு விடைகூறுமுகமாக ஏதுவிற் கூறியதை வலியுறுத்துகின்றது. இவ்வுதாரணம்.

**கொண்டுகூட்டு :** உள்ளதே தோற்ற உயிர் அவ்வுடலின் அணையும் முன்செய்வினை உள் அடைவே உள்ளதாம் செய்பவர் செய்திப் பயன்விளைக்கும் செய்யே போல் வள்ளலவன் செய்வன் செயல் சென்று அணையா.

**இ-ள் :** உள்ளதே தோற்ற - முன்புள்ளதாகிய புண்ணிய பாவமென்னும் இரண்டு பிரிவுகளையுடைய சஞ்சிதவினையே இன்ப துன்பங்களையும் அவற்றை அநுபவிப்பதற்குரிய உடம்பையும் தோற்றுவிக்க, உயிர் அவ்வுடலின் அணையும் - உயிர் அவ்வுடம்பிற் பொருந்தி இன்ப துன்பங்களை அனுபவிக்கும். (முன்னைய வினையை அனுபவித்து முடித்தால் மறுமையில் அனுபவிப்பதற்குரிய வினையுண்டாவ தெவ்வாறெனில்) முன் செய்வினை உள் அடைவே உள்ளதாம் - முன்செய்த வினையை அனுபவிப்பதற்கேதுவான முறைமையிலே மறுமையில் அனுபவிப்பதற்குரிய வினையுளதாம். (அவ்வாறானால் அவ்வினையே பயனைத்தரும். அதைத் தருவதற்கு முதல்வன் ஏன் எனில்) செய்பவர் செய்திப் பயன் விளைக்கும் செய்யே போல் - உழவர் செய்யும் செயலுக்குத் தக்க பயனைச் செயல் விளைவிக்காமல் விளை நிலம் விளைவிப்பது போல, வள்ளலவன் செய்வன் - இம்மைக்கு உணவும் மேலைக்கு வித்துமாய்த் தொன்று தொட்டுவரும் வினைகளை வள்ளலாகிய முதல்வனே உயிர்களுக்குக் கூட்டுவன், செயல் சென்று அணையா - வினைதானே உயிர்களுக்குப் பயனாய் வந்து பொருந்தமாட்டாது எ-று.

செய்தி - செயல்- வினை.

வேண்டுவார் வேண்டியவாறே கொடுக்கும் அருளுடைமை காரணமாக முதல்வனை வள்ளல் என்றார்.

உள் அடைவு என்பது உள்ளுதற் கேதுவாகிய அடைவு என விரியும். உள்ளுதல் - கருதுதல். அது இவ்விடத்தில் அனுபவித்தலைக் குறிக்கின்றது.

அடைவே என்பதிலுள்ள ஏகாரம் இவ்விடத்தில் அடைவின்கண் என்னும் ஏழாம் வேற்றுமைப் பொருளைத் தருகின்றது. அனுபவித்தற் கேதுவான முறைமையாவது அவற்றை அனுபவிப்பதற்குத் துணைக் காரணமான விருப்பு வெறுப்புக்கள்

**வினைப்பயனை உயிர் அறிந்தெடுத்துக் கொள்ளாதென்பதற்குக் காட்டும் உதாரணம்**

***அவ்வினையைச் செய்வதனி லவ்வினைஞர் தாஞ்சென்றங்***
***கவ்வினையைக் காந்த பசாசம்போ - லவ்வினையைப்***
***பேராம லூட்டும் பிரானி னுகராரே***
***ளலார்தா மறிந்தணைப்பா ராங்கு.***

இருவினை அறிவற்ற சடமாதலால் அது தன்னைச் செய்த உயிரைச் சென்றடைய மாட்டாதாயினும் உயிர்கள் அறிவுடையன வாதலால் அவையே தாம் செய்த வினைகளின் பயனை அறிந் தெடுத்து அனுபவிக்கும். ஆதலால் உயிர்களுக்கு வினைப்பயனைக் கூட்டுவதற்கு வள்ளல் வேண்டுமென்ப தெதற்காக வென்னும் வினாவுக்கு விடைகூறுமுகமாக வள்ளல் வேண்டுமென்பதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு:** காந்த பசாசம் போல் அவ்வினையைப் பேராமல் ஊட்டும் பிரானின் அவ்வினைஞர் தாம் அவ்வினையைச் செய்வதனில் சென்று அங்கு அவ்வினையை நுகராரேல் ஆங்கு ஆர் தாம் அறிந்து அணைப்பார்.

**இ-ள்:** காந்த பசாசம் போல் - ஒருவன் காந்தத்தின் நேராக இரும்பைப் பிடித்தபோது அதை இழுத்துக்கொள்ளும் காந்தம் போல, அவ்வினையைப் பேராமல் ஊட்டும் பிரானின் - அவ்வினைப் பயன்களைக் கூடாமலும் குறையாமலும் நுகர்விக்கும் முதல்வனால், அவ்வினைஞர், தாம் - அவ்வினைகளைச் செய்யும் ஆன்மாக்கள் தாம், அவ்வினையைச் செய்வதனில் சென்று அங்கு அவ்வினையை நுகராரேல் - அவ்வினைகளைச் செய்யும் உடம்பைச் சென்றடைந்து



அவற்றது வினைப்பயனை அனுபவிப்பர். அவ்வாறு அனுபவியா ராயின், ஆங்கு - ஆன்மா அறிவும் சுதந்திரமுமின்றி மலத்தினால் மறைப்புண்டு கிடக்கும் காலத்து, ஆர் தாம் அறிந்து அணைப்பார் - வேறெவர்- தாம் அவ்வினைப் பயனை அவற்றைச் செய்த ஆன்மாக்களை அறிந்து அவற்றுக்குக் கூட்டுவர்? ஒருவருமில்லை எ-று.

ஆன்மாக்களுக்கு இறைவன் அறிவித்தாலன்றித் தாமேயறியும் அறிவில்லாமையாலும் வினை அறிவற்ற சடமாதலாலும் மாயை தனக்காதாரமாகிய இறைவனது சத்தியின்கண் நிற்குமெனக் கூறப்பட்டமையாலும் உயிரும் பாசமாகிய மாயை கன்மங்களும் தாமே கூடமாட்டாவாதலால் முதல்வனே வினைப் பயனைக் கூட்டுவனெனப் பாரிசேட அளவையாற் கூறவெண்ணி "பிரானினுகராரே லார்தா மறிந் தணைப்பார்" என்றார்.

உயிராலும் மாயை கன்மங்களாலும் வினைப்பயனைக் கூட்ட முடியாதெனவே பதி, பசு, பாசம் என்னும் மூன்றனுள் பதிக்கே வினைப்பயனைக் கூட்ட முடியுமென்பது பாரிசேட அளவை யாயிற்று. பாரிசேடம் - எஞ்சியது.

**வினைப் பயனை இறைவன் கூட்டுவன் என்பதற்குக் காட்டும் உதாரணம்**

***நெல்லிற் குமியு நிகழ்செம்பி னிற்களிம்புஞ்***
***சொல்லிற் புதிதன்று தொன்மையே - வல்லி***
***மலகன்ம மன்றுளவாம் வள்ளலாற் பொன்வா***
***ளலர்சோகஞ் செய்கமலத் தாம்.***

முன்னர்க் கூறப்பட்ட இருவினை ஆதியோ? அநாதியோ? ஆதியெனின் முன்பில்லாதது பின்னர்த் தோன்றுமென்பது சற்காரிய வாதத்துக்குப் பொருந்தாதல்லவா? அநாதியெனின் அநாதியான தொன்றை ஒருவர் கூட்டவேண்டியதில்லை யல்லவா? என்னும் வினாக்களுக்கு விடைகூறுமுகமாக வினை அநாதியானாலும் அதை இறைவனே கூட்ட வேண்டுமென்பதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு:** நெல்லிற்கு உமியும் நிகழ்செம்பினில் களிம்பும் சொல்லின் புதிது அன்று தொன்மையே வல்லி மல கன்மம் அன்று உளவாம் கமலத்து அலர் சோகம் பொன்வாள் செய் வள்ளலால் ஆம்.

**இ-ள் :** நெல்லிற்கு உமியும் நிகழ் செம்பினிற் களிம்பும் சொல்லின் புதிது அன்று தொன்மையே - நெல்லினிடத்து உமியும் செம்பினிடத்துக் களிம்பும் எப்போது தோன்றினவென்று ஆராய்ந்து சொன்னால் அவை புதிதாக வந்தனவல்ல; நெல்லும் செம்பும் உள்ளவன்றே உமியும் களிம்பும் அவற்றோடுள்ளன. அதுபோல, வல்லி மல கன்மம் அன்று உளவாம் - மாயை ஆணவமலம் கன்மம் என்னும் மும்மலங்களும் ஆன்மா உள்ளவன்றே உள்ளனவாம், கமலம் அலர் சோகம் பொன் வாள் செய் வள்ளலால் ஆம் - தாமரைப்பூ மலர்தலும் கூம்புதலும் சூரியனால் நிகழும். அது போல மும்மலங்களும் தத்தம் காரியங்களைச் செய்தல் முதல்வனால் நிகழும் எ-று.

வாள் - ஒளி, பொன் வாள் செய்வள்ளல் - சூரியன்

புதிதன்று என்பதை, நெல்லுக்கு உமி புதிதன்று செம்பினிடத்துக் களிம்பு புதிதன்று என நெல்லோடும் செம்போடும் கூட்டுக.

நெல்லிற்கு உமியும் செம்பினிற் களிம்பும் தொன்மையாக உள்ளன என்று கூறவேண்டியதைத் தொன்மை என்று உபசரித்தார்.

தொன்மையே என்பதிலுள்ள ஏகாரம் இடையில் வந்தனவல்ல வென இடையில் வருதலைப் பிரித்தமையால் பிரிநிலைக்கண் வந்தது.

மாயை இறைவனுக்குப் பரிக்கிரக சத்தியாதலால், மாயையை வல்லியென்று பெண்பாலாற் கூறினார். பரிக்கிரக சத்தியென்பது வேண்டப்படும்போது உபகாரப்படுவதாய் இறைவனிடத்து அடங்கியிருக்கும் சத்தி.

மூலமலமெனப்படும் ஆணவத்தின் காரியம் மோகம், மதம், அராகம், கவலை, தாபம், வாட்டம், விசித்திரம் முதலியன.

மோகம் இது பாதகம் என அறிந்திருந்தும் அவ்வுணர்ச்சியின்றி அப்பாதகத்தைச் செய்விக்கும்.

மதம் செல்வம் கல்வி முதலியவைகளால் தனக்கு நிகரானவர் ஒருவரும் இல்லையென எண்ணுவிக்கும்.

அராகம் ஆசையை உண்டாக்கும்

கவலை தனக்குக் கிடைத்தபொருள் பிரிந்தபொழுது அதுகாரணமாக வருந்தச் செய்யும்.

தாபம் சுற்றத்தையும் நண்பர்களையும் விட்டுப் பிரிவதற்கு ஆற்றாமையைச் செய்யும்.



வாட்டம் பிரிவாற்றாமையால் மனமகிழ்ச்சியும் முகமலர்ச்சியு-மின்றி வாடியிருக்கச் செய்யும்.

விசித்திரம் எதுவும் வினை காரணமாக நடப்பதென் றெண்ணாது பிறருக்குத் தான் செய்ததாகவும் பிறர் தனக்குச் செய்ததாகவும் எண்ணச் செய்யும்.

இருவினையின் காரியம் இன்பதுன்பங்கள். மாயையின் காரியம் தநு கரண புவன போகங்கள். தநு - உடம்பு.

வள்ளலால் ஆம் என்றதனால் திரோதான சத்தி உண்டென்பது பெறப்பட்டது. திரோதானம் - மறைத்தல். அது உயிர்களுக்கு மலபரிபாகம் வரச் செய்யும் பொருட்டு வினைப் பயன்களை அனுபவிக்கச் செய்யும் போது அனுபவிக்க வேண்டிய விடயங்களி-லுள்ள நன்மை தீமைகளை உயிர்களுக்குத் தெரியவிடாமல் மறைக்கும். இத்திரோதான சத்தி ஆணவ மலத்தின் வழியில் நின்று மோகம் முதலியவற்றைச் செய்விக்கும் சிவ சங்கற்பத்துக்கு ஏதுவாதலால் மலமென்றும் உபசரித்துக் கூறப்படும். இவ்வாறு, மலம், கன்மம், மாயை, திரோதானம், மாயா காரியம் (தநு கரண புவன போகங்கள்) என்னும் ஐந்தும் மலங்களாகும். இவற்றில் மாயாகாரியங்களை மாயையிலும் திரோதான சத்தியை ஆணவத்திலும் அடக்கி மலங்களை ஆணவம் கன்மம் மாயையென மூன்றென்பர்.

மாயை சுத்தமாயை அசுத்தமாயை என்று இருவகைப்படும். இவற்றில் சுத்தமாயையின் காரியமே அசுத்த மாயையென்றும் சுத்தமாயை போல அசுத்த மாயையும் அநாதியென்றும் மாயை ஒன்று தானே ஊர்த்துவமாயை அதோ மாயையென்று இருவகைப்-படுமென்றும் பலவாறாகக் கூறப்படினும் மாயையென்றொரு பொருளுண்டென்பதில் எவரும் மாறுபடவில்லை.

இனி, முதல்வனது கிரியாசத்தியே சுத்தமாயை எனப்படுமென்பாருமுளர். அது முதல்வனோடு பிரிப்பின்றி நிற்கும் தாதான்மிய சத்தி. மாயை இறைவனில் அடங்கி இருக்கும் பரிக்கிரக சத்தி. அதனால் அவர்களது கூற்றுப் பொருந்தாது.

சுத்த மாயையிலிருந்து நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை என்னும் ஐந்து கலைகளும் சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்னும் நான்கு வாக்குகளும் நாதம், விந்து, சதாக்கியம், ஈசுரம், சுத்தவித்தை என்னும் சிவதத்துவம் ஐந்தும்

சுத்தகாலம் முதல் சுத்த நிலமீறாகிய முப்பத்தொரு தத்துவங்களும் தோன்றும்.

அசுத்த மாயையிலிருந்து அசுத்த காலம் முதல் அசுத்த நிலமீறாகிய முப்பத்தொரு தத்துவங்கள் தோன்றும். அவை:- காலம் நியதி கலை வித்தை அராகம் புருடன் மாயை என்னும் வித்தியா தத்துவம் ஏழும் ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, தன்மாத்திரை ஐந்து, பூதம் ஐந்து, அந்தக்கரணம் நான்கு என்னும் ஆன்மதத்துவம் இருபத்து நான்குமாம்.

சுத்த தத்துவம் முப்பத்தொன்றும் விஞ்ஞானாகலர் பிரளயாகலருக்குரியவை. அசுத்த தத்துவம் முப்பத்தொன்றும் சகலருக்குரியவை.

முப்பத்தாறு தத்துவங்களும் புறத்திற் புவனவடிவாயும் அகத்தில் சூக்கும தேக வடிவாயுமிருக்கும். இந்தத் தத்துவங்கள் எல்லாம் பொதுவும் சிறப்பும் பொதுச் சிறப்புமென ஒவ்வொன்றும் மூவகைப்பட்டு உயிர்கள் தோறும் வெவ்வேறாய் இருக்கும்.

புவனவடிவான தத்துவங்கள் எல்லோருக்கும் பயன்படுதலாற்பொதுவெனப்படும். சூக்கும தேகவடிவான தத்துவங்கள் தனக்கு மட்டும் போகம் அனுபவிப்பதற்குக் கருவியாதலாற் சிறப்பெனப்படும். தூலதேக வடிவான தத்துவங்கள் தான் போகம் அனுபவிப்பதற்கும் பிறர் போகம் அனுபவிப்பதற்கும் பயன்படுதலாற் பொதுச் சிறப்பெனப்படும்.

சிவப்பிரகாசம் கன்மம் நாசோற்பத்தி பண்ணி வருதலால் அநாதி என்று கூறுவதால் அது பிரபஞ்சம் போலப் பிரவாக அநாதி என்பர் சிலர். 'ஏகனநேகனிருள் கரும மாயையிரண் டாகவிவை யாறாதியில்' என்று திருவருட்பயன் கூறுவதாலும் ஆணவமுதலன் றதுபோற் கருமமும் என்று கூறப்படுவதாலும் பிராரத்தம், சஞ்சிதம், ஆகாமியம் என்னும் மூவகை வினைக்கும் முதற் காரணமாகிய மூலகன்ம மென்பதொன்று அநாதி நித்தமா யுண்டென்பர் சிலர். மூல கன்மமாவது ஆணவமலத்தின் தொழிற்பாட்டா லுண்டாகும் விருப்பு வெறுப்புக்கள்.

பிராரத்த அனுபவத்தினால் முன் செய்த கன்மம் அழியும் போது, அதை அனுபவிப்பதற்குச் செய்யும் முயற்சியினால் ஆகாமிய கன்மம் வரும். இவ்வாறு பிராரத்தம் அழியும் போது ஆகாமியம் வந்தேறி



ஆற்று நீர்ப் பிரவாகம் போலத் தொடர்ச்சியாய் வருதலால், கன்மம் பிரவாகாநாதியாய் வருவதாகும்.

கன்மம் மந்திரம், பதம், வன்னம், தத்துவம், புவனம் கலை என்னும் அத்துவாக்களிடமாக, மனம் வாக்குக் காயம் மூன்றினாலும் செய்யப்படும். அப்போது அது தூலகன்மமாய் ஆகாமியம் எனப் பெயர் பெறும்.

ஆகாமிய கன்மம் பக்குவம் அடையும் வரையும் சூக்கும கன்மமாய், புத்திதத்துவம் பற்றுக் கோடாக மாயையிற் கட்டுப்பட்டுக் கிடந்து உயர்ந்த சாதி தாழ்ந்தசாதி என்னும் சாதிகளிற் பிறப்பதற்கும் நீண்ட குறுகிய வாழ்நாள்களைக் கொண்ட உடம்புகளைப் பெறுவதற்கும் இன்ப துன்பங்களை அனுபவிப்பதற்கும் காரண-மாகும். சூக்குமகன்மம் சஞ்சிதம், அபூர்வம், புண்ணியபாவம் என்னும் பெயர்களைப் பெறும். இந்தக் கன்மம் முதலிற் செய்தது, இந்தக் கன்மம் பின்பு செய்ததென்று கூற முடியாதிருப்பதால் சூக்கும கன்மத்தை அபூர்வம் என்பர்.

புண்ணிய பாவங்களாகிய சஞ்சித கன்மம் இன்ப துன்பங்களாகிய பயனைத் தரும்போது பிராரத்த கன்மம் எனப்படும். பிராரத்த கன்மம் ஆதிதைவிகம், ஆத்தியான்மிகம், ஆதிபௌதிகம் என முத்திறப்பட்டு ஒவ்வொன்றும் பலவேறு விதமாகப் பயன்தரும். ஆதிபௌதிகம் இடி, பூகம்பம், கடல்கோள், சூறாவளி முதலிய சடப்பொருள்கள் வாயிலாகப் பயன்தரும். ஆத்தியான்மிகம் சீவராசிகளின் வாயிலாகப் பயன்தரும். ஆதி தைவிகம் ஒரு வாயிலானன்றித் தெய்வந்தானே காரணமாகப் பயன்தரும். நோய் , விபத்து, இறப்பு முதலியன இதற்கு உதாரணங்களாகும்.

இவ்வினைகள் உலகவினை, வைதிகவினை, அத்தியான்மிக-வினை, அதிமார்க்கவினை, மாந்திரவினையென ஐவகைப்படும் இவ்வைந்து வினைகளும் ஒன்றற் கொன்று ஏற்றமுடையவை.

உலகவினை அநாதைகளையும் அங்கவீனர்களையும் பராமரித்-தல் பாடசாலைகள் அமைத்தல் முதலியன. வைதிகவினை யாகம் முதலிய வைதிகக் கிரியைகளைச் செய்தல். ஆத்தியான்மிகவினை சிவபூசை முதலியன செய்தல். அதி மார்க்க வினை அட்டாங்க யோகஞ்செய்தல். மாந்திரவினை ஞான நூல்களை ஓதல் ஓதுவித்தல் முதலியன.

இவ்வினைகளில் உலகவினை நிவிர்த்தி கலையிலும் வைதிக-வினை பிரதிட்டா கலையிலும் அத்தியான்மிகவினை வித்தியா கலையிலும் அதிமார்க்கவினை சாந்திகலையிலும் மாந்திரவினை சாந்தியதீத கலையிலும் அடங்கி, அசுத்தபோகங்களையும் சுத்தமும் அசுத்தமுங் கலந்த போகங்களையும் சுத்த போகங்களையுந் தரும். இந்நல்வினைகளுக்கு மாறுபட்டவை தீவினைகளாகும்.

# மூன்றாம் அதிகரணம்

## உயிர் மாறிப் பிறக்குமென்று கூறும் மேற்கோள்

***இனி இவ்வான்மாக்கள் மாறிப் பிறந்து வருமென்றது.***

இந்தமேற்கோளில் புதுச் சிருட்டி சடமாகிய உடம்பு முதலியவற்றுக்கன்றி, சித்தாகிய உயிருக்கும் உண்டென்றாலல்லவோ முற்பிறவிகளிற் செய்த வினைகள் இப்பிறவியிற் பயன்தருமெனக் கூறியது பொருந்தும். ஆதலால் உயிருக்குப் புதுச் சிருட்டி உண்டோ இல்லையோ என்பது ஐயம். இந்த ஐயப்பாட்டின் கண், குடம் உடைந்தவிடத்துக் குடத்துள் அடங்கியிருக்கும் குடாகாயம் ஆகாயத்தோடு கூடுவது போல, உடம்பு நீங்கியவிடத்து உயிர் பிரமத்தோடு கூடுமென்று சுருதி கூறுதலால், இறந்த உயிர் மீளப் பிறப்பதில்லை என்பது பிறர் கூறும் பக்கம். இவ்வாறு கூறுவோர் கிரீடாப் பிரமவாதிகள். அவர்களது கூற்றை மறுக்குமுகமாகச் சூத்திரத்தின் மூன்றாங் கூற்றைப் பதச் சேதஞ் செய்து ஆன்மாக்கள் இறந்து பிறந்து வருமென்கின்றது இந்த மேற்கோள்.

இன்ப துன்பங்களை அனுபவித்தற்குரிய உயிர்கள் இறந்து மீளப்பிறந்து வருமென்பது இந்த மேற்கோளின் பொருள். வரும் என்றதனால் அநாதிதொட்டு இறந்து பிறந்து வருமென்பது பெறப்படும்.

மாறுதல் - இறத்தல்

மாறுதல், இறத்தல் என்னும் பொருளைத் தருமென்பதை, போக்குவரவு புரிய எனச் சூத்திரத்திற் கூறியதாலும் இவ்வதிகரணத்திலுள்ள ஏதுவில் 'ஈறு' எனவும் உதாரணத்திற் 'கெட்டு' எனவும் கூறியிருப்பதனாலும் அறிக. இவ்வாறு, உயிர் இறந்து பிறக்குமென்பதை அறியாது, மாறுமென்பதற்கு அச்சுமாறுமென் றுரைப்பாருமுண்டு. அச்சு மாறுமென்று கொள்ளின் இறந்த உடலே



மீள வேறோர் உடலாகப் பிறந்து முன்னைய உடல் செய்த கன்மங்களை அனுபவிக்குமெனக் கொள்ள வேண்டியவரும். அதனால் அவ்வாறு கூறுதல் பொருந்தாது.

அச்சு மாறுதல் - உடல்மாறுதல்

## உயிர்மாறிப் பிறக்குமென்பதற்குக் காட்டும் ஏது

***தோற்றமுமீறும் உள்ளதற்கல்லது உளதாதலின்மையான்.***

உயிர் மாறிப் பிறக்கு மென்பதற்குப் பிரமாணமென்னவென்னும் வினாவுக்கு விடை கூறுமுகமாக மேற்கோளிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வேது.

தோன்றுதலும் மறைதலுமாகிய இரண்டும் தொடர்ச்சியாயுள்ள பொருள்களுக்கன்றி ஏனைய பொருள்களுக்கு இல்லாமையால், 'இனி இவ்வான்மாக்கள் மாறிப் பிறந்து வருமென மேற்கோளிற் கூறப்பட்டது. தனு கரண புவன போகங்கள் உயிர்களின் வினை-காரணமாக உயிர்களின் பொருட்டுத் தோன்றி அழிவனவன்றித் தம்பொருட்டுத் தோன்றி யழிவனவல்ல. அவற்றைப்போல் தோன்றுதலும் அழிதலுமின்றி நித்தமாயுள்ள உயிர் வினைக்கீடாக உடம்மை எடுப்பதும் விடுவதுமாயிருத்தலால் தோற்றக் கேடுகள் உயிருக்கேயாம். தோற்றமுமீறும் என்றதில் தோற்றமும் என்றதி-லுள்ள உம்மை ஈறு என்பதையும் ஈறும் என்றதிலுள்ள உம்மை தோற்றம் என்பதையும் தழுவி, எதிரது தழீஇய உம்மைகளாய் நிற்றலால், தோற்றமும் ஈறும் ஒன்றையொன்று தழுவித் தொடர்ச்சியாக வருமென்பது பெறப்படும். அதனால், 'தோற்றமும் ஈறும் உள்ளதற்கு' என்னும் சொற்றொடருக்கு, தோன்றுதலும் மறைதலுமாகிய இரண்டும் தொடர்ச்சியாயுள்ள பொருள்களுக்கு... என உரைசெய்யப்பட்டது.

உளதாதல் - தோன்றுதல்

இவ்வாறன்றி, குடத்துட் கட்டுப்பட்டிருக்கும் குடாகாயமும் ஆகாயமும் வேறாகாதவாறு போல, உடலிற் கட்டுப்பட்டிருக்கும் உயிர் சிவத்தின் வேறாகாமையால், இருவினை காரணமாக வரும் பிறப்புச் சிவத்துக்கேயாமெனச் சிவாத்துவிதிகளும் மூலப்பகுதியிற் றோன்றும் புத்திதத்துவத்துக்கே புனருற்பவம் உண்டெனச் சாங்கியருங் கூறுவர். இவர்களை மறுக்கு முகமாகக் கூறப்பட்டதே இந்த மேற்கோளெனவும் இந்த மேற்கோளை வலியுறுத்துவதற்காகக் கூறப்பட்டதே இவ்வேதுவெனவும் கொள்ளலாம்.

அவ்வாறு கொண்டால் தோற்றமும் ஈறும் அவ்வுரிமையுள்ள உயிருக்கேயன்றி ஏனையவற்றுக்கு உண்டாகாததலால் இவ்வான்மாக்களே இறந்து பிறந்து வருமென மேற்கோளிற் கூறப்பட்டதெனக் கொள்க.

இதில், தோற்றமும் ஈறும் உள்ளதற்கல்லது என்று கூறியவிடத்து எது உள்ளதென்னும் வினா, அதற்குரிய விடையான 'உரிமை' என்னுஞ் சொல்லை அவாவி நிற்றலால் இவ்வேது, தோற்றமும் ஈறும் அவ்வுரிமை யுள்ளதற் கல்லது உளதாதல் இன்மையான் என்றாகும்.

மேற்கோளில் ஆன்மாக்கள் மாறிப் பிறக்குமெனக் கூறி, ஏதுவில் தோற்றமும் ஈறும் உள்ளதற்கல்லது உளதாதல் இன்மையின் என்று கூறப்பட்டிருக்கிறது. இதில் 'உள்ளது' என்ற இடத்தில் பிரிநிலை ஏகாரம் தொக்கு நின்றது. அதை விரித்து, தோற்றமுமீறும் உள்ளதற்கே யல்லது உளதாதலின்மையின் எனக்கொள்க. உள்ளதற்கே என்றதிலுள்ள ஏகாரம் மாறிப் பிறந்துவரும் உரிமை உயிர்களுக் கல்லது சிவத்துக்கும் தனு கரண புவனங்களுக்கும் இல்லையெனப் பிரித்தலாற் பிரிநிலை.

இந்த மேற்கோளும் ஏதுவும் மாயாவாதி முதலியோரை மறுப்பதற்காகக் கூறப்பட்டதென்பர் சிலர். இச்சூத்திரத்தின் முதலதிகரணத்தில் அத்துவிதம் என்ற சொல்லால் மாயாவாதியை மறுத்து, சிவத்தின் வேறாக ஆன்மா உண்டெனச் சாதித்தமையால் இவ்விடத்தில் அவர் மதம் பற்றிக் கூறவேண்டிய தேவையில்லை.

**உயிர் மாறிப் பிறக்கும் என்பதற்குக் காட்டும் உதாரணம்.**

***கண்ட நனவைக் கனவுணர்விற் றான்மறந்து***
***விண்படர்ந்தத் தூடு வினையினாற் - கண்செவிகெட்***
***டுள்ளதே தோற்ற வுளமணுவாய்ச் சென்றுமனந்***
***தள்ள விழுங்கருவிற் றான்.***

புதுச் சிருட்டியின் போதுண்டாகும் இயல்புகளை உணர்த்தி ஆன்மாக்கள் இறந்து பிறந்து வருமென்பதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டுகூட்டு :** கண்செவி கெட்டு உள்ளதே தோற்ற உளம் அத்தூடு விண்படர்ந்து கண்ட நனவை கனவுணர்வின் மறந்து மனந்தள்ள வினையினால் அணுவாய்ச் சென்று கருவில் விழும்.



**இ-ள்:** கண் செவி கெட்டு உள்ளதே தோற்ற - கண் செவி முதலிய உறுப்புக்களையுடைய தூலவுடம்பு கெட்டபோது படைப்புக்காலந்தொடங்கி சங்காரகாலம் வரையும் நிலைபெறும் சூக்குமதேகமே வினைக்கேற்றவாறு தேவலோகத்துக்குரிய பூதசாரவுடம்பு நரகலோகத்துக்குரிய யாதனாவுடம்பு மண்ணுலகத்துக்குரிய பூதவுடம்பு முதலியனவாகக் காரியப்பட, உளம் அத்தூடு விண்படர்ந்து - உயிர் பூதசார உடம்பு முதலியவற்றிற் பொருந்திச் சுவர்க்க நரகங்களுக்குச் சென்று அங்குள்ள போகங்களை அனுபவித்து, கண்ட நனவை கனவுணர்வின் மறந்து - நனவிற் கண்டவற்றைக் கனாக்காணுங் காலத்து மறந்தாற்போலச் சுவர்க்க நரகங்களுக்குச் செல்வதற்கு முன்பிருந்த உடல்கெட்டதையும் சூக்கும தேகம் பூதசார வுடம்பு முதலியனவாகக் காரியப்பட அதனோடு விண்படர்ந்து அங்கு அனுபவித்ததையும் மறந்து, மனம் தள்ள வினையினால் அணுவாய் சென்றுகருவில் விழும் - முன்பிருந்த உடல் இறக்கும் பொழுது பக்குவப் பட்டிருந்த வினையை அனுபவித்தற்குரிய கதியை ஆன்மா விரும்பும்படி மனம் செலுத்துதலால் சுவர்க்க நரகங்களில் அனுபவித்தெஞ்சி நின்ற புண்ணிய பாவங்காரணமாகச் சூக்கும தேகத்தோடு சென்று மனந்தள்ளிய கதிக்கமைந்த அக்கருவில் விழும் எ-று.

கனவுணர்வின் என்றதிலுள்ள இன் உவம உருபு. அதனால் கனவுணர்வின் மறந்து என்பதற்கு, கனாக்காணுங் காலத்து மறந்தாற்போல என உரைசெய்யப்பட்டது. தான் என்பது அசை.

மறந்து என்னும் போது, எதை மறந்து என்னும் வினா எழுகின்றது. அந்தவினா அதற்குரிய விடையை அவாவி நிற்றலால், உடல் கெட்டதையும்.... விண்படர்ந்து அங்கு அனுபவித்ததையும் மறந்து என உரை செய்யப்பட்டது.

விண்படர்ந்து என்ற உபலக்கணத்தால் நரகம் படர்ந்து என்பதும் பெறப்படும். ஒன்று தனக்கினமான பிறவற்றையும் கருத்திற் கொள்ளும்படி நிற்பது உபலக்கணம்.

படர்ந்து - சென்று. இவ்வெண்பாவில் படர்ந்து என்றது சென்று என்னும் பொருளைத் தராமல் அனுபவித்து என்னும் பொருளைத் தருகின்றது. செல்லுதல் காரணமாக நிகழ்வது அனுபவித்தலாகிய காரியம். இதில் அனுபவித்தலாகிய காரியத்தைப் படர்ந்தெனக் காரணமாக உபசரித்துக் கூறினார்.

அத்தூடு என்றதில் அன் சாரியை தொக்கு நின்றது. அதை விரித்து அதனூடு எனக் கொண்டு, உயிர் பூதசார உடம்பு முதலியவற்றிற் பொருந்தி என உரை செய்யப்பட்டது. உடம்பு முதலியவற்றில் என்றது பொருந்தி என்னுஞ் சொல்லை எஞ்சி நின்றமையால் பொருந்தி என்பது சொல்லெச்சமாய் வருவிக்கப்-பட்டது.

இரண்டாம் வரியிலுள்ள வினை என்பது ஆகுபெயர். அது அனுபவித்து எஞ்சி நின்ற புண்ணிய பாவங்களைக் குறிக்கின்றது.

உடம்பு நீங்கிப் போகும்போது முதலிற் கெடுவன கண்ணுஞ் செவியுமாதலால் உடம்பு கெடுதலைக் கண்செவி கெட்டு என்று உபசரித்தார். கெட்ட வழியென்பது கெட்டு எனத் திரிந்து நின்றது.

ஐந்து பூதங்களின் காரியமெனப்பட்ட தூலவுடம்பைச் சூக்குமவுடம்பின் காரியமென்று கூறலாமோவென்னும் ஐயத்தை நீக்கும் பொருட்டு, 'உள்ளதே தோற்ற' என்றார். உள்ளதே என்றதிலுள்ள ஏகாரம், சூக்கும உடம்பே பூதசாரவுடம்பு முதலியன-வாகக் காரியப்படுமென்பதை உறுதிப் படுத்தினமையால் தேற்றம்.

ஆகாயம் முதலிய தூல பூதங்கள் சத்தம் முதலிய சூக்கும பூதங்களின் காரியமாதலால் தன்மாத்திரை மயமாகிய சூக்கும உடம்பிற் றோன்றுந் தூலவுடம்பு பூதகாரிய மெனப்பட்டது. இதனை, 'பூதனா சரீரம் போனாற் புரியட்ட ரூபந்தானே யாதனா சரீரமாகி என்றும் சூக்கும வடிவேதென்னிற் தூலகா ரணமதாகும்" என்றும் தூலமா முருவினுக்குச் சூக்கும முதல் என்றும் மாறியிவ் வுருவமெல்லாம் வருவதெங் கேநின் றென்னிற் கூறிய சூக்குமத்தாம் என்றும் விதிப்படி சூக்குமத்தே யுருவரும் என்றும் மனாதி தருமுடல் என்றும் சிவஞான சித்தியார் கூறுவதாலறிக.

சூக்கும வுடம்பிலிருந்து தூலவுடம்பு தோன்றுதல் இறுதிக்காலம் வந்து மரம்வெட்டப்பட்டபின் அம்மரத்தின்வேர் மற்றொரு நீண்ட மரத்தை உண்டாக்குவது போலுமென்பதை "காலமுற்று நீங்கிட மரம்பின் வேரோர் நீண்மர நிகழ்த்து மாபோல்" எனவும், ஒரு சூக்கும உடம்பிலிருந்து பல தூலவுடம்புகள் தோன்றுதல் ஒரே பொன்னி-லிருந்து செய்பவனின் ஆற்றலால் வேறு வேறுவிதமான மாலைகளும் வீரசங்கிலியும் அச்சு வேறுபட்டுத் தோன்றுதல் போலு மென்பதை "வேறொரு குறியா மாரம் வீரசங் கிலியு மாகும்." எனவும், அவ்வாறு தோன்றும் போது பொன் மாலைகளாகவும் வீரசங்கிலியாகவும்



மாறுவதுபோல, சூக்குமதேகம் தூல தேகமாக மாறுமோவென் றையுறா வண்ணம், சூக்கும தேகத்திலிருந்து பல தூல தேகங்கள் தோன்றுதல் சந்திரனின் ஒரு கலை என்றும் அழியாதிருக்க அதிலிருந்து மற்றக் கலைகள் தோன்றி மறைதல் போலும் என்பதை "மதிக்கெழு கலைகள் போல வருவது போவதாமே" எனவும் சிவஞான சித்தியார் கூறுவதாலறிக.

அணு-சூக்கும உடம்பு. செய்யுளின் இறுதியிலுள்ள 'தான்' என்பது அசை. உள்ளதே தோற்ற என்றதனால், சூக்கும தேகம் மாறுபடாதிருக்கத் தூலதேகம் மாறுபடும் என்பதும், விண்படர்ந் தென்றதனால் இடம் மாறுபடுமென்பதும், கண்ட நனவைக் கனவுணர்விற்றான் மறந்து என்றதனால் அறிவு வேறுபடுமென்பதும் பெறப்பட்டன.

உள்ளதே தோற்ற என்றதனால், தூலவுடம்புகள் பல தோன்றி மறைந்தாலும் அவை தோன்றுவதற்குக் காரணமான சூக்குமதேகம் உள்ளதாயிருத்தல் பற்றிச் சற்காரிய வாதத்துக்கு இழுக்கில்லை யென்பதும், அத்தூடு விண்படர்ந்தெனவும் அணுவாய்ச் சென்று கருவில் விழுமெனவுங் கூறியதனால் உயிருக்குப் போக்கு வரவு உண்டென்பதும், அதன் வியாபகத்துக்குக் குறைவில்லை என்பதும், எஞ்சி நின்ற புண்ணிய பாவத்தால் என்றதனால் சுவர்க்க நரகங்களில் புண்ணிய பாவங்களை அனுபவித்ததன் பின் பிறவிக்குக் காரணம் உண்டென்பதும் மனந் தள்ள என்றதனால் அஃதெஞ்சுதற்குக் காரணமும் காட்டியவாறாயிற்று.

வேதத்திற் கூறப்படும் பஞ்சாக்கினி வித்தையின் இயல்பை உணர்த்தவேண்டி, கண்செவி கெட்டவழி விண்படர்ந்து, மறந்து, அணுவாய்ச் சென்று கருவில் விழுமென்றார். பஞ்சாக்கினி வித்தையின் இயல்பு திராவிட மாபாடியத்திற் கூறப்பட்டிருக்கிறது. அது வருமாறு:-

வேள்வி செய்த உயிர் உடம்பு நீங்கியவிடத்து வேள்வியின் பயனாகச் சுவர்க்கத்தை அடைந்து இன்பத்தின் மிகுதியை அநுபவித்துப் பின்னர் அவ்வினையின் சேடத்தால் பூமியில் வந்து பிறந்து அப்பிறப்பும் நீங்கிய பின்னர் மேக மண்டலத்தையடைந்து அவ்விடத்தினின்றும் வரும் மழையினோடு கூடி நிலத்தினை யடைந்து நெல் முதலிய பொருள்களிற் கலந்து தந்தை வயிற்றில் உணவாய்ச் சென்று சுக்கிலமாய்ப் பரிணமித்துத் தாய் வயிற்றிற் சென்று கருவிற் பதிந்து தூலதேகத்தோடு நிலத்திற் றோன்றும்.

ஆகவே சுவர்க்கம், மேகமண்டலம், நிலம், தந்தை, தாய் என்னும் ஐந்திடத்தையும் அக்கினியாகவும் அவற்றிற் பொருந்திய ஆன்மாவை ஆகுதியாகவும் தியானிப்பது ஒரு சாதகமாகலின் இது பஞ்சாக்கினி வித்தை எனப்படும்.

மறந்து என்பதை விண்படர்ந்து என்பதனோடு கூட்டி, மறந்து விண்படர்ந்து எனக் கூறுவாருமுண்டு. தூல உடம்பு கெட்டவிடத்து அவ்வுடம்பை மறந்து பூதசார உடம்பு முதலியவற்றை உயிர் பொருந்துமென்பது அவர்களது கருத்து.

மறந்து மனந்தள்ள வினையினால் அணுவாய்ச் சென்று கருவில் விழும் என்றதனால், சுவர்க்க நரகங்களில் இன்ப துன்பங்களை அனுபவிக்கும் போது அறிவு வேறுபடா தென்பது பெறப்படும். இதனைப் புராணங்கள் வாயிலாகவும் அறிக.

**உயிர் மாறிப் பிறத்தல் இல்லையென்பதற்குக் காட்டும் குடாகாய உவமைக்குப் பொருள் கூறி மாறிப் பிறக்கும் என்பதை வலியுறுத்தும் உதாரணம்.**

***அரவுதன் றோலுரிவு மக்கனவும் வேறு***
***பரகாயம் போய்வருமப் பண்பும் - பரவிற்***
***குடாகாய வாகாயக் கூத்தாட்டா மென்ப***
***தடாதுள்ளம் போமா றது.***

உயிருக்கு உடம்பு நீங்கிய பின்னர்ப் பிறப்பில்லை என்போரால் எடுத்துக் காட்டப்படும் குடாகாய ஆகாய உவமைக்குப் பொருள் கூறி உயிர்மாறிப் பிறக்குமென்பதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டுகூட்டு:** அரவு தன் தோலுரிவும் அக்கனவும் பரகாயம் போய்வரும் அப்பண்பும் பரவில் வேறு குடாகாய ஆகாயக் கூத்தாட்டு ஆம் என்பது அடாது உள்ளம் போம் ஆறு அது.

**இ-ள்:** அரவு தன் தோல் உரிவும் - தூலவுடம்பு கெட்டவிடத்துச் சூக்குமதேகம் பூசாரவுடம்பு முதலியவற்றைத் தோற்றுவிக்க உயிர் அவற்றோடு சுவர்க்க நரகங்களுக்குப் போய் வருவதற்கு பாம்பு முன்புள்ள தோலை உரித்துவிட்டுப் புதியதொரு தோலோடு செல்வதும், கனவும் - புருடன் நனவுடலை விட்டுக் கனவுடலிற் செல்வதும், பரகாயம் போய் வரும் அப்பண்பும் பரவில் வேறு - யோகிகள் தம்முடம்பை விட்டு வேறுடம்பிற் சென்று மீளுதலுமாகிய



உவமைகள் மிகுதியாக வழங்கவும் இவற்றுக்கு மாறாக, குடாகாய ஆகாயக் கூத்தாட்டு ஆம் என்பது அடாது - உடம்பு கெட்டவிடத்து உயிர் பிரமத்தோடு கூடுதல் குடம் உடைந்தவிடத்துக் குடத்துக்குள் இருந்த ஆகாயம் மகாகாயத்தோடு கூடுவது போன்றதொரு கூத்தாட்டென்று கூறுதல் பொருந்தாது, உள்ளம் போமாறு அது - அந்த உவமை சூக்கும உடம்பை விட்டு உயிர் போவதற்கே கூறப்பட்டதாகும்.

ஆகமங்களில் உயிர் உடலை விட்டுப் போவதற்கு இவ்விரு உவமைகளுங் கூறப்படுவதால், அவ்வுவமைகள் ஒன்றோடொன்று முரண்படாதவாறு, அரவுதன் தோலுரிவு முதலியன உயிர் தூல-வுடம்பை விட்டுப் போவதற்கும் குடாகாய உவமை உயிர் சூக்கும உடம்பை விட்டுப் போவதற்கும் கூறப்பட்டதென்பதே பொருத்த-முடையதாகும். இவ்வேறுபாட்டை உணராது குடாகாய உவமையும் உயிர் தூல உடம்பை விட்டுப் போவதற்கே கூறப்பட்டதென மயங்க வேண்டாமெனக் கூறி, உயிர் மாறிப் பிறக்குமென்பதை வலியுறுத்து-கின்றது இவ்வுதாரணம்.

முன்னைய வெண்பாவில் "கண்ட நனவைக் கனவுணர்விற்றான் மறந்து" என்றது உயிரின் அறிவு வேறுபடுமென்பதற்கும் இவ்வெண்-பாவில் அக்கனவும் என்று அதனையே கூறியது உடல் வேறுபடு-மென்பதற்கும் எடுத்துக் காட்டப்பட்ட உவமைகளாகும்.

பரவில் என்பது 'தல்' விகுதி பெற்றுப் பரவுதல் என வராத போதிலும் அது பரவுதல் என்னும் பொருளைத் தருதலால் முதல் நிலைத் தொழிற்பெயர். பரவில் என்றதிலுள்ள இல் உருபு தொழில் நிகழ்ச்சியைக் குறித்த ஏழாம் வேற்றுமை உருபு.

போமாறு என்ற இடத்தில் நான்காம் வேற்றுமை உருபு தொக்கு நின்றது. அதைவிரித்து போமாற்றிற்கு எனக் கொண்டு உரைசெய்யப்-பட்டது.

குளம் + ஆம்பல் = குளாம்பல் என மருவி வழங்குவது போல, குடம் + ஆகாயம் = குடாகாயம் என மருவி நின்றது.

குடாகாய ஆகாயக் கூத்தாட்டென்பது குடாகாயம் ஆகாயம்-போல்வதோர் கூத்தாட்டு என்னும் பொருளைத் தரும்போது, அதில் உவம உருபு மறைந்து நிற்றலால் உவமத்தொகை. இதனை உம்மைத் தொகையாகக் கொண்டு குடாகாய வாகாயமும் கூத்தாட்டும் போல் எனக் கொள்வாருமுண்டு.

# நான்காம் அதிகரணம்

## இறைவன் தனது சத்தியில் பிரிப்பின்றி நிற்குமெனக் கூறும் மேற்கோள்

***இனி நீக்கமின்றி நிற்குமன்றே யென்றது.***

இந்த மேற்கோளில் மூன்றாம் அதிகரணத்திற் கூறியவாறு, உயிர்கள் மீளப் பிறப்பதற்குக் காரணமாயுள்ள, இருவினைகளைக் கூட்டுமென இரண்டாம் அதிகரணத்திற் கூறப்பட்ட ஆணை-யெனப்படுஞ் சத்தி முதல்வனின் வேறோ, முதல்வன்றானோ என்பது ஐயம், இந்த ஐயப்பாட்டின்கண் சத்தி முதல்வனின் வேறென்றும் சத்தி முதல்வனின் வேறன்றென்றுங் கூறுவது பிறர் கூறும் பக்கம். சத்தி முதல்வனின் வேறென்று கூறுவோர் மீமாஞ்சகர் முதலியோர். சத்தி முதல்வனின் வேறன்று என்போர் நையாயிகர் முதலியோர். இவர்களது கூற்றை மறுக்குமுகமாகச் சூத்திரத்தின் இறுதிப் பகுதியைப் பதச்சேதஞ் செய்து, சத்தி முதல்வனுக்கு வேறுமன்று முதல்வனுமன்று எனக் கூறுகின்றது இந்த மேற்கோள்.

**இ-ள் :** முதல்வன் தனதாணையாகிய சிற்சத்தியோடு பிரிப்பின்றி, சமவேதமாகிய திரோதான சத்தி வடிவாய் நிற்பன்.

சமவாயம் - நீக்கமின்றி நிற்றல். வடமொழிச் சிவஞான போதத்து இரண்டாஞ் சூத்திரத்தில் ஆணை முதல்வனோடு சமவேதமாய் நிற்குமெனக் கூறப்பட்டிருக்கிறது. அது இவ்விடத்தில் நீக்கமின்றி நிற்குமன்றே எனக் கூறப்படுகின்றது.

சமவாயமாவது பிரித்தறிய முடியாத ஒற்றுமைச் சம்பந்தம். இது இரண்டு வகைப்படும். முதலாவது குணிக்கும் குணத்துக்குமுள்ள சம்பந்தம். இதற்கு உதாரணம் பாலுக்கும் வெண்மைக்குமுள்ள சம்பந்தம். குணி - குணத்தையுடையது. இதில் பால் குணி; வெண்மை குணம். இதுபோலவே சிவத்துக்கும் சத்திக்குமுள்ள சம்பந்தமும் சமவாய சம்பந்தம். சிவம் குணி. சத்தி குணம். இதைத் தாதமான்மிய சம்பந்தமென்றுங் கூறுவர்.

இரண்டாவது, குணிக்கும் குணிக்குமுள்ள சம்பந்தம். இதற்கு உதாரணம் இறைவனுக்கும் உயிருக்குமுள்ள சம்பந்தம். இது அத்வைதம் எனப்படும்.

குணி குணசம்பந்தத்தில் குணியில் குணம் இருக்குமே தவிர குணத்தில் குணி இருக்காது. பாலில் வெண்மை இருக்குமே தவிர



வெண்மையிற் பால் இருக்காது. அவ்வாறே சிவத்தில், சமவாய சம்பந்தத்தாற் சத்தி இருக்குமேயன்றி, சத்தியிற் சிவம் இராது. இது இவ்வாறாக மேற்கோளில்' ஆணையின் நீக்கமின்றி நிற்குமன்றே" என்று கூறியதேன்?

இறைவன் ஒன்றினும் தோய்வின்றிச் சொயம்பிரகாசமாய் நிற்கும் நிலையிற் சிவமெனப்படுவன்; உயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்கும் நிலையிற் சத்தி யெனப்படுவன். ஐந்தொழில் செய்யும் நிலையிற் பதியெனப்படுவன். இவ்விடத்திற் சத்தியென்றது திரோதான சத்தியை. திரோதான சத்தியும் சிற்சத்தியின் கூறாதலால்அது சிவத்தில் சமவாயசம்பந்தத்தானிருக்கும் சம-வேதமாம் என்க.

இரண்டாம் அதிகரணத்தில் இருவினை முதல்வன் ஆணையால் வருமெனக் கூறியதால், இவ்வதிகரணத்தில் அதை மீண்டுங் கூறாது. "நீக்கமின்றி நிற்குமன்றே" என்று மாத்திரம் கூறினார்.

### சத்தியில் நீக்கமின்றி நிற்பன் என்பதற்குக் காட்டும் ஏது.

***அவன் ஏகாநேக மிரண்டு மின்றிச் சருவ வியாபியாய் நிற்றலான்.***

முதல்வன் தனது ஆணையாகிய சத்தியோடு நீக்கமின்றி நிற்பன் என்பதற்குப் பிரமாணமென்ன வென்னும் வினாவுக்கு விடைகூறு-முகமாக மேற்கோளிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வேது.

**இ-ள் :** அம்முதல்வன் தானும் சத்தியும் ஒன்றென்றாவது வேறென்றாவது கூறமுடியாதபடி, ஒன்றாதற்கும் வேறாதற்கும் பொதுவாய் எங்கும் வியாபித்து நிற்றலான், இனி ஆணையின் நீக்கமின்றி நிற்குமன்றே என மேற்கோளிற் கூறப்பட்டது எ-று.

எவ்விடத்தும் வியாபித்தல் சத்தியின் காரியமாதலால் 'சத்தியில் நீக்கமின்றி நிற்பன்' என்றார்.

மேற்கோளில் "நீக்கமின்றி நிற்கும்" என்று கூறி அப்பொரு-ளையே தரக்கூடிய 'ஏகாநேக மிரண்டு மின்றி' என்பதை இந்த ஏதுவிற் கூறியதுடன், நீக்கமின்றி நிற்றற்குக் காரணம் கூறுமுகத்தால் 'சருவவியாபியாய் நிற்றலான்' என்றார் - முதல்வன் சருவவியாபியாய் நிற்பன் என்பது இச்சூத்திரத்தின் முதலதிகரணத்தாற் சாதிக்கப்-பட்டமையால், 'சருவவியாபியாய் நிற்றலான்' என்பதை இவ்வதி-

கரணத்தில் ஏதுவாக வைத்து, ஆணையினீக்கமின்றி நிற்குமென்னும் மேற்கோளை வலியுறுத்தினார்.

## நீக்கமின்றி நிற்றலை விட்டு நீங்காதிருப்பது சருவவியாபகம் என்பதற்குக் காட்டும் உதாரணம்

***எங்குமுள னென்றளவை யொன்றன் றிரண்டெ்ன்னி
லெங்கு முளனன் றெவற்றெவனு - மங்க
ணவையவ னன்றில்லைப் பொன்னொளிபோ லீச
னவையுடைமை யாளாநா மங்கு***

அவன் எவ்விடத்தும் நீக்கமின்றிச் சருவவியாபியாய் நிற்றலான் என்ற ஏதுவும், சத்தியின் நீக்கமின்றி நிற்குமென்ற மேற்கோளும் தம்முள் விட்டு நீங்காமையாதல் எவ்வாறென்னும் வினாவுக்கு விடைகூறு முகமாக, ஏதுவும் மேற்கோளும் தம்முள் விட்டு நீங்காமையை யுடையன என்பதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு:** எங்குமுளன் என்ற அளவை ஒன்று அன்று இரண்டு என்னில் எங்கும் உளன் அன்று எவற்று எவனும் அவை அங்கண் அவன் அன்று இல்லை. ஈசன் பொன்ஒளிபோல் அவை உடைமை ஆம் நாம் ஆள்ஆம் அங்கு.

**இ-ள்:** எங்கும் உளன் என்ற அளவை ஒன்று அன்று - அவையே தானேயாய் என்று முன்பு கூறிய காரணத்தால் முதல்வன் ஒரு பொருளாதல் கூடாது, (ஒன்றாயின் கங்கைக் கரையில் நிற்கும் ஒரு மனிதன் அதே சமயத்தில் காவிரிக்கரையிலும் நிற்கமாட்டான். அதுபோல ஒரு பொருள் ஓரிடத்தில் இருப்பதன்றி எங்கும் வியாபித்து நிற்கமாட்டாது) இரண்டு என்னில் எங்கும் உளன் அன்று - அவ்வாறானால் முதல்வன் இரண்டு பொருளாய் நிற்பனெனக் கொள்வோமென்னில் அவ்வாறு கொண்டால் எங்கும் அவையே தானேயாய் வியாபித்து நிற்றல் கூடாது. (எதனாலெனின் தானே இருபொருளாய் வேறுபட்டு நிற்பவனுக்குப் பிற பொருள்களோடு வேற்றுமையின்றி வியாபித்து நிற்றல் கூடாது. இவ்வாறு ஒரு பொருளெனக் கொள்வதும் இரு பொருளெனக் கொள்வதும் ஒன்றோடொன்று முரண்படுதலால் முதல்வன் எங்குமுளனல்ல வெனக் கொள்வோ மென்னில்) எவற்று எவனும் அவை அங்கண் அவன் அன்று இல்லை - எவ்விடங்களிலுமுள்ள எலலாவிதமான பொருள்களுமாகிய அவையெல்லாம் அவ்விடங்களில் (அகரவுயிரின்றேல் அக்கரங்கள் இல்லையாவது போல) அம்முதல்வனையின்றி இருக்கமாட்டா வாகலான் (எங்கு முளனல்லன் என்பது பொருந்தாது. ஆதலால் இதற்கு முடிவென்னவென்று கேட்டால்) ஈசன் பொன் ஒளி போல் - எங்கும் உளனாகிய முதல்வன் சூரியனும் ஒளியும் போல (ஒன்றாதற்கும் இரண்டாதற்கும் பொதுவாய் தாதான்மிய சம்பந்தத்தாற் சிவமும் சக்தியுமென்றியைந்து நிற்பன். அவ்வாறானால், பசுபாசங்களும் வியாபகப் பொருள்களாதலால் அவையும் இதேபோலத் தத்தம் சத்திகளோடு தாதான்மியமாய் நிற்குமென்பது பெறப்படுதலான், அவையும் முதல்வனுக்குச் சமமாகுமோ வென்றால்) அவை உடைமை ஆம் - (முதல்வனுடைய வியாபகத்தோடு ஒப்பிடும்போது அவை வியாப்பிய மாதலால்) அப் பாசங்கள் உடைமையாம், நாம் ஆள் ஆம் அங்கு - பசுக்களாகிய நாம் முதலிவனிடத்தில் அடிமை யாவோம் எ-று.

செய்யுளின் இறுதியிலுள்ள அங்கு என்பதை அன்று எனப் பாடபேதம் கொள்வாரும் உண்டு. அன்று எனக் கொண்டால் அதற்கு அநாதியே பாசங்கள் உடைமையும் பசுக்கள் அடிமையுமாகும் எனப் பொருள் கொள்க.

பாசங்கள் உடைமை என்பது 'தாரகமாம் அத்தன் தாள் நிற்றல்' எனக் கூறியதாலும், பசுக்கள் அடிமையென்பது 'அதனின் ஈறலா ஒன்று பலவாறே தொழும்பாகும்' எனக் கூறியதாலும் பெறப்படுதலால், அவற்றை இவ்விடத்தில் எடுத்துக்காட்டி, பசு பாசங்கள் வியாபகமாயினும் முதல்வனை நோக்க வியாப்பியமாதலால் முதல்வனுக்குச் சமமாகாவெனக் கூறி ஐயம் அகற்றியவாறு.

என்றளவை என்றதில், என்ற என்னும் பெயரெச்சத்திலுள்ள அகரம் தொக்கு நின்றது. அதை, என்ற அளவை எனப் பிரித்துப் பொருள் கொள்க. அளவை என்ற இடத்தில் 'ஆன்' உருபை விரித்து அளவையான் எனக் கொள்க.

ஒன்றன்று உளனன்று என்பவற்றிலுள்ள அன்மைகள் ஒரு பொருளாதல் கூடாது உளனாதல் கூடாது எனப் பொருள் தந்து நிற்கின்றனவேயன்றி ஒன்றல்லன் உளனல்லன் என்னும் பொருளைத் தரவில்லை.

எவற்று எவனும் என்ற இடத்தில் 'இடம்' என்னும் ஏழாம் வேற்றுமை உருபு தொக்கு நிற்பதால், எவற்று என்றதற்கு எவ்விடங்களிலுமுள்ள எனப் பொருள் கொள்க.

எவனும் - எவ்விதமான பொருள்களும்

அவன் அன்று என்பது, அவனன்றி என்பதன் திரிபு.

'அவன் அன்று இல்லை' என்பது இவ்விடத்தில் அவனையின்றி இருக்கமாட்டாமையைக் குறிக்கின்றது.

பொன் ஆகுபெயர். அது பொன்போன்ற சூரியனைக் குறிக்கின்றது. ஆளாம் என்ற இடத்திலுள்ள ஆம் என்பதை உடைமை என்பதனோடுங் கூட்டி உடைமையாம் என்க.

பொன்னொளிபோல் ஈசன் என்பது தொகை உவமம். பொன்னொளி என்ற உவமானத்திலும் ஈசன் என்ற உவமேயத்திலும் அவற்றின் பொதுத் தன்மையாகிய பிரிக்க முடியாமை தொக்கு நின்றது. அதை விரித்து ஒன்றாதற்கும் இரண்டாதற்கும் பொதுவாய் தாதான்மிய சம்பந்தத்தால் சிவமும் சத்திமென்றியைந்து நிற்பன் என்க.

**இவ்வதிகரணத்திற் கூறியதொகைப் பொருள் :** முதல்வன் வியாபகப் பொருளாதலால் வியாபகப் பொருளுக்கு ஒன்றாய் நிற்றல் கூடாது. அவ்வாறு நிற்க முடியாமை பற்றி இரண்டாய் நிற்பனெனில் அவன் வியாபகனாதல் கூடாது.அவன் வியாபியல்லன் என்று கூறினால், பசு பாசங்கள் அவனையின்றி இருத்தல் கூடாது. ஆதலால் முதல்வன் ஒருவனே சூரியனும் ஒளியும் போலச் சிவமும் சத்தியுமெனத் தாதான்மிய சம்பந்தத்தால் இருதிறப்பட்டுச் சருவ வியாபியாய் ஒரு தன்மை இருதன்மை என்னும் இரண்டுக்கும் பொது-வாய் சமவேதமாகிய சத்தி சொரூபமாய் நிற்கும் முறைமையைத் தெளிவாகக் கூறியதன் மூலம் தாதான்மிய சத்தி உண்டென்பதற்குப் பிரமாணங் கூறினாரென்றறிக.

தன்னை விளங்கச் செய்வதும் பொருள்களை விளங்கச் செய்வதுமாகிய சூரியன் ஒன்றுதானே பொருள்களை விளங்கச் செய்யும் போது கதிரெனவும் தன்னை விளங்கச் செய்யும்போது கதி-ரோனெனவும் தாதான்மியமாய் இருதிறப்பட்டு நிற்பன். அதுபோலப் புறப்பொருளை நோக்காது அறிவுமயமாய்த் தன்னியல்பில் நிற்பதும் புறப்பொருளாகிய உயிர்களை நோக்கி நின்று அவற்றுக்கு அறிவிப்பது-மாகிய இரண்டு தன்மைகளையுடைய பேரறிவாகிய சைதன்னிய மொன்றே, புறப்பொருளை நோக்கி நிற்கும் நிலையில் சத்தியெனவும் புறப்பொருளை நோக்காது அறிவு மயமாய் நிற்கும் நிலையில் சிவமெனவும் குணிகுண சம்பந்தத்தால் இருதிறப்பட்டியைந்து நிற்கும்.



இனி, தீயின்சத்தி ஒன்று தானே சுடுதல், அவித்தல், பொரித்தல் முதலிய தொழில் வேறுபாட்டால் சுடுஞ்சத்தி, அவிக்கும்சத்தி, பொரிக்குஞ் சத்தியெனப் பல்வேறு வகைப்படுவது போல, சிவசத்தியொன்றே காரிய வேறுபாட்டால் பராசத்தி, ஆதி சத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தியென்று ஐவகைச் சத்திகளாயும்; ஐந்தும் நான்கும் எட்டும் பதின்மூன்றும் எட்டுமாகிய கூறுபாடு-களையுடைய ஈசானி, பூரணி, ஆர்த்தி. வாமைமூர்த்தியென்னும் ஐவகைச் சத்திகளாயும்;

ஈசானியின் கூறாகிய சசுனி, அங்கதை, இட்டை, மரீசி சுவாலினி என்னும் ஐந்து சத்திகளாயும்;

பூரணியின் கூறாகிய சாந்தி, வித்தை, பிரதிட்டை, நிவிர்த்தி என்னும் நான்கு சத்திகளாயும்,

ஆர்த்தியின் கூறாகிய தமை, மோகை, சயை, நிட்டை, மிருத்தியு, மாயை, பயை, சரை என்னும் எட்டுச் சத்திகளாயும், வாமையின் கூறாகிய இரசை, இரட்சை, இரதி, பாலி, காமை, சம்மியமினி, கிரியை, புத்தி, காரி, தாத்திரி, பிராமணி, மோகினி, பவை என்னும் பதின்மூன்று சத்திகளாயும்,

மூர்த்தியின் கூறாகிய சித்தி, இருத்தி, தியதி, இலக்குமி, மேதை, காந்தி, சுவதை, திருதி என்னும் எட்டுச் சத்திகளாயும்,

நாதம், விந்து, சதாசிவம், மகேசுவரன், உருத்திரன், மால், அயன் என்னும் சிவபேதம் ஏழுக்கும் முறையே பரவாகீசுவரி, அபர வாகீசுவரி, மனோன்மணி, மகேசை, உமை, திரு, வாணி என்னும் எழுவகைச் சத்திகளாயும்;

அத்தியான்மிக மெனப்படும் உன்மனை, சமனை, வியாபினி, சத்தி, நாதாந்தம், நாதம், நிரோதி, அர்த்தசந்திரம், விந்து, மகாரம், உகாரம், அகாரம் என்னும் பன்னிரண்டு சத்திகளாயும் இன்னும் பல்வேறு வகைப்பட்டும் நிற்கும்.

அவ்வச் சத்திகட்கு இடமாகிய சுத்தமாயையும் அவ்வாறே பல்வேறு வகையாக விருத்திப்பட்டு அவ்வச் சத்திகளின் பெயரைப் பெறும். இவற்றின் இயல்பெல்லாவற்றையும் ஆகமங்களுட் காண்க.

இரண்டாம் சூத்திரம் முற்றிற்று.

★★★

# மூன்றாஞ் சூத்திரம்

## பசு உண்மை

உலகத் தோற்றத்துக்குத் துணைக்காரணமாகிய வினை முதலியன உண்டென்று மேலைச் சூத்திரத்திற் கூறிய ஆசிரியர், இந்த மூன்றாஞ் சூத்திரத்தில் உலகப் பயனை அனுபவிக்கும் உயிர் உண்டென்று அனுமானப் பிரமாணத்தாற் கூறுகின்றார்.

***உளதில தென்றலி னெனதுட லென்றலி***
***னைம்புல னொடுக்க மறிதலிற் கண்படி***
***லுண்டிவினை யின்மையி லுணர்த்த வுணர்தலின்***
***மாயா வியந்திர தனுவினு ளான்மா.*** என்பது சூத்திரம்.

### கருத்துரை

***ஆன்மப் பிரகாச முணர்த்துத னுதலிற்று.***

**இ-ள்:** இரண்டாம் சூத்திரத்தில் 'அவையே தானே' யென்றதில் அவையே என்பதாற் குறிப்பிடப்பட்ட உயிர் சூனியம் முதலியவற்றுள் ஒன்றாகுமெனச் சூனியவாதி முதலியோர் அவரவர் மதம் பற்றிக் கூறுவர். அவர்களது கூற்றை மறுக்குமுகமாக, உயிர் அவற்றிற்கு வேறாயுண்டென்பதைக் கருதலளவையால் விளக்கி, இரண்டாஞ் சூத்திரத்தில் உயிர்கள் மேல் வைத்துக் கூறிய முதல்வனது இலக்கணத்தை வலியுறுத்துகின்றது. இந்த மூன்றாஞ் சூத்திரம்.

பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள்களுள் முதன்மையுடைமை பற்றி உலகிற்கு நிமித்த காரணமாகிய பதி யுண்டென்பதை முதற் சூத்திரத்தாற் கூறி, காரணமெனப் பொதுவாகக் கூறப்படுதலால் முதற் காரணமாகிய மாயையும் துணைக் காரணமாகிய வினையும் உண்டென்பதையும் அவற்றால் உலகந் தோன்றும் முறையையும்



இரண்டாஞ் சூத்திரத்தாற் கூறி, அவற்றால் வரும் பயனைக் கொள்வதற்குரிய பசுக்கள் உண்டென்பதற்கு இச்சூத்திரத்தாற் பிரமாணங் கூறுகின்றார். இதனால் சூத்திரங்களுக்கிடையேயுள்ள தொடர்பு விளங்கும்.

**இச்சூத்திரத்தின் பிண்டப் பொழிப்பு:** இலதென்றல், எனதுடலென்றல், ஐம்புலன்களை அறிதல், ஐம்புலனும் ஒடுங்கிய சொப்பனத்தை அறிதல், நித்திரையில் இன்பத்துன்ப அனுபவமும் உடம்பின் தொழிற்பாடும் இல்லாதிருத்தல், அறிவிக்க அறிதல், மாயாவியந்திர தனுவென்னும் பெயரடையாற் பெறப்படும் குறிப்பேது முதலியவற்றால் இவற்றின் வேறாய் இவ்வுடம்பினுள் உயிரெனப் படுவதொன்றுண்டு எ-று.

மாயாவியந்திர தனு என்பதற்கு மாயா காரியங்களால் ஆக்கப்பட்ட சூத்திரப் பாவை போன்ற உடம்பு என்பது பொருள். இதில், மாயாவியந்திரம் என்பது குறிப்பேதுவை உடையது. மாயா காரியங்களுக்கு வேறு வேறு பெயர் இருத்தலால் உயிர் அவற்றின் வேறானதென்பது இதன் கருத்து. இதில், வேறு வேறு பெயர் இருத்தலால் என்பதைக் குறிப்பாகக் கொள்ள வேண்டியிருப்பதால், மாயாவியந்திரதனு என்பது குறிப்பேதுவை உடையது.

வில்லின் அடியும் நுனியும் நாணினாற்றொடர்பு படுத்தப்படுவது போல, இச்சூத்திரத்தின் இறுதியிலுள்ள ஆன்மா என்பதும் முதலில் உள்ள உளது என்பதும் தொடர்பு பட்டு ஆன்மா உளது என்னும் பொருளைத் தருதலால் இது பூட்டுவிற் பொருள்கோள்.

உளது என்பது சாதி காரணமாக ஆன்மாக்கள் எல்லாவற்றையும் குறித்து நிற்றலால் சாதியொருமை

சூத்திரத்திலுள்ள அறிதலின் என்றது ஐம்புலன் என்பதோடுஞ் சென்று சேரும். அதனால் ஐம்புலன் அறிதலின் ஒடுக்கமறிதலின் எனக்கொள்க.

தனுவினுள் ஆன்மாவுளதென்று கூறினாரேனும் காணப்பட்ட உடம்பால், காணப்படாத உயிர் உண்டெனச் சாதிக்க வேண்டுமாதலால், இவ்வுடம்பு சூனியம் முதலியவற்றின் வேறாகிய ஆன்மாவை யுடையதென உடம்பின் மேல் வைத்துக் கூறுதல் ஆசிரியரின் கருத்தாகும். இதனை முதற்சூத்திரத்திற் பதி உண்டென்பதை உலகின்மேல் வைத்துக் கூறியதால் அறிக.

இச்சூத்திரத்தில் 'ஆன்மாவுளது' என்பதே மேற்கோளானாலும் ஆன்மாவைப் பற்றி வேறு வேறு விதமாகக் கூறும் ஏழு மதங்களை-யும் மறுக்கும் ஏதுக்கள் ஏழாதலால், ஆன்மாவுளது என்னும் மேற்-கோள் அவற்றோடு தனித்தனி சென்றியையும். அதனால் இச்சூத்திரம் ஏழு அதிகரணங்களை யுடையதாயிற்று.

ஒவ்வொரு அதிகரணத்துக்கும் வெவ்வேறு மேற்கோள் இல்லாமையால், ஏதுவே மேற்கோளாகவும் ஏதுவாகவும் அமைந்-திருக்கிறது. அதனால் மற்றைய சூத்திரங்களுட் போல மேற்கோளைச் சாதிப்பதற்கு வேறு ஏதுக் கூறவேண்டிய தேவை ஏற்படவில்லை. எனவே சூத்திரத்து மேற்கோளில் அடங்கியிருக்கும் ஏதுவே ஏதுவாம் என்பதையும் அந்த ஏதுவால் மேற்கோளைச் சாதிக்கும் முறை-யினையும் விளக்கி வலியுறுத்துவதாகிய பொழிப்புரை மாத்திரமே நூலாசிரியராற் கூறப்பட்டிருக்கிறது.

## முதலதிகரணம்

### சூனியம் ஆன்மா அன்றெனக் கூறும் மேற்கோள்

***ஈண்டு இலதென்றலின் ஆன்மாவுளதென்றது.***

இந்த மேற்கோள் சூனியான்மவாதி, தேகான்மவாதி, இந்திரியான்மவாதி, அந்தக்கரணான்மவாதி, சூக்குமதேகான்மவாதி, பிராணான்மவாதி, விஞ்ஞானான்மவாதி, சமுகான்மவாதி என்னும் எண்மருள். அந்தக் கரணான்மவாதிகள் நாலாஞ் சூத்திரத்தில் ஆன்மாவினது இலக்கணங் கூறும்போது மறுக்கப்படுவ ராதலால் அவர்களைத் தவிர்ந்த ஏனைய எழுவர் மதங்களையும் மறுத்து உயிருண்டென்று சாதிக்கத் தொடங்கி, முதலில் சூனியான்ம வாதிகளை மறுக்கிறது. இதில் ஆன்மா சூனியமோ சூனியத்தின் வேறோ என்பது ஐயம். இவ்வையப்பாட்டின் கண் ஆன்மா சூனியமே என்பது பிறர் கூறும் பக்கம். இவ்வாறு கூறுவோர் மாத்துமிகர். அவர்களது கூற்றை மறுக்கு முகமாக, சூத்திரத்தின் முதலாங் கூற்றைப் பதச்சேதஞ் செய்து சூனியத்தின் வேறாய் ஆன்மா உண்டெனக் கூறுகின்றது. இந்த மேற்கோள்

**இ-ள் :** இது ஆன்மாவன்று இது ஆன்மாவன்றென்று சொல்லும் பொருளொன்றுண்டாதலின், அன்றென்று சொல்லப்படுவனவற்றின் வேறாய், அவ்வாறு சொல்லும் ஆன்மா உண்டு எ-று.



### இம்மேற்கோளின் பொருளை விளக்குவதாகிய நூலாசிரியர் பொழிப்புரை.

***எவற்றினையும் அன்றன் றெனவிட்டு ஆன்மா இலதென்று நிற்பது உளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.***

ஆன்மா இல்லையெனக் கூறுதலால் ஆன்மா உண்டெனக் கொள்ளுதல், முயலுக்குக் கொம்பில்லை என்னுங் காரணத்தால் முயற் கொம்புண்டெனச் சாதிப்பதோ டொக்குமல்லவா என்னும் வினாவுக்கு விடை கூறுமுகமாக இலதென்றலின் என்றதன் தாற்பரியங் கூறி ஆன்மா வுளதெனச் சாதிக்கின்றது இந்தப் பொழிப்புரை.

**இ-ள் :** ஆன்மா இலதென்று கூறும் சூனியான்மவாதிகளும், ஆன்மா இல்லையென்று சும்மா கூறுதல் பொருந்தாதாதலால், உடல் பொறி விடயம் முதலியவற்றை ஆராய்ந்து பார்த்து, இது ஆன்மாவன்று இது ஆன்மாவன்றென ஒவ்வொன்றாகக் கழித்து, இவ்வாறாக அனைத்துங் கழிக்கப்படுதலாற் சூனியமே ஆன்மாவென்பர். ஆதலால் அவற்றை ஒவ்வொன்றாகக் கழித்து, இது ஆன்மாவன்றெனக் கூறிக்கொண்டு நிற்பதோர் அறிவுப் பொருள் உண்டென்பது பெறப்படும். அவ்வறிவே இரண்டாஞ் சூத்திரத்தில் 'அவையே தானேயாய்' என்றதனாற் சாதித்த ஆன்மாவாகும். ஆதலால் ஈண்டு இலதென்றலின் ஆன்மாவுளதென மேற்கோளிற் கூறப்பட்டது. எ-று.

அவ்வாறு இது ஆன்மாவன்றென்றறியும் அறிவும் சூனியமே-யெனின், அது என்னைப் பெற்றவள் மலடியென்று கூறுவதோ-டொக்கும். இவ்வதிகரணத்தில் இலது என்றது சூனியத்தைக் குறிக்கின்றது.

சூனியமாவது உள்ளது மன்று. இல்லது மன்று, உள்ளதும் இல்லதுமன்று. வேறுமன்றெனப்படும் பாழ். அதுவே என்றதிலுள்ள ஏகாரம் சூனியத்தைப் பிரித்தமையின் பிரிநிலை.

### சூனியத்தின் வேறாய் ஆன்மா உண்டென்பதற்குக் காட்டும் உதாரணம்

***அன்றன் றெனநின் றனைத்தும்விட் டஞ்செழுத்தாய்***
***நின்றொன் றுளததுவே நீயனைத்து - நின்றின்று***
***தர்ப்பணம் போற்காட்டலாற் சார்மாயை நீயல்லை***
***தற்பரமு மல்லை தனி.***

சூனியமென்று அறியும் அறிவை உடல் பொறி விடயம் முதலியவற்றின் வேறாகப் பிரித்துக் காணும் முறையினையும் அவ்வறிவே உயிராகுமென்பதையும் தெளிவுபடுத்திச் சூனியத்தின் வேறாய் ஆன்மா உண்டென்பதை வலியுறுத்துகின்றது. இவ்வுதாரணம்.

**கொண்டுகூட்டு :** அனைத்தும் நின்று அன்று அன்று எனவிட்டு அஞ்செழுத்தாய் ஒன்று நின்றுளது அதுவே நீ சார்மாயை அனைத்தும் நின்று இன்று தர்ப்பணம் போல் காட்டலால் நீ அல்லை தற்பரமும் அல்லை தனி.

**இ-ள்:** அனைத்தும் நின்று - உடல் பொறி விடயம் முதலிய அனைத்தோடும் கூடி அதுவதுவாக நின்று, அன்று அன்று எனவிட்டு - ஒவ்வொன்றாக ஆராய்ந்து பார்த்து இது நானன்று இது நானன்றென வறிந்து அவற்றை விட்டு நீங்கியவிடத்து, அஞ்செழுத்தாய் ஒன்று நின்றுளது - சூக்கும பஞ்சாக்கர ரூபமாய் நின்றறிந்து வந்ததோர் அறிவு நிலைபெற் றிருக்கிறதல்லவா, அதுவே நீ - (அவ்வறிவையும் நானன்றென நீக்கின் அவ்வாறு நீக்கும் அறிவு வேறுண்டெனப்பட்டு மேலும் மேலும் வரம்பின்றி நீக்கவேண்டி வரும். ஆதலால் சூக்கும பஞ்சாக்கர ரூபமாய் நின்றறிந்து வந்த) அவ்வறிவே நீயென்றறிவாயாக, (மாயாகாரியமும் சிவமும் உண்டென முன்னைய சூத்திரங்களில் வலியுறுத்தப் பட்டமையால் அவையே அவ்வறிவையும் அறிந்து நீக்குமென்பது பொருத்தமுடைய தாதலால் வரம்பின்றி நீக்க வேண்டி வராதெனின்) சார் மாயை - உன்னாற் சாரப்பட்ட மாயை, அனைத்தும் நின்று இன்று தர்ப்பணம் போல் காட்டலால் நீ அல்லை - நிலம் முதலிய காரியம் அனைத்துமாய் உன்னோடு கூடி நின்று இந்தப் பெத்த நிலையில் கண்ணுக்குக் கண்ணாடி போல உனக்கு அறிவை விளக்குவதன்றி அறிவதன்றாதலால் நீ அந்த மாயை அல்லை, தற்பரமும் அல்லை - (மாயையால் விளக்கமாக அறியும் நீ) அதற்கு அதீதமாகிய சிவமும் அல்லை, தனி - அவற்றின் வேறாவாய் எ-று.

விட்டவிடத்தென்பது விட்டெனத்திரிந்து நின்றது.

அனைத்தையும் நீக்கியவிடத்து விளங்கும் அறிவு இது என்று அறிவிக்கக் கருதி, அன்று அன்றென நின்று அனைத்தையும் விட்டவிடத்து எனக்கூறி, இலதென்றலின் என்ற ஏதுவை வழிமொழிந்து அஞ்செழுத்தாய் ஒன்று நின்றுளதென அடையாளங் காட்டினார். அஞ்செழுத்தாய் ஆன்மா நின்றறியும் முறை நான்காம் சூத்திரத்திற் கூறப்படும்.

முதலாம் வரியிலுள்ள அனைத்தும் நின்று என்பதுடன் 'கண்' உருபையும் இரண்டாம் வரியிலுள்ள அனைத்தும் நின்று என்பதுடன் ஆக்கச் சொல்லையுங் கூட்டிமுறையே அனைத்தின் கண்ணும் எனவும் அனைத்துமாய் எனவுங்கொள்க.

அதுவே என்றதிலுள்ள ஏகாரம் ஐயம் அகற்றுதலால் தேற்றம். தற்பரம் என்பது தனக்கு அதீதமாய் நிற்பது. அது அதீதமாகிய சிவம் என்னும் பொருளைத் தருதலால் குறிப்பேதுவாய் நின்ற பெயர். தற்பரம் என்பது தனக்குப் பரம் என விரியும்.

தனக்கு - ஆன்மாவாகிய தனக்கு. பரம் - அதீதம்.

இவ்வெண்பாவில் அனைத்தும் நின்று தர்ப்பணம் போற் காட்டலால் சார்மாயை நீ அல்லை என்றதனால் இரண்டு தொடக்கம் ஐந்து வரையுள்ள அதிகரணங்களுக்கும் தற்பரமும் அல்லை என்றதனால் ஆறாம் அதிகரணத்துக்கும் தனி என்றதனால் ஏழாம் அதிகரணத்துக்கும் தோற்றுவாய் செய்தவாறாயிற்று.

## இரண்டாம் அதிகரணம்

### உடம்பு ஆன்மா அன்றெனக் கூறும் மேற்கோள்

***இனி எனதுட லென்றலின் ஆன்மா வுளதென்றது.***

சூனியம் என்றறியும் அறிவு உடம்பின் கண் நிகழ்கின்றதே யன்றி உடம்பை விட்டு நிகழக் காணாமையாலும் நான் மெலிந்தேன் நான் பருத்தேன் என்று உடம்பினையே நானென்று சொல்லக் காண்ப-தாலும் உடம்பே ஆன்மாவாகுமென்பர் ஒருசாரார். இதில் உடம்பின் வேறாய் ஆன்மா உண்டோ இல்லையோ என்பது ஐயம். இவ்வையப் பாட்டின்கண் உடம்பின் வேறாய் ஆன்மா இல்லையென்பது பிறர் கூறும் பக்கம். இவ்வாறு கூறுவோர் தேகான்ம வாதிகள். அவர்களை மறுக்கு முகமாகச் சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைப் பதச்சேதஞ் செய்து உடம்பின் வேறாய் ஆன்மா உண்டெனக் கூறுகின்றது இந்த மேற்கோள்.

நான் பருத்தேன். சிறுத்தேன், கரியேன், மனிதனென உடம்பின் குணவிசேடங்களை உபசாரமாக உயிருக்குக் கூறினாலும் யான் உடம்பு, யான்கை, யான்காலெனக் கூறாது, எனதுடம்பு எனதுகை

எனது காலென வேற்றுமைப் படவே கூறுகின்றனர். இக்கூற்றே அவற்றின் வேறாய் உயிருண்டென்பதை உணர்த்து மெனக்கூறி, எனதுடல் என்போரது கூற்றைக் கொண்டே அவர்களை மறுத்தவாறு காண்க.

### மேற்கோளின் பொருளை விளக்குவதாகிய நூலாசிரியர் பொழிப்புரை

***என்பதி என்மனை என்றாற் போல என்கை என்காலென நிற்பது எதாகலின் அதுவே அவ்வான்மாவா மென்றது.***

எனதுடலென்பது பிறிதின் கிழமைப் பொருள்படாது. அதனால் உடம்பின் வேறாய் இன்னொரு பொருள் உண்டென்பது பொருந்தாது. தலையோடு மாத்திரமிருக்கும் இராகுவை, இராகுவின் தலையென்று வழங்குவது போல, எனதுடலென்பதும் உடலின் வேறாய் இன்னொரு பொருளில்லை என்பது பற்றியே வழங்கப்படுகின்றது. அதனால் எனதுடல் என்பது பற்றி உடலின் வேறாய் ஆன்மா உண்டென்பது பொருந்தாதென்னும் தேகான்ம வாதிகளை மறுக்குமுகமாக, எனதுடல் என்றதன் தாற்பரியங்கூறி, உடலின் வேறாய் ஆன்மா உண்டெனச் சாதிக்கின்றது இந்தப் பொழிப்புரை.

**இ-ள் :** இராகுவினது தலை என்பது போற் பேசும் வழக்கம் மிகக் குறைவானாலும் அதற்கு உடலுந் தலையும் வேறுவேறாதலின்றி ஒன்றாதலால் அவ்வாறு கூறினும் பொருந்தும். அவ்வாறன்றித் தன்னின் வேறான பொருள்களை என் வீடு, என்காணி, என் மனைவி என்று கூறுவது போலப் பிறிதின் கிழமைப் பொருள்பட என்கை, என்கால், என் செவி என்னறிவென்று பெரும்பாலுங் கூறப்படுகின்றது. இப்பெரும்பான்மை வழக்கு, பிறிதின் கிழமைப் பொருளிலன்றி வராமையால், 'என்' என்று கூறிக்கொண்டு நிற்கும் பொருள் உடலின் வேறானதென்பது பெறப்படும். அதுவே இரண்டாஞ் சூத்திரத்தில் ஆகமப் பிரமாணம் பற்றிக் கூறப்பட்ட ஆன்மாவாகும். ஆதலால் எனதுடலென்றலின் ஆன்மாவுளதென மேற்கோளிற் கூறப்பட்டது. எ-று.

### உடலின் வேறாய் ஆன்மா உண்டென்பதற்குக் காட்டும் உதாரணம்

***எனதென்ற மாட்டி னெனதலா தென்னா***
***துனதலா துன்கைகால் யாக்கை - யெனதென்று***
***மென்னறிவ தென்று முரைத்துநீ நிற்றிகா***
***ணுன்னிலவை வேறா முணர்.***



வீடு மனைவி முதலிய பொருள்கள் தம்மின் வேறாய் இருத்தலைக் கண்டு பிறிதின் கிழமைப் பொருள்பட என்வீடு என் மனைவி என்று கூறுதலும் தம்மின் வேறல்லாத கை கால் முதலியவற்றைத் தற்கிழமைப் பொருள்பட எனதென்று கூறுதலுமாகிய இவ்விருவகைக் கூற்றுக்களும் தம்முள் ஒத்தல் எவ்வாறென்னும் வினாவுக்கு விடைகூறுமுகமாக அவை ஒக்குமெனக் கூறி உடலின் வேறாய் ஆன்மா உண்டென்பதை வலியுறுத்துகின்றது. இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** எனது அலாது என்னாது எனது என்ற மாட்டின் உனது அலாது உன் கை கால் யாக்கை எனது என்றும் என் அறிவது என்றும் உரைத்து நீ நிற்றிகாண் உன்னில் அவை வேறாம் உணர்.

**இ-ள் :** எனது அலாது என்னாது எனது என்ற மாட்டின் - (உலகம் உடல் என்பவற்றின் வேறாய்க் கடவுளும் உயிரும் இல்லையெனவும் உடலே உயிரெனவும் உடலாகிய உயிருக்கு உலகம் அனுபவிக்கப்படும் பொருளெனவும் உலகாயதர் கூறுவர். நீ உலகாயத நூல் கேட்கமுன் வீடு மனைவி முதலிய புறப்பொருள்களையே உயிரெனக் கருதி மயங்கினாய். அக்காலத்தில் அவற்றை) எனதன்றென வேறாகக் கருதாது தனித்தனி எனது வீடு எனது மனைவியென்று தற்கிழமைப் பொருள்படக் கூறிக்கொண்டு நின்றாற்போல, உனது அலாது உன் கை கால் யாக்கை எனது என்றும் என் அறிவது என்றும் உரைத்து நீ நிற்றிகாண். இக்காலத்தில் உனதல்லாத உன் கை கால் உடம்பு முதலிய ஒவ்வொன்றையும் தனித்தனி எனதென்றும் அவ்வாறறிந்த பாசஞானத்தை என்னறி வென்றும் தற்கிழமைப் பொருள்படக் கூறிக் கொண்டு அவற்றின் வேறாய் நீ நிற்கின்றா யென்பதை அறிவாயாக, உன்னில் - (உலகாயத நூலை ஆராய்ந்தறிந்த பின்னர் பதி மனைவி முதலிய பொருள்கள் உனக்கு வேறென்றறிந்தாற் போல கைகால் முதலியனவும் உனக்கு வேறாயிருத்தலால் அவற்றை என் கை என் கால் என்கின்றாய் என்பதை) ஆராய்ந்து பார்ப்பாயானால், அவை வேறாம் உணர் - அக்கைகால் முதலியன உனக்கு வேறென்பதை அறிவாய் எ-று.

முதலாம் வரியில், எனதென்ற மாட்டின் என்பதிலுள்ள இன் உவம உருபு. அதனால் அதற்கு நின்றாற் போல என உரை செய்யப்பட்டது.

உனதலா தென்பதனை, கை கால் யாக்கை என்பவற்றோடு தனித்தனி கூட்டி உனதல்லாத கை, உனதல்லாத கால், உனதல்லாத யாக்கை எனக் கொள்க.

# மூன்றாம் அதிகரணம்

## இந்திரியம் ஆன்மா அன்றெனக் கூறும் மேற்கோள்

### *இனி ஐம்புலனறிதலின் ஆன்மா வுளதென்றது*

செவி முதலிய ஐம்பொறிகள், சத்தம் பரிசம் ரூபம் இரதம் கந்தம் எனப்படும் ஐம்புலன்களையும் அறியுமென்பதை எல்லோரும் ஒப்புக் கொள்வர். ஐம்பொறிகள் உடல்போற் சடமல்லவாதலாலும் அவற்றின் தொழிற்பாடுகளை, எனது செவி கேட்டது. எனது கண் கண்டதென வழங்காமல், பெரும்பாலும் நான் கேட்டேன், நான் கண்டேன் என வழங்குதலாலும் அவற்றையே உயிரெனக் கூறுதலமையு மென்பர் ஒரு சாரார். இதில் இந்திரியம் ஆன்மாவோ ஆன்மாவல்லவோ என்பது ஐயம். இவ்வையப் பாட்டின் கண் இந்திரியமே ஆன்மாவென்பது பிறர்கூறும் பக்கம். இவ்வாறு கூறுவோர் இந்திரியான்ம வாதிகள். அவர்களை மறுத்து இந்திரியம் ஆன்மாவன்றெனக் கூறுகின்றது இந்த மேற்கோள்.

**இ-ள் :** ஐம்புலன்களையும் அறிதலால் அவற்றை அறியும் இந்திரியங்களின் வேறாய் உயிரெனப்படுவ தொன்றுண்டு.

### மேற்கோளின் பொருளை விளக்குவதாகிய நூலாசிரியர் பொழிப்புரை

***ஐம்புலனாகிய சத்த பரிச ரூப ரச கந்தங்களை இந்திரியங்கள் ஒன்றறிந்த தொன்றறியாமையின் இவ்வைந்தினாலும் ஐம்பயனு மறிவ துளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.***

ஐம்புலன்களையும் அறிதலினால் ஆன்மா ஐம்பொறிகளின் வேறானதெனக் காரணங்கூறுதல் எவ்வாறு பொருந்தும் என்னும் வினாவுக்கு விடைகூறுமுகமாக, 'ஐம்புலனறிதலின்' என்றதன் தாற்பரியத்தைக் கூறி, இந்திரியம் ஆன்மாவன்றெனச் சாதிக்கின்றது இந்தப் பொழிப்புரை.

**இ-ள் :** சத்தம் பரிசம் உருவம் சுவை நாற்றம் என்னும் ஐம்புலன்களையும் அறியும் இந்திரியங்களில் ஒரு இந்திரியம் அறியும் விடயத்தை மற்றொரு இந்திரியம் அறியாது. சத்தத்தைச் செவி அறிவதன்றி மற்ற இந்திரியங்கள் அறிய மாட்டா. இவ்வாறே ஒவ்வொரு இந்திரியமும் தனக்குரிய விடயத்தை அறிவதேயன்றி மற்ற இந்திரியங்களுக்குரிய விடயத்தை அறிய மாட்டாது. இவ்விந்திரியங்களைப் போலன்றி, இந்த



ஐந்து இந்திரியங்களாலும் ஐந்து விடயங்களையும் அறியும் பொருளொன்றுண்டு. அவ்வாறு அறியும் பொருளே முன்னர் ஆகமப் பிரமாணத்தாற் பெறப்பட்ட ஆன்மாவாகும். எ-று.

### ஐந்து இந்திரியங்களின் வேறாய் ஆன்மா உண்டென்பதற்குக் காட்டும் உதாரணம்.

***ஒன்றறிந்த தொன்றறியா தாகி யுடன்மன்னி***
***யன்றும் புலனாயவ் வஞ்செழுத்தை - யொன்றறித***
***லுள்ளதே யாகி லதுநீ தனித்தனிகண்***
***டுள்ளலவை யொன்றல்லை யோர்.***

ஒரு இந்திரியம் அறிந்ததை இன்னொரு இந்திரியம் அறியாதென்பது பொருந்தும். ஆனாலும் ஐந்திந்திரியங்களும் ஐந்து உயிரெனக் கொள்வதிற் றவறில்லை. இனி இவ்வைந்து இந்திரியங்களையுங் கொண்டு ஐம்புலன்களையும் ஒருபொருளே 'அறியுமென்று கூறுவதற்குப் பிரமாணம் எதுவுமில்லை. 'குடத்தைக் கண்ட யானே அதைத் தீண்டினேன்' என்னும்போது கண்டேன் தீண்டினேன் என்னும் இரண்டிடத்தும் யான் என்னும் உணர்வு நிகழ்தலால், ஐந்து இந்திரியங்களும் ஒருடம்பில் நிலைபெறும் ஒற்றுமைபற்றி இந்திரியங்களே அவ்வாறறியும். ஆதலால், இந்திரியங்களின் வேறாய் உயிருண்டென்பது பொருந்தாதென்பாரை மறுத்து, இந்திரியங்களின் வேறாய் உயிருண்டென்பதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** உடல் மன்னி ஒன்று அறிந்தது ஒன்று அறியாதாகி அன்றும் புலன் ஆய் அவ்வஞ்செழுத்தை அறிதல் ஒன்று உள்ளதே ஆகில் அது நீ. அவை தனித்தனி கண்டு உள்ளல் ஒன்று அல்லை.

**இ-ள் :** உடல் மன்னி ஒன்று அறிந்தது ஒன்று அறியாதாகி - உடம்பின் கண்ணே நிலைபெற்று ஒரு விடயத்தை அறிந்த இந்திரியம் மற்றொரு விடயத்தை அறியாதாகி, அன்றும் புலன் ஆய் அவ்வஞ் செழுத்தை - ஒன்றோடொன்று மாறுபடும் சத்தம் முதலிய ஐம்புலன்களையும் சூக்கும பஞ்சாக் கரத்தாற் செலுத்தப்பட்டு ஆராய்ந்தறிகின்ற ஐம்பொறிகளின் தொழிற்பாட்டை, அறிதல் ஒன்று உள்ளதே ஆகில் - எந்த இந்திரியம் எந்த விடயத்தை யறியு மென்றறிகின்ற பொருளொன்று உள்ளதேயாகில் , அது நீ - அதுவே ஆன்மாவாகிய நீ, அவை தனித்தனி கண்டு உள்ளல் - அவ்விந்திரியங்கள் ஒவ்வொன்றும் தத்தம் விடயங்களைக் கண்டறிவதன்றி தாம் அறிந்தோமென்று அறிய மாட்டாவாதலால், ஒன்று அல்லை - ஐந்து இந்திரியங்களின்

தொழிற்பாட்டையும் அறிந்து அவற்றால் வரும் பயனைக் கொள்பவனாகிய நீ அவற்றின் ஒன்றாக மாட்டாய்; வேறாவாய், ஓர் - இதனை ஆராய்ந்து அறிவாயாக எ-று.

அறியாதாகி என்றதிலுள்ள ஆகி என்னும் சிறப்புவினை, புலன் ஆய் என்றதிலுள்ள ஆய் என்னும் பொதுவினையோடு முடிந்தது. சத்தத்தை அறிந்து மற்றவற்றை அறியாதிருத்தல் செவிக்குச் சிறப்புவினை. உருவத்தை அறிந்து மற்றவற்றை அறியாதிருத்தல் கண்ணுக்குச் சிறப்புவினை. இவ்வாறே மற்றைய இந்திரியங்களுக்குங் காண்க. புலன்களை ஆய்தல் எல்லா இந்திரியங்களுக்கும் பொதுவாதலால் ஆய் என்பது பொதுவினை. இதில் ஆகி என்னும் சிறப்புவினை ஆய் என்னும் பொதுவினையோடு முடிந்தது. இதை, இவனும் இவளும் சிற்றில் இழைத்தும் சிறுபறை அறைந்தும் விளையாடுப என்றாற் போலக் கொள்க. சிற்றில் இழைத்தல் சிறப்பாகச் சிறுமிகளுக்குரிய விளையாட்டு சிறுபறையறைதல் சிறப்பாகச் சிறுவர்களுக்குரிய விளையாட்டு. விளையாட்டென்பது சிறுவருக்கும் சிறுமிகளுக்கும் பொதுவானது. இவ்வுதாரணத்தில் சிறப்புவினை பொதுவினையோடு முடிந்தது காண்க.

ஆய் என்பது வினைத்தொகை, அதனை விரித்து ஆய்ந்தறிகின்ற எனக்கொள்க. அஞ்செழுத்து என்பது இருமடி ஆகுபெயர். அது அஞ்செழுத்தாற் செலுத்தப்படும் ஐந்து இந்திரியங்களையுங் குறித்து, அதன்பின்பு அவ்விந்திரியங்களின் தொழிற்பாட்டைக் குறித்து நிற்கின்றது.

உள்ளல் என்பதை உள்ளலால் என்க.

இம்மூன்று அதிகரணங்களாலும் சாக்கிரத்தில் நிகழும் இயல்பு பற்றி, சூனியம் ஆன்மாவன்று, உடல் ஆன்மாவன்று, இந்திரியம் ஆன்மாவன்றெனக் கூறி இவற்றின் வேறாய் ஆன்மா உண்டெனச் சாதிக்கப்பட்டது.

## நான்காம் அதிகரணம்

### சூக்கும தேகம் ஆன்மா அன்றெனக் கூறும் மேற்கோள்

### *இனி ஒடுக்கமறிதலின் ஆன்மா வுளதென்றது*

"நேச விந்திரியங்கட்கு நிகழறி விதனாற் காண்டும்" எனச் சிவஞான சித்தியாரியற் கூறியபடி, தன்மாத்திரைகளால் இந்திரியங்களுக்கு அறிவு நிகழுமென நீங்களுங் கூறுதலால், இவ்விந்திரியங்களுக்கு வேறாய் நின்று, நான் அறிந்தேனென்றறிவது புரியட்டக உடம்பேயென்பது பெறப்படும். அதனால் சூக்கும தேகம் வெளியிற் காணப்படாதாயினும் அகத்தே நின்று இந்திரியங்களைப் புறத்தே செலுத்தி யறியுமெனக் கொள்வோ மென்பர் ஒருசாரார். இதில் சூக்கும தேகத்தின் வேறாய் உயிர் உண்டோ இல்லையோ என்பது ஐயம். இவ்வையப் பாட்டின்கண் சூக்கும தேகத்தின் வேறாய் உயிர் இல்லையென்பது பிறர் கூறும் பக்கம். இவ்வாறு கூறுவோர் சூக்கும தேகான்மவாதிகள். அவர்களுடைய கூற்றை மறுக்குமுகமாகச் சூத்திரத்தின் நான்காம் கூற்றைப் பதச்சேதஞ் செய்து, சூக்கும தேகம் ஆன்மா அன்றெனக் கூறுகின்றது. இந்த மேற்கோள்.

**இ-ள்:** ஐம்பொறிகளும் ஒடுங்கின சொப்பனத்தில் நிகழ்ந்தவற்றை அறிதலின், சூக்கும தேகத்தின் வேறாய் உயிர் உண்டு.

ஒடுக்கம் அறிதலின் என்றதில், ஒடுக்கம் என்பது ஒடுக்கத்தில் நிகழ்பவற்றைக் குறித்தலால் ஆகுபெயர்.

புரியட்டக உடம்பு சத்தம் பரிசம் ரூபம் இரதம் கந்தமென்னும் தன் மாத்திரைகள் ஐந்தும் மனம் புத்தி அகங்காரங்களுங் கூடியது.

### இந்த மேற்கோளின் பொருளை விளக்குவதாகிய நூலாசிரியர் பொழிப்புரை

நனவின்கட் கனவு கண்டா மென்றும் கண்டிலமென்றும் நிற்பதுளதாகலின் அதுவே யவ்வான்மா வாமென்றது.

சொப்பனத்தில் நிகழ்ந்தவற்றை அறிவது சூக்கும தேகமே யாதலின் அவ்வாறு சித்திக்கப்பட்டதை மேற்கோளாகக் கூறியது சித்தசாதனம் என்னும் குற்றமாகாதா என்னும் வினாவுக்கு விடைகூறுமுகமாக ஒடுக்கமறிதலின் என்றதன் தாற்பரியத்தைக் கூறுகின்றது இப்பொழிப்புரை.

சித்த சாதனமாவது ஒருமுறை சாதித்ததை மீண்டும் சாதித்தல். சொப்பனத்தில் உயிருக்குக் கருவியாய் நின்றறிவது சூக்கும உடம்பு. சாக்கிரத்தில் உயிருக்குக் கருவியாய் நின்றறிவது சூக்கும உடம்பல்ல. இவ்விடத்தில், கனவிற் கண்டவற்றைச் சாக்கிரத்தில் மயங்கி அறிதல் பற்றிக் கூறப்படுதலால் இது முன்னர்ச் சாதிக்கப்பட்டதை மீண்டும் சாதிப்பதாகாது.

**பொழிப்புரையின் பொருள்:**

கனவு கண்டேனென்றும் கனவு கண்டிலேனென்றும் நனவு நிலையில் மயங்கி அறியும் பொருள் உண்டாதலால் அவ்வாறு மயங்கி அறியும் பொருளே ஆகமப் பிரமாணத்தாற் சாதிக்கப்பட்ட ஆன்மாவாகும். ஆதலால் ஒடுக்கம் அறிதலின் ஆன்மாவுளதென மேற்கோளிற் கூறப்பட்டது எ-று.

ஒடுக்கமறிதலின் என மேற்கோளிற் கூறியது ஐம்பொறிகளு-மொடுங்கிய சொப்பனத்தில் நிகழ்ந்தவற்றை நனவு நிலையில் மயங்கியறிதலென்னும் பொருளைத் தருதலால் அது சித்தசாதன-மென்னும் குற்றமாகாது. கனவு கண்ட சூக்கும உடம்பே நனவு நிலையில் அதை அறியுமானால் அது தான் கண்டபடியே அறியும்; மயங்கி அறியாது. அதனால் சொப்பனத்தைக் கண்ட சூக்கும உடம்பே நனவு நிலையிலும் அச்சொப்பனத்தை அறியுமெனக் கூறுதல் பொருந்தாது. உயிர் சூக்கும உடம்பு போல எப்போதும் ஒரே தன்மையாய் இருப்பதில்லை. அது சில தத்துவங்களை விட்டு அகத்துச் செல்லும். பின்பு விட்ட அத்தத்துவங்களோடு கூடிப் புறத்துச் செல்லும். இவ்வாறு தத்துவங்களோடு கூடுதலும் விடுதலுமாகிய வேறுபாடு காரணமாக அது மயங்கியறிதல் கூடும். அதனால் அவ்வாறறியும் உயிர் சூக்கும உடம்பின் வேறாயுண்டென்பது பெறப்படும்.

### சூக்கும தேகத்தின் வேறாய் ஆன்மா உண்டென்பதற்குக் காட்டும் உதாரணம்

***அவ்வுடலி னின்றுயிர்ப்ப வைம்பொறிக டாங்கிடப்பச்***
***செவ்விதி னவ்வுடலிற் சென்றடங்கி - யவ்வுடலின்***
***வேறொன்று கொண்டு விளையாடி மீண்டதனை***
***மாறலுட னீயல்லை மற்று.***

உயிர் கனவினிடத்துச் செல்லும் முறையினையும் கனவின்கண் நிகழ்வதனையும் மீண்டு சாக்கிரத்துக்கு வரும் முறையினையும் உணர்த்தி சூக்கும தேகத்தின் வேறாய் ஆன்மா உண்டென்பதை வலியுறுத்துகிறது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு:** அவ்வுடலின் நின்று உயிர்ப்ப ஐம்பொறிகள் கிடப்ப அடங்கி அவ்வுடலில் செவ்விதின் சென்று அவ்வுடலின் வேறு ஒன்று கொண்டு விளையாடி மீண்டு அதனை மாறல் நீ உடல் அல்லை.



**இ-ள் :** அவ்வுடலின் நின்று உயிர்ப்ப ஐம்பொறிகள் கிடப்ப - மூன்றாம் அதிகரணத்தால் உயிரன்று எனச் சாதிக்கப்பட்ட தூலவுடம்பினின்று தொழிற்படுவனவாகிய ஐம்பொறிகள் தொழிற்படாமற் கிடப்ப, அடங்கி அவ்வுடலின் செவ்விதின் சென்று - புறத்து நிகழுந் தொழிற்பாடெல்லாம் அடங்கி அவ்வுடலினுள்ளால் வருத்தமின்றிச் சென்று, அவ்வுடலின் வேறு ஒன்று கொண்டு விளையாடி - அந்தத் தூலவுடம்பு போல அதற்கு வேறானதொரு உடம்பை எடுத்துக்கொண்டு தூலவுடம்பில் நின்று தொழிற்படுவது போலன்றி வேறொரு விதமாகக் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று விளையாடி, மீண்டு அதனை மாறல் - மீள அச்சூக்கும உடம்பிலிருந்து மாறித் தூலவுடம்பைச் சேர்தலால், நீ உடல் அல்லை - நீ அச் சூக்கும தேகமல்லை அதனின் வேறாவாய் எ-று.

உயிர்ப்ப என்பது அன்பெறாத அகர வீற்றுப் பலவறி சொல்லாதலால் அதனை உயிர்ப்பன எனக் கொள்க். உயிர்த்தல் - தொழிற்படுதல்.

முதலாம் வரியில் 'தாம் கிடப்ப' என்றதிலுள்ள தாம் என்பதும் இறுதியிலுள்ள மற்று என்பதும் அசைகள்.

மீண்டு என்பதை மீள எனக்கொள்க.

மாறலால் என்பது மாறல் என ஈறு குறைந்து நின்றது.

## ஐந்தாம் அதிகரணம்

### பிராணவாயு ஆன்மா அன்றெனக் கூறும் மேற்கோள்

***இனிக் கண்படில் உண்டிவினை யின்மையின் ஆன்மாவுள-தென்றது.***

சொப்பனத் தானத்தில் மாத்திரமன்றித் தொழிற்படாத சூக்கும தேகம் போலன்றி, சுழுத்தி துரியங்களிலுந் தொழிற்படும் பிராண வாயுவே ஐம்பொறிகளை அடக்கியும் சாக்கிரத்தில் அவற்றைத் தொழிற்பட விட்டும் விடயங்களை அறியும் ஆன்மாவாகும் என்பர் ஒருசாரார். இதில் பிராண வாயு ஆன்மாவோ அன்றோ என்பது ஐயம். இவ்வையப்பாட்டின் கண் பிராணவாயுவே ஆன்மாவென்பது பிறர் கூறும் பக்கம். இவ்வாறு கூறுவோர் பிராணான்மவாதிகள். அவர்களது கூற்றை மறுக்கு முகமாகச் சூத்திரத்தின் ஐந்தாங்கூற்றைப் பதச்சேதஞ்

செய்து பிராணவாயு ஆன்மா அன்றெனக் கூறுகின்றது இந்த மேற்கோள்.

**இ-ள் :** நித்திரை செய்யும்போது பிராணவாயு இயங்கிக் கொண்டிருப்பினும் இன்ப துன்ப அனுபவமும் உடம்பு தொழிற்படுதலும் இல்லாமையால், பிராணவாயுவின் வேறாய் இன்ப துன்பங்களை அனுபவிப்பதும் உடம்பைத் தொழிற்படுத்துவதுமாகிய ஆன்மா உண்டு எ-று.

உண்டி வினையென்பது உம்மைத்தொகை. அது உண்டியும் வினையும் என விரியும். இதை, "கண்டுணர் புருடன்......... காயம் உண்டியும் வினையுமின்றிக் கிடந்து" எனச் சிவஞான சித்தியார் கூறுவதாலறிக.

### மேற்கோளின் பொருளை விளக்குவதாகிய நூலாசிரியர் பொழிப்புரை

***ஒடுங்கினவிடத்து இன்பத் துன்பஞ் சீவனம் பிரகிருதிக் கின்மையின் ஒடுங்காதவிடத்து இன்பத் துன்பஞ் சீவியா நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.***

நித்திரை செய்யும்போது இன்பத்துன்ப அனுபவமுந் தொழிற்பாடும் இல்லையென்றது உடலுக்கோ பிராணவாயுவுக்கோ வென்று கேட்டால், உடம்பு உயிரல்லாதபடியால் உயிருக்கு உண்டி வினையில்லை யென்பது பொருந்தும். இனி, பிராண வாயுவுக்கு உண்டி வினையில்லையென்று கூறின், நித்திரை விட்டெழுந்த பின்னர், சுகமாக நித்திரை செய்தேனென் றறிதலால், நித்திரையிற் சுகானுபவம் இல்லாமல் அவ்வாறறிய முடியாதென்னும் அருத்தாபத்திப் பிரமாணத்தால், நித்திரையிலும் இன்பானுபவம் உண்டென்பது பெறப்படும். விழித்திருக்கும் நனவு நிலையிற் போல நித்திரை செய்யும் போதும் பிராணவாயு இயங்குதலால் அதற்குத் தொழிற்பாடுண்டென்பதை அறிகின்றோம். ஆதலால், பிராண வாயுவுக்கு நித்திரையில் இன்ப துன்ப அனுபவமும் தொழிற்பாடும் இல்லையென்பது பொருந்தாதென்னுங் கூற்றை மறுக்குமுகமாக, 'உண்டிவினை யின்மையின்' என்றதன் தாற்பரியத்தைக் கூறுகின்றது இந்த மேற்கோள்.

**இ-ள் :** இவ்விடத்தில் உண்டியென்றது விடயங்களிடமாக வரும் இன்ப துன்ப அனுபவத்தை. வினையென்றது உடம்பின் தொழிற்பாட்டை. பிராணவாயுவைத் தவிர்ந்த மற்றைய கருவிகளெல்லாம் ஒடுங்கிய நித்திரையில் பிராணவாயு இயங்கிக் கொண்டிருக்கவும் இன்ப துன்ப அனுபவமும் தொழிற்பாடும் உடம்பின் கண் நிகழாமையாலும், கருவிகள் ஒடுங்காத சாக்கிரமெனப்படும் நனவு நிலையில் இன்ப துன்ப அனுபவமும் தொழிற்பாடும் உடம்பின்கண் நிகழ்தலாலும், இந்நிகழ்ச்சிகளுக்குக் காரணமாகச் சுழுத்தியிற் கருவிகளை ஒடுக்கியும் சாக்கிரத்திற் கருவிகளை ஒடுக்காதும் நிற்பதெதுவோ அதுவே அவ்வான்மாவாகும். அதனால், 'கண்படில் உண்டி வினையின்மையின் ஆன்மாவுளது' என மேற்கோளிற் கூறப்பட்டது எ-று.

சீவனம் - சீவித்தல், சேட்டித்தல், தொழிற்படுதல்.

'சீவியா நிற்பது' என்றதில் நிற்பது என்றது நிற்றல் என்னும் பொருளைத் தந்து தொழிற் பெயராக நின்றது.

சீவியா நிற்பதுளதாகலின் என்ற இடத்திலுள்ள 'உளது' என்பது இன்பத் துன்பம் என்பதனோடுஞ் சேர்ந்து, இன்பத் துன்பம் உளது எனவரும்.

பிரகிருதி - உடம்பு. நித்திரையிலும் விழிப்பிலும் வேறுபாடின்றி ஒரே தன்மையாக இருத்தலால், தூலவுடம்பைப் பிரகிருதி என்றார். பிரகிருதி - இயல்பாயிருப்பது.

பிரகிருதியின் கண் என ஏழாம் வேற்றுமை உருபு வரவேண்டிய இடத்தில் பிரகிருதிக்கு என நான்காம் வேற்றுமை உருபு வந்தது உருபு மயக்கம்.

விழித்திருக்கும் போதும் துயிலும் போதும் பிராணவாயு ஒரே விதமாக இயங்குதலால் அதைப் பிரகிருதியெனக் கொண்டு, அப்பிராணவாயுவுக்குச் சுழுத்தியில் இன்ப துன்பமும் தொழிற்பாடும் இன்மையால், பிராணவாயு ஆன்மாவல்ல வென்று கூறுவாரும் உண்டு.

பிரகிருதிக்கின்மையின் என்றதற்கு, பிரகிருதி விகாரமாகிய சித்தத்துக்கு இன்ப துன்ப அனுபவமும் உடம்பின் தொழிற்பாடும் இன்மையால் சுழுத்தியின் கண்ணும் தொழிற்படுவதாகிய சித்தமே உயிரென்னும் சித்தான்மவாதிகளை மறுத்தற்கெழுந்தது இவ்வதிகரணம் என்பாரும் உண்டு.

### பிராணவாயுவின் வேறாய் ஆன்மா உண்டென்பதற்குக் காட்டும் உதாரணம்

***கண்டறியு மிவ்வுடலே காட்டொடுங்கக் காணாதே***
***யுண்டி வினையின்றி உயிர்த்தலாற் - கண்டறியு***
***முள்ளம்வே றுண்டா யொடுங்கா துடனண்ணி***
***லுள்ளதா முண்டிவினை யூன்.***

நித்திரை செய்யுமிடத்துக் கருவிகள் எல்லாம் ஒடுங்குதலால், இன்ப துன்ப நுகர்ச்சியும் தொழிற்பாடும் உடலுக்கு இல்லையாயின. ஆதலால், அவையிரண்டும் இல்லாமை காரணமாகப் பிராண-வாயுவை ஆன்மா வென்று கூறக்கூடாதா என்னும் வினாவுக்கு விடைகூறுமுகமாக, பிராணவாயு ஆன்மா வன்றென்பதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** கண்டு அறியும் இவ்வுடலே காட்டு காணாதே ஒடுங்க உண்டிவினை இன்றி உயிர்த்தலால் கண்டு அறியும் உள்ளம் வேறு உண்டு ஒடுங்காது உடல் நண்ணில் ஊன் உண்டி வினை உள்ளதாம் ஆய்.

**இ-ள் :** கண்டு அறியும் இவ்வுடலே - விடயங்களைக் கண்டறிவதற்கு ஆதாரமாகிய இவ்வுடம்பின் கண்ணே, காட்டு காணாதே ஒடுங்க - கண்டறியுஞ் கருவிகள் தொழிற்படாதொடுங்கவும், உண்டி வினை இன்றி - அவை ஒடுங்குதலால் இன்ப துன்ப நுகர்ச்சியும் உடம்பின் தொழிற்பாடும் இல்லையாகவும், உயிர்த்தலால் - பிராணவாயு இயங்குதலால், கண்டு அறியும் உள்ளம் வேறு உண்டு - விடயங் களைக் கண்டறியும் உரிமையுடைய உயிர் பிராண வாயுவின் வேறாயுண்டு, ஒடுங்காது உடல் நண்ணில் ஊன் உண்டி வினை உள்ளதாம் - அவ்வுயிர் ஒடுங்காது உடம்பைப் பொருந்துமாயின் அவ்வுடம்பும் கருவிகளுந் தொழிற்பட்டு அதனால் இன்ப துன்ப அனுபவமும் தொழிலும் உடையதாகும். ஆய் -இதனை ஆராய்ந்தறி வாயாக எ-று.

பிராணவாயு இயங்கும் போதும் இன்ப துன்ப அனுபவமும் தொழிற்பாடும் இன்மையால், அவ்விரண்டும் நிகழ்வதற்குரிய உயிர் மற்றைய கருவிகளை ஒடுக்கிக் கொண்டு இருந்தாலன்றி, இன்பதுன்ப அனுபவமும் தொழிற்பாடும் இல்லாமற் போகாது. ஆதலால் பிராணவாயுவின் வேறாய் உயிர் உண்டு என்பதைக் குறிப்பாக உணர்த்துதலால் இது அருத்தாபத்திப் பிராமணம்.



கண்டறிதல் என்பதிலுள்ள கண்டு என்பதும் அறிதல் என்பதும் ஒரு பொருளையே தருதலால் கண்டறிதல் என்பது ஒரு பொருட் பன்மொழி.

ஒடுங்க, இன்றி என்ற இடங்களில் உம்மைகள் தொக்கன. அவற்றை விரித்து ஒடுங்கவும் இல்லையாகவும் என்க.

ஊன் என்பது ஊனாலாகிய உடம்பைக் குறித்தலால் ஆகுபெயர்.

உயிர் வேறுண்டென்பதை வலியுறுத்தக் கருதி, கருவிகள் ஒடுங்கிய போது உண்டி வினையில்லை யென்பதை எதிர் மறையாகக் கூறியதோடு, கருவிகள் ஒடுங்காதபோது உண்டி வினை உண்டென்பதை உடம்பாட்டு முகத்தாலுங் கூறினார்.

இவ்வதிகரணத்தால், சுழுத்தி துரியங்களில் நிகழும் இயல்புபற்றி உயிருண்டெனச் சாதிக்கப்பட்டது. இரண்டாம் அதிகரணந் தொடங்கி இவ்வதிகரணம் வரை மாயா காரியங்கள் உயிரல்ல என்றமையால் சார்மாயை நீயல்லை என்பதை வலியுறுத்தினார்.

## ஆறாம் அதிகரணம்

### பிரமம் ஆன்மா அன்றெனக் கூறும் மேற்கோள்

### இனி உணர்த்த வுணர்தலின் ஆன்மாவுளது என்றது.

பிரமப் பொருள் முன்னைய அதிகரணங்களிற் கூறிய சடப்பொருள்கள் போலல்லாது சித்துப் பொருளாதலால் அந்தப் பிரமமே உயிரென்பது பொருந்துமென ஒரு சாரார் கூறுவர். இதில் பிரமம் உயிரோ இல்லையோ என்பது ஐயம். இவ்வையப் பாட்டின் கண் பிரமமே உயிரென்பது பிறர் கூறும் பக்கம். இவ்வாறு கூறுவோர் விஞ்ஞானான்ம வாதிகள் அவர்களை மறுத்து, பிரமத்தின் வேறாய் ஆன்மா உண்டென்று கூறுகின்றது இந்த மேற்கோள்.

**இ-ள்:** தொழிற்படுங் கருவிகள் ஒன்றுமின்றிக் கேவலமாய் நிற்குந் துரியாதீத அவத்தையில் ஒன்றையும் அறியாமலும் பின்பு கலை முதலிய கருவிகளால் அறிவிக்க அறிந்து வருதலுமுண்மையால், அது எக்காலத்தும் ஒரே தன்மையாய்த் தானே அறியும் பிரமமாகாது. ஆகவே பிரமத்தின் வேறாய் ஆன்மா உண்டு எ-று.

உணர்த்த உணர்தலின் என்று கூறியதனால், கருவிகளோடு கூடுவதற்கு முன் உயிர் அறியாதிருந்ததென்பது பெறப்படும்.

## இம்மேற்கோளின் பொருளை விளக்குவதாகிய நூலாசிரியர் பொழிப்புரை

***அவனறிந்தாங் கறிவனென்றறிவிக்க வறிந்து உபதேசியாய் நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவா மென்றது.***

அறிந்தவாறே அறிவதாகிய பிரமப்பொருள் அஞ்ஞானத்தொடு கூடிய காலத்தில் கலை முதலிய தத்துவங்களோடு கூடியன்றி அறியாது. அது தத்துவங்களோடு கூடி அறிதலினால், பிரமத்தின் வேறாய் உயிருண்டென்பது பொருந்தாதென்னுங் கூற்றை மறுக்கு முகமாக 'அவ்வளவில் அவன் மகிழுக' என்றும் நியாயத்தால் உணர்த்த உணர்தலின் என்றதன் தாற்பரியத்தை உணர்த்துகிறது இந்தப் பொழிப்புரை.

**இ-ள்:** கருவிகளோடு கூடிய போதும் விடயங்களை அறிவதன்றித் தன்னியல்பை உணர முடியாத ஆன்மாவைப் போலன்றி, அம்முதல்வன் மறந்து மறந்து அறிதலின்றி அறிந்தவாறே அறிந்து நிற்கும் பேரறிவுடையவனென வேதாகமங்களால் அறிவிக்க அறிந்து, குருவின் உப தேசத்தைப் பெறுவதாய் நிற்பதொரு பொருள் உண்டு. அதுவே இரண்டாஞ் சூத்திரத்தில் ஆகமப் பிரமாணங்கொண்டு அவையே எனச் சுட்டப்பட்ட ஆன்மாவாகும். அதனால் உணர்த்த உணர்தலின் ஆன்மாவுளதென மேற்கோளிற் கூறப்பட்டது.

அறிந்தாங்கு என்பதற்கு, அறிந்தவாறே எனப் பொருள் கூறப்பட்டது. இவ்வாறு பொருள் கூறுதல் பொருந்துமென்பதைத் திருக்குறளில் 'எண்ணிய எண்ணியாங் கெய்துப' என்பதற்குக் கூறப்பட்ட உரையால் அறிக.

## பிரமத்தின் வேறாய் ஆன்மா உண்டென்பதற்குக் காட்டும் உதாரணம்

***அறிந்து மறிவதே யாயு மறியா***
***தறிந்ததையும் விட்டங் கடங்கி - யறிந்த***
***தெதுவறிவு மன்றாகு மெய்கண்டா னொன்றி***
***னதுவதுதா னென்னு மகம்.***

பிரமம் கருவிகளோடு கூடிய வழியும் அஞ்ஞானம் நீங்காமையால் விடயங்களை மாத்திரம் அறிவதன்றித் தன்னியல்பை அறியமாட்டாது. பின்பு குருவின் உபதேசத்தாற் றன்னியல்பை யறியுமாதலால், தன்னை யறியாமையால் வருங் குற்றமென்ன



வென்னும் வினாவுக்கு விடைகூறுமுகமாக, மேற்கூறிய 'அவ்வளவில் அவன் மகிழுக' என்னும் நியாயத்தால் உடன்பட்டு, உணர்த்த உணர்தல் என்றதற்கு, இன்னுமொரு தாற்பரியங் கூறுமுகத்தால், விடயங்களை அறியுங் காலத்தில் உண்டாகும் வேறுபாடுகளைக் கூறிப் பிரமத்தின் வேறாய் ஆன்மா உண்டென வலியுறுத்துகிறது இவ்வுதாரணம்.

இவ்வாறன்றி முதல்வன் அறிந்தவாறே அறியும் முறையையும் உயிர் மறந்து மறந்தறியும் முறையினையுந் தெளிவாகக் கூறிப் பிரமத்தின் வேறாய் உயிருண்டென்பதை இவ்வுதாரணம் வலியுறுத்து கிறதெனக் கூறினும் பொருந்தும்.

**கொண்டு கூட்டு :** அறிந்தும் அறிவது ஆயும் அறியாது அறிந்ததை யும் விட்டு அங்கு அடங்கி அறிந்தது எது. அறிவும் அன்று மெய்கண்டான் ஒன்றின் அது அதுதான் என்னும் அகம் ஆகும்.

**இ-ள் :** அறிந்தும் அறிவது ஆயும் அறியாது - (கருவிகள் எல்லாவற் றோடுங் கூடிச்சாக்கிரத் தானத்தில் நின்று விடயங்களை அறியும் போதும் ஒருங்கே அறியமாட்டாது) ஒரு விடயத்தை அறிந்தும் அதை அறியும் போது இன்னொரு விடயத்தையறியச் செல்வதாயும் முன்னறிந்ததைப் பின்னர் அறியாதும், அறிந்ததையும் விட்டு அங்கு அடங்கி - இவ்வாறு ஒவ்வொன்றாக அறிந்த விடயங்களையுந் தொடர்ச்சியாக அறியமாட்டாது விட்டு விட்டுச் சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம் என்னும் அவத்தைகளைப் பொருந்தி ஒரு அவத்தையில் அறிந்ததை வேறொரு அவத்தையில் அறியாதடங்கி, அறிந்தது எது- (இவ்வாறு அடங்கியும் மீளவறிந்தும் வருதல் வெளிப்படையாதலால்) அங்ஙனம் அறிந்து வந்த பொருள் யாது, (அது சடமன்றென முன்னர்க் கூறப்பட்டது, இன்னும் கூறப் படும்) அறிவும் அன்று - அப்பொருள் அனைத்தையும் ஒன்றாகவும் இயல்பாகவும் அறியும் பிரமமும் அன்று, மெய்கண்டான் ஒன்றின் - இனி மெய்யாகிய சித்தாந்த நெறியினை உணர்ந்தோன் அப்பொருள் எதுவாயிருக்குமோவென மனத்தை ஒருமுகப்படுத்தி ஆராய் வானாயின், அது அது தான் என்னும் அகம் ஆகும் - பொருள்களைக் காட்டுகின்ற சூரிய ஒளிக்கு வேறான கண்ணொளி போலப் பிரமப் பொருளுக்கு வேறாய்ச் சார்ந்ததன் வண்ணமாய் நின்றறியும் இயல்பினையுடைய உயிரேயாகும் எ-று.

அறிந்தும் அறிவதேயாயும் என்ற இடங்களிலுள்ள உம்மைகள் எண்ணும்மைகள். அறியாது என்றது உம்மைத்தொகை. அதைவிரித்து

அறியாதும் என்க. அறிந்ததையும் என்றதிலுள்ள உம்மை அறியும் முறையின் இழிவைக் குறித்தலால் இழிவு சிறப்பு. அறிவும் அன்று என்றதிலுள்ள உம்மை சடமுமன்று என்பதைத் தழுவி நிற்றலால் எதிரது தழுவியது. அறிவதே என்றதிலுள்ள ஏகாரம் அசை.

விட்டங்கடங்கி என்றதிலுள்ள அங்கு என்பது சாக்கிரத்தில் உணர்த்துமுறைத் தானமாகிய இலாடத்தைக் குறிக்கிறது. இலாடம் நெற்றி நடு. இதில் ஐந்தவத்தை என்றது சாக்கிரத்தில் நிகழும் ஐந்தவத்தைகளை.

அறிந்ததையும் விட்டங்கடங்கி யறியும் முறை நான்காஞ் சூத்திரத்திலும் அது அது தானெனச் சார்ந்ததன் வண்ணமாய் நிற்கும் முறை உண்மையதிகாரத்திலுங் கூறப்படும்.

அறிந்தும் அறிவதேயாயும் அறியா தறிந்ததையும் விட்டங்கடங்கி அறிந்ததெது என்பதற்கு ஓதியதனை ஓதிய பொழுதே உணர்ந்தும் பலகாலோதி உணர்வதாயும் பலகாலோதி உணராதும் அறிந்ததை மறந்தும் இவ்வாறுஓதியுணர்ந்த தியாதென்று பொருள் கூறுவதுமுண்டு. இவ்வாறு பொருள் கொள்ளின் அடங்கி என்றதை அடங்கியும் எனக் கொள்க.

இவ்வாறு, உணர்த்த உணர்தலின் என்றதற்கு.

(i) கலை முதலிய தத்துவங்களால் அறிவிக்க அறிதல்.

(ii) பிரமத்தை வேதாகமங்களாலும் குருவின் உபதேசத்தாலும் அறிதல்.

(iii) சாக்கிரத்தில் ஒவ்வொன்றாகவும் விட்டு விட்டும் அறிதல் என மூன்று விதமாகப் பொருள் கொள்க.

கருவிகளால் அறியும் என்றதனால் துரியாதீத நிலையில் அறிவு நிகழாமை பற்றியும் பிரமத்தை அறிவிக்க அறிதல் என்றதனால் பிரமத்தை அடைய முயலும் சுத்தாவத்தையில் அறிவு நிகழும் முறை பற்றியும் சாக்கிரத்திலும் விட்டு விட்டு அறியும் என்றதனால் உணர்த்து முறைமையிலும் ஒவ்வொன்றாக உணர்த்த அறிவு நிகழும் முறைபற்றியுங் கூறி, இத்தன்மைகளில்லாத பிரமத்தின் வேறாய் ஆன்மா உண்டென்பதை வலியுறுத்தியவாறு காண்க. இதில் பிரமம் ஆன்மாவன்று என்றதனால் தற்பரமுமல்லை என்பதை வலியுறுத்தியவாறு காண்க.



இவ்வதிகரணம் விஞ்ஞானமே ஆன்மாவென்னும் புத்தரின்யோகசாரன் மதத்தை மறுப்பதற்காகக் கூறப்பட்டதெனக் கொண்டு அதற்கேற்பப் பொருள் கூறுவாருமுண்டு.

# ஏழாம் அதிகரணம்

### சமுதாயத்தின் வேறாய் உயிருண்டெனக் கூறும் மேற்கோள்

***இனி மாயாவியந்திர தனுவினுள் ஆன்மா வுளதென்றது.***

உடம்பு இந்திரியம் சூக்கும தேகம் பிராணவாயு என்பவற்றுள் தனித்தனி ஒவ்வொன்றும் ஆன்மாவாத லில்லை யென்றது பொருந்தும். அவற்றுள் ஒன்று குறைந்தாலும் அறிவுண்டாகாமை-யாலும் எல்லாங் கூடியபோது அறிவு நிகழ்தலாலும் அனைத்துங் கூடிய சமுதாயமே உயிரென்பது பொருந்துமென்பர் ஒரு சாரார். இதில், சமுதாயம் ஆன்மாவோ அல்லவோ என்பது ஐயம். இவ்வையப் பாட்டின்கண் சமுதாயமே ஆன்மாவென்பது பிறர் கூறும் பக்கம். இவ்வாறு கூறுவோர் சமுகான்மவாதிகளாகிய சௌத்திராந்-திகர் வைபாடிகர் முதலியோர், அவர்களது கூற்றை மறுக்கு முகமாகச் சூத்திரத்தின் இறுதிக் கூற்றைப் பதச் சேதஞ் செய்து கூறப்பட்டது. இந்த மேற்கோள்.

**இ-ள் :** மாயா காரியங்களால் ஆக்கப்பட்ட சூத்திரப் பாவைபோன்ற உடம்பினுள் அந்த மாயாகாரியங்களின் வேறாய் உயிருண்டு எ-று.

உடம்பு ஐம்பொறி முதலியனவெல்லாம் மாயா காரியங்களாய்த் தோன்றி அழிவனவாதலால் அவை என்றுமுள்ள உயிராக மாட்டா வென்பது இதன் தாற்பரியம்.

மாயை ஆகுபெயர். அது மாயா காரியங்களைக் குறிக்கின்றது. மாயாயந்திரம் என்பதில் இகரத்தை விரித்து மாயாவியந்திரம் என்றார்.

### சமுதாயத்தின் வேறாய் உயிருண்டென்பதற்குக் காட்டும் ஏது

அவை தாம் வெவ்வேறு பெயர் பெற்று நிற்றலான்.

சித்தமும் சித்தப்பகுதியுமாகிய அகச் சமுதாயம் ஐந்தும் மாயாகாரியமென்பதை எம்போன்றோர் ஒப்புக் கொள்வதில்லை. அதனால், சமுதாயத்தின் வேறாய் ஆன்மா உண்டெனக் கூறுதல் பொருந்தாதெனச் சௌத்திராந்திகர் முதலியோர் கூறுங் கூற்றை மறுக்குமுகமாக 'அவ்வளவில் அவன் மகிழுக' என்னும் நியாயத்தால், சமுதாயம் மாயா காரியங்களாய்த் தோன்றி யழிதலால் அவற்றின்

வேறாய் ஆன்மா வுண்டென முன்னர்க் கூறியதை விட்டு, வேறொரு விதமாகச் சமுதாயத்தின் வேறாய் ஆன்மாவுண்டெனச் சாதிக்கிறது இவ்வேது.

**இ-ள் :** சித்தமும் சித்தப் பகுதியுமாகிய ஐந்து கந்தங்களும் மாயாகாரியங்களேயாகும். அவை ஆன்மாவென்னும் பெயரைப் பெறாது வேறு வேறு பெயர் பெற்று நிற்கின்றன. ஆதலால் அவை ஆன்மாவல்ல. அதனால் மாயாவியந்திர தனுவினுள் ஆன்மா வுளதென்று மேற்கோளிற் கூறப்பட்டது. எ-று.

ஐந்து கந்தங்கள்: உருவம் வேதனை ஞானம் குறி வாதனை.

**சமுதாயம் ஆன்மாவல்ல என்பதற்குக் காட்டும் உதாரணம்.**

***கலையாதி மண்ணந்தங் காணிலவை மாயை***
***நிலையாவாந் தீபமே போல - வலையாமன்***
***ஞானத்தை முன்னுணர்ந்து நாடி லதுதனுவாந்***
***தானத்தின் வேறாகுந் தான்.***

சமுதாய மாகிய பஞ்ச கந்தங்கள் ஒவ்வொன்றும் வெவ்வேறு பெயர் பெறினும் அவையனைத்துங் கூடிய சமுதாயத்தின்கண் ஆன்மா வெனப் பெயர் பெறுமெனக் கொள்வோம். ஆதலால், அவை வெவ்வேறு பெயர் பெறுதலாற் குற்றமில்லையென்னுங் கூற்றை மறுக்குமுகமாக, அவை வெவ்வேறு பெயர் பெறுமிடத்தும் அவர்கள் கூறுவது போல உருவம் முதலிய பெயர்களைப் பெறாது வேறு பெயர் பெறுமென்பதையும் அவை மாயா காரியங்களே என்பதையும் அவையெல்லாங் கூடிய சமுதாயத்திலும் ஆன்மாவெனப் பெயர் பெறாது வேறு பெயர் பெறுமென்பதையும் உணர்த்திச் சமுதாயத்தின் வேறாய் ஆன்மா வுண்டென்பதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** காணில் கலை ஆதி மண் அந்தம் (ஆம்) அவை மாயை நிலையாவாம் ஞானத்தை அலையாமல் முன் உணர்ந்து நாடில் அது தீபமே போலத் தனுவாம் தான் அத்தின் வேறு ஆகும்.

**இ-ள் :** காணில் கலை ஆதி மண் அந்தம் ஆம் - முன்னர்க் கூறியவாறு சமுதாயமாதற்குரியவை எவையென்று அளவைகளால் ஆராயு மிடத்து அவை கலை முதல் நிலமீறாகிய தத்துவங்களேயாம், அவை மாயை நிலையாவாம் - அவையனைத்தும் மாயையின் காரியங்களா மாதலால் நிலைபெறாது சில காலம் நின்று அழிவனவாகும், ஞானத்தை அலையாமல் முன் உணர்ந்து நாடில் - அவை யாவும்



கூடிய சமுதாயத்தில் விளங்கித் தோன்றும் ஞானத்தின் இயல்பை மனத்தை அசையாமல் ஒரு நிலைப்படுத்தி முன் உணர்ந்து பின் அச்சமுதாயம் யாதென்று ஆராயின், அது தீபமே போலத் தனுவாம் - அச்சமுதாயம் கண் காண்பதற்கு விளக்குக் கருவியாதல் போல உயிருக்குத் தூல சூக்கும காரண சரீரங்களாகிய கருவிகளாம், தான் அத்தின் வேறு ஆகும். ஆதலால் கண் விளக்கின் வேறானாற்போல உயிர் உடம்பின் வேறாகும் எ-று.

நிலையாவாம் என்றதிலுள்ள 'ஆம்' என்பதை அந்தம் என்பதனோடுங் கூட்டி அந்தமாம் எனக் கொள்க.

மாயை என்றது மாயா காரியங்களைக் குறித்தலால் ஆகுபெயர்.

இறுதிவரியின் முதலிலுள்ள 'தான்' எழுவாய். இறுதியிலுள்ள 'தான்' அசை.

அதனின் என்பது அத்தின் என மருவி நின்றது.

சமுதாயம் ஆன்மாவல்ல என்றதனால் முதலதிகரணத்து வெண்பாவிற் கூறப்பட்ட 'தனி' என்பதை இவ்வதிகரணம் வலியுறுத்துகின்றது.

மூன்றாம் சூத்திரம் முற்றிற்று

பிரமாணவியல் முற்றிற்று.

★★★

# இலக்கணவியல்

## நான்காஞ் சூத்திரம்

### பசு இலக்கணம்

மூன்றாஞ் சூத்திரத்தால் உண்டென்று சாதிக்கப்பட்ட உயிருக்கு இலக்கணம் இந்நான்காஞ் சூத்திரத்தாற் கூறுகின்றார்.

***அந்தக் கரண மவற்றினொன் றன்றவை***
***சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா***
***தமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே.*** என்பது சூத்திரம்.

**கருத்துரை**

**இதுவுமது**

இது சூத்திரக் கருத்திதுவென்று கூறுகின்றது.

**இ-ள் :** அனுமானப் பிரமாணமும் இலக்கணமும் கண்ணாற் காணப்படாத பொருளுண்டென நிச்சயிப்பதற்குச் சாதனமாகும். இம்முறைபற்றி முதல் மூன்று சூத்திரங்களாலும் அனுமானப் பிரமாணங் கொண்டு, உண்டெனச் சாதிக்கப்பட்ட பதி பாசம் பசுக்களுக்கு எதிர்நிரனிறையாக வைத்து - இறுதியிற் கூறப்பட்டதை முதலாவதாகக் கொண்டு - இலக்கணங் கூறத்தொடங்கி, அவற்றுள் மூன்றாஞ் சூத்திரத்தால் உண்டெனச் சாதிக்கப்பட்ட ஆன்மாவின் இலக்கணத்தைக் கூறுதல் இச்சூத்திரத்தின் கருத்து.

விரிவாகக் கூறுவதைத் தவிர்க்கும் பொருட்டும் மூன்றாஞ் சூத்திரம் பிரமாணவியலாகவும் இச்சூத்திரம் இலக்கணவியலாகவும் இருப்பினும் இவையிரண்டும் ஆன்மா உண்டென்பதையே சாதிக்கின்றனவென்பதை உணர்ந்து கொள்ளும் பொருட்டும் இச்சூத்திரக் கருத்துரையில் இதுவுமது வென மூன்றாஞ் சூத்திரத்-தோடு மாட்டெறிந்துரைத்தார். இவ்வாறு கருத்துரை செய்வதற்



கேற்றவாறு மூன்றாஞ் சூத்திரக் கருத்துரையில் 'ஆன்மாவினதுண்மை யுணர்த்துத னுதலிற்று' என்று கூறாது ஆன்மப் பிரகாச முணர்ந்துத னுதலிற்று என்று கூறினார்.

இவ்வாறன்றி மூன்றாஞ் சூத்திரத்தில் ஆன்மா உண்டெனக் கூறுமுகமாக, முதல் மூன்று அதிகரணங்களாலும் சாக்கிரத்தையும் நான்காம் அதிகரணத்தாற் சொப்பனத்தையும் ஐந்தாம் அதிகரணத்தாற் சுழுத்தி துரியம் துரியா தீதங்களையுந் தொகுத்துக் கூறிய ஆசிரியர், அவத்தை இலக்கணங் கூறுமுகமாக இச்சூத்திரத்தில் அவற்றை விரித்துக் கூறுகின்றாராதலால் இதுவுமதுவென்று மூன்றாஞ் சூத்திரப் பொருளோடு மாட்டெறிந்துரைத்தா ரென்று கூறினும் பொருந்தும். இதனால் சூத்திரங்களுக்கிடையேயுள்ள தொடர்பு பெறப்படும். மாட்டெறிதல் இரண்டு விடயங்களை ஒன்றோடொன்று தொடர்புபடுத்துவதோர் முறை.

**இச்சூத்திரத்தின் பிண்டப் பொழிப்பு :** ஆன்மா, மனம் புத்தி அகங்காரம் சித்தம் எனப்படும் அந்தக் காரணங்களில் ஒன்றன்று. ஒன்றன்றாயினும் நுண்ணறிவின்மையால் சூழ்ச்சித் துணைவராகிய அமைச்சரோடு கூடிச் சிந்தித்து அரசியல் செய்யும் அரசன்போல, ஆணவமல சம்பந்தத்தால் அறிவின்றிக் கிடக்கும் ஆன்மாவுக்குச் சட்டடை போன்ற கலை முதலிய தத்துவங்களாற் பொதுவகையால் உணர்வு நிகழினும் சிறப்பு வகையால் அறிவு நிகழாமையால், அது நிகழும் பொருட்டு அவ்வந்தக் கரணங்களோடு கூடி நின்று சாக்கிரம் முதலிய ஐந்தவத்தைப் படும் எ-று.

எனவே அந்தக்கரணங்களோடு கூடி நின்று அவத்தைப்படுதல் ஆன்மாவுக்கு இலக்கணமெனக் கூறியவாறாயிற்று. இது உயிருக்குத் தடத்தலக்கண மெனப்படும் பொதுவியல்பு.

இச்சூத்திரம், ஆன்மா அந்தக் காரணங்களில் ஒன்றன்று. ஆயினும் சகசமலத்துணராது அமைச்சரசேய்ப்ப அவற்றோடு சந்தித்து நின்று அஞ்சவத்தைத்தாமென இயையும்.

உணராது..... சந்தித்தது என்பது காரண காரியப் பொருட்டாய் நின்றது. இதில் உணராமை காரணம். சந்தித்தது காரியம். ஆணவ மலத்தோடு கூடி உணராமையால், ஆன்மா அந்தக் கரணங்களோடு சந்தித்தது என்பது கருத்து.

இவ்வாறன்றி, ஆன்மா அந்தக் கரணங்களில் ஒன்றன்றாயினும் சகசமலத்துணராமையால் அவற்றோடு சந்தித்ததென ஒரு வினைமுடி

பாயும், சந்தித்தவழி அந்தக் கரணங்களுந் தானும் அமைச்சரும் அரசரும்போல நிற்றலான் அஞ்சவத்தைப் பட்டதென இன்னொரு வினைமுடிபாயும், கொள்வது முண்டு. இவ்வாறு இரண்டு வினைமுடிபு கொண்டு, சந்தித்தது என்பதை இரண்டாம் அதிகரண மாகவும் அஞ்சவத்தைத்தே என்பதை மூன்றாம் அதிகரணமாகவும் வகுத்தவாறு காண்க.

ஆயினும் என்னுஞ் சொல் இந்தச் சூத்திரத்தில் இல்லையானா லும் அது வடமொழிச் சிவஞான போதச் சூத்திரத்தில் இருப்பதால், அதை வருவித்து, 'அந்தக் கரணம் அவற்றின் ஒன்றன்றாயினும்' எனக் கொண்டு சிவஞான முனிவர் உரை செய்தார். அந்தக் கரண மவற்றின் ஒன்றன்றாயினும் என்றதனால், ஆன்மா அந்தக் கரணங்களில் ஒன்றன்று, அவற்றின் வேறானதென்பது பெறப்பட்டது.

'அவை சந்தித்தது' என்ற இடத்தில் ஒடு உருபு தொக்கு நின்றது. அதை விரித்து அவற்றொடு சந்தித்தது எனக் கொள்க. இவ்வாறன்றி ஐ உருபை விரித்து அவற்றைச் சந்தித்தது எனக் கொள்ளினும் பொருந்தும்.

ஆன்மா என்னும் சொல்லுக்கு, வியாபகம் என்பதும் சித்தசித் என்பதும் பொருள். சித்தசித் என்பதற்குச் சித்தொடு கூடிற் சித்தாயும் அசித்தொடு கூடில் அசித்தாயும் நிற்கும் உரிமையுடைய தென்பது கருத்து.

சகச மலத்துணராது என்ற இடத்தில், ஆல் உருபை விரித்து சகச மலத்தினால் உணராது எனப் பொருள் கொள்க.

அமைச்சரசு என்ற இடத்தில் ஒடு உருபும், கூடி என்னும் பொருளும் தொக்கு நின்றன. அவற்றை விரித்து அமைச்சரொடு கூடிய அரசெனப் பொருள் கொள்க.

அமைச்சரசேய்ப்ப் நின்று என்றதிலுள்ள நின்றென்பது நிற்றலால் எனக் காரணப் பொருளைத் தந்து, அஞ்சவத்தைத்தே என்பதோடு முடிந்தது.

இச்சூத்திரத்தில், அந்தக் கரண மவற்றி னொன்றன்று என்பது ஒரதிகரணம், ஒன்றன்றாயினும் சகச மலத்துணராது அமைச்சர சேய்ப்ப அவை சந்தித்தது என்பதோ ரதிகரணம்; அமைச்சரசேய்ப்ப நின்று அஞ்சவத்தைத்தே என்பதோரதிகரணம். எல்லாமாக இச்சூத்திரத்தில் மூன்று அதிகரணங்களுண்டு.



# முதலதிகரணம்

## அந்தக் கரணம் ஆன்மா அன்றெனக்கூறும் மேற்கோள்.

***ஈண்டு இவ்வான்மாவாவது அந்தக் கரணங்களாயுள்ள மனோ புத்தியகங்கார சித்தங்களில் ஒன்றன்று என்றது.***

இந்திரியம் முதலியனவெல்லாம் வெவ்வேறு பெயர்பெற்று நிற்பனவாதலால் அவை உயிராகா. ஆயினும் 'சிந்தையைச் சீவனென்றும் சீவனைச் சிந்தையென்றும்' சிவஞான சித்தியார் கூறுகின்றமையாலும் மனம் முதலிய அந்தக் கரணங்கள் உயிரென் னும் பெயரால் வழங்கப்படுதலாலும் இந்திரியம் முதலியவற்றை உயிரென்று கூறாமையாலும் அந்தக் கரணங்களை உயிரென்று கூறியது ஆகுபெயராகுமெனக் கூறுதற் கேலாமையாலும் அந்தக் கரணங்களே தனித்தனி ஆன்மாவாகு மென்பது பொருந்து மென்பர் ஒரு சாரார். இதில் அந்தக் கரணங்கள் ஆன்மாவோ அன்றோ என்பது ஐயம். இவ்வையப்பாட்டின்கண் அந்தக் கரணமே ஆன்மாவாகு மென்பது பிறர் கூறும் பக்கம். இவ்வாறு கூறுவோர் அந்தக்கரணான்ம வாதிகள் அவர்களது கூற்றை மறுக்குமுகமாகச் சூத்திரத்தின் முதலாங் கூற்றைப் பதச்சேதஞ் செய்து, அந்தக் கரணங்கள் ஆன்மாவன்றென வலியுறுத்துகின்றது இந்த மேற்கோள்.

**இ-ள் :** இவ்வதிகரணம் இவ்வான்மாவாவது அந்தக் கரணங்களா யுள்ள மனம் புத்தி அகங்காரம் சித்தம் என்பவற்றில் ஒன்றன்று, அவற்றின் வேறாகும் என்று கூறுகின்றது.

இவ்விடத்தில் அந்தக் கரணமென்றது உள்ளந்தக்கரணங் களாகிய, கலை வித்தை அராகம் புருடன் முதலியவற்றைக் குறிக்காதிருத்தற் பொருட்டு, மனம் புத்தி அகங்காரம் சித்தமெனத் தெரிந்தெடுத்துக் கூறினார். கலை முதலிய தத்துவங்கள் உண்டெனக் கொள்வோரில் உயிர் அவற்றின் வேறெனக் கொள்ளாதார் எவருமில்லையாதலால் இவ்விடத்தில் உள் அந்தக் கரணங்களைப் பற்றிக் கூறவேண்டிய தேவை ஏற்படவில்லை. அமைச்சரோடு உவமிக்கப்பட்டு அவத்தைக் கேதுவாயிருப்பன மனம் முதலிய அந்தக் கரணங்களே, சட்டையோடு உவமிக்கப்பட்டுத் துரியாதீத அவத்தையிலும் ஆன்மாவை விட்டு நீங்காது உடன் நிற்பன கலை முதலிய தத்துவங்களாதலால் அவற்றைப் பற்றி இவ்விடத்திற் கூறவேண்டியதில்லை. அதனால் மனம் முதலிய புறவந்தக் கரணங்களைப் பற்றியே இவ்விடத்திற் கூறப்படுகின்ற தென்பது கருத்து.

**அந்தக்கரணங்கள் ஆன்மாவல்ல வென்பதற்குக் காட்டும் ஏது**

**அவை தாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்.**

"மனமும் புத்தி யகங்காரஞ் சித்த நான்கும் - மருவி யான் மாவேயென்னவரும்" எனச் சைவ சித்தாந்திகளாகிய நீங்களுங் கொள்ளுதலால், உயிர் அவ்வந்தக் கரணங்களிலொன்றாகு மெனக் கொள்ளுதலால் வரும் குற்றமென்ன என்னும் வினாவுக்கு விடை கூறுமுகமாக மேற்கோளிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வேது.

**இ-ள் :** அந்தக்கரணங்களை இந்திரியங்களோ டொப்பிட்டு நோக்கும்போது, இந்திரியங்கள் அந்தக் கரணங்களின் துணைகொண்டு அறிதலால் அந்தக்கரணங்கள் சித்தாயும், அவ்வந்தக்கரணங்கள் தம்மைத்தாம் அறியாமையால் அசித்தாயும் நிற்றலால், தன்னை நோக்கியும் சித்தாய் நிற்கும் ஆன்மாவானது அந்தக் கரணங்களாயுள்ள மனம் புத்தி அகங்காரம் சித்தங்களில் ஒன்றன்றென மேற்கோளிற் கூறப்பட்டது. எ-று.

ஒரு விடயத்தை அறியும்போது ஆன்மா அந்தக்கரணங்களைச் செலுத்த அந்தக்கரணங்கள் இந்திரியங்களின் வழியாக அவ்விட-யத்தை அறியும். எனவே உயிரால் அதிட்டிக்கப்பட்டு ஐம்பொறிகள் அறிந்த விடயங்களுள் ஒன்றை, இஃது யாதாயிருக்குமோவெனச் சித்தம் சிந்தித்தறியும், ஆயினும் யான் சிந்தித்தேனென்று அறிய மாட்டாது. மனம், அப்பொருளை இது இதுவாயிருக்கலாமெனவும் அதுவோ அல்லவோவெனவும் சங்கற்ப விகற்பஞ் செய்தறியும், தான் சங்கற்ப விகற்பஞ் செய்தேனென்று அறியமாட்டாது. அகங்காரம், அப்பொருள் என்னவென்பதை நிச்சயிப்பேனென்று அகங்கரித்து நின்றறியும், நான் அகங்கரித்தேனென்று அறியமாட்டாது. புத்தி அப்பொருளை இதுதான் இப்பொருளென நிச்சயித்தறியும்; நான் நிச்சயித்தேனென்று அறியமாட்டாது.

அவ்வந்தக்கரணங்களைப் போலன்றி அவற்றோடு கூடி, யான் சிந்தித்தேன்; யான் சங்கற்ப விகற்பஞ் செய்தேன், யான் அகங்கரித் தேன்; யான் நிச்சயித்தே னென்றறிவது ஆன்மாவேயாகும். ஆதலால் ஆன்மாவிடயங்களை யறிவதற்கு இந்திரியங்கள் வாயிலாகவும் அந்தக் கரணங்கள் கருவியாகவுமிருக்குமென்பது பெறப்படும்.

விடயங்களை நிச்சயித்தறிந்தபின் நிச்சயித்த புத்தி சாந்தரூபமான சாத்வீக குணத்தோடு கூடியிருப்பின் அறிந்த பொருள் ஆன்மாவுக்குச் சுகரூபமாகத் தோன்றும், பிரவிருத்தி ரூபமான இராசதகுணத்தோடு கூடியிருப்பின் அறிந்த பொருள் ஆன்மாவுக்குத் துக்க ரூபமாகத்



தோன்றும்; மோக ரூபமாகிய தாமத குணத்தோடு கூடியிருப்பின் அறிந்த பொருள் ஆன்மாவுக்கு மோக ரூபமாய்த் தோன்றும். இவ்வாறு குணத்துக்கேற்ப மாறுபட்டுத் தோன்றும் விடயங்களை, ஆன்மா கலை முதலிய உள்ளந்தக் கரணங்களோடு கூடி நின்று இது சுகம், இது துக்கம், இது மோகமென்றறிந்தும் யான் சுகத்தை அனுபவித்தேன், யான் துக்கப்பட்டேன், யான் மோகித்தேன், என்றறிந்தும் வரும்.

மேற்கூறியவாறு கருவிகளைச் செலுத்தும் ஆன்மா அக்கருவி களோடு ஒப்பிடும் போது சித்தாயும், யான் அறிந்தேனென்று அறிவத னால் தன்னை நோக்கிச் சித்தாயும் நிற்கும். இங்ஙனம் கருவிகளோடு ஒப்பிட்டு நோக்கும்போதும் தன்னை நோக்கும் போதும் சித்தாய் நிற்கும் ஆன்மா, சித்தாகாத அந்தக்கரணங்களிலொன்றாத லெவ்வாறென அந்தப் கரணான்ம வாதிகளை மறுக்கிறது இவ்வேது. இக்கருத்துப் பற்றியே, புத்தியும் அறியும் உயிரும் அறியுமென்பதால் அவையிரண்டும் சித்துப் பொருளெனக் கூறப்படினும், புத்தி உயிராகா தென்பதை, "சிவன்றானும் புத்தியுஞ்சித் திவனாமோ புத்தி" என வழிநூலாசிரியர் சித்தியாரிற் கூறினார்.

இவ்வேதுவிற் பிரகாசம் என்பது சித்தென்னும் பொருளையும் அப்பிரகாசமென்பது அசித்தென்னும் பொருளையுந் தருகின்றன.

மற்றையோரைப் போலன்றி, அரசரோடு நெருக்கமான தொடர்பு வைத்திருக்குங் காரணத்தால் அமைச்சரையும் அரசனென்று உபசரித்துக் கூறுவது போல, புறக் கருவிகளோடு ஒப்பிடும் போது, ஆன்மாவுக்கு நெருக்கமாயிருக்குஞ் சிறப்புப் பற்றி, "மனம் புத்தி யகங்காரம் சித்த நான்கும் மருவியான்மாவே யெனவரும்" என்று உபசாரமாகக் கூறப்பட்டதே தவிர அவை ஆன்மாவாதலில்லை. அரசனுக்கு மந்திரிபோல, ஆன்மாவுக்கு அந்தக் கரணங்கள் ஆலோசனைத் துணையாக நிற்குமெனவே மற்றைய கருவிகள் பரிசனங்களை யொக்கு மென்பது பெறப்படும். இதுபற்றி ஞானாமிர்தம் என்னும் நூலிற் கூறப்பட்டிருகிறது.

அந்தக் கரணங்கள் மந்திரியெனவும் ஞானேந்திரியங்கள் ஐந்தும் வாயில் காப்பவர், ஒற்றர், தூதர் , அத்தானிகர் புரோகிதராகு மெனவும், கன்மேந்திரியங்கள் ஐந்தும் யானைப் படை, குதிரைப்படை, தேர்ப்படை, காலாட்படை முதலிய படைகளும் சேனாதிபதியுமெனவும், சத்தாதி வசனாதி விடயங்கள் பத்தும் ஏவலாட்களெனவும், வாயுக்கள் உறுதிமொழி கூறுஞ் சுற்றமெனவும் ஞானாமிர்தம் கூறும்.

**சத்தாதி :** சத்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தம்

**வசனாதி :**வசனம் கமனம் தானம் விசர்க்கம் ஆனந்தம்

மூன்றாஞ் சூத்திரத்திற் கூறப்பட்ட ஏதுக்களே இவ்வதிகரணத் துக்கும் அமையுமாயினும் இந்திரியம் முதலியவற்றைவிட அந்தக்கரணங்கள் சிறப்புடையனவாதலால், பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலால் என வேறேதுக் கூறினார்.

### அந்தக் கரணங்கள் ஆன்மாவல்ல என்பதற்குக் காட்டும் உதாரணம்

***மனமாதி யாலுணர்தன் மன்னு புலன்கள்***
***மனமாதி மன்புலனி னல்லன் - மனமே***
***லுதித்தொன்றை யுள்ள முணர்த வதனி***
***னுதிக்குங் கடற்றிரையே யொத்து.***

அந்தக் கரணங்கள் தம்மிற் கீழுள்ளவற்றோடு ஒப்பிட்டு நோக்கும் போது சித்தாயும் தம்மின் மேலுள்ளவற்றோடு ஒப்பிட்டு நோக்கும்போதும் தம்மை நோக்கும் போதும் அசித்தாயும் நிற்குமென்பதைத் தெளிவாகக் கூறி, ஏதுவிற் கூறியதை வலியுறுத்துகிறது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** மனம் ஆதியால் உணர்தல் மன்னு புலன்கள் உள்ளம் உணர்தல் மனம் மேல் உதித்த ஒன்றை கடற்றிரையே ஒத்து உதிக்கும் அதனின் மனம் ஆதி புலனின் அல்லன்.

**இ-ள் :** மனம் ஆதியால் உணர்தல் மன்னு புலன்கள் - மனம் முதலிய அந்தக் கரணங்களால் உணரப்படுவன செவி முதலிய ஐம்பொறிக ளால் அறியப்படும் சத்தம் முதலிய புறத்தே நிலைபெறும் விடயங் களாகும், உள்ளம் உணர்தல் மனம்மேல் உதித்த ஒன்றை - ஆன்மா அறிவது மனத்துக்கு மேலாகிய புத்தியிற் றோன்றிய தொன்றையாகும், கடற்றிரையே ஒத்து உதிக்கும் - இந்திரியங்கள் வழியாகவும் அந்தக் கரணங்கள் வழியாகவும் வரும் இருவேறு அறிவும் கடலிற் றோன்றிக் கரைசேரும் திரைபோல ஒன்றன்பின் ஒன்றாகப் பரம்பரையின் ஆன்மாவிடத்து வந்து சேரும், அதனின் மனம் ஆதி புலனின் அல்லன் - அதனாலே, மனம் முதலியன ஐம்பொறிகளால் அறியப்பட்ட விடயங்களின் வேறாயினாற் போல, ஆன்மாவும் அம் மனம் முதலியவற்றின் வேறாம் எ-று.

இதில் உதிக்கும் என்பது பயனிலை, மனமாதியால் உணர்தல் உள்ளம் உணர்தல் ஆகிய இரண்டும் எழுவாய்.



இரண்டாம் வரியிலுள்ள மன்புலன் என்றதில், மன் என்பது அசை.

புலனின் என்றதில், இன் உவம உருபு. அதனால் அதை விரித்து, விடயங்களின் வேறாயினாற் போலவென உரைசெய்யப்பட்டது.

புலனின் அல்லன் என்றதில் அல்லன் என்பதற்கு எழுவாய் ஆன்மா. வடமொழியில் ஆன்மாவை உயர்திணை ஆண்பாலாகக் கொள்வர்.அவ்வழக்குப் பற்றி இவ்விடத்தில் 'புலனின் அல்லன்' என ஆண்பாலைக் குறிக்கும் அன்விகுதியைப் புணர்த்திக் கூறினார். தமிழ் வழக்கின்படி 'ஆன்மா புலனின் அன்று' என்று கூற வேண்டும்.

உதித்தொன்றை என்றதில் பெயரெச்சத்தைக் குறிக்கும் அகரம் தொக்குநின்றது. அதைவிரித்து, உதித்த ஒன்றை எனக் கொள்க.

ஆன்மா அறிவது... புத்தியிற் றோன்றியதொன்றை என்ற இடத்தில், புத்தியிற் றோன்றியது, சுக துக்க மோகமாய்க் காணப்படும் விடயங்களாகும்.

பரம்பரையின் வருதலாவது முதலில் இந்திரியங்கள் வாயிலாகப் பிண்டமாய்க் காணும் அறிவு தோன்றி, அதன்பின் மனத்தாற் காணும் பகுத்தறிவு தோன்றி, அதன் பின் சுகதுக்க மோகமாய்க் காணுந் தன்வேதனைக் காட்சி ஆன்மாவின் கண் வந்து தோன்றுதல்.

இவ்வுதாரணத்தால், அந்தக்கரணம் தனக்குக் கீழுள்ள இந்திரியத்தை நோக்கிச் சித்தாயும் தனக்கு மேலுள்ள கலை முதலியவற்றையும் ஆன்மாவையும் நோக்கி அசித்தாயும் நிற்குமெனவும், அவ்வாறன்றி உயிர் இந்திரியம் அந்தக்கரணம் கலாதிகளை நோக்கியும் தன்னை நோக்கியும் சித்தாகவே நிற்குமென்பதையும் கண்டு கொள்க.

### அந்தக் கரணங்கள் ஒவ்வொன்றின் இயல்பை விளக்கிக்காட்டும் உதாரணம்

***சிந்தித்தாய்ச் சிந்தந் தெளியாதா யாங்காரம்***
***புந்தியா யாய்ந்து மனமாகிப் - பந்தித்து***
***வெவ்வேறு தானே துணிந்துள்ள மிவ்வேறா***
***மவ்வேறாம் போதுபோ லாங்கு***

இதுவரை பொதுவாகக் கூறப்பட்ட அந்தக்கரணங்களின் இயல்பைச் சிறப்பாகக் கூறுமுகமாக மானதக் காட்சியிலும் அந்தக் கரணங்களின் உணர்வு கடற்றிரை போல ஒன்றன்பின் ஒன்றாகவும் வேறுவேறு விதமாகவுந் தோன்றும் முறையை உணர்த்தி உயிர்

அந்தக்கரணங்களின் வேறாகுமென்பதை வலியுறுத்துகிறது. இவ்வுதாரணம்:

**கொண்டு கூட்டு :** உள்ளம் ஆங்கு சித்தமாய்ச் சிந்தித்து மனமாகிப் பந்தித்து ஆங்காரமாய்த் தெளியாது புந்தியாய் ஆய்ந்து வெவ்வேறே துணிந்து இவ்வேறாம் போது அவ்வேறாம் போல்.

**இ-ள் :** உள்ளம் - கலை முதலிய தத்துவங்களின் உள்ளீடாய் நிற்குங் காரணத்தால் உள்ளமென்று கூறப்படும் புருடதத்துவமாகிய உயிர், ஆங்கு - வாயிற் காட்சியாற் கண்ட விடயங்களிலொன்றை மனம் முதலியவற்றால் அறியும் மானதக் காட்சியின் கண்ணும் ஒரே விதமாகவன்றி, சித்தமாய்ச் சிந்தித்து - சித்தமாய் நின்று இப்பொருள் என்னவாயிருக்குமெனச் சிந்தித்தும், மனமாகிப் பந்தித்து - அதன்பின் மனமாய் நின்று அப்பொருள் இதுவாகுமெனவும் இதுவோ அல்லவோ எனப் பற்றியும், ஆங்காரமாய்த் தெளியாது. அதன்பின் ஆங்காரமாய் இதனை இன்னதெனத் தெளிவேன் யானென நின்று தெளிவு பிறவாமலும், புந்தி ஆய் ஆய்ந்து - அதன்பின் புந்தியாய் நின்று ஆராய்ந்தறிந்தும், வெவ்வேறே துணிந்து இவ்வேறாம்- அவ்வாறு வெவ்வேறாகவே யுணர்தலால் அவ்வாறுணரும் புருடன் இவ்வந்தக் கரணங்களின் வேறாகும், போது அவ்வேறாம் போல் - உயிர் இவ்வந்தக் கரணங்களின் வேறாதல் (சூரியன் முதலியவற்றோடு கூடிநின்று நாழிகை, நாள், பக்கம், மாதம், ஆண்டு முதலியனவாய்ப் பாகுபாடு செய்யும்) காலதத்துவம் அச்சூரியன் முதலியவற்றின் வேறாயினாற் போலாகும் எ-று.

வெவ்வேறு தானே என்றதில் 'தான்' அசை. இதிலுள்ள ஏகாரம் வெவ்வேறென உறுதிப்படுத்துவதாற் றேற்றம்.

இவ், அவ் என்பன இவற்றின் அவற்றின் எனச் சுட்டுப் பெயராய் நின்றன. அவ்வேறாம் போது போலெனக் கூறியதனால், வேறாகிய நீக்கப் பொருள் சூரியன் முதலியனவென்பது தானே பெறப்படுமென்னுங் கருத்தால் 'அவ்' எனச் சுட்டினார். வேறாம் போல் என்றதில் 'இன்' சாரியையும் ஆல் உருபும் தொக்கு நின்றன. அவற்றை விரித்து வேறாயினாற்போல் எனக் கொள்க.

இதில், ஆங்கு என்பது மானதக் காட்சியைக் குறிக்கிறது. ஆங்கு என்றதில் உம்மை தொக்கு நின்றது. அதை விரித்து ஆங்கும் (மானதக் காட்சியின் கண்ணும்) எனக் கொள்க.

ஆங்கும் வெவ்வேறு தானே துணிந்து என்றதனால் மானதக் காட்சியும் சிந்தித்து, பந்தித்து, தெளியாது, ஆய்ந்து ஒன்றுக்கொன்று



ஏதுவும் பயனுமாய்க் கடற்றிரைபோலப் பரம்பரையிற் றோன்று மென்று கூறியதாகக் கொள்க. சித்தமாய்ச் சிந்தித்தலால் மனமாகிப் பந்தித்தலும் மனமாகிப் பந்தித்தலினால் அகங்கரித்தலும் அகங்கரித்தலினால் புந்தியாய் ஆய்தலும் ஒன்றன் பின் ஒன்றாய் வேறுவேறாய்த் தோன்றுதலால் மானதக் காட்சிக்குக் கடலிற் றோன்றும் அலை உவமானமாகக் கூறப்பட்டது.

செய்யுளாதலால் அந்தக் கரணத்தைச் சித்தம் மனம் அகங்காரம் புத்தி என்ற வரிசையிற் கூறாது, சித்தம் அகங்காரம் புத்தி மனமென முறை பிறழ வைத்தார்.

## அந்தக்கரணங்களைச் செலுத்தும் அக்கரங்கள் இவையெனக்காட்டும் உதாரணம்

***அகர வுகார மகங்காரம் புத்தி***
***மகார மனஞ்சித்தம் விந்துப் - பகாதிவற்றை***
***நாத முளவடிவா நாடிற் பிரணவமாம்***
***போதங் கடற்றிரையே போன்று.***

மானதக் காட்சியில் நிகழும் சவிகற்ப உணர்விற்குக் காரணமாய் அந்தக் கரணங்களை உடனின்று செலுத்தும் அக்கரங்கள் இவையென்பதையும், அவ்வக்கரங்களால் உணர்வு மாறிமாறித் தோன்றும் முறையையும் உணர்த்துகின்றது. இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** அகாரம் அகங்காரம் உகாரம் புத்தி மகாரம் மனம் விந்து சித்தம் நாதம் உளவடிவு கடற்றிரையே போன்று போதம் ஆம் பகாது இவற்றை நாடில் பிரணவம் ஆம்.

**இ-ள் :** அகாரம் அகங்காரம் - அகரம் அகங்காரத்தையும், உகரம் புத்தி -உகரம் புத்தியையும், மகாரம் மனம் - மகாரம் மனத்தையும், விந்து சித்தம் - விந்து சித்தத்தையும் நாதம் உளவடிவு - நாதம் உயிரையும் செலுத்துதலால், கடற்றிரையே போன்று போதம் ஆம் - கடலிடத்துப் புதிதுபுதிதாகத் திரை தோன்றியும் ஒடுங்கியும் வருவது போல , போதம் ஆம் - மகா சகலமாகிய மத்தியாலவத்தையின் கண் கணந்தோறும் அறிவு புதிது புதிதாய்த் தோன்றியும் ஒடுங்கியும் வரும், பகாது இவற்றை நாடில் - பகுக்காது இவ்வக்கரங்களை ஆராய்ந்து பார்த்தால், பிரணவம் ஆம் - அவை பிரணவமாகும் எ-று.

அக்கரங்கள் அந்தக் கரணங்களைச் செலுத்தும் முறையை இதிற் கூறியவாறே, "மன்னு மகார மனம் செலுத்தும் புத்தியினை, யுன்னுமுகார முபகரிக்கு - முன்னாகு, மாங்காரந் தன்னை யகாரஞ்

செலுத்தியிடும், நீங்காத சித்தம் விந்துநேர்" எனத் துகளறு போதங் கூறுகின்றது.

சிவஞான சித்தியார் 'அவ்வுட னுவ்வு மவ்வு மனம் புத்திய கங்காரங்கள்' எனக்கூறியது எதிர்நிரனிறைப் பொருள் பற்றி யெனக் கொள்க.

'அவ்வுட னுவ்வு மவ்வு மனம் புத்தி யகங்கா ரங்கள்' என்பதே முறையெனக் கொண்டு அதற்கேற்பக் கொண்டு கூட்டி யுரைப்பாருமுளர்.

பகாதிவற்றை நாடிற் பிரணவமாம் எனவும், உளவடிவாம் என்பதிலுள்ள ஆம் என்பதைப் போதம் என்பதனோடு கூட்டி, கடற்றிரையே போன்று போதம் ஆம் எனவுங் கொள்க.

அந்தக்கரணங்களைச் செலுத்தும் அக்கரங்களைக் கூறத் தொடங்கிய ஆசிரியர் உயிர் அந்தக் கணங்களோடு நிற்கும் ஒப்புமை பற்றியும் பிரணவத்திலிருக்கும் அக்கரங்களின் ஒப்புமை பற்றியும் நாதம் உளவடிவு என்றார்.

அந்தக்கரணங்களோடும் புருடனோடும் அக்கரங்கள் உடன் நின்று செலுத்துதலால், அக்கரங்கள் செலுத்துமெனக் கூறாது, அகரம் அகங்காரம், உகாரம் புத்தி, மகாரம் மனம், விந்து சித்தம், நாதம் உளம் என அக்கரங்களே அந்தக் கரணங்கள் என்னும்படி வேற்றுமையின்றிக் கூறினார்.

"நிகழ்ந்திடும் வாக்கு நான்கும் நிவிர்த்தாதி கலையைப் பற்றி" எனச் சித்தியார் கூறுவதுபோல, வாக்குகள் அகரம் முதலிய பஞ்சகலை வடிவாய் நின்று அந்தக்கரணங்களை வேறுவேறு செலுத்துதலால், கணந்தோறும் நினைப்பாகிய சகலமும் மறப்பாகிய கேவலமும் அதிநுட்பமாய்க் காற்றாடி போல மாறி மாறி வருமெனவும், மகாசகலமாகிய சாக்கிரத்திற் கணந்தோறும் உணர்வு உதித்தும் ஒடுங்கியும் வருதல் சமுத்திரத்தில் புதிது புதிதாய்த் திரை தோன்றியும் ஒடுங்கியும் வருவதுபோலுமெனவும் அறிக.

முன்னர், பரம்பரையாய் ஒன்றன் பின் ஒன்றாய் உணர்வு வருவதற்குக் கடற்றிரை உவமையை எடுத்துக் காட்டிய ஆசிரியர் இவ்விடத்தில், புதிது புதிதாய் உணர்வு வருவதற்கு அவ்வுவமையை எடுத்துக் காட்டினார். ஆதலால் அது கூறியது கூறலாகாது.



### அக்கரங்களின் அதிதெய்வம் இவையென்பதற்குக் காட்டும் உதாரணம்

***எண்ணில வோங்காரத் தீசர் சதாசிவமா***
***நண்ணிய விந்துவொடு நாதத்துக் - கண்ணிற்***
***பகரயன்மா லோடு பரமனதி தெய்வ***
***மகரவுக ரம்மகரத் தாம்.***

அக்கரங்கள் சடமாதலால் அவ்வக்கரங்களால் அந்தக்கரணங்களைச் செலுத்த முடியுமாவென்னும் ஐயத்தை நீக்கும் பொருட்டு அவ்வக்கரங்களை அதிட்டித்து நின்று செலுத்தும் அதிதெய்வங்கள் இவையெனக் கூறுகின்றது. இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** எண்ணிலவு ஓங்காரத்து நண்ணிய நாதத்து விந்துவொடு அதிதெய்வங் கண்ணில் சதாசிவம் ஈசராம் மகர உகர அகரத்து (அதிதெய்வம் கண்ணில்) பரமன் மாலொடு பகர் அயனாம்

**இ-ள் :** எண் நிலவு - மானதக் காட்சியின்கண் நிலவும், ஓங்காரத்து நண்ணிய - ஓங்காரத்திற் பொருந்திய, நாதத்து விந்துவொடு அதிதெய்வம் கண்ணில் - நாதத்துக்கும் விந்துவுக்கும் அதிதெய்வங்கள் எவையென்று கருதுமிடத்து, சதாசிவம் ஈசராம் - சதாசிவனும் மகேசனுமாம், மகர உகர அகரத்து (அதிதெய்வம் கண்ணில்) மகர உகர அகரங்களுக்கு அதிதெய்வங்கள் எவையென்று கருதுமிடத்து, பரமன் மாலொடு பகர் அயனாம் - சுத்தவித்தியா தத்துவத்திலிருக்கும் உருத்திரனும் மாலும் சொல்லப்படும் பிரமனுமாம் எ-று.

எண்ணிலவு ஓங்கார மென்பதில், நிலவு ஓங்காரம் என்பது வினைத்தொகை. எண்ணம் என்பது கருதுதலைக் குறிக்குமானாலும் இவ்விடத்தில் மானதக் காட்சியைக் குறிக்கின்றது.

### அக்கரங்கள் அந்தக்கரணங்களைச் செலுத்தும் முறை

சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என நான்கு வாக்குகள் உண்டு. இவற்றில் வைகரி தூலவைகரி சூக்கும வைகரியென இரண்டு வகைப்படும். சூக்குமை ஒலிவடிவாய் மூலாதாரத்தில் இருக்கும். பைசந்தி அக்கரங்கள் பிரிந்து தோன்றா தடங்கி ஒலிவடிவாய் நாபித்தானத்தில் இருக்கும். மத்திமை அவ்வக்கரங்களின் பாகுபாட்டொடு கூடிய ஒலியாய் இதயத் தானத்திலிருக்கும். சூக்கும வைகரி சொல்வடிவமான ஒலியாய் தன் செவிக்குக் கேட்கப்படு வதாய்க் கண்டத்திலிருக்கும். தூல வைகரி சொல்வடிவமான ஒலியாய் தனக்கும் பிறர்க்கும் கேட்கப்படுவதாய் வாயிலிருக்கும்.

| பஞ்சகலைகள் | வாக்குகள் | பிரணவக் கலைகள் | அதிதெய் வங்கள் | அந்தக் கரணம் |
|---|---|---|---|---|
| நிவிர்த்தி | தூலவைகரி | அகரம் | பிரமா | அகங்காரம் |
| பிரதிட்டை | சூக்கும வைகரி | உகரம் | விட்டுணு | புத்தி |
| வித்தை | மத்திமை | மகரம் | உருத்திரன் | மனம் |
| சாந்தி | பைசந்தி | விந்து | மகேசுவரர் | சித்தம் |
| சாந்தியதீதை | சூக்குமை | நாதம் | சதாசிவம் | உயிர் |

இவற்றுள் வாக்காகிய ஒலி பஞ்சகலைகளின் பற்றுக் கோட்டால் அகரம் முதலிய அக்கரங்களின் வடிவாய் நின்று, கலைகளும் அதிதெய்வங்களும் இயக்க ஐந்து வகையாக இயங்கி அந்தக்கரணங்களையும் புருடனையும் விடயங்களிற் செலுத்தும், இவ்வாற்றால் தூலவைகரி நிவிர்த்தி கலையைப் பற்றி அகர வடிவாய் நின்று, நிவிர்த்தி கலையும் அதிதெய்வமாகிய பிரமாவும் இயக்க இயங்கி அகங்காரத்தைத் தொழிற்படுத்தும். இவ்வாறே மற்றைய அக்கரங்கள் அந்தக் கரணங்களைச் செலுத்தும் முறையையும் அறிக.

## இரண்டாம் அதிகரணம்

### ஆன்மா அந்தக்கரணங்களைக் கூடுதற்கு ஏது ஆணவமலத்தால் அறிவு இழந்தமை எனக்கூறும் மேற்கோள்

**இனி இவ்வான்மாச் சகசமலத்தினா லுணர்வின் றென்றது.**

ஆன்மா அந்தக் கரணங்களில் ஒன்றன்றாயின் அவற்றோடு சந்தித்து நிற்பதற்குக் காரணமென்னவென்பர் ஒரு சாரார். அவர்களுக்கு விடை கூறுமுகமாகச் சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைப் பதச்சேதஞ் செய்து கூறப்பட்டது. இந்த மேற்கோள். இதில், ஆன்மாவின் அறிவு ஆணவமலத்தால் மறைக்கப்படுமோ மனறக்கப் படாதோ என்பது ஐயம். இவ்வையப் பாட்டின் கண் மறைக்கப்படா தென்பது பிறர் கூறும் பக்கம். இவ்வாறு கூறுவோர் அந்தக்கரணான்ம வாதிகள்.

**இ-ள் :** அந்தக் கரணங்களில் ஒன்றன்றென முன்னைய அதிகரணத் தாற் சாதிக்கப்பட்ட ஆன்மா செம்பிற் களிம்பு போன்ற ஆணவ மலத்தோடு உடனாய் நிற்றலால், தன்னியல்பால் உணருமாறின்றிக் கருவிகளோடு கூடி உணர்வதாயிற்று எ-று.



மும்மலங்களில் கன்மமும் மாயையும் ஆன்மாவை இடையில் வந்து சேர்ந்த ஆகந்துக மலங்களாதலால், அவற்றினீக்குவதற்காக ஆணவம் சகசமலமெனப்பட்டது. உயிர் முதல்வனைப் போல் அந்தக்கரணம் முதலியவற்றின் வேறான அறிவுடைப் பொருளா யினும் செம்பிற் களிம்பு அநாதியாயவாறுபோல, வேறு காரண மெதுவுமின்றி ஆணவமலம் உயிரோடு உடனாய் நிற்பதனால், உயிர் தன்னியல்பால் அறியுமாறின்றிக் கருவிகளோடு கூடிஅறியும். இதனால் பிரமாணவியல் முதற்சூத்திரத்தில் மலத்துளதாம் என்றதிற் கூறப்பட்ட ஆணவ மலத்துக்கு இம்மேற்கோளினால் இலக்கணம் கூறியவாறாயிற்று.

ஆணவமலத்தின் இலக்கணம் சிறப்பிலக்கணம் பொதுவிலக் கணமென இருவகைப்படும். கேவலத்தில் ஆன்மாவுக்கு அறியாமை யைச் செய்வதே ஆணவ மலத்தின் தன்னியல் பெனப் படும் சிறப்பிலக்கணம். சகலத்திற் கருவிகளோடு கூடி அவத்தைப்படும் போது ஆன்மாவுக்கு விபரீத உணர்வைச் செய்வது ஆணவத்தின் பொதுவியல்பு. விபரீத உணர்வாவது ஒன்றை வேறொன்றாக அறிதல். கண்கண்டதை நான் கண்டேன் என்றறிதல் விபரீதம்.

### ஆணவ மலத்தினால் ஆன்மாவிற்கு உணர்வில்லை யாதற்குக் காட்டும் ஏது

***அதுதான் ஞானதிரோதகமாய் மறைத்துக் கொண்டு நிற்றலான்.***

ஆணவமலத்தினால் ஆன்மாவுக்கு அறிவில்லாமற் போகுமானால், பின் கருவிகளோடு கூடியபோது அறிவுண்டாவ தெவ்வாறெனச் சற்காரிய வாதம் பற்றி எழும் வினாவுக்கு விடை கூறுமுகமாக, மேற்கோளிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வேது. உள்ளது தோன்றும் இல்லது தோன்றாதென்பது சற்காரியவாதம்.

**இ-ள் :** ஆணவமலமானது ஞானத்தின் தொழில் நிகழவொட்டாது தடுப்பதாய், ஞானமேயில்லை யென்னும்படி மறைத்துக்கொண்டு நிற்றலான். இனி இவ்வான்மாச் சகசமலத்தினா லுணர்வின்றென மேற்கோளிற் கூறப்பட்டது எ-று.

வடமொழி வழக்குப் பற்றி ஞானதிரோதகமாய் எனவும் அதனைத் தமிழ் மொழியால் விளக்கும் பொருட்டு மறைத்துக் கொண்டு நிற்றலான் எனவும் மலத்துக்கு இலக்கணங் கூறினார். அதனால் அது கூறியது கூறலென்னும் குற்றமாகாது.

அபாவம் ஒரு காரியத்தைச் செய்யமாட்டாததலால், இவ்வேதுவினால் ஞானாபாவமே அஞ்ஞானமென்பார் மதமும் மறுக்கப்பட்டது.

அபாவம் -இன்மை

இன்மை ஒரு தொழிலைச் செய்யமாட்டாது. இருள் பொருள்களை மறைக்குமே தவிர ஒளியின்மை பொருள்களை மறைக்கமாட்டாது. அது போல ஞானமின்மையும் மறைத்தற்றொழிலைச் செய்யமாட்டாது. அதனால் ஆணவமே ஆன்மாவின் அறிவை மறைக்கும் எ-று.

**மாயாமலமே மறைத்தற்றொழிலைச் செய்யுமென்பாரை மறுத்து ஆணவமே மறைக்கும் என்பதற்குக் காட்டும் உதாரணம்:**

***மாயா தனுவிளக்கா மற்றுள்ளங் காணாதே***
***லாயாதா மொன்றை யதுவதுவாய் - வீயாத***
***வன்னிதனைத் தன்னுண் மறைத்தொன்றாங் காட்டம்போற்***
***றன்னைமல மன்றணைத றான்.***

ஆகந்துக மலங்களிலொன்றாகிய மாயா மலமே ஆன்மாவின் அறிவை மறைக்கும். அதற்கு வேறுமோர் மலமுண்டென்று கூறுதல் தேவையற்ற தொன்றாகு மென்பர் ஐக்கவாத சைவர் முதலியோர். அவர்களை மறுக்குமுகமாக ஆகந்துக மலத்தாலும் சகச மலத்தாலும் செய்யப்படுங் காரியங்கள் பெரிதும் வேறுபாடுடையவை யென்பதை உணர்த்துமுகமாக ஏதுவை வலியுறுத்துகிறது. இவ்வுதாரணம்.

**கொண்டுகூட்டு:** உள்ளம் மாயா தனுவிளக்கா காணாதேல் ஒன்றை ஆயாது. மற்று மலந்தன்னை அன்று அணைதல் அது அது ஆய்வீயாத வன்னிதனை தன்னுள் மறைத்து ஒன்று ஆம் காட்டம் போல்.

**இ-ள் :** உள்ளம் மாயா தனு விளக்கா காணாதேல் ஒன்றை ஆயாது - உயிர் மாயா காரியமாகிய உடம்பை விளக்காகக் கொண்டு விடயங்களை அறியாதாயின் ஒன்றையும் அறியமாட்டாது, மற்று மலம் தன்னை அன்று அணைதல் - சகசமலம் உயிரை அநாதியே பற்றிநிற்றல், அது அதுவாய் வீயாத வன்னிதனை மறைத்து ஒன்றாம் காட்டம் போல் - விறகு முதலியவற்றுள் அது அதுவேயாய் நின்றும் தனக்குக் கேடில்லாத அக்கினியை மறைத்து வைத்து அதனோடு ஒன்றாய் நிற்கும் விறகு போலும் எ-று.

வன்னி - அக்கினி. காட்டம் - விறகு.



விளக்காய் நின்று விடயங்களை அறியும் வண்ணம் உயிருக்கு அறிவை விளக்குதல் மாயையின் செயல். அவ்வறிவை மறைத்துக் கொண்டு நிற்றல் ஆணவத்தின் செயல். இவ்வாறு மாயையும் மலமும் முறையே ஒளியும் இருளும் போல் ஒன்றோடொன்று மாறுபட்டு நிற்பனவாதலால், அறிவை விளக்குமியல்புடைய மாயை மறைக்குமியல்புடைய ஆணவமாதல் எவ்வாறெனவினாவி, மாயா மலமே மறைத்தலைச் செய்யுமென்பாரை மறுத்தவாறாயிற்று.

மற்று என்பது, மாயையின் காரியமான உடம்பு அறிவை விளக்கும். அதற்கு மாறாகச் சகசமலம் அறிவை மறைக்குமெனப் பொருள் தந்து வினைமாற்றிகண் வந்தது.

ஒன்றை, அதுவதுவாய் என்ற இடங்களில் உம்மைகள் தொக்கு நின்றன. அவற்றை விரித்து ஒன்றையும் எனவும் அதுவதுவேயாய் நின்றும் எனக் கொள்க.

வன்னி அதுவாதல், விறகினுள் மறைந்தபோது விறகாயும் சூரிய காந்தத்துள் மறைந்தபோது சூரியகாந்தமாயும் நிற்றல். இவ்வாறே பிறவற்றுள் அக்கினியென்ப தொன்றில்லை யென்னும்படி அவ்வப் பொருள்களாய் நிற்றல். அவ்வப் பொருள்களாய் நின்றும் அக்கினி அழியாதிருக்குமென்பது விறகைக் கடையும் போது தீ தோன்றுத லாலும் பிறதொழிற்பாடுகளால் பிறவற்றிலிருந்து தீ தோன்றுவதாலும் பெறப்படும். தன்னுண் மறைத்தல் தீயென்பதொன்றில்லை யென்னும்படி பொதிந்து கொண்டு தானேயாய் நிற்றல். ஒன்றாங் காட்ட மென்றது அக்கினி விறகு என்னும் இரண்டும் இருந்தும் இரண்டாகப் பிரித்தறிய முடியாமல் ஒன்றோய் அத்துவிதமாய் நிற்கும் காட்டம் எ-று. இதில்,

| **உவமானம்** | **உவமேயம்** |
|---|---|
| அக்கினி | உயிர் |
| விறகு | ஆணவமலம் |

விறகோடு அத்துவிதப்பட்டு நின்றும் கேடில்லா திருக்கும் அக்கினி போல, ஆணவத்தோடு அத்துவிதப்பட்டு நின்றும் ஆன்மா அழியாதிருக்கும். கடையும் போது வெளிப்படுவதனால் அக்கினியுண்டென்று அறியப்படுவது போலக் கருவிகளோடு கூடி அறிதலினால் உயிருண்டென்பது பெறப்படும்.

ஆணவம் மாயை கன்மங்களைப் போல ஆதியன்றெனக் கூறவேண்டி அன்றணைதலென்றார். அன்று - அநாதியே

இவ்வாறு உயிரை அநாதியே பற்றி நிற்குமெனக் கூறப்பட்ட ஆணவ மலத்தைப் பற்றிப் பிறர் தத்தம் மதக் கோட்பாட்டுக்கேற்ப வேறு வேறு விதமாகக் கூறுவர்.

ஞானாபாவமே ஆணவ மென்பர் சிலர். பஞ்சக்கிலேசத்துள் ஒன்றாகிய அவிச்சையே ஆணவமென்பர் சிலர். மாயை கன்மங்களே ஆணவமென்பர் சிலர், சிவசத்தியே ஆணவமென்பர் சிலர், உயிர்க்குணமே ஆணவமென்பர் சிலர்.

ஞானாபாவம் - ஞானமின்மை. அவிச்சை, அகங்காரம், அவா, ஆசை கோபம் என்பன பஞ்சக்கிலேசங்கள்.

ஆணவ மலத்துக்குப் பற்றுக் கோடாயுள்ளதும் சூனியம் முதலியவற்றின் வேறெனப்பட்டதுமான ஆன்மா இயல்பாகவே சடமென வைசேடிகரும்; அறிவு மாத்திரையான குணமேயன்றிக் குணிப்பொருளன்றெனச் சாங்கியரும்; சுதந்திர அறிவுடைய தெனப் பாட்டாசாரியரும்; எந்தெந்த உடம்பைப் பற்றியதோ அந்தந்த உடம்பளவாய் வியாபித்து நிற்குமெனச் சமணரும்; அணுவளவுடைய தெனப் பாஞ்சராத்திரிகளும்; உருவமெனப் பௌராணிகரும்; அருவமெனப் பாதஞ்சலரும், அருவுருவமெனக் கவுளரும் கூறுவர். அவர் கூற்றுக்களெல்லாம் பொருந்தாதென்பதை ஆகமங்களாலறிக.

இச்சகச மலம் அறிவை மறைப்பதாய்த், தனியானதொரு பொருளாய், அறியாமையே குணமாக வுடையதாய், செம்பிற் களிம்பு போல உயிரின் குற்றமாய், உயிரை அநாதியே பற்றியிருப்பதாய், அறிவில்லாச்சடமாய், (பலவாய் இருப்பின் நாசமடையுமாதலால்) ஒன்றாய், விஞ்ஞானாகலர் பிரளயாகலர் சகலர் என்னும் உயிர்ப் பாகுபாட்டுக்குக் காரணமாய், உயிர்களைத் தனித்தனி வேறுவேறு-விதமாய் மறைத்து நின்று அவற்றை விட்டு நீங்கவேண்டிய காலத்தில் நீங்கும் பல சத்திகளையுடையதாய், உயிர்கள் கேவலம் சகலம் சுத்தமென்னும் மூன்றவத்தைகளும் படுவதற்கு மூலகாரணமாய், நித்தமாய், வியாபகமாய், வியாபக அறிவுள்ள உயிரை அணுத்-தன்மைப் படுமாறு செய்தலால் ஆணவம் என்னும் பெயரையுடைய தாய், பசுத்துவம், பசுநீகாரம், மிருத்தியு, மூர்ச்சை, மலம், அஞ்சனம், அவித்தை, ஆவிருதி என்பன முதலான காரணக் குறிகளையுடைய தாய் நிற்கும். பசுத்துவம் - உயிருக்குப் பசுத்துவத்தைச் செய்தல்,



மலங்களாற் பந்தப்படச் செய்தல். பசுநீகாரம் - ஆன்மாவின் அறிவை மூடல். மிருத்தியு - உயிரைச் சீவிக்க வொட்டாது செய்தல். மூர்ச்சை - உயிரை மயங்கிக் கிடக்கச் செய்தல். மலம் - அசுத்தமாக்கல். அஞ்சனம் இருள்போல நிற்றல். அவிச்சை - அறியாமையைச் செய்தல். ஆவிருதி - மறைத்தல்.

படலத்தால் மறைக்கப்பட்ட கண் சூரிய ஒளியின் முன் நிற்பினும் படலத்தால் மறைக்கப்பட்டிருப்பது காரணமாக ஒளியை இழந்து இருளாய் இருப்பது போல, ஆணவமலத்தால் மறைக்கப் பட்ட உயிரும் முதல்வன் சந்நிதியில் நிற்பினும் படிமுறையாக அறிவித்தால் அறியுமேயன்றி அநாதியே அறிவித்தால் அறியமாட் டாது. அதனால் அறிவை இழந்து அறியாமையில் அழுந்தும் உயிருக்கு ஆணவமலம் பந்தமாயிற்று.

அநாதியே மலத்தினின்றும் நீங்குதல் முதல்வன் வினையாய் அநாதிமுத்தத் தன்மையென இறைவனது எண்குணங்களிலொன்றாக வைத்தெண்ணப்படுமென்பதைச் சிவாகமங்களெல்லாம் ஒப்புக் கொள்ளும். அதுபோல, அநாதியே மலத்தைப் பற்றுதல் உயிரின் வினையாய் உயிர்க் குற்றங்களுள் வைத்தெண்ணப்படு மென்பதையும் சிவாகமங்க ளெல்லாம் ஒப்புக்கொள்ளும்.

## மூன்றாம் அதிகரணம்

### உயிர் அந்தக் காரணங்களைக் கூடினவிடத்து ஐந்தவத்தைப்படும் எனக்கூறும் மேற்கோள்

***இனி இவ்வான்மாச் சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியந் துரியாதீதமாயுள்ள பஞ்சாவத்திதனாய் நிற்குமென்றது.***

இருளிலகப்பட்ட கண் விளக்கோடு கூடியவழி விடயங்களைக் காண்பதே யன்றி வேறு வேறு அவத்தைப் படுதலில்லை. அதுபோல ஆணவத்திலகப்பட்ட உயிர் கருவிகளோடு கூடியவழி ஒரே தன்மையாய் அறியுமென்பதே பொருந்தும். அவ்வாறன்றி மூன்றாஞ் சூத்திரத்திற் கூறியதுபோல ஐம்புலனறிந்தும் ஒடுக்கமறிந்தும் உண்டிவினையின்றிக் கிடந்தும் உணர்த்த உணர்ந்தும் வேறு வேறு அவத்தைப்படுமென்பது பொருந்தாதென்பர் ஒரு சாரார். இதில், ஆன்மா கருவிகளோடு கூடி ஐந்தவத்தைப் படுமோ படாதோ என்பது ஐயம். இவ்வையப் பாட்டின்கண் ஆன்மா ஐந்தவத்தைப்

படாதென்பது பிறர் கூறும் பக்கம். இவ்வாறு கூறுவோர் அந்தக் கரணான்ம வாதிகள். அவர்களை மறுத்து ஆன்மா ஐந்தவத்தைப் படுமென்கின்றது இந்த மேற்கோள்.

**இ -ள் :** அந்தக் கரணங்களோடு கூடிய ஆன்மா, சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம் என்னும் அஞ்சவத்தை உடையவனாய் நிற்கும் எ-று.

கேவலம் சகலம் சுத்தம் முதலியனவும் அவத்தையெனப் படுமாதலால், இந்த மேற்கோளிற் கூறப்படுவது எந்த அவத்தையோ என்னும் ஐயம் ஏற்படா வண்ணம் அவற்றின் பெயர்களை இந்த மேற்கோளிற் குறிப்பிட்டுக் கூறினார்.

'அமைச்சர சேய்ப்ப' எனச் சூத்திரத்திற் கூறியதையும் இவ்வதிகரணத்தோடு சேர்த்துப் பொருள் கொள்க. அவ்வாறு பொருள் கொண்டால்,

***"படைகொடு பவனி போதும் பார்மன்னன் புகும்போ தில்லிற்***
***கடைதொறும் விட்டு விட்டுக் காவலு மிட்டுப் பின்னர்***
***அடைதருந் தனியே யந்தப் புரத்தினி லதுபோ லான்மா***
***உடலினி லஞ்ச வத்தை யுறுமுயிர் காவலாக"*** எனச் சித்தியார் கூறுவது போல ஆன்மா அஞ்சவத்தைப் படுமெனக் கூறியவாறாயிற்று.

### ஆன்மா வேறு வேறவத்தை யடைதற்குக் காட்டும் ஏது

***அதுதான் மலசொரூபத்தின் மறைந்து அரூப சொரூபியாய் நிற்றலான்.***

அரசனைப்போல உயிர் அஞ்சவத்தைப் படுமாயின் அரசன் ஒவ்வொரு வாயிலையும் விட்டு விட்டுச் செல்லுங் காலத்து, விட்டுச் சென்ற இடங்களில் இல்லாதிருப்பது போல, உயிரும் விட்டுச் சென்ற இடங்களில் இல்லையாகும். அதனால் உயிரின் வியாபகத்துக்குக் குறையுண்டாகுமே என்னும் வினாவுக்கு விடைகூறுமுகமாக மேற்கோளை வலியுறுத்துகின்றது இவ்வேது.

**இ-ள் :** உயிர் மலவடிவின் மறைப்புண்டவழி அருவுடம்பாகிய தத்துவ சொரூபியாய் நிற்றலான், அத்தத்துவங்கள் தொழிற்படும் அவத்தை வேறுபாடு பற்றி, இனி இவ்வான்மாச் சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதமாயுள்ள பஞ்சாவத்திதனாய் நிற்குமென மேற்கோளிற் கூறப்பட்டது. எ-று.



தத்துவங்கள் சூக்கும தேகமாகவும் காரண தேகமாகவும் இருக்கும். சூக்கும தேகம் - அருவுடம்பு. தாத்துவிகங்கள் தூல தேகமாயிருக்கும்.

தூல தேகம் - உருவுடம்பு

உயிர் தத்துவ சொரூபியாய் நின்று அவத்தைப்படினும் அதன் வியாபகத்துக்குக் குறையுண்டாகா தென்னுங் கருத்துப் பற்றியே.

"சீவனோ வியாபி யவத்தையி விழிந்து திரும்புதல் குற்றமாங் கருவி, சேருதல் பிரித லில்லையா முறையிற் செயப்படுங் கருவியே தெரியுந், தாவிலா வறிவு தங்கின விடமே தருமுயிர்க் கிருப்பிடம்." என உலகுடை நாயனாரும் கூறினார்.

தாவுதல் - எங்கும் வியாபித்தல். எல்லா அவத்தைகளையும் பொருந்துவதால் வியாபகமாதலும், ஒரு அவத்தையைப் பொருந்தும் போது மற்றைய அவத்தைகளைப் பொருந்தாமையால் ஏகதேச வியாபகமாதலும் உயிருக்குண்டு. அதனால், இறைவனைப் போலச் சர்வ வியாபகம் உயிருக்கில்லாவிடினும் ஏகதேச வியாபகம் உண்டெனப்பட்டு அதன் வியாபகத்துக்குக் குறைவில்லையெனக் கூறியவாறாயிற்று.

வீடு பெற்றவிடத்தும் ஆன்மா தத்துவ சொரூபியாய் நிற்குமோ என்னும் ஐயம் நிகழாமைப் பொருட்டு, மலசொருபத்தின் மறைந்து தத்துவ சொரூபியாய் நிற்றலான் என்றமையால், மலம் நீங்கிய முத்திநிலையில் ஆன்மா தத்துவ சொரூபியாய் நில்லாமைக்குக் காரணங் கூறினார். இதில், மறைந்தவழி என்பது மறைந்து எனத் திரிந்தது.

### உயிர் ஐந்தவத்தைப்படும் என்பதற்குக் காட்டும் உதாரணம்

***ஒன்றணையா மூலத் துயிரணையு நாபியினிற்***
***சென்றணையுஞ் சித்த மிதயத்தின் - மன்றவே***
***யையைந்தா நன்னுதலிற் கண்டத்தில் வாக்காதி***
***மெய்யாதி விட்டகன்று வேறு.***

தத்துவங்கள் கூடியும் பிரிந்தும் தொழிற்படுதலால் நிகழும் அவத்தை வேறுபாட்டை விளக்கிக் கூறி, ஆன்மா வேறு வேறு அவத்தைப் படுவதற்குக் காரணம் அது தத்துவ சொரூபியாய் நிற்பதே என்பதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** நன்னுதலில் வாக்காதி மெய்யாதி மன்ற ஏய் ஐயைந்தாம் கண்டத்தின் (வாக்காதி மெய்யாதி) விட்டு அகன்று வேறு (ஐயைந்தாம்) இதயத்தின் சித்தம் சென்று அணையும் நாபியினில் உயிர் அணையும் அணையா மூலத்து ஒன்று.

**இ-ள் :** நன் நுதலில் வாக்காதி மெய்யாதி மன்ற ஏய் ஐயைந்தாம் - சாக்கிரத்தான மெனப்படும் இலாடத்தில் புறவிந்திரியம் எனப்படும் ஞானேந்திரியம் ஐந்தோடும் கன்மேந்திரியம் ஐந்தோடும் தேற்றமாதப் பொருந்திய இருபத்தைந்து கருவிகள் தொழிற்படும், கண்டத்தின் (வாக்காதி மெய்யாதி) விட்டகன்று வேறு ஐயைந்தாம் - சொப்பனத் தான மெனப்படுங் கண்டத்தில் ஞானேந்திரியங்களையும் கன்மேந்திரியங்களையும் விட்டு நீங்கி வேறு இருபத்தைந்து கருவிகள் தொழிற்படும், இதயத்தின் சித்தம் சென்று அணையும் - சுழுத்தித் தானமெனப்படும் இதயத்தில் (இருபத்திரண்டு கருவிகளை விட்டு நீங்கி, பிராணன் புருடன் என்னும் இரண்டு கருவிகளோடுங் கூடி) சித்தம் தொழிற்படும், நாபியினில் உயிர் அணையும் - துரியத் தானமெனப்படும் உந்தியில் சித்தத்தையும் விட்டு நீங்கிப் புருடதத்துவத்தோடு கூடிப் பிராணவாயு தொழிற்படும், அணையா மூலத்து ஒன்று - இக்கருவிகள் ஒன்றும் அணையாத அதீதத் தானமெனப்படும் மூலாதாரத்தில் புருடனொன்றே நிலைபெறும் எ-று.

எனவே இலாடத்தானம் முதலிய ஐந்திடங்களிலும் நிற்கும் கருவிகள் முறையே முப்பத்தைந்தும் இருபத்தைந்தும் மூன்றும் இரண்டும் ஒன்றும் என்பது பெறப்படும்.

அவத்தைகளில் தொழிற்படுங்கருவிகளை,

***"சாக்கிரமா நுதலினிந் திரியம் பத்துஞ் சத்தாதி வசனாதி வாயுபத்து***
***நீங்கமிலந் தக்கரணம் புருடனோடு நின்றதுமுப் பானைந்து நிலவுங் கண்டத்***
***தாக்கியசொப் பனமதனில் வாயுப்பத்து மடுத்தனசத் தாதிவச னாதி யாக***
***நோக்குகர ணம்புருட னுடனேகூட நுவல்வரிரு பத்தைந்தா நுண்ணியோரே***
***சுழுத்தியிதயந் தன்னிற் பிராணன் சித்தஞ் சொல்லரிய புருடனுடன் மூன்றதாகும்***
***வழுத்திய நாபியிற் றுரியம் பிராண னோடு மன்னு புருடனுங்கூட வயங்காநிற்கு***
***மழுத்திடு மூலந்தன்னிற் றுரியாதீத மதனிடையே புருடனொன் றியமரும் ஞானம்***
***பழுத்திடுபக் குவரறிவ ரவத்தை யைந்திற் பாங்குபெறக் கருவிநிற்கும் பரிசுதானே"***

என்று கூறுகின்றார் தாயுமான சுவாமிகள்

மன்ற என்றது தேற்றப் பொருளைத் தரும் இடைச் சொல்.

ஏய்தல் - பொருந்துதல். வாக்காதி மெய்யாதி என்ற இடத்தில் ஐ உருபை விரித்து வாக்காதி மெய்யாதியை விட்டகன்று எனக் கொள்க.

வருகின்ற சூத்திரத்தில், மெய் வாய் கண் மூக்கு என மெய்யை முதலிற் கூறுதலால் அம்முறை பற்றி இவ்வெண்பாவில் செவியாதி என்னாது மெய்யாதி என்றார்.

| | | |
|---|---|---|
| இலாடத்தில் நிற்கும் கருவிகள் | : | ஞானேந்திரியம் 5. கன்மேந் திரியம் 5. சத்தாதிவிடயம் 5. வசனாதி விடயம் 5. அந்தக் கரணம் 4. புருடன் 1. வாயு 10. எல்லாமாக 35. |
| சொப்பனத்தானத்தில் நிற்கும் கருவிகள் | : | சத்தாதி 5. வசனாதி 5. அந்தக் கரணம் 4. புருடன்1. வாயு 10. எல்லாமாக 25. |
| சுழுத்தியில் நிற்கும் கருவிகள் | : | பிராணன் சித்தம் புருடன், என்னும் மூன்றும். |
| துரியத்தில் நிற்கும் கருவிகள் | : | பிராணன் புருடன் என்னும் இரண்டும் |
| துரியாதீதத்தில் | : | புருடன் மாத்திரம் நிற்கும். |
| ஞானேந்திரியம் 5 | : | செவி, மெய், கண், நா, நாசி |
| கன்மேந்திரியம் 5 | : | வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம். |

| | |
|---|---|
| **சத்தாதி 5** | : சத்தம், பரிசம், ரூபம், இரதம், கந்தம். |
| **வசனாதி 5** | : வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம் |

சாக்கிரத்தில் முப்பத்தைந்து கருவிகள் தொழிற்படும் என்றதனால், பூதங்களின் கூறாய் அவற்றுடன் நின்று, தேர்ச்சில்லுக்கு வலிமையைக் கொடுக்கின்ற அச்சுப்போல, இந்திரியங்களின் தொழிற்பாட்டுக்கு வலியைக் கொடுக்கின்ற புறக்கருவி அறுபதில் இவ்விடத்திற் கூறிய விடயங்கள் பத்தும் வாயுக்கள் பத்துமாகிய இருபதுங் தவிர்ந்த ஏனைய புறக்கருவிகள் நாற்பதும் அப்புறக்கருவிகளையுடைய பூதங்கள் ஐந்தும், அப்பூதங்களுக்கு வலியாய் அவற்றுடன் நிற்பனவாகிய சூக்கும பூதமெனப்படும் தன்மாத்திரைகள் ஐந்தும் என்னும் ஐம்பது கருவிகளும் கீழ்நோக்கிய சாக்கிரத் தானத்தில் தமது சத்தி மடங்கி வினைக்கீடாகத் தொழிற்படா தொழியும்.

அவை தொழிற்படாத விடத்து அவத்தைக் கேதுவாய் நின்ற ஏனைப் பொறி முதலிய முப்பத்து நான்கும் அவற்றோடு கூடிய புருடதத்துவமுமாகிய முப்பத்தைந்தும் தூல பூதங்களாலும் சூக்கும பூதங்களாலும் புறக்கருவிகளாலும் தரப்படுகின்ற வலிமை இல்லாமையால் இலாடத் தானமாகிய கீழ்நோக்கிய சாக்கிரத்திற் பொறிகளின்தொழிற்பாடு மெத்தெனவே நிகழும்.

கீழ் நோக்கிய சாக்கிரத்தில் ஐம்பது கருவிகள் தொழிற்படாது முப்பத்தைந்து கருவிகள் தொழிற்படு மென்றதனால், கருவிகள் எண்பத்தைந் தெனப்பட்டு தொண்ணூற்றாறு கருவிகளிற் பதினொரு கருவிகளை அவற்றோடு சேர்த்து எண்ணாது விலக்கி வைத்தார். அவ்வாறு விலக்கப்பட்டவை சிவதத்துவம் ஐந்தும் வித்தியாதத்துவம் ஏழிற் புருடனைத் தவிர்ந்த ஏனைய ஆறுமாகும். இவை அவத்தைக்கு ஏதுவாகா.

கீழ்நோக்கிய சாக்கிரத்தில் முப்பத்தைந்து கருவி தொழிற்படும் என்றதனால் எல்லாக் கருவியுந் தொழிற்படுஞ் சாக்கிரம் ஒன்றுண்டென்பது பெறப்படும். எனவே கீழ்நோக்கிய சாக்கிரம் மேல் நோக்கிய சாக்கிரம் இரண்டையும் நோக்காத சாக்கிரமெனச் சாக்கிரம் மூன்று வகைப்படும்.



இவற்றுள், கீழ்நோக்கிய சாக்கிரமெனப்படுவது நித்திரை செய்யவெண்ணிப் படுத்திருக்குங் காலத்து நித்திரை வருவதற்கு முந்திய நிலை. இந்தச் சாக்கிரம் இலாடத்தானத்திலிருந்து கண்டம் முதலாகக் கீழ்நோக்குதற்குரியதாய் இருத்தலால் கீழ் நோக்கிய சாக்கிரமெனப்பட்டது. இச்சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி முதலியவற்றை கீழாலவத்தை என்பர்.

இருதயம், கண்டம், நாக்கின் அடி, இலாடம், பிரமரந்திரம் என்னும் ஐந்தனுள் இருதயத் தானத்தில் யோக சாதனமாய் மேல்நோக்குதற்குரியதாய் நிகழ்வது மேல்நோக்கிய சாக்கிரம். இவ்வைந்தையும் மேலாலவத்தை யென்பர்.

புறத்து விடயங்களை அனுபவிப்பதற்குரியதாய் இலாடத்தில் நிகழ்வது இரண்டையும் நோக்காத சாக்கிரம். இதில் எல்லாக் கருவியுந் தொழிற்படும் இதிலும் ஐந்தவத்தை யுண்டு. இவை மத்தியாலவத்தை எனப்படும்.

**புறக்கருவிகள் அறுபதும் வருமாறு :**

| | | | |
|---|---|---|---|
| **பிருதுவியின் காரியம்** | : | மயிர், தோல், எலும்பு, நரம்பு, தசை | 5 |
| **அப்புவின் காரியம்** | : | மூத்திரம், உதிரம், சிலேட்டுமம், வியர்வை, சுக்கிலம். | 5 |
| **தேயுவின் காரியம்** | : | ஆகாரம், நித்திரை, பயம் மைதுனம், சோம்பல் | 5 |
| **வாயுக்கள்** | : | பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன் | 10 |
| **பிருதுவியிற்றோன்றும் நாடிகள்** | : | அத்தி, அலம்புடை, இடை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, குகு, சங்கினி, சிகுவை, புருடன் | 10 |
| **வாயுவின் காரியம்** | : | கிடத்தல், ஓடல், இருத்தல், நடத்தல், நிறுத்தல் | 5 |

| | | |
|---|---|---|
| ஆகாயத்தின் காரியம் | : | காமம், குரோதம், மதம், லோபம், மோகம் 5 |
| கன்மேந்திரியத்தின் தொழில் | : | வசனம், கமனம், தானம், விசர்கம், ஆனந்தம் 5 |
| வாக்குகள் | : | சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி 4 |
| குணங்கள் | : | சாத்துவிகம், இராசதம், தாமதம் 3 |
| ஏடணைகள் | : | தார ஏடணை, புத்திர ஏடணை, அர்த்த ஏடணை 3 |
| | | 60 |

ஏடணை - விருப்பம்

இவற்றில் ஏடணையை, நீக்கி, தைசதம் வைகாரிகம் பூதாதி என்னும் அகங்காரங்களைக் கொள்வதும் உண்டு

**சாக்கிரம் முதலிய ஐந்தும் சாக்கிரத்தானத்திலும் நிகழும் என விளக்கி உயிர் வேறு வேறு அவத்தைப்படும் என்பதை உறுதிப்படுத்தும் உதாரணம்**

***இலாடத்தே சாக்கிரத்தை யெய்திய வுள்ள***
***மிலாடத்தே யைந்தவத்தை யெய்து - மிலாடத்தே***
***யவ்வவ விந்திரியத் தத்துறைகள் கண்டதுவே***
***யவ்வவற்றி னீங்கலது வாங்கு.***

கீழாலவத்தையிற் துரியாதீதத்தை யடைந்த புருடன், மீள எல்லாக் கருவிகளுந் தொழிற்படும் உணர்த்து முறைச் சாக்கிரத்தை அடையும் முறையை அநுவாத முகத்தால் விளக்கி, உணர்த்துமுறைச் சாக்கிரத்திலும் முறைப்படி செலுத்துங் கருவிகளாகிய சிவதத்து-வங்கள் ஐந்தின் தொழிற்பாட்டால் ஐந்தவத்தை நிகழுமென்பதையும் அவ்வவத்தைகள் எவை என்பதையும் சுத்தாவத்தையும் இவை போலுண் டென்பதையுங் கூறி, உயிர் ஐந்தவத்தைப் படுமென்பதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**இ-ள் :** இலாடத்தே சாக்கிரத்தை எய்திய உள்ளம் - (இலாடத் தானத்தினின்றும் நீங்கி, கண்டம் இருதயம் நாபி முதலிய



தானங்களில் அவத்தைப் பட்டுக் கொண்டு சென்று மூலாதாரத்தை அடைந்த உயிர் மீண்டும் அவ்வாறே அவத்தைப்பட்டுக் கொண்டு மேல் நோக்கிச் சென்று) இலாடத் தானத்தில் உணர்த்து முறைச் சாக்கிரத்தைப் பொருந்திய புருடன், இலாடத்தே ஐந்து அவத்தை எய்தும் - அவ்வுணர்த்து முறைச் சாக்கிரத்தும் ஐந்தவத்தையுறும், இலாடத்தே அவ்வவ விந்திரியத்து அத்துறைகள் கண்டு - அவ்விலாடத் தானத்தில் அந்தந்த இந்திரியங்களால் அவ்வவ் விடயங்களை யுணர்ந்து, அதுவே - அப்போதப் போதே, அவ்வ வற்றின் நீங்கல் - அவ்வவ் விடயங்களின் நீங்குதலாம், அது ஆங்கு - (இனிக் கூறப்படும் சுத்தாவத்தையும்) இவை போல ஐவகைப்படும். எ-று.

மூலாதாரத்தை அடைந்த உயிர் அங்கிருந்து மேல்நோக்கிச் செல்லும்போது படும் அவத்தைகளுக்கும், கீழ் நோக்கிச் செல்லும் போது படும் அவத்தைகளுக்கும் வேறுபாடின்மையால் அவற்றைப் பிரித்துக் கூறாது, இலாடத்தே சாக்கிரத்தை யெய்தியவுள்ளமென அநுவாத முகத்தால் - முன்னர்க் கூறியதையே பின்பும் கூறினார்.

இலாடத்தானத்திலிருந்து கீழ்நோக்கிச் செல்லும் போதும் மேல் நோக்கிச் செல்லும் போதும் கனாக்காண்டல் உன்டென்பதை ஞானாமிர்தத்திலும் போற்றிப் பஃறொடையிலுங் காண்க.

கீழ் நோக்கிய சாக்கிரம் (நித்திரைக்குச் செல்லுங் காலத்தில் நிகழும் சாக்கிரம்) விடயங்களை உணர்த்தாது. மேல் நோக்கிய சாக்கிரம் (நித்திரைவிட்டெழும் போது நிகழும் சாக்கிரம்) விடயங் களை உணர்த்தும். ஆதலால் மேல்நோக்கிய சாக்கிரம் உணர்த்து முறைச்சாக்கிரமெனவும் பிரேரக அவத்தையெனவும் கூறப்படும்.

அவ்வவ் இந்திரியம் - அந்தந்த இடத்தில் விடயங்களை அறியக்கூடிய இந்திரியம். அவ்வவ் விடயம் - அந்தந்த இந்திரியங் களால் அறிதற்குரிய விடயம். அத்துறைகள் என்றது அறியப்படும் விடயங்களைக் குறிக்கின்றது. கண்டதுவே என்பதிலுள்ள அது என்பது காலத்தைக் குறிக்கின்றது. எனவே, அவ்வவ் இந்திரியம் அவ்வவ் விடயம் என முன்னர்க் கூறியதற்கேற்ப, அதுவே என்பதற்கு அப்போதப்போதே எனப் பொருள் கொள்க.

கண்டது என்பதைக் கண்டு + அது எனப் பிரியாமல் ஒரு சொல் லாக வைத்துப் பொருள் கூறுவாருமுண்டு. அவ்வுரை பொருந்தாது.

அப்போதப்போதே நீங்கலாவது விடயங்களைக் கண்ட கண்டவுடனே அயர்த்து விடுதல். இக்கருத்தப் பற்றியே, 'ஒன்றன்

பாலும் வருபயன் மாறி மாறி வந்திடும்', என வழிநூலாசிரியர் சித்தியாரிற் கூறினார். 'கரணந் தன்னிற் செயறொறுங் கண்டுகொணீ' 'உந்திடுங் கரணந் தன்னிற் செயறொறு முணர்ந்து கொள்ளே' எனக் கூறியதும் இக்கருத்துப் பற்றியே யாகும்.

கண்ட கண்ட பொழுதே அயர்த்து விடுதலினால் சாக்கிரம் முதலிய ஐந்தவத்தை நிகழுமென்னும் நுட்பத்தை அறிந்து கொள்ளுதற்குத் தூலாருந்ததி நியாயம் பற்றிக் கைப்பொருளை வீழ்த்தித் தெளிதல் முதலிய தூலத்துள் வைத்துக் காட்டுவர்.

தூலாருந்ததி நியாயமாவது வானத்தில் உள்ளதொரு பெரிய நட்சத்திரத்தைக் காட்டி அதற்கு அண்மையிலுள்ள சிறிய அருந்ததி நட்சத்திரத்தைக் காட்டுதல்.

கைப்பொருளை வீழ்த்தித் தெளிதலில் ஐந்தவத்தை நிகழும் முறை வருமாறு: கையிலிருந்த பொருள் தவறி விழுந்ததை உணர்ந்து பிராணவாயுவின் இயக்கமின்றி மூர்ச்சித்தல் துரியாதீதம். மூர்ச்சை தெளிந்து பிராணவாயு இயங்கத் தொடங்குதல் துரியம். அப்பொருள் எங்கே விழுந்ததோ என எண்ணுதல் சுழுத்தி விழுந்த இடம் அதுவோ இதுவோ என்றையுறுதல் சொப்பனம். விழுந்த இடத்தை நிச்சயித்தல் சாக்கிரம். இதனை,

> **"விரும்பு மரும்பொருளை வீழ்த்து மயங்க**
> **லிரிந்தவனி லன்பெறுகை வருந்தறிவு - தோன்றுத**
> **லையம் விழுந்தவிடந் தோன்றுத லென்றான்ற**
> **வைந்துஞ் சாக்கிரத்தி னாம்"** என்னும் அபியுத்தர் வாக்காலுங்

காண்க.

தத்துவ சொரூபியாய் நிற்றலினால் உண்டாகும் ஐந்தவத்தை பற்றிக் கூறத் தொடங்கிய இவ்வதிகரணத்தில், அதனோடியை பில்லாத சுத்தாவத்தையில் நிகழும் ஐந்தவத்தை பற்றிக் கூறவேண்டிய தில்லை. ஆனாலும் அவத்தையெனப் படுவன இவ்விடத்திற் கூறியவை மாத்திரமன்றி, வேறில்லையோவென மயங்காதிருத்தற் பொருட்டு, வேறும் ஐந்தவத்தையுண்டு, அவற்றைப் பற்றிப் பின்னர்க்கூறப்படுமெனக் கூறக்கருதி, 'அது ஆங்கு' என்றார்.

இக்கருத்துப் பற்றியே 'பிறிவிலா ஞானத்தோரும் பிறப்பற வருளாலாங்கே - குறியொடு மைந்தவத்தை கூடுவர் வீடு கூட' என்று வழி நூலாசிரியருங் கூறினார்.



இந்த இரண்டு வெண்பாக்களாலும் கீழ்நோக்கிய ஐந்தவத்தை மேல் நோக்கிய ஐந்தவத்தை மத்தியாலவத்தை யென்னும் மூன்று விதமான அவத்தைகளைக் கூறினார். இவற்றில் கீழ் நோக்கிய ஐந்தவத்தை சகலத்திற் கேவலம், மேல்நோக்கிய ஐந்தவத்தை சகலத்திற் சுத்தம். மத்தியாலவத்தை சகலத்திற் சகலம்.

இந்த மூன்று அவத்தைக்கும் மூலமாகிய கேவல சகல சுத்தமெனப்படும் மூன்றவத்தைகள் உண்டு. அவற்றுள் உயிர் கருவிகளோடு கூடாது தனித்து நிற்பதாகிய தன்னுண்மை யெனப்படுங் கேவலத்தின் இயல்பு 'சகச மலத்துணராது' எனச் சூத்திரத்திற் கூறியதாற் பெறப்பட்டது. சகலத்தின் இயல்பு ஐந்தாஞ் சூத்திரத்திலும் சுத்தத்தின் இயல்பு ஆறாஞ் சூத்திரத்திலுங் கூறப்படும்.

நான்காஞ் சூத்திரம் முற்றிற்று.

★★★

# ஐந்தாஞ் சூத்திரம்

## பாச இலக்கணம்

இரண்டாஞ் சூத்திரத்தால் உண்டென்று சாதிக்கப்பட்ட பாசத்திற்கு இலக்கணம் இவ்வைந்தாஞ் சூத்திரத்தாற் கூறுகின்றார்.

***விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்***
***களந்தறிந் தறியா வாங்கவை போலத்***
***தாந்த முணர்வின் றமியருள்***
***காந்தங் கண்ட பசாசத் தவையே.*** என்பது சூத்திரம்.

**கருத்துரை**

***இவ்வான்மாக்களிடத்துத் தமது முதலுபகார முணர்ந்துத னுதலிற்று.***

**இ-ள் :** உயிர் ஐந்தவத்தைப்படு மிடத்து, அந்தக் கரணமும் உயிரும் அமைச்சரும் அரசனு மொப்ப நிற்பின், அவத்தையடைதற்கு அந்தக் கரணங்களே போதுமாதலால் முதல்வனால் ஆவதொன்றும் இல்லையோ வென்னும் வினா எழுமல்லவா? அதனால், ஐந்தவத்தைப் படுமிடத்தும் முதல்வனது உதவி இன்றியமையாது வேண்டப்படு மென்பதை அறிவிக்குமுகமாக, இரண்டாஞ் சூத்திரத்திற் கூறப்பட்ட துணைக் காரணமாகிய சிற்சத்தியின் வழியாய் வரும் கன்மத்தினதும் முதற் காரணமாகிய மாயையினதும் இலக்கணங் கூறுதல் இவ்வஞ்சாஞ் சூத்திரத்தின் கருத்து எ-று.

நாலாஞ் சூத்திரத்தில் ஆன்மா ஐந்தவத்தைப் படுமெனக் கூறி, இந்தச் சூத்திரத்தில் ஐந்தவத்தைப் படுமிடத்தும் முதல்வனது உபகாரம் வேண்டுமெனக் கூறப்படுகின்றது. இதனால் சூத்திரங்களுக் கிடையேயுள்ள தொடர்பு விளங்கும்.



மறைத்தற் றொழிலைச் செய்வதற்கு மாயை கன்மங்கள் திரோதான சத்திக்குக் கருவியாய், அத்திரோதான சத்தியினுள் அடங்கும். அதனால் திரோதான சத்தியின் இலக்கணங் கூறவே மாயை கன்மங்களின் இலக்கணமுங் கூறியவாறாயிற்று.

**இச் சூத்திரத்தின் பொருள் :** விளம்பிய உள்ளத்து மெய் வாய் கண் மூக்கு - மூன்றாம் நான்காஞ் சூத்திரங்களிற் கருவிகளோடு கூடியும் பிரிந்தும் அவத்தைப்படுமெனக் கூறப்பட்ட உயிரால் மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் இந்திரியங்கள், அளந்தறிந்து - தத்தமக்குரிய விடயங்களை அளவிட்டறிந்தும், அறியா - விடயங்களை அறியும் தம்மையும் தம்மை விடயங்களிற் செலுத்தும் உயிரையும் அறியமாட்டா, ஆங்கவை போல - அவ்விந்திரியங்கள் போல, தாம் - உயிர்களும், தம் உணர்வின் தமி அருள் - தமது அறிவுக்குத் துணையாகிய சிற்சத்தியால், அளந்தறிந்து அறியா - முன்னர்க் கூறப்பட்ட கீழாலவத்தை மத்தியாலவத்தைகளில் நின்று வினைப் பயனை அறிந்தனுபவிப்பினும் அனுபவிக்கும் தம்மையும் தம்மை விடயங்களிற் செலுத்தும் திருவருளையும் அறியமாட்டா, அவையே - உயிர்கள் (அவ்வாறுணர்தல்) காந்தங் கண்ட பசாசத்து - காந்தத்தைக் கண்ட இரும்பு அதன் சந்நிதி மாத்திரையில் இழுக்கப்படுவது போல கரணத்தாலன்றிச் சங்கற்பத்தினால் உயிரை அதிட்டித்து நிற்கும் முதல்வன் சந்நிதி மாத்திரையினால் நிகழும். ஆதலால் அது காரணமாக முதல்வன் விகார மடையான் எ-று.

'ஆதலால் அது காரணமாக முதல்வன் விகாரமடையான்' என்பது சூத்திரத்தில் இல்லையானாலும் 'காந்தங் கண்ட பசாசத்து' என்றதால் குறிப்பாகக் கொள்ளப்பட்டது.

செவி என்பது சூத்திரத்தில் இல்லை. மெய் வாய் கண் மூக்குக்கு இனமாதல் பற்றிச் செவியென்பது சொல்லெச்சமாய் வருவிக்கப்பட்டது.

மெய் வாய் கண் மூக்கு செவி என்பது உபலக்கணமாதலால் மற்றைய கருவிகளும் உயிரினால் தத்தம் விடயங்களை அறிந்தும் தம்மையும் உயிரையும் அறியமாட்டா வென்பது பெறப்படும். அதனாலேயே 'பொறி புலன் கரணமெல்லாம் புருடனாலறிந்து ஆன்மாவை அறிதரா' என அருணந்தி சிவாசாரியாருங் கூறினார்.

விடயங்களை அறியும் போது முதல்வன் உயிரோடு உடன் நின்று விடயங்களை அறியும்படி செய்வானாயின் உயிர் விடயங்களை

அறிவது போல முதல்வனையும் அறிய வேண்டு மென்பாரை நோக்கி, அளந்தறிந்து என்று கூறியதோ டமையாது அறியா என்றுங் கூறினார்.

ஆங்கவை என்பது ஒரு சொல்.

'தம்முணர்வின் தமி' என்றது தமது அறிவுக்குத் துணையாகிய முதல்வன் என்னும் பொருளைத் தருதலால் ஆறாம் வேற்றுமைத் தொகை. இவ்விடத்தில் அருளென்றது திரோதன சத்தியைக் குறிக்கின்றது. 'தமி அருள்' என்ற இடத்தில் வரும் அருள் என்பதை 'அருளால்' எனக் கொள்க.

உவமானத்தில் இந்திரியங்கள் தம்மையும் தம்மை விடயங்களிற் செலுத்தும் உயிரையும் அறியமாட்டா என்றதற் கேற்ப உயிர்களும் தம்மையும் தம்மை விடயங்களிற் செலுத்தும் திருவருளையும் அறியமாட்டா என உரையிற் கூறப்பட்டது.

இதில், 'விளம்பிய வுள்ளத்து மெய் வாய் கண், மூக்கு அளந்தறிந்து அறியா என்றது ஓரதிகரணம்' 'ஆங்கவை போலத் தாம் தம்முணர்வின் தமியருள் காந்தங் கண்ட பசாசத்தவையே' என்றது ஓரதிகரணம். எல்லாமாக இச்சூத்திரத்தில் இரண்டு அதிகரணங்கள் உண்டு.

## முதலதிகரணம்

### கருவிகளே விடயங்களை அறியுமென்பாரை மறுத்து ஆன்மாவால் கருவிகள் அறியுமெனக் கூறும் மேற்கோள்

***ஈண்டு ஐயுணர்வுகள் ஆன்மாவா லுணரு மென்றது.***

தாமரையிலையின் நீர்போற் புருடன் பற்றற்று நிற்க, புருடனின் சந்நிதியிற் புத்தி தத்துவமே ஐம்பொறிகளின் வழியாய் வரும் விடயங்களை அறியுமென்பதே பொருந்தும். அவ்வாறன்றிக் கருவிகளோடு கூடிப் புருடனே அவத்தைப்படுமெனக் கூறியது பொருந்தாதென்பர் ஒருசாரார். இவ்வாறு கூறுவோர் சாங்கிய நூலார். இதில் இந்திரியங்கள் விடயங்களை உயிரால் அறியுமோ புத்தி தத்துவத்தால் அறியுமோ என்பது ஐயம். இவ்வையப்பாட்டின் கண் புத்தி தத்துவத்தால் அறியுமென்பது பிறர் கூறும் பக்கம். அவர்களது கூற்றை மறுத்து இந்திரியங்கள் ஆன்மாவால் அறியுமென்கின்றது இந்த மேற்கோள்.



**இ-ள் :** இவ்வதிகரணத்தில் ஐம்பொறிகள் ஆன்மாவால் விடயங்களை அறியுமெனக் கூறப்படுகிறது.

இதில் விடயங்களை ஆன்மா அறிவதற்கேதுவான ஐம்பொறிகளை ஐயுணர்வுகள் என்று உபசாரமாகக் கூறினார்.

### இந்திரியங்கள் ஆன்மாவால் விடயங்களைக் காணும் என்பதற்குக் காட்டும் ஏது.

***அவற்றினான் ஆன்மா வொற்றித்துக் காணினல்லது அவை யொன்றையும் விடயியாவாகலான்.***

இந்திரியங்கள் உயிரினால் விடயங்களை அறியும் என்பதற்குப் பிரமாணம் என்னவென்னும் சாங்கியரை நோக்கி, மேற்கோளிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வேது.

**இ-ள் :** ஐம்பொறிகளோடும் உயிர் ஒற்றுமைப்பட்டு நின்று அறிந்தாலன்றி அவை ஒரு விடயத்தையும் அறியமாட்டா வாதலால், ஐயுணர்வுகள் ஆன்மாவாலுணருமென மேற்கோளிற் கூறப்பட்டது. எ-று.

அவற்றினான் என்றதிலுள்ள ஆன் உருபு கருவிப் பொருளில் வரவில்லை; உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது. அதனால், அவற்றினான் என்பதற்கு ஐம்பொறிகளோடும் என உரை செய்யப்பட்டது.

ஒன்றையும் என்றதிலுள்ள உம்மை ஒன்றையாவது என்னும் பொருளைத் தருதலால் இழிவு சிறப்பும்மை; எல்லாப் பொருளையுங் குறித்து முற்றும்மையுமாம்.

ஆன்மாவையின்றி இந்திரியங்களுக்கு விடயங்களை அறிய முடியாதென்பதை விளக்குவதற்காக, ஒற்றித்துக் காணினல்லது ஒன்றையும் விடயியாவென எதிர்மறை முகத்தாற் கூறினார்.

### இந்திரியங்கள் ஆன்மாவால் விடயங்களைக் காணும் என்பதற்குக் காட்டும் உதாரணம்

***ஐம்பொறியை யாண்டங் கரசா யுளநிற்ப***
***வைம்பொறிக ளுள்ள மறியாவா - மைம்பொறியிற்***
***காணாதேற் காணாது காணுமுளங் காணாதேற்***
***காணாகண் கேளா செவி.***

உயிர் இந்திரியங்களோடு ஒற்றுமைப்பட்டு நின்று இந்திரியங்களை விடயங்களிற் செலுத்துதலும் இந்திரியங்கள் உயிரையின்றி அறிய முடியாமையும் எதனாற் பெறப்படும் என்பாரை நோக்கி ஏதுவிற் கூறியதை வலியுறுத்துகிறது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** அரசாய் உளம் ஐம்பொறியை ஆண்டு அங்கு நிற்ப ஐம்பொறிகள் உள்ளம் அறியாவாம். காணும் உளம் ஐம்பொறியிற் காணாதேல் காணாது காணாதேல் காணா கண் கேளா செவி.

**இ-ள் :** அரசாய் - அரசன் அரச சபையில் இருந்து தன் கீழ்ப் பணிபுரிவாரை அவரவர்க்குரிய பணிகளைச் செய்யும்படி தூண்டி அரசியலை நடத்தும் முறைமை போல, உளம் ஐம்பொறியை ஆண்டு அங்கு நிற்ப -உளம் ஐம்பொறிகளை அவ்வவ் விந்திரியங்களுக்குரிய விடயங்களிற் செலுத்தி இலாடத் தானத்தில் நிற்றலால், ஐம்பொறிகள் உள்ளம் அறியாவாம் - அரசனால் ஏவப்பட்டோர் அரசன் ஏவிய கருமத்தைச் செய்வதன்றி அதற்கு மேலதிகமாக எதையுஞ் செய்யமுடியாதவாறுபோல ஐம்பொறிகள் உயிரை அறியமாட்டா வாயின, (அவ்வாறானால் ஐம்பொறிகள் உயிராலன்றி அறிய முடியாதாயினும் உயிர் ஐம்பொறிகளாலன்றியும் அறியக் கூடுமோ வெனின் கூடாது) காணும் உளம் ஐம்பொறியில் காணாதேல் காணாது காணாதேல் காணாகண் கேளாசெவி - (ஒரு கருமத்தைச் செய்வதற்கு அரசரும் மந்திரி முதலிய அரச பணி புரிவோரும் ஒருவருக்கொருவர் இன்றியமையாத வாறுபோல) அறியுந் தன்மை யுடைய உயிர் ஐம்பொறிகளை விடயங்களிற் செலுத்தி அறியாதாயின் ஒன்றையும் அறியமாட்டாது. உயிர் அறியாதாயின் கண் காணாது செவிகேளாது. இவ்வாறே மற்றைய பொறிகளும் தத்தம் விடயங்களை அறியமாட்டா எ-று.

உயிர் ஐம்பொறிகளையின்றி விடயங்களை அறியமாட்டா தென்பதை, அது ஐம்பொறிகளும் தொழிற்படாத சொப்பனத் தானத்தை அடைந்த பொழுது விடயங்களை அறியாமையாற் கண்டு கொள்க.

'மழை பெய்யக் குளம் நிறைந்தது' என்பது மழை பெய்ததால் குளம் நிறைந்தது எனக் காரணப் பொருளைத் தருவது போல, நிற்ப என்னும் செயவென்னும் வாய்பாட்டு வினையெச்சம் அரசாய் உளம் நிற்றலால் எனக் காரணப்பொருளைத் தருகின்றது.



அரசாய் உளம் நிற்ப என்றதிலுள்ள ஆய் என்பது, போல என்னும் பொருளைத் தருகின்றது.

## இரண்டாம் அதிகரணம்

### உயிர் முதல்வன் உபகாரமின்றி அறியும் என்பாரை மறுத்து முதல்வனாலேயே அறியுமெனக் கூறும் மேற்கோள்

***இனி இதுவுந் தமது முதலாலே யுணருமென்றது.***

அறிதற் கருவிகள் சடமாதலால் சித்தாகிய உயிரையின்றி விடயங்களை யறியாவாயினும், சித்தாகிய உயிர் அறிவதற்கு முதல்வனது உபகாரத்தை வேண்டி நிற்பதன்று. உயிருக்கு முதல்வனது உபகாரம் வேண்டப்படுமாயின் முதல்வனுக்கும் அவ்வாறே வேறொன் றின் உபகாரம் வேண்டப்படுமெனப்பட்டு மேலும் வரம்பின்றி யோடு மென்பர் ஒரு சாரார். இதில் உயிர்கள் முதல்வனால் உணருமோ தாமே உணருமோ என்பது ஐயம். இவ்வையப் பாட்டின் கண் தாமே உணருமென்பது பிறர் கூறும் பக்கம். இவ்வாறு கூறுவோர் ஈசுர அவிகாரவாதி முதலியோர். அவர்களை மறுக்குமுகமாகச் சூத்திரத்தின் பிற்பகுதியைப் பதச் சேதஞ் செய்து கூறப்பட்டது இந்த மேற்கோள்.

**இ-ள் :** இவ்வான்மாக்களும் தமது முதலாகிய இறைவனாலே அறியும் எ-று.

இதுவும் என்றதிலுள்ள உம்மை முதலதிகரணத்திற் கூறிய இந்திரியங்களே யன்றி இவ்வான்மாவும் என்னும் பொருளைத் தருதலால் இறந்தது தழுவிய எச்சம்.

அறிவிக்க அறிதலாகிய இம்முறைமை தமக்கொரு தலைவனை யுடையவற்றுக்கே யன்றி ஏனைப் பொருள்களுக் கின்மையின், தானே முதலாகிய இறைவனுக்கில்லை. அதனால் முதல்வனுக்கு ஒரு முதல் வேண்டுமெனப்பட்டு வரம்பின்றி யோடுமாறில்லை யெனக் கூறக்கருதி, முதலென்பதை இவ்வாக்கியத்திற் புணர்த்திக் கூறினார்.

### உயிர் முதல்வனாலேயே உணரும் என்பதற்குக் காட்டும் ஏது

இவ்வான்மாத் தன்னாலே யுணரு மிந்திரியங்களைப் போலத் தானுந் தன்னை யுணராது நிற்றலான்.

உயிர் ஐம்பொறிகளைப் போலச் சடமில்லாமையால் உயிரையின்றி அறியமாட்டாத இந்திரியங்களை எடுத்துக் காட்டி,

உயிரும் தமது முதலாலே உணருமென மேற்கோளிற் கூறியது பொருந்தா தென்பாரை நோக்கி, அவ்வாறு கூறியது பொருந்துமெனக் கூறி மேற்கோளை வலியுறுத்துகின்றது. இவ்வேது.

**இந்த ஏதுவின் பொருள் :** இவ்வுயிர்கள் தம்மாலே யுணரும் இந்திரியங்களைப் போலத் தாமும் தம்மையும் தம்முதல்வனையும் அறியாது நிற்குமாதலால் உயிர் முதல்வனாலேயே உணருமென மேற்கோளிற் கூறப்பட்டது பொருந்தும் எ-று.

**உயிர் முதல்வனாலேயே உணரும்**
**என்பதை வலியுறுத்தும் உதாரணம்**

***மன்னுசிவன் சந்நிதியின் மற்றுலகஞ் சேட்டித்த***
***தென்னு மறையி னியன் மறந்தாய் - சொன்ன சிவன்***
***கண்ணா வுளம்வினையாற் கண்டறிந்து நிற்குங்கா***
***ணெண்ணான் சிவனசத்தை யின்று.***

உயிரால் அறியும் இந்திரியங்களை உயிர் முதல்வனால் அறியுமென்பதற்கு உவமை கூறின், இந்திரியங்கள் அறிவதால் வரும்பயன் இந்திரியங்களோடு உடனின்றறியும் உயிருக்காதல்போல, உயிர் அறிதலால் வரும் இன்ப துன்பப் பயனும் உயிரோடுடன் நின்றறியும் முதல்வனுக்காதல் வேண்டுமென்பாரை நோக்கி, உயிர் அறிதலால் வரும் பயன் முதல்வனுக் காகாதெனக் கூறி, உயிர் முதல்வனால் அறியுமென்பதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** மன்னு சிவன் சந்நிதியின் உலகம் சேட்டித்தது என்னும் மறையின் இயல் மறந்தாய் உளம் சொன்ன சிவன் கண்ணா வினையால் கண்டு அறிந்து நிற்குங் காண் இன்று (ஆகலாற்) சிவன் அசத்தை எண்ணான்.

**இ-ள் :** மன்னு சிவன் சந்நிதியின் உலகம் சேட்டித்தது என்னும் மறையின் இயல் மறந்தாய் - (இந்திரியங்கள் உயிரால் அறியும் என்பதற்கு எடுத்துக்காட்டிய அநுமானப் பிரமாணமே யன்றி) நிலைபெற்ற சிவனது சந்நிதியில் உலகம் செயற்படுகின்றதென்று கூறும் வேதப்பொருளையும் அறியாது மயங்குகின்ற பேதையே, உளம் சொன்ன சிவன் கண்ணா வினையால் கண்டு அறிந்து நிற்குங் காண் - உயிரானது (தமக்கெனவோர் காரணமுமின்றி உயிரின் பொருட்டே அறியும் இந்திரியங்களைப் போலன்றி) வேதங்களாற் கூறப்படும் முதல்வன் தனக்குக் காட்டாகி நிற்ப உயிர் தான் செய்த



வினைக் கீடாக ஒன்றனை அறிந்து நிற்கும். (இவ் வேறுபாட்டை அறிவாயாக) இன்று (ஆகலாற்) சிவன் அசத்தை எண்ணான் (அங்ஙனம் காட்டாகி நிற்பினும் தனது சந்நிதியில் அசத்தாகிய பிரபஞ்ச மெல்லாம்) சூனிய மாதலால் மங்கள வடிவினனாகிய முதல்வன், உயிர்கள் அசத்தாகிய பிரபஞ்சத்தை அறிந்து அநுபவிப்பது போலத் தான் அவற்றை அறிந்து அனுபவியான் எ-று.

'மன்னு சிவன்' என்றது, நிலைபேறின்றி இறந்து பிறந்து இன்ப துன்பங்களை அனுபவிக்கும் உயிர்களைப் போலன்றி, இன்ப வடிவினனாய்ப் பேரின்ப காரணனாய் தனது சந்நிதிக்கண் உலகத்தைத் தொழிற்படுத்துபவன் என்பதை உணர்த்தி நின்றது. 'சொன்ன சிவன்' என்றது முற்றுணர்வினன் என்னும் பொருளைத் தந்து ஆன்மாக்களுக்கு அறிவிக்கும் உரிமையுடையவன் என்பதை உணர்த்திற்று. 'எண்ணான் சிவன்' என்றது தூய தன்மையன் என்னும் பொருளைத் தந்து, அசத்தை எண்ணாமைக்குக் காரணம் அது அவனெதிர் முனைத்துத் தோன்றாது என்பதை உணர்த்திற்று.

சிவனென்பது பேரின்பகாரணன், முற்றுணர்வினன் தூய தன்மையன் என்னும் மூன்று பொருள்களைத் தருமென்பதை சோமசம்பு பத்ததி வியாக்கியானம் முதலியவற்றுட் காண்க. சிவதத்துவ விவேகத்துள் சிவபெருமானுக்கு மூன்று விதமாக வணக்கங் கூறியதும் இப்பொருள் பற்றியேயாகும். சிவதத்துவ விவேகத்துட் கூறப்பட்ட வணக்கங்கள் வருமாறு:-

*(1)* "உலகெ லாந்தன தொருசிறு கூற்றினு ளமைய
வலகி லாற்றலா னிறைந்தவ னெனவரு ளூலோர்
குலவி யேத்துவோ னெவனவ னுமையொரு கூற்றி
னலர்க றைக்களச் சிவபிரா னடியிணை போற்றி" இது
முற்றுணர்வினன் என்னும் பொருளது.

*(2)* "செவியுற வாங்கி மோகத் திண்படை சிலையிற் பூட்டுங்
கவிகைவேள் மடியச் சற்றே கறுத்தியோ குறையும் பெம்மான்
குவிதழை நிறையப் பூத்த கோழிணர்ப் பதுமச் செங்கே
மூவிர்தரு விழித்தீக் கென்றன் வினையிலக் காகு மாலோ"
இருவினையின் கேடே பேரின்ப மாதலால் இது பேரின்ப
காரணன் என்னும் பொருளது.

(3) "திருமாலிந் திரன்பிரம னுபமனியன் றபன னந்தி செவ்வேளாதி
தருமமுது குரவருக்குந் தனதருளா லாசிரியத் தலைமை நல்கி
வருமெவர்க்கு முதற்குருவாய் மெய்ஞ்ஞான முத்திரைக்கைம்
மலரும் வாய்த்த
வுருவழகுங் குறுநகையும் காட்டியரு டருஞ் சிவனை யுளத்தில்
வைப்பாம்"

இது அநாதியே மலமில்லாமையினால் முதற்குருவாதலின் தூயதன்மையன் என்னும் பொருளது.

வெண்பாவில், உலகமென்றது உயிர்களை. மறையினியலும் பொருளை மறந்தாய் என்று கூற வேண்டியதை, மறையினியல் மறந்தாய் என்று கூறினார்.

மறையினியல் என்ற இடத்தில் உம்மையை விரித்து மறையினியலும் பொருளையும் மறந்தாய் எனக் கொள்க.

மறந்தாய் - மறந்தவனே. மறந்தாய் என்பது விளியுருபேற்ற பெயர்.

இவ்விடத்தில் சந்நிதியென்றது அவிகாரவாதிகள் கூறும் நேர்முகமாத்திரை யன்றென்பார், 'சொன்ன சிவன் கண்ணா' என்றார். வேதத்தைச் சொன்ன சிவன் என்றதனால், சந்நிதி என்பதற்கு, சும்மா இருக்குஞ் சிவனது முன்னிலை யெனப் பொருள் கொள்வாரை மறுத்தவாறாயிற்று. சிவசத்தி உயிர்களுக்குச் செய்ய வேண்டிய காரியங்களை நோக்குதலாகிய சங்கற்பமே சந்நிதியாம்.

காந்தங் கண்ட பசாசத்தவையே என்றது ஒரு புடை உவமை. இது, இரும்பு காந்தத்தின் சந்நிதியில் அசைவதற்குக் கூறப்பட்ட உவமையேயன்றி, சங்கற்பித்தற்குக் கூறப்பட்ட உவமையல்ல. முதல்வன் வியாபகன் ஆதலால் எவ்விடமும் அவன் சந்நிதியே யாகும். ஆதலால் முதல்வன் சந்நிதியில் என்பதற்கு, முதல்வனது சத்தியின் சங்கற்பமாகிய திருவருள் நோக்கத்தை அடைந்த பொழுது என்பது பொருள்.

வினையாற் கண்டறிந்து நிற்குமென்றதால் ஐம்பொறிகளுக்குப் போலன்றி அறிதற் பயன் உயிருக்கே யாதற்குக் காரணங்காட்டினார். காணுதலும் அறிதலும் ஒரு பொருளையே தருமாதலால், கண்டறிதல் ஒரு பொருட் பன்மொழி.



**உயிர் முதல்வனோடு நின்று உணரும் முறைமையை விளக்கி மேற்கோளை வலியுறுத்தும் உதாரணம்**

***வெய்யோ னொளியி லொடுங்கி விளங்காது***
***வெய்யோனை யாகாத மீன்போல - மெய்யவனிற்***
***கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனைக்***
***கண்டுடனாய் மன்னுதலைக் காண்.***

முதல்வன் உணர்த்த உயிர் உணருங்கால் உயிர் முதல்வனின் வேறாய் நின்றுணருமோ முதல்வனோடு ஒன்றாய் நின்றுணருமோ என்னும் வினாவுக்கு விடை கூறுமுகமாக, ஒன்றாதலும் வேறாதலு-மாகிய அவ்விரண்டியல்பு மின்றி நின்றுணரும் முறைமையை உணர்த்தி முதல்வன் உணர்த்த உயிர் உணருமென்பதை வலியுறுத்து-கின்றது இவ்வுதாரணம்

**கொண்டு கூட்டு :** வெய்யோன் ஒளியில் ஒடுங்கி விளங்காது வெய்யோன் ஆகாத மீன்போல கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலனை மெய்யவனில் கண்டு உடனாய் மன்னுதலைக் காண்.

**இ-ள் :** வெய்யோன் ஒளியில் ஒடுங்கி - சூரிய ஒளியில் ஒடுங்கி, விளங்காது - (சூரியனின் வேறாய்) விளங்கித் தோன்றாது, வெய்யோன் ஆகாத மீன்போல - சூரியனும் ஆகாத நட்சத்திரங்கள் (அச்சூரிய-னால் ஒளியுடையனவாதல் போல) கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலனை - கண்டும் கேட்டும் உண்டும் முகர்ந்தும் தொட்டும் அறியப்படும் ஐந்து விடயங்களையும், மெய்யவனில் கண்டு - உயிர் மெய்ப்பொருளாகிய முதல்வனால் அறிந்து, உடனாய் மன்னுதலைக் காண்- (வேறாதலும் ஒன்றாதலுமின்றி அவ்விரண்டுக்கும் பொதுவாய் அடங்கி) உடனாய் நிலை பெறுதலை அறிவாயாக எ-று.

இதில்,

| உவமானம் | உவமேயம் |
|---|---|
| சூரியன் | முதல்வன் |
| மீன் | உயிர் |

வெய்யோனை என்றதில் ஐகாரம் சாரியை. அதனால் அதை வெய்யோன் ஆகாத மீன்போல் எனக் கொள்க.

இவ்வெண்பாவுக்குரிய தோன்றா எழுவாய் உயிர். இது 'மன்னு சிவன் சந்நிதியில்' என்னும் தொடக்கத்தையுடைய வெண்பாவி-லிருந்து பெறப்பட்டது.

## உயிர்க்கு உணர்த்தும் வேறுபாட்டால் முதல்வன் விகாரியாகான் என்பதற்குக் காட்டும் உதாரணம்

***அருளுண்டா மீசற் கதுசத்தி யன்றே***
***யருளு மவனன்றி யில்லை - யருளின்***
***றவனன்றே யில்லை யருட்கண்ணார் கண்ணுக்***
***கிரவிபோ நிற்குமர னேய்ந்து***

முதல்வன் அறிவிக்க உயிர் அறியுமாயினும் உயிர்களுக்கு பல்வேறு வகைப்பட அறிவு நிகழ்வதால் அவ்வாறு நிகழ்தல் முதல்வன் அறிவிக்கும் வேறுபாட்டாலான தெனக் கொள்ள வேண்டும். அவ்வாறு கொண்டால் முதல்வன் நிர்விகாரியாவான் என்னுஞ் சுருதியோடு முரண்பட்டு அவன் விகாரியாவான் எனக் கொள்ள வேண்டி வருமென்பர் ஈசுர அவிகார வாதிகள். அவர்களை நோக்கி முதல்வன் விகாரியாகான் என்பதை உணர்த்தி, உயிர் அறிவிக்க அறியுமென்பதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** அருள் ஈசற்கு அன்றே உண்டாம் அது சத்தி அருளும் அவன் அன்றி இல்லை அவன் அருள் இன்று இல்லை அருட்கண்ணார் கண்ணுக்கு இரவிபோல் ஏய்ந்து நிற்கும் அரன்.

**இ-ள் :** அருள் ஈசற்கு அன்றே உண்டாம் - (உயிர்களுக்கு ஆணவ மறைப்பாலுண்டாகிய பசுத்துவத்தை நீக்கிச் சிவத்துவத்தை விளங்கச் செய்ய வேண்டுமென்னும்) இரக்கம் முதல்வனுக்கு அநாதியே யுள்ளது, அது சத்தி - அவ்விரக்கம் வேறுபொருளன்று முதல்வனுக்கு உளதாகிய வல்லமையே யாகும். அருளும் அவன் அன்றி இல்லை - (இரக்கமும் அவனும் குணமும் குணியுமாகலான்) அருள் இறை வனையின்றித் தனித்து நில்லாது, அவன் அருளின்று இல்லை - முதல்வனும் அருளையின்றித் தனித்து நில்லான், அருட் கண்ணார் கண்ணுக்கு இரவிபோல் ஏய்ந்து நிற்கும் அரன் - ஆணவம் அகன்ற ஞானக் கண்ணையுடையவர்களது அறிவுக்கு சூரியன் தன்னொளி யோடு தாதான்மியமாய் இயைந்து நிற்பது போல முதல்வன் அரு ளோடு தாதான்மியமாய் இயைந்து நிற்பன். (ஆதலால் தன்வயத் தனாகிய அம்முதல்வன் விகாரமின்றி நின்றே தனது சத்தியின் சங்கற்ப மாத்திரையினால் அனைத்தையுஞ் செய்தல் கூடும்) எ-று.

'ஆதலால் அனைத்தையுஞ் செய்தல் கூடும்' என்றது செய்யுளில் இல்லை. ஆனாலும் அது இரவிபோல் ஏய்ந்து நிற்கும் அரன் என்றதனாற் குறிப்பாகக் கொள்ளப்பட்ட குறிப்பெச்சம்.



அருளும் என்றதிள்ள உம்மை, அவனும் அருளின்று இல்லை எனப் பின்னர்க் கூறப்படும் பொருளைத் தழுவி நிற்றலால் எதிரது தழுவியது.

இன்றி என்பது காலங் காட்டாமையின் குறிப்பு வினையெச்சம். இதிலுள்ள இகரம் உகரமாகத் திரிந்து இன்று என நின்றது.

அன்றே என்பது அசை.

அருளும் முதல்வனும் தாதான்மிய சம்பந்தத்தாற் பிரிப்பின்றி நிற்கும் இவ்வியல்பு சித்தாந்த நெறியுணர்ந்தார்க் கன்றி விளங்கா தெனக் கூறக் கருதி 'அருட் கண்ணார் கண்ணுக்கு இரவிபோல் நிற்கும்' என்றார்.

சத்தியுண்டென்பதையும் அதன் இயல்பையும் இரண்டாஞ் சூத்திரம் நான்காம் அதிகரணத்தில் 'நீக்கமின்றி நிற்குமன்றே' என்னும் மேற்கோளிற் கூறியமையால் அவ்விடத்திற் காண்க.

ஐந்தாம் சூத்திரம் முற்றிற்று.

★★★

# ஆறாஞ் சூத்திரம்

## பதி இலக்கணம்

முதற் சூத்திரத்தால் உண்டென்று சாதிக்கப்பட்ட பதிக்கு இலக்கணம். இவ்வாறாஞ் சூத்திரத்தாற் கூறுகின்றார்.

***உணருரு வசத்தெனி னுணரா தின்மையி***
***னிருதிற னல்லது சிவசத் தாமென***
***விரண்டு வகையி னிசைக்குமன்னுலகே.*** என்பது சூத்திரம்.

**கருத்துரை**

***சத்தும் அசத்தும் வரைசெய் துணர்த்துத லுதலிற்று.***

**இ-ள் :** முன்னைய ஐந்து சூத்திரங்களிலும் கூறப்பட்ட பதி பசு பாசமென்னும் முப்பொருள்களுள் சத்து யாது, அசத்து யாதென்னும் ஐயத்தை நீக்குவதற்காக, சத்தின் இயல்பு இது அசத்தின் இயல்பு இதுவென மயங்காத வண்ணம், சத்தின் இலக்கணம் இது அசத்தின் இலக்கணம் இதுவென வரையறுத்துணர்த்தி, அவ்வாறு உணர்த்துதலால் உண்மை யதிகாரத்துக்குத் தோற்றுவாய் செய்யுமுகமாக, இலக்கண வியலுள் இதுவரை கூறாதெஞ்சி நின்ற பதிப்பொருளுக்கு இலக்கணங் கூறுதல் இவ்வாறாஞ் சூத்திரத்தின் கருத்து எ-று.

இதனால் சூத்திரங்களுக்கிடையேயுள்ள தொடர்பு விளங்கும்.

**இச்சூத்திரத்தின் பொருள்:** உணர் உருவெனின் - தம் உணர்வின் தமியாகிய முதற்பொருள் அளவைகளால் அறியப்படும் இயல் புடையதெனின், அசத்து - அளவைகளால்அறியப்படும் பிரபஞ்சம் போல அழிபொருளாகிய அசத்தாகும், உணராது எனின் - எவ்வாற் றானும் அறியப்படாத இயல்புடைய தெனின், இன்மையின் - முயற்கொம்புபோல இல்பொருளாகும் ஆதலால், இருதிறனல்லது - அறியப்படுதலும் அறியப்படாமையு மாகிய இருதன்மையுமின்றி (ஒருவகையால் அறியப்படுதலும் ஒருவகையால் அறியப்படாமையு-மாகிய), இரண்டு வகையின் சிவசத்தாமென - இருவகை இயல்பினை-யுடையது சிவசத்தாகுமென, இசைக்கும் மன் உலகே - உண்மை அறிவில் நிலைபெற்ற உயர்ந்தோராகிய உலகம் கூறும் எ-று.

உணருரு அசத்தெனின் என்பதை உணருரு வெனின் அசத்து என மாறுக. எனின் என்பது உணராது என்பதனோடுஞ் சென்று சேரும்.

இருதிறன், இரண்டுவகை என்னுமிடங்களில் முற்றும்மைகள் தொக்கன. அவற்றை விரித்து இருதிறனும் இரண்டு வகையானும் எனக் கொள்க.

முதல்வன் ஒருவாற்றான் அறியப்படாமையாவது பாசஞானம் பசு ஞானங்களால் அறியப்படாமை. ஒருவாற்றால் அறியப்படுத-லாவது சிவஞானத்தால் அறியப்படுதல். பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் அறியப்படாமையாற் சிவமாதலும் பதிஞானத்தால் அறியப்படுதலால் சத்தாதலும் பெறப்படுமென்பார் 'இரண்டு வகையிற் சிவசத்தாமென விசைக்கும்' என்றார். சிவசத்தென்பது இருபெயரொட்டுப் பண்புத் தொகை. சிவமாகிய சத்து என்பது இதன் பொருள். சடப்பொருளுஞ் சத்தாதலால் அதனின் நீக்குவதற்குச் 'சிவசத்து' என்றார். சிவசத்து - சித்துச் சத்து. தம்முணர்வின் தமியாகிய முதற்பொருள் என்னும் எழுவாய் முன்னைய சூத்திரத்திலிருந்து வருவிக்கப்பட்டது.

பாசஞான பசுஞானங்களால் அறியப்படான் என்றதனாற் சித்தாதலும் பதிஞானத்தால் அறியப்படுவன் என்றதனாற் சத்தாதலும் உடையனாய் நிற்றல் முதல்வனுக்கு இலக்கணமென இதனால் இலக்கணங் கூறியவாறாயிற்று.

இரண்டாஞ் சூத்திரத்திற் புதுச்சிருட்டி கூறுமுகமாக முதல்வனது பொதுவியல்பு பற்றிக் கூறினமையால் இச்சூத்திரத்திற் கூறப்படும் இலக்கணம் சிறப்பிலக்கணமெனக் கொள்க.

சிறப்பிலக்கணமாதலால் இதை இலக்கணவியலின் முதலிற் கூறாது, சிறப்பிலக்கணங் கூறும்உண்மையதிகாரத்தைச் சாரவைத்து இலக்கணவியலின் இறுதியிற் கூறினார். முதல்வனுக்குளதாகிய சிறப்புக் குணங்களெல்லாம் சித்துச் சத்து என்னும் இரண்டனுள் அடங்கும்.

சிவப்பிரகாசத்தில் "தன்னாலே தனையறிந்தாற் றன்னையும் தானே காணும்" என்றும் "உன்னரிய திருவருளை யொழிய மலமுளதென் றுணர்வரிதா மதனுண்மை தெரிவரிதா முனக்கே" என்றும் "மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை - யாயவா றுயிரின் மேவு மருளினி லொளியாய் நிற்கும்" என்றும் கூறியதனால் பசு பாசங்களும் ஞானத்தாலன்றிச் சிறப்பியல்பு பற்றி அறியப்படாவென்பது பெறப்படும். அதனால் பசு பாசங்களும் முதல்வனைப் போலச் சித்துச் சத்தாதல் கூடுமோவெனின், கூடாது. சிவஞான சித்தியாரில் "தீபமெனத் தெரிந்தாங் - கொருவி யான்மாவி னுண்மை யுணர்ந்தவர் தமையுணர்ந்தோர்- தருமிது பசு ஞானம்" என்றும் "இவை கீழ் நாடலாலே காதலினா னான்பிரம மென்னு ஞானங் கருது பசு ஞானம்" என்றும் பொதுவியல்பு பற்றிக் கூறுத-லினால் அவ்வாறுணரப்பட்ட பாசத்தினியல்பும் பசுவினியல்பும் பொதுவியல் பேயாகும். எனவே பசுவும் பாசமும் சிறப்பியல்பு பற்றிச் சிவஞானத்தால் உணரப்படுவதோடு பொதுவியல்பு பற்றிப் பசுஞானத்தாலும் உணரப்படும் என்றவாறாயிற்று.

யான் இதனை அறிந்தேன் அறிகின்றிலேன் என்னும் போது அறிதலும் அறியாமையும் கருவிகள் வாயிலாக நிகழ்வனவாகும். கருவிகள் பாசமாதலால் அவற்றால் வரும் ஞானம் பாசஞானம். யான் இதனை அறிந்தேன் என்னும் போது யான் என்பதனாற் பசுவையும் இதனை என்பதனாற் பாசத்தையும் பொதுவியல்பு பற்றிப் பாச ஞானத்தால் அறிதல் கூடும். ஆதலால் சிவஞானத்தாலன்றிப் பசுஞானத்தாலும் பாச ஞானத்தாலும் அறியப்படாத முதல்வனைப் போலப் பசு பாசங்கள் சித்துச் சத்தாகா.

பொதுவியல்பு பற்றிப் பசுஞானத்தாலும் பாசஞானத்தாலும் பசுவும் பாசமும் அறியப்படுமாதலால் அவை உணருருவெனப்பட்டு அசத்தாகாவோவெனின் ஆகா. உள்ளது காரியப்படு மென்னும் சற்காரிய வாதத்தைக் கூறும் சைவ சித்தாந்தத்தில் அசத்தென்பது சத்துக்கு மறுதலையான இன்மையன்று. பசு பாசங்கள் பசு ஞானத்தாலும் பாச ஞானத்தாலும் அறியப்படும் பொதுவியல்பு பற்றி அசத்தெனப் படுமாயினும் சிவஞானத்தால் அறியப்படும் சிறப்பியல்பு பற்றி அசத்தாகா என அறிக. சத்தென்பது எக்காலத்தும் ஒரே தன்மையாயிருப்பது. அசத்தென்பது எப்போதும் ஒரே தன்மையாய் இராதது.

பசு பாசங்கள் பொதுவியல்பால்அசத்தும் சிறப்பியல்பால் சத்துமாதல் போலன்றி காரியப்பிரபஞ்சம் கண்ணாற்



காணப்படுவதாய் எவ்வளவு காலம் நிலைபெறுமென அறியப்படாது நிலைபெறுவது போலத் தோன்றி விரைவிற் கெட்டு மறைந்து போகும் இயல்புடைமை பற்றி அசத்தேயாகும். இக்காரியப் பிரபஞ்சமே இச்சூத்திரத்தில் உணருரு அசத்தெனக் கூறப்பட்டது. அசத்தென்றதால் அறிவில்லாத சடமென்பதும் பெறப்படும்.

இச்சூத்திரத்தில் உணருரு வசத்தெனி னுணராதின்மையி னென்றது ஓரதிகரணம். இரு திறனல்லது சிவசத்தாமென இரண்டு வகையி னிசைக்கு மன்னுலகே யென்றது ஓரதிகரணம். எனவே

இச்சூத்திரத்தில் இரண்டு அதிகரணங்கள் உண்டு.

## முதலதிகரணம்

### சுட்டறிவினால் அறியப்படும் பொருள் அசத்தெனக் கூறும் மேற்கோள்

***ஈண்டு அறிவினா லறியப்பட்ட சுட்டு அசத்தென்றது.***

ஐந்தாம் சூத்திரத்தில் தம்மையும் தம்மை விடயங்களிற் செலுத்தி நிற்கும் முதல்வனையும் உயிர்கள் அறியமாட்டாவெனக் கூறியதோ டுடம்படாது, பிரபஞ்சம் அளவைகளால் அளந்தறியப்படுவது போல, முதல்வனும் அளந்தறியப் படுவனென ஒரு சாராரும் எல்லாப் பொருளும் சத்தாதலால் அளந்தறியப்படும் பொருளும் சத்தே யாகுமென இன்னொரு சாராருங் கூறுவர். இவ்வதிகரணத்தில் முதல்வன் சுட்டியறியப்படுவனோ சுட்டியறியப்படானோ வென்பதும் சுட்டறிவினால் அறியப்படும் பொருள் சத்தோ அசத்தோ என்பதும் ஐயம். முதல்வன் சுட்டியறியப்படுவனென்பதும் சுட்டியறியப்படும் பொருளும் சத்தேயென்பதும் பிறர் கூறும் பக்கம். முதல்வன் சுட்டியறியப்படுவன் என்போர் நையாயிகர். சுட்டியறியப்படும் பொருளும் சத்தே என்போர் சாங்கியர். இவர்களை மறுக்கு முகமாகச் சூத்திரத்தின் முதற் கூற்றைப் பதச்சேதஞ் செய்து கூறப்பட்டது இந்த மேற்கோள்.

**இ-ள் :** மனத்தாற் கருதியறிவதாகிய சுட்டறிவினால் அறியப்பட்ட சுட்டுப் பொருளெல்லாம் அசத்து எ-று.

சிவஞானத்தால் அறியப்படுவதை நீக்குவதற்காக, சுட்டு என்பதற்கு அறிவினால் அறியப்பட்ட என்னும் அடையைக் கொடுத்தார்.

இவ்விடத்தில் அறிவென்றது ஒருபொருளை அறிய முற்பட்டு அதுவதுவாகச் சுட்டியறியும் கருவிகளோடு கூடிய அளவை அறிவை. இதை, "அறிவினா லறிந்த யாவும் அசத்தாதலறிதி" எனப் புடை நூலாசிரியர் சிவப் பிரகாசத்திற் கூறியதாலறிக.

**சுட்டியறியப்படும் பொருள் அசத்தென்பதற்குக்காட்டும் ஏது**

***அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்.***

சுட்டியறியப்படும் பிரபஞ்சம் உள்ளதென்றுணரும் உணர்வி-னால் அறியப்படும் பொருளாயிருந்து உள்ளதென்றுணரும் உணர்வை (உபலத்தியை) உண்டு பண்ணும். அப்பிரபஞ்சமே இல்லை யென்றுணரும் உணர்வுக்கு விடயமாய் இல்லை யென்றுண-ரும் உணர்வை (அநுபலத்தியை) உண்டு பண்ணும். இப்பிரபஞ்சத்தை இல்பொருளோடொப்ப அசத்தென்று மேற்கோளிற் கூறியது எவ்வாறு பொருந்துமென்னும் நையாயிகரையும், சத்தாகிய பிரபஞ்சத்தைச் சுட்டியறியப்படுதல் காரணமாக அசத்தென்பது உள்ளது காரியப்படுமென்னும் சற்காரிய வாதத்துக்கு இழுக்காகு-மென்னும் சாங்கியரையும் மறுக்குமுகமாக மேற்கோளிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வேது.

**இ-ள் :** சுட்டுப்பொருளாகிய பிரபஞ்சம் இராசதகுண மிகுதியாற் சிருட்டியைச் செய்யும் பிரமாவினாற் படைக்கப்பட்டபொழுது உள்ளதென்னும் உணர்விற்கு விடயமாய்க் காணப்பட்டு உபலத் தியை உண்டு பண்ணும். அப்பிரபஞ்சம் தாமதகுண மிகுதியாற் சங்காரத் தொழிலைச் செய்யும் உருத்திரனால் அழிக்கப்பட்ட பொழுது இல்லையென்றுணரும் உணர்விற்கு விடயமாய் அநுபலத் தியை உண்டு பண்ணும். ஆகவே உள்ளதென்றுணரப்படும் பிரபஞ்சமே இல்லையென்றுணரவும்படும். அதனால் 'ஈண்டறிவினா லறியப்பட்ட சுட்டு அசத்தென மேற்கோளிற் கூறப்பட்டது எ-று

இந்த ஏதுவில் பிரகாசம் அப்பிரகாச மென்பன முறையே உண்டு என்றுணரும் உணர்வையும் (உபலத்தியையும்) இல்லையென்-றுணரும் உணர்வையும் (அநுபலத்தியையும்) குறித்து, அவ்வுணர்வு-கள் தொழிற்படுவதற் கிடமாகிய பொருள்கள் மேல் நின்றன. இவ்வாறு இந்த ஏதுவுக்குக் கூறியபொருள் நையாயிகரை மறுக்கு-முகமாகக் கூறப்பட்டது.

இனி, சூத்திரத்தை இரட்டுற மொழிந்து, உள்ளதாகிய பிரபஞ்சத்தைச் சுட்டப்படுதல் காரணமாக அசத்தென்று கூறுதல்



பொருந்தாதென்னும் சாங்கியரை மறுக்குமுகமாகக் கூறப்படும் பொருள் வருமாறு:-

அச்சுட்டுப் பொருள்கள் காரியப்பொருள்களாய் நிற்கும் அவத்தையில் தூலமாய் விளங்கித் தோன்றிக் காணப்படும் பொருளாயிருந்து விரைவில் மறைந்து சூக்குமமாய்க் காரணப் பொருளாய் நிற்கும் அவத்தையில் விளங்கித் தோன்றாதாகும். இவ்வாறு விளங்கித் தோன்றுதல் விளங்கித் தோன்றாமை ஆகிய வேற்றுமை யுடைமையால், காரணாவத்தையில் விளங்கித் தோன்றாமையால் சுட்டியறியப்படாது, காரியாவத்தையில் விளங்கித் தோன்றுதலால் அசத்தாதல் கூடும். காரணாவத்தையில் இல்லாதது காரியமாகத் தோன்றாதாதலால் எல்லாப் பொருஞ் சத்தென்று சைவசித்தாந்தங் கூறும்.

**சுட்டியறியப்படும் பொருள்கள் அசத்தென நையாயிகருக்குக் காட்டும் உதாரணம்**

***அசத்தறியாய் கேணீ யறிவறிந்த வெல்லா***
***மசத்தாகு மெய்கண்டா னாயின் -***

சில சுட்டுப் பொருள்கள் அசத்தாயினும் உள்ளதெனக் காணப்பட்ட (உபலத்திப்பட்ட) பொருள்களெல்லாம் அசத்தாகு மென்று கூறுவதற்குப் பிரமாணமென்ன வென்பர் நையாயிகர். அவர்களுக்கு விடைகூறுமுகமாக ஏதுவிற் கூறியதை வலியுறுத்துகிறது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** அசத்து அறியாய் நீ கேள் மெய்கண்டான் ஆயின் அறிவு அறிந்த எல்லாம் அசத்து ஆகும்.

**இ-ள் :** அசத்து அறியாய் நீ கேள் - அசத்தின் இயல்பு இதுவென்றறி யாத அறிவில்லாதவனே நான் கூறுவதை மனம்பற்றிக் கேட்பாயாக, மெய்கண்டான் ஆயின் அறிவறிந்த எல்லாம் அசத்தாகும் - சத்தின் இயல்பு இதுவென் றறிந்தோன் ஆராய்ந்து பார்ப்பானாயின் சுட்டறிவினால் அறியப்பட்டனவெல்லாம் அசத்தேயாம் எ-று.

அறியாய் என்பது விளியுருபேற்றபெயர்.

அசத்தின் இயல்பை அறிந்தாயாயின் இவ்வாறு சில பொருள்கள் அழியும் சில பொருள்கள் அழியாவென்று பிணங்கமாட்டா யென்பதை உணர்த்த வேண்டி அசத்தறியாய் என்றும், அசத்தின் உண்மையை அறிய விரும்புவோன் சிவபெருமான் திருவருளையே தாரகமாகக் கொண்டு நின்று கேட்க வேண்டுமென்பதை உணர்த்த

வேண்டிக் 'கேணி' என்றும், உள்ளதென் றுணரும் உணர்விற்கு விடயமானவை யெல்லாம் இல்லை யென்றுணரும் உணர்விற்கு விடயமாவ துறுதியெனக் கூறவேண்டி அறிவறிந்த வெல்லாம் அசத்தாகுமென்றும், சத்தின் இயல்பை உணர்ந்தவர்களா லல்லது அசத்தின் இயல்பை உணரமுடியாதெனக் கூறவேண்டி மெய்கண்டான் என்றும், அசத்தின் இயல்பை ஆராய்தலருமையெனக் கூற வேண்டி ஆயின் என்றுங் கூறினார்.

**சுட்டியறியப்படும் பொருள்கள் அசத்தெனச் சாங்கியருக்குக் காட்டும் உதாரணம்**

***அசத்தலாய்***

***நீரி லெழுத்து நிகழ்கனவும் பேய்த்தேரு***

***மோரினவை யின்றாமா றொப்பு***

ஈண்டு அறிவினா லறியப்பட்ட சுட்டு அசத்து என்னும் மேற்கோளையும் அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான் என்னும் ஏதுவையும் இரட்டுற மொழிந்து எல்லாப் பொருளும் அசத்தென்னும் சாங்கியரை நோக்கி, காரியப் பிரபஞ்சம் அசத்தென்று முன்னர்க் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** அசத்தலாய் அவை இன்றாம் ஆறு ஒப்பு ஓரின் நிகழ் நீரில் எழுத்தும் கனவும் பேய்த்தேரும்.

**இ-ள் :** அசத்து அலாய் - அசற்காரிய வாதியல்லாத சற்காரியவாதி யாகிய அறிவுடையோனே, அவை இன்றாம் ஆறு ஒப்பு ஓரின் - தோன்றி மறைவதாகிய பிரபஞ்சம் அசத்தாம் என்பதற்கு உவமை ஆராயுமிடத்து, நிகழ் நீரில் எழுத்தும் கனவும் பேய்த் தேரும் - நிகழ்கின்ற நீர்மேலெழுத்தும் கனாக் காட்சியும் பேய்த்தேருமாம் எ-று.

நீரிலெழுத்து எழுதும் போதும் கனா காணும் போதும் கானல் காணப்படும் போதும் உள்ளது போலத் தோன்றி, சடுதியில் மறைந்து போகுங் காரணத்தால் அவை அசத்தென்பதை எல்லோரும் ஒப்புக் கொள்வர். எனவே அவற்றைப் போலச் சடுதியில் மறைந்து போகும் இயல்புடைய பிரபஞ்சத்தையும் அசத்தென்பது பொருந்தும் என்றவாறாயிற்று.

அசற்காரியவாதி யல்லாதாய் என்று கூறவேண்டியதை அசத்தலாய் என்றார். நீரிலெழுத்து முதலியன பொய்யென்பாரை



மறுக்கும் பொருட்டு நிகழ் நீரிலெழுத்து என்றார். நிகழ் என்னும் அடை கனவு பேய்த்தேர் முதலியவற்றோடுஞ் சென்று சேரும்.

இன்றாமாறு என்றதில் குவ்வுருபு தொக்கு நின்றது. அதை விரித்து இன்றா மாற்றிற்கு எனக் கொள்க.

நீரிலெழுத்துத் தோன்றிய போதே மறைந்து போதற்கும், கனா முடிவு பெறுதலின்றி இடையிலே மறைந்து போதற்கும், பாலை நிலத்தில் முதுவேனிற் கால நண்பகலிற் றோன்றி சூரியகிரணம் முகிற் படலத்தால் மறைக்கப்படும் போது தானும் மறைந்து போகும் பேய்த் தேர் ஒரு காரணங்காட்டி மறைந்து போவதற்கும் உவமையாயின.

இவ்வெண்பாவை இரண்டு தொடராக வைத்து, மேற்கோளை யும் ஏதுவையும் இருட்டுற மொழிந்து கொண்டு நையாயிகர் சாங்கியர் என்னும் இரு மதத்தவரையும் மறுக்குமுகமாக இரண்டதிகரணப் பொருள் கொள்ளுதலே நூலாசிரியரின் கருத்தாகும். இதனை 'அசத்தாஞ் சுட்டி யுணர்பொருளான வெல்லாம்' என்றும் 'உலகினை அசத்துமென்பர்' என்றும் கூறியதனாலு மறிக.

ஒருவாற்றானு முணரப்படாத பொருள் சூனிய மென்பதை எல்லாச் சமயத்தாரும் ஒப்புக் கொள்வர். அதனால், 'உணரா தின்மையின்' என்று சூத்திரத்திற் கூறியதில் ஐயமோ பிறர் கூறும் பக்கமோ அதை மறுத்துரைக்க வேண்டிய தேவையோ இல்லை. ஆகவே 'உணராதின்மையின்' என்றதை வேறோர் அதிகரணமாக வைக்கவேண்டியதேவை ஏற்படவில்லையானாலும். மந்த உணர் வுடையார்க்கு, உணராத பொருள் சூனியமோ அன்றோ என்னும் ஐயம் நிகழுமாதலால் வழிநூலாசிரியர் சித்தியாரில், உணராத பொருள் சத்தென்னில் ஒரு பயனில்லைப் போலுமெனக் கூறினார்.

## இரண்டாம் அதிகரணம்

### முதல்வன் இயல்பு வாக்கு மனாதீத கோசரமெனக் கூறும் மேற்கோள்

***'இனி இவ்விரண்டு தன்மையுமின்றி வாக்கு மனாதீத கோசரமாய் நின்றவதுவே சத்தாயுள்ள சிவமென்றுணரற் பாற்று'***

சூத்திரத்தில் உணரப்படும் பொருளினியல்பு அசத்தெனவும் உணரப்படாத பொருளினியல்பு சூனியமெனவுங் கூறுமுகமாக அசத்தினியல்பை வரையறுத்து உணர்த்தியவழி அறியப்படும்

பொருளும் அறியப்படாத பொருளும் முறையே அசத்தும் சூனியமு மாகலான். இவற்றின் வேறான முதல்வனதியல்பு உணரப்படு மென்றாவது உணரப்படா தென்றாவது உறுதியாகக் கூற முடியாத அநிர்வசனம் போலுமென்பர் ஒரு சாரார். இதில் முதல்வனது இயல்பு உறுதியாகச் சொல்லக்கூடியதோ உறுதியாகச் சொல்லக் கூடாத அநிர்வசனமோ என்பது ஐயம். இவ்வையப்பாட்டின்கண் அநிர்வசனமென்பது பிறர்கூறும் பக்கம். இவ்வாறு கூறுவோர் மாயாவாதிகள். அவர்களை மறுக்கு முகமாக சூத்திரத்தின் பிற்கூற்றைப் பதச்சேதஞ் செய்து கூறப்பட்டது இந்த மேற்கோள்.

**இ-ள் :** இவ்விரண்டு தன்மையுமின்றி - உணருருவாந் தன்மையும் உணராதாந் தன்மையுமின்றி, வாக்கு மனாதீத கோசரமாய் நின்ற - பாசஞானத்திற்கும் பசுஞானத்துக்கும் எட்டாததாய் சிவஞானத்தால் அறியப்படுவதாய் நின்ற, அதுவே சத்தாயுள்ள சிவமென்றுணரற் பாற்று - அப்பொருளே சத்தாயுள்ள சிவமென்று உணரும் தன்மையுடையது எ-று.

பிருதிவி முதல் வாக்கென்று சொல்லப்படும் நாதத்துவம் ஈறாகவுள்ள தத்துவங்களால் ஆன்மாவுக்கு நிகழும் ஞானத்தை இந்த மேற்கோளில் வாக்கென்று உபசரித்துக் கூறினார். ஆன்மா தத்துவங்களைக் கடந்து பதியைச் சாராது நிற்கும் நிலையில் தானே முதலென்றுணரும். அவ்வாறுணருங் காலத்து ஆன்மாவுக்குக் கருவியாய் நிற்பது மனமேயானாலும் அது கருவியாகக் காணப்படாமல் சூக்குமமாய் அடங்கி ஆன்மாவாகவே நிற்கும். இவ்வாறு மனமும் ஆன்மாவும் வேற்றுமையின்றி நிற்குமென்பதை "புந்தியை மனம தென்றும் மனமது புந்தி யென்றுஞ் சிந்தையைச் சீவ னென்றுஞ் சீவனைச் சிந்தை யென்றும்.... வந்திடும்" எனச் சித்தியார் கூறுவதாலறிக. இவ்வாறு மனத்தைக் கருவியாகக் கொண்டு ஆன்மா தானே முதல்வனென் றுணர்தல் பசுஞானம். அதனால் பசுஞானத்தை மனமென்று உபசரித்துக் கூறினார்.

'வாக்கு மனாதீத கோசரமாய் நின்ற அது' என்றது வாக்கு மனம் என்னும் இரண்டினதும் விருத்திகளைக் கடந்து அவற்றுக்கு எட்டாததாயும் ஒற்றுமைப்பட்டு நின்றுணரும் அநுபவ ஞானத்துக்கு எட்டுவதாயும் நின்ற அது என்னும் பொருளைத் தருகின்றது.

அவ்வாறு நின்ற பொருள் இதுவெனக் காண்டல், கருதல், உரையென்றும் அளவைகளால் அறிய முடியாமையால், அப்பதிப்



பொருளை அதுவென மகாவாக்கியம் கூறியதை அநுவதித்துக் கூறி அப்பொருள் சத்தாகிய சிவமேயாகு மென்பதை அறிவுறுத்தினார்.

வாக்கு மானாதீதப் பொருளாதலின் உணரப்படும் பொருளாதலில்லை. கோசரப் பொருளாதலின் உணரப்படாத பொருளாதலில்லை யென்பது பெறப்படுதலின் இவ்விரண்டு தன்மையுமின்றி என்றார்.

சிவப்பொருளைச் சொற்களால் அறிய முடியாதென்பதையும் உணர்வால் அறிதலும் அருமை யென்பதையும் உணர்த்த வேண்டி உணரற் பாற்று என்றார்.

## முதல்வன் இயல்பு வாக்கு மனாதீத கோசரம் என்பதற்குக் காட்டும் ஏது.

***பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்க வேண்டுவ தின்மையாலும் அப்பிரகாசத்தினுக்குப் பிரகாச மின்மையாலும்.***

உணரப்படுதல் உணரப்படாமை என்னும் இரண்டு தன்மையும் இல்லாத பொருளை, உறுதியாய் இத்தன்மையுடைய தென்று சொல்லக்கூடாத அநிர்வசனமாய் நிற்பதென்னாது வாக்கு மனாதீத கோசரமாய் நிற்பதென மேற்கோளிற் கூறியதற்குப் பிரமாண மென்னவென்னும் மாயாவாதிகளை நோக்கிப் பிராமணங் கூறி மேற்கோளிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வேது.

**இ-ள் :** இத்தன்மை யுடையதென்று உறுதியாக வாக்காற் சொல்லப் படுவதாயும் மனத்தால் உணரப் படுவதாயுமுள்ள பொருளைச் சாதனவியலிற் கூறப்படும் சாதனங்களால் அறியவேண்டாம். ஒருவாற்றானும் அறியப்படாத, இத்தன்மையுடையதென உறுதியாகச் சொல்லக்கூடாத பொருளைச் சாதனையால் அறிய முடியாது. ஆதலால் இனி இவ்விரண்டு தன்மையுமின்றி வாக்கு மனாதீத கோசரமாய் நின்ற அதுவே சத்தாயுள்ள சிவமென்று உணரற் பாற்றென மேற்கோளிற் கூறப்பட்டது எ-று.

இதில் விளங்கித் தோன்றும் பொருளைப் பிரகாசமென்றும் விளங்கித் தோன்றாத சூனியத்தை அப்பிரகாசமெனவும் உபசாரமாகக் கூறினார்.

## முதல்வன் சிவஞானத்திற்குக் கோசரப்படும் பொருள் என்பதற்குக் காட்டும் உதாரணம்

***எண்ணிய சத்தன் றசத்தன்றா மென்றாலென்***
***கண்ணி யுளதென்றன் மெய்கண்டா - னெண்ணி***
***யறிய விரண்டா மசத்தாதல் சத்தா***
***மறிவறியா மெய்சிவன்றா ளாம்.***

பரமார்த்தமாகிய பரப்பிரமப் பொருள் அஞ்ஞானத்தோடு கூடியதால் அறிபவனாகிய சீவனெனவும் அறியப்படுவதாகிய பிரமமெனவும் பகுக்கப்படும். இவற்றுள் சீவன் சாதனவியலிற் கூறப்படுஞ் சாதனங்களினின்று பிரமத்தை அறியவுங் கூடும். அஞ்ஞானம் நீங்கியவிடத்து சீவன் பிரமம் என்னும் பகுப்பின்மையாற் பிரமப் பொருள் ஒருவாற்றானும் சத்தென்றாவது அசத்தென்றாவது அறியப்படுதலின்றித் தனித்த ஞான மாத்திரையேயாய் நிற்குமாதலால் அது அறியப்படுமென்று கூறுதல் பொருந்தாதென்பர் மாயாவாதிகள். அவர்களை நோக்கிப் பிரமப் பொருள் அறியப்படுமென்பதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டுகூட்டு :** எண்ணிய சத்து அன்று அசத்து அன்று என்றால் உளது என்றல் என் கண்ணி மெய்கண்டான் எண்ணி அறிய இரண்டு அசத்து ஆம். ஆதல் சத்து ஆம் அறிவு அறியா மெய் சிவன் தாள் ஆம்.

**இ-ள் :** எண்ணிய சத்து அன்று அசத்து அன்று என்றால் உளது என்றல் என் கண்ணி - பரப்பிரமப் பொருள் கருதப்பட்ட சத்துமன்று அசத்துமன்று என்றால் அவ்வாறானதொரு பொருள் உளது என்று கூறுதல் எந்தப் பிரமாணத்தைக் கொண்டு, (பிரமாணம் உண்டெனின் பிரமம் அந்தப் பிரமாணத்தால் அளக்கப்படும் பொருளாய் அறியப்படும். அறியப்படவே பிரமத்தை அசத்தென்று கூறவேண்டி வருமென்றஞ்சிப் பிரமாணம் இல்லை யென்பையாயின்) மெய்கண்டான் எண்ணி அறிய இரண்டு அசத்து ஆம் - சத்தின் இயல்பை அறிந்தோன் ஆராய்ந்து அறியின் பிரமாணங்களால் அறியப்படுவதும் ஒருவாற்றானு மறியப்படாத சூனியமுமாகிய இரண்டும் அசத்தேயாம், ஆதல் சத்து ஆம் அறிவு அறியா மெய் சிவன் தாளாம் - ஆதலால் சாந்தோக்கிய முதலிய உபநிடதங்களாற் சத்தென்றோதப்படும் சுட்டறிவினால் அறியப்படாத மெய்ப்பொருள் (சைவ உபநிடதங்களிலும் சைவாகமங்களிலும் அந்நியமின்றி நின்றுணரும் அநுபவ ஞானத்துக்கு எட்டுவதென்று கூறப்படும்) சிவனருளாவதன்றி நீ கூறும் சூனியன்று எ-று.



'இரண்டாமசத்து' என்றதிலுள்ள ஆம் என்பது அசை. அறிய என்னும் செய என்னும் வாய்பாட்டு வினையெச்சம் 'மழை பெய்யக்குளம் நிறையும்' என்றதிற் போல, அறியின் என்னும் பொருளைத் தருகின்றது.

இரண்டு என்பதில் முற்றும்மை தொக்கு நின்றது. அதை விரித்து இரண்டும் என்க. இரண்டா மசத்து என்றதை, இரண்டு அசத்தாம் என மாறுக.

சிவனருளைச் சிவன் தாளெனக் கூறியது உபசாரம். சித்தியார்ப் பாயிரத்தில் 'இறையனார் கமலபாதம்' என்றதும் உபசாரம்.

**இவ்வெண்பாவிற் கூறியபொருள் :** சத்துமல்லாத அசத்துமல்லாத ஒரு பொருள் உண்டெனில் அப்பொருள் உண்டென்பதற்குப் பிரமாணமென்ன வென்னும் வினாவுக்கு அது அளவைகளால் அளக்கப்படாத சூனியமாமென விடை கூறின், சூனியமும் அழிபொருளுமாகிய இரண்டும் அசத்தேயாகு மென்பது முன்னர்ச் சாதிக்கப்பட்டமையால், பிரமப் பொருள் அசத்தெனப்பட்டு, பிரமம் சத்தென்னும் சுருதிகளோடு முரணும். ஆதலால் சுருதிகளிற் சத்தென்றோதப்படும் பரப்பிரமப் பொருள் உண்மை ஞானத்தால் அறியப்படுமென யாங்கூறும் சிவமேயன்றி நீ கூறும் சூனியமன்றெனக் கூறி மாயாவாதியை மறுத்துக் கோசரமென மேற்கோளிற் கூறியதை இவ்வுதாரணம் வலியுறுத்தியவாறு காண்க.

## முதல்வன் வாக்கு மனாதீதப் பொருள் என்பதற்குக் காட்டும் உதாரணம்

***உணர்ப வசத்தாத லொன்றுணரா தொன்றை***
***யுணருநீ தானுணரா யாயி - னுணருமுனிற்***
***றானிரண்டா மெய்கண்டான் றன்னா லுணர்தலாற்***
***றானிரண்டாய்க் காணான் றமி.***

முன்பறிந்த பொருளைப் பின்னர் வேறொரு வழியால் அறிய வேண்டுமென்னும் விருப்பம் வந்தவிடத்து, அவ்வழியாலும் புதிதாய் அப்பொருள் அறியப்பட வேண்டுமாதலால், அறிந்த பொருளை அறிய வேண்டுவதில்லை யென்னும் பொருள்பட ஏதுவிற் கூறியது எவ்விடத்துஞ் செல்லாதாதலால், மேற்கோளில் வாக்கு மனாதீத-மென்று கூறியது பொருந்தாதென்பர் நையாயிகர். அவர்களை மறுக்கு-முகமாக, வாக்கு மனாதீத மென்றதனை வலியுறுத்துகிறது இவ்வுதாரணம்.

**இ-ள் :** உணர்ப அசத்து - உன்னால் அறிவனவாகிய கருவிகளெல் லாம் நான்காஞ் சூத்திரத்திற் கூறியவாறு அசத்தாம், (அசத்தென்றத னால் அறிவில்லாதவை என்பதும் பெறப்படும்) ஆதல் ஒன்று ஒன்றை உணராது - ஆதலால் ஒரு கருவியும் ஒன்றாகிய முதற்பொருளை அறியமாட்டாது, உணரும் நீ தான் உணராய் - அக்கருவிகளால் அறிகின்ற நீ தானும் முதற்பொருளை அறியமாட்டாய், ஆயின் - ஆராய்ந்து அறிவாயானால், உணரும் உனில் இரண்டாம் - (கருவிகளால் அறியப்படும் பொருள் உனக்கு வேறாதல் போல) முதற் பொருளும் உனக்கு வேறாகும், மெய்கண்டான் தன்னால் உணர்தலால் இரண்டாய்க் காணான் தமி - உயிருக்கு அறிவு விளங்கும் உண்மையை அறிந்தோன் தன்னறிவு அச்சிவனருளில் அடங்கி அவ்வருளாய் நின்று அவ்வருளாலே சிவத்தை அறிவனாத லால் ஏனைய பொருள்களை அவற்றின் வேறாய் நின்றறிவது போல அத்தனி முதற்பொருளை வேறாய் நின்று அறியமாட்டான் எ-று.

ஒன்றுணராது என்றவிடத்தில் முற்றும்மை தொக்கு நின்றது. அதைவிரித்து ஒன்றும் (ஒரு கருவியும்) என்க.

உணரு முனின் என்ற இடத்திலுள்ள 'இன்' உருபு நீக்கப்பொரு ளில் வந்தது. மூன்றாம் அடியின் தொடக்கத்திலுள்ள 'தான்' என்பதும் நாலாம் அடியின் தொடக்கத்திலுள்ள தான் என்பதும் அசைகள்.

**இவ்வுதாரணத்திற் கூறப்பட்ட பொருள் :** சத்தாகிய சிவம் பாச ஞானத்தாலாவது பசுஞனத்தாலாவது அறியப்படாது; அறியப்படின் அது பாசஞானம் பசு ஞானங்களாலறியப்படும் குடம் முதலியன போல உயிரின் வேறாய் அஞ்ஞானத்தால் வரும் சுக துக்கங்களைப் பயப்பதன்றி அஞ்ஞானத்தினீங்கிய உறுதியான அற்புத இன்பத்தை உண்டு பண்ணாது. அதனால், அவ்வுண்மையை உணர்ந்தோன் ஏனைய உலகப் பொருள்களைப் போல அசத்தாதலின்றித் தனியாய் நின்ற ,அம்முதற் பொருளைப் பதிஞானத்தால் அப்பொருளோடு கலந்து நின்றே காண்பனெனக் கூறி, வாக்கு மனாதீதமாய் நின்றே சிவம் பதிஞானத்தால்அறியப்படு மென்பதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.



**முதல்வன் பாவனைக்கு எட்டப்படான் என்பதற்குக் காட்டும் உதாரணம்**

***பாவகமேற் றானசத்தாம் பாவநா தீதமெனிற்***
***பாவகமா மன்றென்னிற் பாழதுவாம் - பாவகத்தைப்***
***பாவித்த றானென்னிற் பாவகமாந் தன்னருளாற்***
***பாவிப் பதுபரமில் பாழ்.***

முதல்வன் தன்னால் தான் அறியப்பட்டாலன்றி, உயிர் முதல்வனை அறிதல் கூடாமையால், தன்னாலே தனையுணரு மென்பது தன்னைப் பற்றுதல் என்னும் குற்றத்துக்கு இடமாகும். அதனால் பாச ஞானத்துக்கும் பசு ஞானத்துக்கும் எட்டாத முதற் பொருள் யோக நூலார் கூறும் தியான பாவனைகளால் அறியப்படு மென்பதே பொருந்துமென்று யோகமதம் பற்றிப் பாதஞ்சலர் கூறுவர். அவர்களை மறுத்து, முதல்வன் தன்னாலன்றி அறியப்படான் என்பதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

தன்னால் - தன் அருளால்.

**இ-ள் :** பாவகமேல் தான் அசத்தாம் - (தியான பாவனை யென்று நீ கூறும் பாவனை உலகப் பொருள்களைப் பாவிக்கும் பாவனை போல மனம் முதலியவற்றோடு கூடிநின்று பாவிக்கும்) பாவகமெனின் (கருவிகளோடு கூடிநின் றறிவதாகிய சுட்டறிவினால் அறியப்படும் பொருள்) அசத்தாகும், பாவநா தீதமெனிற் பாவகமாம் - (அப் பாவனை மனம் முதலிய கருவிகளின் நீங்கி நின்று பாவிக்கப்படுவ தாதலால்) அது கருவிகளோடு கூடி நின்று பாவிக்கும் பாவனையைக் கடந்ததெனில் (கருவிகள் நீங்கியவழி ஒன்றையும் அறிய முடியாத கேவலாவத்தை யுண்டாகுமாதலால்) அது பாவகமாத்திரையே யன்றிப் பயன்படுமாறில்லை, அன்று என்னின் அது பாழாம் - அப்பாவனை கருவிகளோடு கூடிநின்று பாவிக்கப்படுவதோ கருவிகளோடு கூடாது நின்று பாவிக்கப்படுவதோ வென உறுதியாகக் கூற முடியாதவாறு நின்று பாவிக்கப்படுவதெனின் அவ்வாறு பாவிக்கப்படுவது சூனியமாகும், பாவகத்தைப் பாவித்தல் என்னின் பாவகம் ஆம் - அவ்வாறன்றிப் பாவனைக் கெய்தாப் பொருளை எய்தியதாகப் பாவிப்பதென்னின் அதுபோலிப் பாவனையாகுமாத லால் அதுவும் பாவனாதீதம் போலப் பாவனை மாத்திரமேயன்றிப் பயன்படுமாறில்லை. (அவ்வாறு ஒருவாற்றானும் பாவனைக் கெட் டாத பொருள் பாழாகுமெனின்)தன் அருளால் பாவிப்பது பரம் -

அப்பாவகங்களை விட்டு முதல்வனது திருவருளால் பாவிக்கப்படு வதே பரம்பொருள், பாழ்இல் - ஆதலால், மேலே கூறப்பட்ட பாவனைகளுக்கு எட்டாமை பற்றி முதற்பொருள் பாழாதலில்லை எ-று.

அவனருளாற் பாவிப்பதற்கு அவனருளை அறிய வேண்டும். அவனருளை அறியுமாறும் அருளால் முதல்வனைப் பாவிக்குமாறும் ஒன்பதாஞ் சூத்திரத்திற் கூறப்படும்.

மூன்றாம் அடியில் இடம்பெறும் தான் என்பது அசை.

இவ்வெண்பாவில் நான்கு விதமான பாவனைகள் கூறப்பட் டுள்ளன. அவை:

i கருவிகளோடு கூடிநின்று பாவித்தல்

ii கருவிகளை நீங்கி நின்று பாவித்தல்

iii கருவிகளோடு கூடுதல் கூடாமை என்னும் இருதிறனுமின்றிப் பாவித்தல்

iv பாவனைக் கெட்டாத பொருளை எட்டியதாகப் பாவித்தல்.

யோக நூலார் கூறும் பாவனை இந்நான்கனுள் ஒன்றாகுமன்றி வேறாகாதாகையால் இந்நான்கு பாவனைகளையுங் கூறி அவற்றை மறுத்தார்.

## முதல்வன் அவனருளாலன்றிக் காணப்படான் என்பதற்குக் காட்டும் உதாரணம்

***அறிய விரண்டல்ல னாங்கறிவு தன்னா***
***லறியப் படானறிவி னுள்ளா - னறிவுக்குக்***
***காட்டாகி நின்றானைக் கண்ணறியா மெய்யென்னக்***
***காட்டா தறிவறிந்து கண்டு.***

மேலே கூறப்பட்ட பாவனைகளா லறியப்படாத பொருளை அவனருளாற் பாவிக்க வேண்டாம். உயிர் பசுத்துவத்தைச் செய்யும் ஆணவ மலத்தினின்றும் நீங்கிய காலத்துச் சிவனைப் போல முற்றுமுணர்தல் முதலிய எண்குணங்களு முடையதாகுமென்று ஆகமங்களிற் கூறப்படுதலால், மலம் நீங்கியவிடத்து ஆன்ம ஞானம் சிவஞானத் தோடொப்பதாதலால் அது சிவஞான மெனப்படுவ தன்றிப் பசுஞானமெனப் படாமையால் முதல்வன் அப்பசு ஞானத்தா லறியப்படும் பொருளென்றலே பொருந்துமென்பர். சிவசமவாதிகள்.



அவர்களை மறுத்து முதல்வன் அவனருளாலன்றி அறியப்படான் என்பதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** அறிய இரண்டு அல்லன் அறிவினுள்ளான் ஆங்கு அறிவு தன்னால் அறியப்படான் அறிவுக்குக் காட்டாகி நின்றானை அறிவு கண்டறிந்து காட்டாது மெய் அறியாக் கண் என்ன.

**இ-ள் :** அறிய இரண்டு அல்லன் - உயிரும் முதல்வனும் அத்துவிதமென்று சிவாகமங் கூறுதலால் உயிர் தன்னறிவால் அறிவதற்கு முதல்வன் உயிரின் வேறல்லனாதலாலும், அறிவின் உள்ளான் ஆங்கு அறிவு தன்னால் அறியப்படான் - சமமாதலின்றி உயிர் தூலமாய் நிற்க முதல்வன் சூக்குமமாய் உயிரின் அறிவுக்குள் நிற்பனாதலால் அவ்விடத்து உயிரின் அறிவால் முதல்வன் அறியப்படானாகலானும், அறிவுக்குக் காட்டாகி நின்றானை - உயிரின் அறிவுக்குத் துணையாய் நின்று அறிவிக்கும் உயிர்க்குயிராகிய முதல்வனை, அறிவு கண்டு அறிந்து காட்டாது - ஆன்ம ஞானங் கண்டறிந்து அந்த ஞானத்தைக் குணமாகவுடைய குணியாகிய உயிருக்குக் கோசரமாமாறு (காணும் வண்ணம்) காட்டமாட்டாது; மெய் அறியாக்கண் என்ன - அது (தன்னின் வேறாகாமல் தனக்குள் நிற்றலால் தன்னாற் காணப்படாது தனக்குக் காட்டாகி நிற்கும்) உயிரை அறியமாட்டாத கண்ணொளி போலும் எ-று.

காட்டாகி நின்றானை என்றதிலுள்ள, காட்டு என்பது காட்டுதல் என்னும் பொருளைத் தந்து தல் விகுதி கெட்டு நிற்றலால் முதனிலைத் தொழிற்பெயர்.

அறிவுக்குக் காட்டாகி நின்றானை என்றதில், நின்றான் என்பதற்கு அறிவுக்குக் காட்டாகி என்பது அடை. இவ்வடையாலும் ஓர் ஏதுக் கூறப்பட்டுள்ளது. உயிருக்குத் தானேயறியுந் தன்மை யில்லாமையால் முதல்வன் காட்டாகி நின்றான் என்பது அவ்வேது.

கண்டறிதல் என்பது ஒருபொருட் பன்மொழி.

கண்ணறியா மெய் என்பதை, மெய் அறியாக் கண் என மாற்றுக. இவ்வெண்பாவில் மெய் என்றது உயிரைக் குறிக்கின்றது. கண் முதலிய இந்திரியங்களோடு ஒப்பிடும் போது அவ்விந்திரியங்களைப் போலத் தோன்றி யழியாமையால் உயிர் சத்து. இந்திரியங்கள் சடம். உயிர் சித்து. ஆதலால் சத்துச் சித்தாகிய உயிரை மெய்யென்று கூறினார். கண் என்பது ஆகுபெயர். அது கண்ணொளியைக் குறிக்கின்றது.

## ஆன்மஞானத்தால் அறியப்படாத முதல்வன் அவனருளாலும் அறியப்படுமாறில்லை யென்பாரை மறுத்து அவனருளால் அறியப்படுமென்பதை வலியுறுத்தும் உதாரணம்

***அதுவென்னு மொன்றன் றதுவன்றி வேறே***
***யதுவென் றறியறிவு முண்டே - யதுவென்***
***றறிய விரண்டல்ல னாங்கறிவு ணிற்ற***
***லறியுமறி வேசிவமு மாம்.***

ஆன்ம ஞானத்தால் அறியப்படாத முதல்வனை யடைந்த உயிர் அம்முதல்வனோடு ஒன்றாய்ப் போவதேயன்றி, அம்முத்தி நிலையில் உயிர் அவனருளால் அறியுமென்பதும் முதல்வன் அறியப்படுவனென் பதும் எவ்வாறென்னும் சிவாத்துவித சைவர் சுத்தசைவர் முதலி யோரை நோக்கி, உயிர் முதல்வனுடன் கூடி ஒன்றான விடத்தும் அறிவதும் அறியப்படுவது முண்டென்பதை யுணர்த்தி முதல்வன் அவனருளால் அறியப்படுவன் என்பதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** அது என்னும் ஒன்று அன்று அது அன்றி வேறு அது என்று அறி அறிவும் ஆங்கு உண்டே அது என்று அறிய இரண்டு அல்லன் அறிவுள் நிற்றல் அறியும் அறிவு சிவமும் ஆம்.

**இ-ள் :** அது என்னும் ஒன்று அன்று - (சத்தாகிய சிவம் அறியப்படும் பொருளாய் விசிட்டமாய் பசுபதியாய் நிற்பதென்பது சிவாத்துவித சைவர் சுத்தசைவராகிய உமக்கும் ஒக்கும், ஆதலால் அச்சிவம் இத்தன்மையதென்று உறுதியாகக் கூறமுடியாததொரு சாதாரண பொருளெனக் கொண்ட மாயாவாதிகளைப் போல) அது என்று அநிருவசனமாய்க் கூறப்படுவதொரு சூனியமன்று ஆதலால், அது அன்றி வேறு அது என்று அறி அறிவும் ஆங்கு உண்டே - அருளால் அறியப்படும் அச்சிவமேயன்றி அச்சிவத்தின் வேறாக அது மனம் வாக்குக் கெட்டாத தொரு பொருளென் றறிகின்ற உயிரும் அம்முத்தி நிலையில் உள்ளதேயாம், (அவ்வாறானால் உயிரும் முதல்வனும் ஒன்றாதல் பெறப்படாதெனின்) அது என்று அறிய இரண்டு அல்லன் அறிவுள் நிற்றல் அறியும் அறிவு சிவமும் ஆம் - (உலகத்துப் பொருள்கள் போல) முதல்வன் அதுவென்று கூட்டியறியுமாறு உயிரின் வேறல்லனாய் (நீருடன் கலந்த உப்பு அந்நீராக விளங்குவது போல) ஆன்மாவின் அறிவிற் கலந்து நிற்றலால் சுட்டறிவைக் கடந்து நின்று அவனருளால் அறிகின்ற அவ்வுயிர் சிவமேயாதலின் ஒன்றாதல் பெறப்படும் எ-று.



சிவமுமாம் என்றதிலுள்ள உம்மை கலப்பினால் உயிர் சிவமாய் நின்றும் சிவமாகாதென்பதை விளக்குகின்றது.

அதுவென்னு மொன்றன்று என்பதுடன் ஆகலான் என்பதைச் சேர்த்து ஏதுப் பொருள் படக்கூறுக.

அறிவும் என்றதிலுள்ள உம்மை அதுவென்று முன்னர்க் கூறிய முதல்வனையுந் தழுவி நிற்றலால் இறந்தது தழுவியது.

அறிவுமுண்டே என்றதிலுள்ள ஏகாரம் தேற்றப் பொருளில் வந்தது. மற்றைய எகாரமிரண்டும் அசை. அறிவுள் நிற்றல் என்றதை நிற்றலான் எனக்கொள்க.

இவ்வதிகரணத்திலுள்ள வெண்பாக்கள் ஐந்தும் முறையே,

(i) முதல்வன் பாசஞானத்துக்கும் பசுஞானத்துக்கும் எட்டப் படான் என்பது பொருந்தும். பதிஞானத்துக்கு எட்டுவன் என்பது பொருந்தாதென்னும் மாயாவாதிகளையும்,

(ii) முதல்வன் பதிஞானத்துக்கு எட்டப்படுவன் என்பது பொருந் தும் பாசஞானத்துக்கும் பசு ஞானத்துக்கும் எட்டப்படான் என்பது பொருந்தாதென்னும் நையாயிகர் முதலியோரையும்,

(iii) முதல்வன் பாவனைக்கு எட்டப்படுவன் என்னும் பாதஞ்சல ரையும்,

(iv) முதல்வன் பசு ஞானத்துக்கு எட்டப்படுவன் என்னும் சிவசமவாத சைவரையும்

(v) முத்தியிற் சிவமேயன்றி வேறொரு பொருள் இன்மையின் உயிருக்கு முதல்வன் அறியப்படுவ தெவ்வாறென்னும் சிவாத்துவித சைவர் முதலியோரையும் மறுத்து, முதல்வன் வாக்கு மனாதீத கோசரமாய் நிற்கும் இயல்பினை வலியுறுத்தி ஒரு பொருள் மேல் வந்தவாறு காண்க.

பிரமாணவியலில் இடம்பெறும் முதல் மூன்று சூத்திரங்களாலும் உண்டென்று கூறப்பட்ட பசு, பாசம், பதிகட்கு நான்காம் ஐந்தாம் ஆறாம் சூத்திரங்களால் இலக்கணங் கூறும் முறையில், நான்காம் சூத்திரத்தால் சகசமலத் துணராது கிடக்கும் கேவலாவத்தையும் ஐந்தாஞ் சூத்திரத்தால் சகலாவத்தையும் ஆறாஞ் சூத்திரத்தாற் பதிஞானத்தாற் சிவனையடையும் சுத்தாவத்தையுங் கூறப்பட்டன.

இம்மூன்று அவத்தைகளுட் கேவலம், மருட்கேவலம் சகல கேவலம் பிரளய கேவலம் விஞ்ஞான கேவலம் அருட்கேவலமென ஐவகைப்படும். இவற்றுள்,

**மருட் கேவலமாவது :** அநாதியே ஆணவ மலத்தோடு கூடி அறிவின்றிக் கிடக்கும் அநாதிகேவலம்.

**சகல கேவலமாவது :** அனாதி கேவலத்தின் நீங்கிச் சரீரம் பெற்றுச் சங்கரிக்கப்பட்ட பின்னர் புதுச் சிருட்டிக்கு ஏதுவாய் மும்மலங் களோடுங் கூடிப்படும் சகலருக்குரிய கேவலம். இக்கேவலத்திற் சூக்கும ஐந்தொழில் உண்டென மிருகேந்திரமென்னும் உபாகமங் கூறும். சூக்கும ஐந்தொழிலும் இல்லாது ஆணவமலம் ஒன்றோடு மாத்திரம் கூடியிருப்பது அனாதி கேவலம். சூக்கும ஐந்தொழிற் படுவதோடு மும்மலங்களோடுங் கூடியிருப்பது சகல கேவலம்.

(சூக்கும ஐந்தொழிலாவது சர்வசங்கார காலத்தில் மலபரிபாகத்துக் கேற்றபடி அறிவிக்கத் தக்கவர்களை அறிவித்தல் அருளல்; மறைக்கத் தக்கவர்களை மறைத்தல் திரோபவம்; ஆன்மாக்களின் சஞ்சித கன்மத்தைப் பக்குவப்படுத்தல் சங்காரம்; மாயா காரியங்களை வெளிப்படத் தகுந்தவைகளாகச் செய்தல் காத்தல்; தோன்றுதற்குரிய சித்துப் பொருள் சடப்பொருள்களைப் பார்த்துக் கொண்டிருத்தல் சிருட்டி.

**பிரளய கேவலமாவது :** அனாதி கேவலத்தினின்று நீங்கிச் சரீரம் பெற்றுச் சங்கரிக்கப்பட்ட பின்னர் புதுச் சிருட்டிக் கேதுவாய் ஒடுங்கியிருக்கும் போது மாயையோடு பொருந்தாது ஆணவம் கன்மம் என்னும் இரண்டோடுங்கூடிப்படும் பிரளயாகலருக்குரிய கேவலம்.

**விஞ்ஞான கேவலமாவது :** அனாதி கேவலத்தினின்று நீங்கிச் சரீரம் பெற்றுச் சங்கரிக்கப்பட்ட பின்னர் புதுச் சிருட்டிக் கேதுவாய் ஒடுங்கியிருக்கும் போது மாயை கன்மங்களோடு பொருந்தாது ஆணவத்தோடு கூடிப்படும். விஞ்ஞானாகலருக்குரிய கேவலம்.

ஆணவமலத்தோடு கூடிய அனாதி கேவலத்தினின்று சகலராய்த் தோன்றுதலும் ஆணவ மலத்தோடு கூடிய விஞ்ஞான கேவலத்தி லிருந்து விஞ்ஞானாகலராய்த் தோன்றுதலும் அனாதிகேவலத்துக்கும் விஞ்ஞான கேவலத்துக்குமுள்ள வேறுபாடாகும்.

**அருட்கேவலமாவது :** தத்துவங்கள் எல்லாம் நீங்கிய பின்னர் அருளோடு கூடிப்படுங் கேவலம். இந்நிலையில் ஆன்மா பாசஞான



பசுஞானங்களின்றி அருளாய் நிற்கும். இதனை,

> ***"பகலிழந்த வான்போற் பரவுமல நீயாய்***
> ***இகலறவே நின்றா யிழந்தா - யகலறிவு***
> ***வாடாத முத்தியினில் வாய்த்தவருட் கேவல நீ***
> ***நாடாத கேவல முன்னாள்"***

எனத் துகளறு போதங் கூறுதலாலறிக. தன்செயல் அற்றிருத்தலின் இந்நிலை அருட்கேவல மெனப்படும்.

இனிச் சகலமும் சகலத்திற் கேவலம் சகலத்திற் சகலம் சகலத்திற்சுத்தமென மூவகைப்பட்டு ஒவ்வொன்றும் சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதமென ஐவகைப்படும். சகலத்திற் கேவலம்பற்றி 'ஒன்றணையா மூலத்து' என்ற வெண்பாவிற் கூறப்பட்டது. சகலத்திற் சகலம் பற்றி 'இலாடத்தே சாக்கிரத்தை' என்ற வெண்பாவிற் கூறப்பட்டது. இது சாக்கிரத் தானமாகிய புருவ நடுவில் நிகழும் அவத்தைகள் ஐந்துமாம்.

சகலத்திற் சுத்தம்பற்றி "இவ்வகை சாக்கிராதி அவத்தைகள்" என்னும் முதலையுடைய சித்தியார்ச் செய்யுளிற் கூறப்பட்டிருப் பதையும் சித்தாந்த சாராவலி யோகபாதத்திற் கூறப்பட்டிருப்பதையும் பார்த்தறிக.

இவ்வைந்தவத்தை இருதயம், கண்டம், நாக்கின்அடி, புருவநடு, பிரமரந்திரம் என்னும் ஐந்திடங்களில் நிகழும்.

சுத்தமும் சீவன்முத்தி, அதிகாரமுத்தி, போகமுத்தி, லயமுத்தி, பரமுத்தியென ஐவகைப்பட்டு முறையே நின்மலசாக்கிரம், நின்மல சொப்பனம், நின்மல சுழுத்தி நின்மல துரியம் நின்மல துரியாதீத மெனப் பெயர் பெறும். அது பற்றிப் பின்னர்க் கூறப்படும்.

ஆறாம் சூத்திரம் முற்றிற்று.

இலக்கணவியல் முற்றிற்று

முதலாவது பொதுவதிகாரம் முற்றிற்று.

★★★

# உண்மையதிகாரம்

## சாதனவியல்

## ஏழாஞ்சூத்திரம்

முன்னைய ஆறு சூத்திரங்களினாலுங் கூறிமுடித்த முப்பொருள்களுள் அவற்றை அறிந்து சாதித்துப் பயன் பெறுதற்குரிய அதிகாரியாகிய உயிரின் இயல்பும் சாதனமும் சாதிக்கும் முறையுமாகிய மூன்றும் சாதனவியலில் மூன்று சூத்திரங்களாற் கூறத்தொடங்கிச் சாதித்தற்குரிய அதிகாரியின் இயல்பை முதற்கண் இந்த ஏழாஞ் சூத்திரத்தாற் கூறுகின்றார்.

***யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலிற்***
***சத்தே யறியா தசத்தில தறியா***
***திருதிற னறிவுள திரண்டலா வான்மா.*** என்பது சூத்திரம்

### கருத்துரை

மேலதற் கோர் புறனடை யுணர்த்துத னுதலிற்று.
இக்கருத்துரை சூத்திரக் கருத்து இதுவென்று சொல்லிற்று.

### கருத்துரையின் பொருள்

வானத்திலுள்ள தூலமான நட்சத்திரத்தைக் காட்டி அதன் அயலிலுள்ள சூக்குமமான - சிறிய - அருந்ததி நட்சத்திரத்தைக் காட்டுவது போல, முன்னைய ஆறு சூத்திரங்களாலும் சிவாகமங்களிற் கூறப்படும் முப்பொருள்களது பொதுவியல்பைப் பிரமாணம் இலக்கணம் என்னும் இரண்டினாலும் ஆராய்ச்சி செய்துணர்த்திய ஆசிரியர், அம்முப்பொருள்களது சிறப்பியல் பெனப்படும் சூக்குமமான உண்மையைச் சாதனமுகத்தானும் பயன்



முகத்தானும் ஆராய்ச்சி செய்துணர்த்தக் கருதி, முதல் மூன்று சூத்திரங்களால் அவற்றை அறிந்து பதியினாற் பயன்பெறுதற் கேதுவாகிய சாதனங் கூறத் தொடங்கினார். ஆறாஞ் சூத்திரத்தில் உணருரு வசத்தெனவும் இருதிறனல்லது சிவசத்தெனவும் வரையறுத்துக் கூறியவிடத்து, அவ்வாறு அசத்தையும் சிவசத்தையும் அறியும் பொருள் அசத்து சிவசத்து என்னும் இரண்டில் ஒன்றோ வேறோ என்னும் ஐயம் நிகழுமல்லவா? அவ்வையப்பாட்டின்கண் அவ்விரண்டில் ஒன்றே அறியுமென்பர் ஒருசாரார். அவர்களை மறுக்குமுகமாக ஆறாஞ் சூத்திரத்துக்குப் புறம்பாக எடுத்து, அசத்து சிவசத்து என்னும் இரண்டையும் அறிவது அவற்றின் வேறான சதசத்தாகிய உயிராகுமென அதன் இயல்பை வரையறுத்துக் கூறுமுகத்தால் சாதித்துப் பயன்பெறுதற்குரிய அதிகாரியின் இயல்பு இதுவெனக் கூறுதல் இவ்வேழாஞ் சூத்திரத்தின் கருத்து எ-று.

ஆறாஞ் சூத்திரம் பொதுவதிகாரம், ஏழாஞ்சூத்திரம் உண்மை யதிகாரம். ஆறாஞ் சூத்திரம் இலக்கணவியல். இவ்வேழாஞ் சூத்திரம் சாதனவியல். ஆறாஞ் சூத்திரமும் ஏழாஞ் சூத்திரமும் அதிகாரத்தா லும் இயலாலும் வேறானாலும் இரண்டுக்குமுள்ள தொடர்புணர்ந்து கொள்ளுதற் பொருட்டு இச்சூத்திரத்துக்கு மேலதற்கோர் புறனடை என்று கருத்துரை செய்தார். இப்புறனடையை வட நூலார் வாக்கிய சேடமென்பர். இச்சூத்திரத்திற் கூறப்படும் மூன்றதிகரணமும் மூன்று புறனடை போலுமென மலையாமைப் பொருட்டு ஓர் புறனடை யென்றார். முதலாம் இரண்டாம் அதிகரணங்கள் மூன்றாம் அதிகரணத்தைச் சாதித்தற் கேதுவாய் ஒரு பொருள்மேல் வந்தன. சத்தின் முன் அசத்துப் பிரகாசியாது. அசத்துக்கு அறிவின்று. ஆதலால் இருதிறனறிவுளது இரண்டலா ஆன்மா என்பது கருத்துரையின் கருத்து.

ஒன்றை அறிந்தவிடத்து அறியப்பட்ட அதனால் வரும் பயனைப் பெறுதற்குரிய முயற்சி செய்வார்க்கு அதனைச் செய்யும் ஆற்றல் தமக்குண்டென்பதும் முயற்சி செய்வதால் வரும்பயன் இதுவென் பதும் பயன் பெறுதற்குரிய முயற்சி இதுவென்பதும் அம்முயற்சி வரும்வழி இதுவென்பதும் உணர்ந்தாலன்றி அப்பயனைப் பெற வேண்டுமென்னும் மனவெழுச்சி உண்டாகாது. ஆதலால் முயற்சி செய்து பயன்பெறுதற்குரிமையுடைய அதிகாரியின் இயல்புணர்த்தும் இச்சூத்திரம் இவ்வியலின் முதற்கண் வைக்கப்பட்டது.

**இச்சூத்திரத்தின் பொருள் :** சத்தெதிர் - (ஆறாஞ் சூத்திரத்திற் கூறப்பட்ட சிவசத்து அசத்து என்னும் இரண்டனுள் வாக்கு மனாதீதமாகிய) சிவத்தின் சந்நிதியில், யாவையும் சூனியம் ஆகலின் - உணருருவாகிய அசத்தெல்லாம் பாழாகலின், சத்தே அறியாது - சத்தாகிய சிவம் அசத்தாகிய பிரபஞ்சத்தை அறியாது, அசத்து இலது ஆகலின் - அசத்தாகிய பிரபஞ்சம் அறிவில்லாத சடமாதலின், அறியாது - சத்தாகிய சிவத்தை அறியாது, (ஆதலாற் பாரிசேட அளவையான்) இருதிறன் அறிவுளது - சத்தையும் அசத்தையும் அறியும் அறிவுடைய பொருளொன் றுண்டென்பது பெறப்படுதலின் அதுவே, இரண்டலா ஆன்மா - சத்தாதற் றன்மையும் அசத்தாதற் றன்மையுமாகிய இரண்டு மின்றி அவ்விரண்டையு மறியும் சதசத்தாயுள்ள உயிராம் எ-று.

சத்து அசத்து என்னும் இரண்டனுள் 'சத்தே' என்றதிலுள்ள ஏகாரம் அசத்தைப் பிரித்தலின் பிரிநிலைக் கண் வந்தது.

'அசத்திலது' என்பதோடு ஆகலின் என்பதைச் சேர்த்து அசத்திலதாகலின் எனக் கொள்க.

அசத்துச் சத்தை அறியாமைக்குக் காரணம் அது சத்தெதிர் சூனியமாதலேயாயினும் அசத்தெனப்பட்ட கருவிகள் முத்திநிலையிற் சிவகரணமாய் ஆன்ம சந்நிதியிற் கலந்து முதல்வன் சந்நிதியில் நிற்குமென்பாரை நோக்கி, அவ்விடத்தும் கருவிகள் ஆன்மாவுக்குச் சிவகரணமாய் நிற்றலே யன்றி, அக்கரணங்கள் சிவனை அறிவதில்லை யென்பதை அறிவித்தற்காக 'இலதாகலின்' என்று வேறுமோர் ஏதுக் கூறினார். இக்கருத்தே பற்றி வழிநூலாசிரியர் சிவஞான சித்தியாரில் 'அனைத்தும் சத்தென்னின்' என்னும் முதலையுடைய செய்யுளில், சத்தின் முன் இலாமையானும் தனைக் கொடு ஒன்று உணர்தலானும் என இரண்டு ஏதுவுங் கூறினார்.

சத்தே அறியாது என்ற இடத்திலும் இருதிறன் அறிவுளது என்ற இடத்திலும் சாதனவியல் என்பதற்கேற்ப ஏற்புழிக் கோடலான் அறிதலென்றது அநுபவ அறிவைக் குறிக்கின்றது. அதனால், சத்து அறியாது என்பதற்கு, ஒரு சேர அறியும் என்பதனோடும் உயிருக்கு அறிவித்தற் பொருட்டு அறியும் என்பதோடும் உயிரின் அநுபவத்தின்பொருட்டு அறியும் என்பதனோடும் முரணாதவாறு தன் அநுபவத்தின் பொருட்டு அறியாது எனப் பொருள் கொள்க.



'இரண்டலா' என்ற இடத்தில் உம்மை தொக்கு நின்றது. அதை விரித்து இரண்டும் அல்லாததாய் எனக் கொள்க.

இச்சூத்திரத்தில், 'யாவையுஞ் சூனியஞ் சத்தெதிராகலிற் சத்தே யறியாது' என்றது ஓரதிகரணம். 'அசத்திலது அறியாது' என்றதோரதிகரணம். 'இருதிறனறிவுள திரண்டலா வான்மா' என்ற தோரதிகரணம். எல்லாமாக மூன்றதிகரணங்கள் உண்டு.

## முதலதிகரணம்

### பிரபஞ்சம் சிவனாலறியப்படாதெனக்கூறும் மேற்கோள்

***ஈண்டுச் சத்தினிடத்து அசத்துப் பிரகாசியாதென்றது.***

சிவசத்தியின் சங்கற்பமாகிய சந்நிதியில் மாயை தன் காரியங் களைத் தோற்றுவிக்கும் என்பதை "தந்திடுஞ் சிவனவன்றன் சந்நிதி தன்னினின்றே" எனச் சித்தாயாரும், சிவபெருமான் சுத்தமாயையைப் பொருந்தி என்பதை் கூடுமொளி வளர் குடிலை மாயைமேவி" எனச் சிவப்பிரகாசமும், மாயை தனக்காதாரமாகிய சிவசத்தியில் நிற்குமென்பதைத் தாரகமா மத்தன்றா ணிற்றல் என இந்நூலும், மாயை இறைவனுக்கோர் சத்தி என்பதை "விமலனுக்கோர் சத்தியாய்" எனச் சித்தி யாருங் கூறுதலால், பிரபஞ்சத்துக்கு முதற்காரணமாகிய மாயை முதல்வனுக்குப் பரிக்கிரக சத்தியென்பதும் அது திருவருளை ஆதாரமாகக் கொண்டிருக்குமென்பதும் பெறப்பட்டன.

உலகமே உருவமாக எனவும், அத்துவாமூர்த்தியாகி எனவும் சித்தியாரிலும், "இரு நிலனாய்த் தீயாகி நீருமாகி..... நின்றவாறே" எனத் திருநாவுக்கரசுநாயனார் தேவாரத்திலுங் கூறப்படும் இயல்புடைய பிரபஞ்சத்தைச் சத்தெதிர் சூனியமென்றல் அவசித்தாந் தமாய் முடியும், மண்டியவுணர்வுயிர்க்காய் மன்னிநின் றறியு மாதலால் உலகம் இறைவன் முன் சூனியமென்பது பொருந்தா தென்பர் ஒரு சாரார். இதில், பிரபஞ்சம் சிவனால் அறியப்படுமோ படாதோ என்பது ஐயம். இவ்வையப்பாட்டின்கண் பிரபஞ்சம் சிவனால் அறியப்படுமென்பது பிறர் கூறும் பக்கம். இவ்வாறு கூறுவோர் சிவாத்துவித சைவர். அவர்களை மறுக்குமுகமாகச் சூத்திரத்தின் முதற்கூற்றிற் கூறப்பட்ட ஏதுவைப் பதச்சேதஞ் செய்து, சத்தெதிர் யாவையுஞ் சூனிய மாதலின் சத்து அசத்தை அறியா தென்பதை வலியுறுத்துகின்றது இந்த மேற்கோள்.

அவசித்தாந்தம் - சித்தாந்தம் அல்லாதவற்றைச் சித்தாந்தமென்று கூறுதல்.

**இ-ள் :** சுட்டியறிதலின்றி எல்லாவற்றோடுங் கலந்து நின்று ஒன்றாக அறியும் சிவத்தின் முன்னர்ச் சுட்டியறியப்படும் அசத்தாகிய பிரபஞ்சம் விளங்கித் தோன்றாது எ-று.

சூனியமென்றது விளங்கித் தோன்றாமையைக் குறிக்கின்றதென் பதை உணர்த்த வேண்டி, சூத்திரத்தில் சூனியம் என்று கூறியதை இம் மேற்கோளிற் பிரகாசியாதென்று கூறினார். இக்கருத்தே பற்றி வழி நூலாசிரியரும் "முனைத்திடா தசத்துச் சத்தின்முன்" என்றார். முனைத்திடாமையாவது, இதுகுடம் இது ஆடையென எமக்கு வேறான பொருள்களைச் சுட்டியறிவது போல முதல்வனாற் சுட்டியறியப்படுவதாய் முதல்வனின் வேறாய் நில்லாமையே யாகும். ஆகவே சூத்திரத்திற் சத்தெதிர் யாவையுஞ் சூனியமென்றது அவசித்தாந்த மகாதெனக் கூறி மறுத்து, பிரபஞ்சத்தைச் சத்தாகிய சிவம் அறியாதெனச் சூத்திரத்திற் கூறியதை வலியுறுத்தியவாறு காண்க.

### பிரபஞ்சம் சிவனால் அறியப்படாமைக்குக் காட்டும் ஏது

***மெய்யினிடத்துப் பொய் அப்பிரகாசமாய் நிற்றலான்***

முற்றுணர்வுடைய சிவத்துக்கு அசத்தைச் சுட்டியறிவதாகிய சுட்டுணர்வும் உண்டென்பதனால் வருங் குற்றமென்ன வென்பர் சிவாத்துவித சைவர். அவரை நோக்கி மறுத்து, முதல்வனுக்குச் சுட்டுணர்வு இல்லை, அதனாற் பிரபஞ்சம் அவனாற் சுட்டியறியப் படாதென்று கூறிச் சத்தினிடத்து அசத்துப் பிரகாசியாதென்று மேற்கோளிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வேது.

இவ்விடத்தில் மெய்யென்றது கருவிகளின் துணையின்றி யறியும் தன்னியல்பாகிய இயற்கை அறிவை; பொய்யென்றது கருவிகளின் துணையால் அறியும் பொதுவியல்பாகிய சுட்டறிவை.

### பிரபஞ்சம் சிவனால் அறியப்படாமைக்கும் அதுகொண்டு சிவனுக்கு இழுக்கில்லை என்பதற்குங் காட்டும் உதாரணம்

***அன்னியமில் லாமை யரற்கொன் றுணர்வின்றா***
***மன்னியமில் லானசத்தைக் காண்குவனே - லன்னியமாக்***
***காணா னவன்முன் கதிர்முன் னிருள்போல்***
***மாணா வசத்தின்மை மற்று.***



சுட்டுணர்வின்மையால் முதல்வன் அசத்தை அறியானெனின் அது முதல்வன் முற்றுணர்வுடையவன் என்பதற்குக் குற்றமாகுமென் பர் சிவாத்துவித சைவர். அவர்களது கூற்றை மறுத்து, பிரபஞ்சத்தைச் சுட்டியறியாமை முற்றுணர்வுடைமைக்கு இழுக்காகாது எனக் கூறி ஏதுவிற் கூறியதை வலியுறுத்துகிறது இவ்வுதாரணம்.

**இ-ள் :** அன்னியம் இல்லாமைஅரற்கு ஒன்று உணர்வு இன்றாம் (தன்னுள் அடங்கியிருக்கும் பசு பாசங்களோடு) வேற்றுமையின்றி உடனாய் நிற்றலால் முதல்வனுக்குச் சுட்டியறியக் கிடப்பதொன் றில்லையாதலால், அன்னியம் இல்லான் அசத்தைக் காண்குவனேல் அன்னியமாக் காணான்- எல்லாப் பொருள்களோடுங் கலந்து உடனாய் நிற்பவனாகிய முதல்வன் பிரபஞ்சத்தை அறிய வேண்டின் எல்லாப் பொருளையும் ஒன்றாக அறிவானேயன்றி எம்மைப்போல வேறாய் நின்று சுட்டியறியான், கதிர்முன் இருள்போல அவன்முன் மாணா அசத்து இன்மை - சூரியனின் முன் இருட்டுப் போல அம்முதல்வன்முன் நன்மையில்லாத பிரபஞ்சம் விளங்கி நில்லாதாத லால் எ-று.

இவ்வாறு, பிரபஞ்சத்தைச் சுட்டியறியும் சுட்டுணர்வு ஒன்றாக அறியும் முற்றுணர்வைத் தடுப்பதாகலான், சுட்டுணர்வின்மை முற்றுணர்விற்கு மேம்பாடாவதன்றிக் குற்றமாகாதெனக் கூறி, ஐயம் அகற்றி ஏதுவிற் கூறியதை வலியுறுத்தியவாறு காண்க.

மாணாமை - மாட்சியில்லாமை. இவ்விடத்தில் மாணாமை என்றது பிரபஞ்சம் வியாபக அறிவால் அறியப்படும் மாட்சியில் லாதது என்பதைக் குறிக்கின்றது. 'மாணா அசத்து இன்மை' என்றதில் இன்மை விளங்கித் தோன்றாமையைக் குறிக்கின்றது. மற்று என்பது அசை. மற்று என்பதை மற்றுக் காண்குவனேல் அன்னியமாக் காணான் என வினைமாற்றின்கண் வந்ததெனினும் பொருந்தும்.

உணர்வு என்பது உணர்வால் உணரப்படுவனவற்றையும் கதிர் என்பது கதிரையுடைய சூரியனையுங் குறிக்கின்றன. அதனால் உணர்வும் கதிரும் ஆகு பெயர்கள்.

கதிர்முன் இருள் என்பது இவ்விடத்தில் முனைத்துத் தோன்றா மைக்கு மாத்திரம் கூறிய ஒருபுடை உவமை. இதை 'முனைத்திடா தசத்துச் சத்தின் முன்னிரு ளிரவி முன்போல்' எனச்சித்தியார் கூறுவதாலறிக.

# இரண்டாம் அதிகரணம்

## அசத்தாகிய கரணத்திற்கு அறிவில்லை யெனக்கூறும் மேற்கோள்

***இனி அசத்தினுக்கு உணர்வின்று என்றது.***

சத்து அசத்தை அறியாதாயினும் அசத்தெனப்படும் தனு கரண புவன போகங்களுள் ஒன்றான கரணம் சடமல்லவாதலால் விளக்கின் சந்நிதியிற் கண்ணொளி பொருளை அறிவதுபோல, பெத்தநிலையில் விகாரமின்றி நிற்கும் ஆன்ம சந்நிதியில் அசத்தாகிய விடயங்களை அறியும்; முத்தி நிலையில் சிவகரணமாய் நின்று சிவத்தை அறியும். ஆன்மாவின் சந்நிதியில் கரணத்துக்கு அறிவுண்டாதல் கண்ணாடியின் சந்நிதியில் அதன் நிழலுக்கு ஒளியுண்டாவது போலுமென்பர் ஒருசாரார். இதில் கரணத்துக்கு அறிவுண்டோ இல்லையோ என்பது ஐயம். இவ்வையப் பாட்டின்கண் கரணத்துக்கு அறிவுண்டென்பது பிறர் கூறும் பக்கம். இவ்வாறு கூறுவோர் சிவசங்கிராந்த, வாதிகள். அவர்களை மறுக்கு முகமாகச் சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைப் பதச்சேதஞ் செய்து, கரணத்துக்கு அறிவில்லையென்பதை வலியுறுத்துகின்றது இந்த மேற்கோள்.

**இ-ள் :** அசத்தாகிய தத்துவப் பிரபஞ்சத்துக்கு அறிவில்லை எ-று.

சூத்திரத்தில் அசத்தென்றதன் பொருள், அசத்துக்கு அறிவில்லை யென்பதேயாகுமெனக் குறிப்பிடக் கருதியதால், இந்த மேற்கோளில் அசத்தினுக்கு உணர்வின்று என்றார். இவ்விடத்தில் அசத்தென்றது கரணமாகிய தத்துவப் பிரபஞ்சத்தை.

## கரணத்திற்கு அறிவில்லை என்பதற்குக் காட்டும் ஏது

***அதுதா னிரூபிக்கில் இன்றாகலான்.***

பதிஞானத்தோடும் பசுஞானத்தோடு மொப்பப் பாச ஞானமும் ஒன்றெனக் கருதப்படும் உரிமை யுடைமையால், அப்பாசத்தை அறிவுடையதன் றென்று கூறுதல் பொருந்தாதென்பர் சிவசங்கிராந்த வாதிகள். அவர்களை நோக்கி, பாசத்துக்கு அறிவில்லையெனக் கூறி மேற்கோளை வலியுறுத்துகின்றது இவ்வேது.

**இ-ள் :** மேலோட்டமாகப் பார்க்குமிடத்து அசத்தாகிய கருவிகளுக்கு அறிவுள்ளது போலத் தோன்றினும், ஐயந்திரிபின்றிக் குற்றமற்ற அறிவால் ஆராயுமிடத்து அக்கருவிகளுக்கு அறிவில்லையென்பது புலப்படுமாதலால், இனி அசத்தினுக்கு உணர்வின்றென மேற்கோளிற் கூறினார் எ-று.

கருவிகளாகிய இந்திரியங்கள் அந்தக் கரணங்களின் வழியாக உயிருக்கு உண்டாகின்ற ஞானமே பாசஞானமென்று உபசரித்துக் கூறப்படும். உயிர் கண்டதைக் கண் கண்டதென்றும் உயிர் கேட்டதைக் காது கேட்டதென்றுங் கருதுதல் ஆராயாமையினால் உண்டாகும் அறியாமையே யன்றி வேறில்லை.

## கரணத்திற்கு அறிவில்லை என்பதற்குக் காட்டும் உதாரணம்

***பேய்த்தேர்நீ ரென்றுவரும் பேதைக்கு மற்றணைந்த***
***பேய்த்தே ரசத்தாகும் பெற்றிமையின் - வாய்த்ததனைக்***
***கண்டுணர்வா ரில்வழியிற் காணு மசத்தின்மை***
***கண்டுணர்வா ரில்லதெனக் காண்.***

இவ்வுதாரணம் அசத்தினுக்கு உணர்வின்றென மேற்கோளிற் கூறியதை உவமை முகத்தான் வலியுறுத்துகின்றது.

**இ-ள் :** பேய்த்தேர் நீர் என்று வரும் பேதைக்கு மற்று அணைந்த பேய்த்தேர் அசத்து ஆகும் பெற்றிமையின் - பாலை நிலத்திற் காணப்படுங் கானலை நீரென்று கருதி அதையுண்ண வருகின்ற அறிவிலிக்கு அக்கானலை அடைந்தவிடத்து அது நீராதலின்றிப் பொய்யாந் தன்மைபோல, வாய்த்து - குருவின் உபதேசமொழி கிடைத்து, அதனைக் கண்டு உணர்வார் இல் வழியின் அசத்து இன்மை காணும் - அவ்வசத்தின் இயல்பை ஆராய்ந்தறிவார் இல்லாத விடத்து அதனிடத்துச் சத்தாந் தன்மையே காணப்படும், கண்டு உணர்வார் இல்லது எனக் காண் - அவ்வுபதேச மொழி கிடைத்து அதனை ஆராய்ந்தறிய வல்லார்க்கு அவ்வசத்து அறியவில்லாததே யாமென்று அறிவாயாக. எ-று.

மற்று என்பது வினைமாற்றின்கண் வந்தது. அது பேய்த்தேர் நீர்போலத் தோன்ற அதை அடைந்தவிடத்து அதற்கு மாறாக நீரில்லையெனத் தோன்றும் என்னும் பொருளைத் தருகின்றது.

பெற்றிமையின் என்றதில், மை விகுதி பகுதிப் பொருளையே குறித்து நிற்றலாற் பகுதிப் பொருள் விகுதி, இன் உவம உருபு.

வாய்த்து என்றது வாய்ப்ப என்பதன் திரிபு. வாய்த்தல் - உபதேசமொழி கிடைத்தல். இவ்விடத்தில் யாருடைய உபதேசமொழி

என்னும் வினா அதற்குரிய விடையை அவாவி நிற்றலால், அதற்கு விடையாகக் குருவினது உபதேசமொழி யென்பது வருவித் துரைக்கப்பட்டது.

அசத்தின்மை - சத்தாந்தன்மை

நான்காம் அடியிலுள்ள கண்டுணர்வார் என்றதில் 'கு' உருபு தொக்கு நின்றது. அதை விரித்து கண்டுணர்வார்க்கு என்க.

## மூன்றாம் அதிகரணம்

### சத்து அசத்து இரண்டையும் அறியும் பொருள் உயிரெனக்கூறும் மேற்கோள்

**இனி இருதிற னறிவுள திரண்டலா வான்மா வென்றது.**

சிவசத்தின் தன்மையே உயிருக்குத் தன்மையாவதன்றி அதற்குத் தனித்தன்மை இல்லையாதலால், சத்தே அசத்தை அறியுமென்னும் சிவாத்துவித சைவரையும் உயிருக்குத் தன்மையென்ப தொன்றில்லா மையால் அசத்தே சத்தை அறியுமென்னுஞ் சிவசங்கிராந்த வாத சைவரையும் மறுத்து, சத்தும் அசத்தும் தம்முள் ஒற்றையொன் றறியுமாறில்லை யெனச் சாதித்தவழி, சத்தும் அசத்தும் ஒன்றை யொன்று அறியாவாயின் சத்தையும் அசத்தையும் அறியும் பொருள் வேறென்ன என்பாரை நோக்கி, பாரிசேட அளவையால் சத்து அசத்து என்னும் இரண்டையும் விலக்கவே அவற்றின் வேறான சதசத்தாகிய உயிர் அவ்விரண்டையும் அறியுமெனவும், சத்து அசத்துக்களின் வேறாய் உயிருக்குத் தனித்தன்மை யுண்டெனவும் விளக்கி, சதசத்தின் இயல்பை வரையறுத்துக் கூறுகின்றது இந்த மேற்கோள், இதில் சத்து அசத்து இரண்டையும் அறியும் பொருள் அவ்விரண்டின் வேறான தொன்றோ இல்லையோ என்பது ஐயம். இவ்வையப்பாட்டின்கண் இல்லையென்பது பிறர் கூறும் பக்கம்.

**இ-ள் :** சத்து அசத்தென்னும் இரண்டின் இயல்பையும் அறியும் பொருள் சத்தும் அசத்துமல்லாத சதசத்தாகிய ஆன்மா எ-று.

இந்த மேற்கோளுக்கு முன்னைய இரண்டு அதிகரணங்களின் மேற்கோள்களே ஏதுவாகுமாதலால், இதற்கு வேறேதுக் கூறாமல் மேற்கோளுக்குப் பொழிப்புரையும் பொழிப்புரையை விளக்கும் திருட்டாந்தமுமே ஆசிரியர் அருளிச் செய்தார்.



இரண்டலா வான்மா இருதிறனறிவுள தென்றதனால், சத்தெதிர் நில்லாத அசத்தும் சத்தும் தம்முள் ஒன்றாலொன்று அறியப்படா-மையால் இரு திறனறிவுளது சத்தும் அசத்துமல்லாத ஆன்மா வேயாம். இதை, தம்முள் ஒன்றானொன்று அனுபவிக்கப்படாத சூரியனையும் பொருள்களையும் அனுபவிக்கும் கண்போலுமென அனுமானித் தறிக. சத்தும் அசத்தும் உயிராலும் அறியப்படாத வழி அவை பயன்படுதலின்றிச் சூனியமாய் முடியுமாதலால் அவை யிரண்டும் உயிரால் அறியப்படுந் தன்மையுடையன என்பதைத் தெளிவாயறிக.

### உயிரின் தன்மை வேறுவேறு கூறுவாரை மறுத்து இம்மேற்கோளுக்கு நூலாசிரியர் அருளிய பொழிப்புரை

**இவ்விரண்டினையு மறிவதாய் உபதேசியாய் நின்ற அவ்வறிவு இரண்டன் பாலு முளதாய் உள்ளவதுவே அவ்வான்மாவா மென்றது.**

மேற்கோளிலுள்ள 'இருதிறனறிவு' என்பது வேற்றுமைத் தொகை. அவ்வுருபு விரியுங்கால் உண்டாகும் பொருள் வேறு பாட்டை விளக்குமுகத்தால் உயிருக்கு வேறு வேறு இலக்கணங் கூறுஞ் சமயங்களை யெல்லாம் மறுக்குமுறையைக் கூறுகின்றது இப்பொழிப்புரை.

**இ-ள் :** இவ்விரண்டினையும் அறிவதாய் - முன்னைய இரண்டதி கரணங்களிலும் கூறப்பட்ட சத்தையும் அசத்தையும் அறியும் தன்மையுடையதாய், உபதேசியாய் - அறிவிக்க அறியுந் தன்மை யுடையதாய், அவ்விரண்டன்பாலும் நின்ற அறிவுளதாய் - சத்து அசத்து என்றும் இரண்டின் கண்ணும் நிலைபெற்ற அனுபவ அறிவுள்ளதாய், உள்ள அதுவே அவ்வான்மாவா மென்றது - உள்ள அதுவே சத்தும் அசத்துமல்லாத சதசத்தாகிய உயிராம். ஆதலால் இருதிறனறிவுள திரண்டலாவான்மாவென மேற்கோளிற் கூறப்பட்டது எ-று.

அறிவதாய் உபதேசியாய் உளதாய் என்பவற்றிலுள்ள ஆய் என்னும் வினையெச்சங்கள் மூன்றும் உள்ளவென்னும் பெயரெச்ச வினைக்குறிப்போடு முடிந்தன.

இருதிறனறிவென்னும் தொகைச் சொல் இவ்வதிகரணத்தில் மூன்று வேற்றுமை யுருபுகள் விரிந்து பொருள் தரும் வகையில் நின்றதென்னுங் கருத்தால் ஆய் என்பதை மூன்று வினையெச்சமாகக் கூறினார்.

அவற்றுள், சத்து அசத்து என்னும் இரண்டினையும் அறியும் அறிவென்னும் இரண்டாம் வேற்றுமைத் தொகைப் பொருள்பற்றி, இவ்விரண்டினையும் எனவும்;

சத்து அசத்து என்னும் இரண்டினாலும் அறியுமென்னும் மூன்றாம் வேற்றுமைத் தொகைப் பொருள் பற்றி உபதேசியாய் எனவும்;

சத்தினிடத்திலும் அசத்தினிடத்திலும் நிலைபெற்ற அனுபவ அறிவென்னும் ஏழாம் வேற்றுமைத் தொகைப் பொருள்பற்றி, நின்ற அவ்வறிவு இரண்டன்பாலு முளதாய் எனவுங் கூறப்பட்டது.

இவ்விரண்டினையும் அறிவதாயுள்ளவது என்றதனால் சத்தும் அசத்தும் ஒன்றையொன்று அறியாவாயின் இவ்விரண்டையும் அறியும் பொருள் வேறென்ன வென்னும் வினாவுக்கு உயிரே அறியுமென விடைகூறி, சத்தே அசத்தை அறியுமென்னும் சிவாத்துவித சைவரையும் அசத்தே சத்தை அறியுமென்னும் சிவசங்கிராந்தவாத சைவரையும் மறுத்தவாறு காண்க.

உபதேசியாயுள்ளவது என்றதனால் உயிர் அறிவிக்க வேண்டாது தானே யறியும் இயல்புடையதென்னும் சிவசமவாத சைவர், ஈசுர அவிகாரவாத சைவர், ஐக்கியவாத சைவர் மதங்களையும் அவற்றோ டொத்த சமயங்களையும் மறுத்தவாறு காண்க.

இரண்டன்பாலு முளதாயுள்ளவது என்றதனால் முத்தியிலும் மலம் நீங்காதாதலால் ஆன்மாவின் அறிவு சிவத்தோடு கூடாமல் மலத்தில் அடங்கிக் கற்போலக் கிடக்குமென்னும் பாடாணவாத சைவர் பேதவாத சைவர். மதங்களையும், உயிர் சத்தோடு கூடியவழி ஒன்றாய்ப் போவதேயன்றி சிவனிடத்தில் நின்று சிவானந்தத்தை அனுபவிப்பதில்லை யென்னும் சுத்தசைவர் மதத்தையும் அவற்றோடொத்த சமயங்களையும் மறுத்தவாறு காண்க.

இவ்விரண்டினையு மறிவதாயெனவே அவ்வறியுந்தன்மை சத்தைப்போல ஒன்றாக அறியுந் தன்மையும் அசத்துப் போல அறியாத தன்மையுமின்றி, இருளின் தன்மையும் ஒளியின் தன்மையுமல்லாத ஏகதேசமாயறியும் கண்ணின் தன்மை போன்ற வேறானதோர் தன்மையென்பதும்;

உபதேசியாய் எனவே, அது ஆகாயத்தின் குணமாகிய ஓசை துணையுள்ளவிடத்து விளங்குவது போலப் பெத்தத்திற் கருவிகளை யும் முத்தியில் திருவருளையும் துணையாகக் கொண்டு அறிவு



விளங்குமென்பதும், இரண்டன்பாலு முளதா யெனவே பளிங்கு சார்ந்ததன் வண்ணமாய் விளங்குவது போல அசத்தைச் சார்ந்த விடத்து அசத்தாயும் சத்தைச் சார்ந்த விடத்துச் சத்தாயும் அழுந்துந் தன்மையதென்பதும் பெறப்பட்டன.

**சத்து அசத்து இரண்டினையும் அறிவது ஆன்மா என்பதற்கும் அவ்விரண்டினையும் அறியும் முறையில் தன்னை அறியுமென்பதற்கும் காட்டும் உதாரணம்**

***அருவுருவந் தானறித லாயிழையா யான்மா***
***வருவுருவ மன்றாகு முண்மை - யருவுருவாய்த்***
***தோன்றியுட னில்லாது தோன்றாது நில்லாது***
***தோன்றன் மலர்மணம் போற்றொக்கு.***

பொழிப்புரையில் இரண்டினையும் அறிவதாய் உபதேசியாய் இரண்டன்பாலு முளதாய் எனக் கூறிய மூன்றனுள் இரண்டினையும் அறிவதாய் என்பதனை வலியுறுத்தி உயிர் சத்துமன்று அசத்துமன்று என்பதை விளக்குகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** ஆய் இழை ஆய் ஆன்மா அருவுருவம் அறிதல் அருவுருவம் அன்று ஆகும் உண்மை அருவுருவாய்த் தோன்றி உடனில்லாது தோன்றாது நில்லாது மலர் மணம் போல் தொக்குத் தோன்றல்.

**இ-ள் :** ஆய் இழை ஆய் ஆன்மா அருவுருவம் அறிதல் அருவுருவம் அன்று ஆகும். நுணுகிய நூல்களை ஆராயும் உயிரே சத்து அசத்து என்னும் இரண்டையும் அறிவதாதலான் அது சத்துமன்றி அசத்து மன்றி அவற்றின் வேறாகும், (அவ்வாறானால் அவ்விரண்டையும் அறியும் உயிருக்குத் தன்னுண்மை அறியப்படுமோ படாதோ என்னும் வினாவுக்கு அறியப்படுமென விடைகூறின், தன்னையுஞ் சேர்த்து மூன்றையும் அறியுமென்று கூறாமல் அவ்விரண்டையும் அறியுமென்று கூறியது பொருந்தாது; அறியப்படாதென விடைகூறின் அறியப்படாத பொருள் சூனிய மெனப்பட்டுக் குற்றமா மெனின்) உண்மை அருவுருவாய்த் தோன்றி உடனில்லாது தோன்றாது நில்லாது மலர் மணம்போல் தொக்குத் தோன்றல் - அவ்வான்மாவின் உண்மைத் தன்மை சத்தும் அசத்தும் போல விளங்கித் தோன்றி அவற்றோடொப்ப நிற்பது மன்றாய் விளங்காது சூனியமாய் நிற்பது மன்றாய்ச் சத்தைச் சார்ந்தபொழுது சத்தாயும் அசத்தைச் சார்ந்த பொழுது அசத்தாயும் சார்ந்த பொருளின் வண்ணமாய் மலரின்கண்

மணம் அம்மலர்போல விளங்கித் தோன்றுதலும் விளங்காது சூனியமாய் நிற்பது மன்றாய் அம்மலரின் கண் அடங்கித் தோன்றுவது போல்வதோர் இயல்பாம். ஆதலால் அவ்வுயிர் சத்தும் அசத்தும் போலத் தனித்தறியப்படுவ தொன்றன்றி அவ்விரண்டையும் அறியுமுகத்தால் அறியப்படுவதாம் எ-று.

'ஆதலால் அவ்வுயிர் சத்தும் அசத்தும் போலத் தனித்தறியப் படுவதொன்றன்றி அவ்விரண்டையும் அறியுமுகத்தால் அறியப்படுவதாம்' என்பது குறிப்பாகக் கொள்ளும்படி நின்றமையாற் குறிப்பெச்சம்.

சத்துச் சுட்டறிவினால் அறியப்படாத பொருளாதலால் அதை அருவென்றும் அசத்துச் சுட்டறிவினால் அறியப்படுமாதலால் அதை உருவென்றுங் கூறினார். ஆறாஞ் சூத்திரத்தில் உணருரு அசத்து என்றவிடத்தில் உருவெனக் கூறியதும் சுட்டியறியப்படுதல் பற்றியேயாகும்.

அருவுருவந்தானறிதல் என்றதிலுள்ள தான் என்பது அசை. அருவுருவந் தானறிதல் என்றவிடத்தில் ஆல் உருபை விரித்து அருவுருவந்தானறிதலால் அருவுருவம் அன்றாகும் எனக் கொள்க.

இழை - நூல். இவ்விடத்தில் இழையென்பது சாத்திரத்தை உணர்த்திற்று. ஆய்தல் - நுணுகுதல், ஆயிழையா யெனப் பொருளின் நுணுக்கம், நுண்ணிய பொருளைக் கூறும் நூலின்மேல் ஏற்றிக் கூறப்பட்டது. இழை என்ற இடத்தில் ஐ உருபு தொக்கு நின்றது. அதை விரித்து நூலை எனக்கொள்க.

உயிருக்குஅறியுந் தன்மை யுண்டாதலா லல்லவா வேதாகமம் முதலிய நூல்கள் தோற்றுவிக்கப்பட்டன வென்பதை வலியுறுத்தக் கருதி 'ஆயிழையாய் ஆன்மா' என்பதில், அது சத்து அசத்து என்னும் இரண்டினையும் அறியுமென்னும் பொருளைப் புணர்த்திக் கூறினார். இக்கருத்தே பற்றி சங்கற்ப நிராகரணத்தில் நிமித்தகாரண பரிணாமவாதி மத நிராகரணத்தில் 'பலகலை யுலகி நிலவுதலானும்' என்றார் உமாபதி சிவம்.

ஆன்மா என்ற இடத்தில் ஏகாரம் தொக்கு நின்றது. அதை விரித்து ஆன்மாவே என்க. அருவுருவாய் என்ற இடத்தில் ஆய் என்பது போல என்னும் உவமைப் பொருளைத் தருகின்றது.



## சத்து அசத்து இரண்டினாலும் அறிவது ஆன்மா என்பதற்குக் காட்டும் உதாரணம்

***மயக்கம துற்று மருந்திற் றெளிந்தும்***
***பெயர்த்துணர்நீ சத்தாகாய் பேசி - லசத்துமலை***
***நீயறிந்து செய்வினைக ணீயன்றி வேறசத்துத்***
***தானறிந்து துய்யாமை தான்.***

சத்தையும் அசத்தையும் அறியும் முறையில் தன்னையு மறிகின்ற உயிர் அறியுந் தன்மையால் சிவசத்தோடொத்த அறிவுடைப் பொருளாகு மென்பாரை நோக்கி, பொழிப்புரையில் உபதேசியாய் எனக் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்

**கொண்டு கூட்டு :** மயக்கமது உற்றும் மருந்தின் தெளிந்தும் பெயர்த்து உணர் நீ பேசில் சத்து ஆகாய் நீ அறிந்து செய்வினைகள் நீ அன்றி வேறு அசத்து தான் அறிந்து துய்யாமை அசத்துமலை வேறு

**இ-ள் :** மயக்கமது உற்றும் மருந்தின்தெளிந்தும் - உன்னறிவை விளக்குதற்குரிய துணையில்லாத விடத்து ஒரு பொருளை இன்னதென் றறியமாட்டாது மயங்கியும் பசிநோயைத் தீர்த்தற்கு அன்னம் மருந்தாதல் போல மயக்க நோய் தீர்த்தற்கு மருந்தாகிய கருவிகளைப் பொருந்திய விடத்து மயக்கம் நீங்கி அப்பொருள் இன்னதென்று நிச்சயித்தும், பெயர்த்து உணர் நீ பேசில் சத்து ஆகாய் - இவ்வாறு மாறி மாறி அறிந்து வருகின்ற நீ சொல்லுமிடத்து என்றும் ஒரே தன்மையாய்த் துணையின்றி இயல்பாயறிகின்ற சிவத்தோ டொப்ப அறியும் சத்தியுடையாயல்ல, (அவ்வாறானால் நான் அசத்தன் ஆவேனோ வெனில்) நீ அறிந்து செய்வினைகள் நீ அன்றி வேறு அசத்து தான் அறிந்து துய்யாமை அசத்தும் அலை - துணையுள்ளவிடத்தும் நீ முன்னர் அறிந்து செய்த வினைப் பயன்களை இப்பொழுது நீயே அறிந்து அனுபவிக்கும் வல்லமை யுடையாயன்றி உன்னின் வேறான அசத்தாகிய பாசம் அறிந்தனு பவிக்க மாட்டாமையால் அதனோடொத்த அசத்தாவாயுமல்லை, வேறு - ஆகாயத்தின் குணமாகிய ஓசை அதை விளக்குந் துணையுள்ள விடத்து விளங்கித் துணையில்லாத விடத்து விளங்காதவாறு போல அறிவை விளக்குந் துணையுள்ளவிடத்து அறியும் ஆற்றலுடைமையும் துணையில்லாதவிடத்து அறியுமாற்ற லின்மையுமாகிய இரண்டு முடைய நீ துணையின்றி அறியும் சத்தும், துணையிருப்பினுமறியாத அசத்துமாகிய இரண்டுக்கும் வேறாய்ச் சித்து அசித்து என்னும் இரண்டு தன்மையுமுடைய பொருளாவாய் எ-று.

மருந்திற் றெளிந்தெனவே மருந்தில்லாதவிடத்து மயங்குத லுண்டென்பது பெறப்பட்டது. அறிவை விளக்குந் துணையில்லாத விடத்துத் தோன்றுவதும் துணையுள்ள விடத்து நீங்குவதுமான மயக்கம் உணவில்லாத போது தோன்றி உணவுள்ள போது நீங்கி நிற்கும் இயல்புடைய பசியோடொத்தலால் மயக்கத்தைப் பசிநோயாகவும், உணவு பசியைத் தீர்ப்பது போல வியஞ்சகம் மயக்கத்தைத் தீர்க்கும் ஒப்புமை பற்றி வியஞ்சகத்தைப் பசிதீர்க்கும் மருந்தாகவும் உருவகஞ் செய்தார். இதில் மயக்கத்தை நோயென்று உருவகஞ்செய்யாது வியஞ்சகத்தை மட்டும் மருந்தென்று உருவகஞ் செய்தமையால் இது ஏகதேச உருவகம். உருவகமாவது உவமானத்தை உவமேயமாகக் கூறுதல்.

இதில் என்ன மருந்தென்று வெளிப்படையாக உருவகஞ் செய்யாமல், பொதுவாக மருந்தென்று உருவகஞ் செய்தார். உயிர் திரும்பத் திரும்ப அறிவு அறியாமைகளோடு கூடுமெனக் கூறும் இச்சந்தர்ப்பத்திற்குப் பொருத்தமான உருவகம் திரும்பத் திரும்பவுண்டாகும் பசிநோயைத் தீர்க்கும் மருந்தேயாகும். அதனால், பசிநோயைத் தீர்த்ததற்கு அன்னம் மருந்தாதல் போலவென உரைசெய்யப்பட்டது.

மயக்கமது என்பதிலுள்ள அது என்னும் விகுதி, மயக்கம் என்னும் பகுதிப் பொருளையே குறித்து நிற்றலால் பகுதிப்பொருள் விகுதி.

அசத்துமலை என்றதிலுள்ள உம்மை, சத்தாகாய் என முன்னர்க்கூறியதைத் தழுவி நிற்றலால் இறந்தது தழுவியது. இறுதியிலுள்ள தான் என்பது அசை, துவ்வாமை துய்யாமை என்றதன் மரூஉ.

சத்தியை உடைய பொருள் சத்தம். சத்தியில்லாத பொருள் அசத்தம். சத்தம் அசத்தம் என்னும் வடசொற்கள் 'அம்' கெட்டு சத்து அசத்து என நின்றன.

அசத்துமலை என்பது அசித்துமலை யென்று பாடமாயின், முன்னர்ச் சத்தாகாய் என்றதனை இசையெச்சமாகக் கொண்டு, சந்தாந் தன்மையே உடையாயல்லை அதன்மேலும் சித்தாமாறியாங் ஙனமென வினாவி, சித்துமன்று அசித்துமன்று எனக்கொள்க. அவ்வாறு கொண்டால் சித்தசித்தாவாய் என்பது கருத்து. இசையெச்ச மாவது ஒழிந்த சொற்கொண்டு பொருளுணர நிற்பது.



**சத்து அசத்து இரண்டன்பாலும் அதுவதுவாய் நின்று ஆன்மா அறியும் என்பதற்குக் காட்டும் உதாரணம்**

***மெய்ஞ்ஞானந் தன்னில் விளையா தசத்தாத***
***லஞ்ஞான முள்ள மணைதல்காண் - மெய்ஞ்ஞானந்***
***தானே யுளதன்றே தண்கடனீ ருப்புப்போற்***
***றானே யுளமுளவாந் தான்.***

முன்னைய வெண்பாவிற் கூறிய மயக்கம் அவ்வுயிரோடு தொடர்புடைய முதல்வனுக்கு உண்டாகாதோ எனவும் அது உயிருக்கு எப்போது வந்ததெனவும் வினாக்கள் தோன்று மல்லவா? அவ்வினாக் களுக்கு விடைகூறுமுகமாக, பொழிப்புரையில் இரண்டன்பாலு முளதாய் எனக் கூறியதை வலியுறுத்துகிறது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** அஞ்ஞானம் மெய்ஞ்ஞானந் தன்னில்அசத்து ஆதல் விளையாது மெய்ஞ்ஞானந் தானே உளது அன்றே தான் ஏய் உளம் உளவா உள்ளம் அணைதல் தண்கடல் நீர் உப்புப் போல் காண்.

**இ-ள் :** அஞ்ஞானம் - முன்னைய வெண்பாவிற் கூறப்பட்ட மயக்கமானது, மெய்ஞ்ஞானந் தன்னில் அசத்து ஆதல் விளையாது - வேறு வேறாகவும் விட்டு விட்டும் அறியாது எவற்றையும் ஒன்றாகவும் தொடர்ச்சியாகவும் அறிகின்ற சிவத்தினெதிர் (சூரியன் முன் இருள் போல) நிலைபெறாதாதலால் அங்கு உளதாதலின்றி, மெய்ஞ்ஞானந் தானே உளது அன்றே - சிவம் எப்போதுள்ளதோ அப்போதே, தான் ஏய் உளம் உளவா - தான் பொருந்துதற்கு உரிமையுடைய உயிரும் உள்ளதாக, உள்ளம் அணைதல்- அவ்வுயிரைப் பற்றி நிற்றல், தண் கடல் நீர் உப்புப் போல் காண் - குளிர்ந்த நீரையுடைய கடலைப் பற்றாமல் கடலிலுள்ள நீரைப் பற்றி நிற்கும் உப்புப் போலென்று அறிவாயாக எ-று.

விளையுமென்பதன் எதிர்மறை வினையெச்சமாகிய விளையா தென்பது, அணைதல் என்னும் தொழிற் பெயரோடு முடிந்தது. மூன்றாமடியின் முதலிலுள்ள தானே என்றது மெய்ஞ்ஞானமே என்பதை உறுதிப்படுத்துகின்றது. நான்காம் அடியின் முதலிலுள்ள 'தான்' எழுவாய், இறுதியிலுள்ள தான் அசை.

'ஏயுளம்' என்னும் வினைத் தொகை ஏய்தற்குரிமை யுடைய உளம் என்னும் பொருளைத் தருகின்றது. ஏய்தல் - பொருந்துதல். ஏயுந்தன்மை உயிரிடத்துள்ள பற்றுந் தன்மை.

தண் கடல் நீர் உப்புப் போல் என்றனால், பதி கடல்போலப் பூரண வியாபகமாகவும் பசு நீர்போல ஏகதேச வியாபகமான வியாப்பியமாகவும் பாசம் உப்புப் போல வியாபகமான வியாத்தியாயும் நிற்குமென்பது பெறப்பட்டது. இதனால் நீருக்குக் கடலாகிய வெளியோடும் உப்போடும் சம்பந்தம் இருப்பது போல, உயிருக்குச் சத்து அசத்து என்னும் இரண்டோடும் சம்பந்தம் உண்டென்பதை வலியுறுத்தியவாறு காண்க.

இவ்விடத்தில், உயிர் சத்து அசத்து என்னும் இரு திறனையும் அறியும் அறிவுளதெனக் கூறியதனால், சத்தும் அசத்தும் அறியப்படும் பொருள் (பிரமேயம்) எனவும் அவற்றை அறிவதாகிய சதசத்தாகிய உயிர் பிரமாதா எனவும் அவ்வுயிரின் அறிவாகிய சிற்சத்தி பிரமாணம் எனவும் அவ்வறிவு நிகழ்ச்சி பிரமிதி எனவும் விளங்கும்.

இருதிறனால் விளங்கும் அறிவுளதெனவே, அவ்விரண்டனுள் அசத்தால்அறிவு விளங்குமிடத்து, உயிருக்கு வேறாய் நின்று அறிவை விளக்குவனவாகிய காட்சி அனுமானம் உரையெனப்படும் பாச ஞானம் மூன்றும் உயிரின் அறிவை விளக்குவதற்குத் துணையாகும்.

சத்தால் அறிவு விளங்குமிடத்து, உயிரின் வேறின்றி உயிருக் காதாரமாய் உயிரோடு உடனாய் நின்று அறிவை விளக்குவதற்குச் சிவஞானந் துணையாகும். அதனாற் பாச ஞான பசு ஞானங்களும் பிரமாணமென்று உபசரித்துக் கூறப்படும்.

இருதிறனும் அறிவுளதெனவே உயிர் இரண்டிடத்துங் கேடின்றி நின்று அசத்தால் அறிவு விளங்கி அசத்தை அறியுமிடத்து அசத்தின் பாலும், சத்தால் அறிவு விளங்கிச் சத்தை அறியுமிடத்துச் சத்தின்பாலும் அதுவதுவாய் அழுந்தி யனுபவிக்குமென்பது பெறப்படும்.

இவ்வாறன்றிக் காண்டல் முதலிய துணைகளையே பிரமாண மென்னும் தார்க்கிகர் முதலியோர் மதங்கள் பொருந்தா தென்பதையும், காண்டல் முதலிய துணைகளால் நிகழும் அறிதல் வேறுபாடுகளையும் அவற்றின் இயல்புகளையும் பௌட்கரம் முதலிய சிவாகமங்களுட் காண்க.

ஏழாஞ் சூத்திரம் முற்றிற்று.

★★★



# எட்டாஞ் சூத்திரம்

ஏழாஞ் சூத்திரத்தில் சாதித்தற்குரிய அதிகாரியாகிய ஆன்மாவின் இயல்பைக் கூறி, அவ்வதிகாரி செய்யவேண்டிய சாதனமும் அச்சாதனம் வரும்வழியும் சாதித்ததனாற் பெறப்படும் பயனும் இவையென இவ்வெட்டாஞ் சூத்திரத்தாற் கூறுகின்றனர்.

***ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்***
***தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்***
***டன்னிய மின்மையி னரன்கழல் செலுமே.*** என்பது சூத்திரம்.

**கருத்துரை**

இச்சூத்திரம் ஞானத்தினை யுணரும் முறையினை யுணர்த்துதனுதலிற்று.

**இ-ள் :** ஆன்மாவின் அறிவு, முன்னைய சூத்திரத்தில் இருதிறன் என்று கூறிய சத்து அசத்து என்னும் இரண்டனுள் அசத்தால் விளங்கி அசத்தின் பாலுளதாய் அசத்தினை அறிந்து நின்றவாறும், சத்தால் விளங்கிச் சத்தின் பாலுளதாய்ச் சத்தினை அறிந்து நின்றவாறும் அறியும் முறையினை அறிவித்து, அவ்வாறு அறிவிக்கும் முறையில் சாதித்தற்குரிய அதிகாரந் தனக்குண்டென ஏழாஞ் சூத்திரத்தா லறிந்த ஆன்மாவுக்குச் சாதிப்பதனாற் பெறப்படும் பயனும் அப்பயனைப் பெறுவதற்குரிய சாதனமும் அச்சாதனம் வரும் வழியும் இவையென வுணர்த்துதல் இவ்வொட்டாஞ் சூத்திரத்தின் கருத்து.

இதனால், சூத்திரங்களுக் கிடையேயுள்ள தொடர்பு விளங்கும்.

**சூத்திரத்தின் பொருள் :** தவத்தினில் - உயிர் தான் முன்பு செய்த புண்ணிய விசேடத்தால், தம்முதல் - இதுவரையுந் தனக்குள் நின்று சரியை கிரியை யோகங்களை உணர்த்தி வந்த பரம்பொருளே

இப்பொழுது, குருவுமாய் - குருவடிவங் கொண்டெழுந்தருளி வந்து சிவதீக்கை செய்து, (அரசகுமாரனாகிய நீ) ஐம்புல வேடரின் வளர்ந்து அயர்ந்தனை என உணர்த்த - ஐம்பொறிகளாகிய வேடரிடத்தில் வளர்ந்து நின் பெருந் தகைமையை அறியாது மயங்கி இடர்ப்பட்டாய். நின் பெருந்தகைமை இவ்வியல்புடையதென்று அறிவுறுத்த, விட்டு - அறிந்தவுடனே அவ்வேடரை விட்டு நீங்கி, அந்நியமின்மையின் - முதல்வனாகிய அரசனோடு அந்நியமின்றிப் பிரிக்க முடியாத தன்மையின் நிலைபெற்று, அரன் கழல் செலுமே - முதல்வன் திருவடிகளை அணையும் எ-று.

உயிர் என்னும் எழுவாய் முன்னைய சூத்திரத்திலிருந்து வருவிக்கப்பட்டது. ஐம்புலனென்றது ஐம்புலனையு மறிகின்ற ஐம்பொறிகளைக் குறித்தலால் ஆகுபெயர்.

குருவுமாய் என்றதிலுள்ள உம்மை உயிர்க்குயிராய் உள் நின்று உணர்த்தியதைத் தழுவி நிற்றலால் இறந்தது தழுவியது; முதல்வன் குருவடிவங்கொள்ளுதற்குரிய கருணையின் பெருமையை விளக்குவதாற் சிறப்புமாம்

அன்னியமின்மை - அத்துவிதம்.

வெண்கொற்றக் குடையும் நவமணிமுடியும் சிங்காசனமும் அரசர்க்குரிய சிறப்படையாளங்கள். அதுபோல, பிரபஞ்சமெல்லா வற்றுக்கும் மூலகாரணமாம் இயல்புடைய ஒருபெரு வெண்கொற்றக் குடையும் எவற்றையும் ஒருங்கே ஓரியல்பானறியும் பேரறிவாகிய ஒரு பெருஞ் சுடர் முடியும் அங்கங்கே உயிர்க்குயிராய் நின்று எவற்றினை யுஞ் செலுத்தும் இயல்பாகிய ஒரு பெருஞ் சிங்காசனமும் பிறரொருவர்க்கின்றித் தனக்கே யுரிமையாகச் சிறந்தமை பற்றி, பசுக்களுக்குப் பாசங்களை அரித்தலான் அரனென்னும் திருப்பெயரை யுடைய முதல்வனை மன்னவனாகவும், அம்முதல்வனது பேரானந் தப் பெருஞ் செல்வம் முழுவதும் தனதேயாகக் கொண்டனுபவிக்கும் சுந்திரமுடைமையும் சித்தெனப்படுஞ் சாதியொற்றுமையும் பற்றி ஆன்மாவை அரசகுமாரனாகவும் அவ்வான்மாவின் அறிவுப் பெருஞ்செல்வம் முழுவதையும் வழிப்பறிசெய்து கொண்டு அவ்வுயிரைச் சிறுமைப் படுத்துதலும் விதிவிலக்கை மீறி இழிதொழி லில் நிற்பித்தலுமாகிய இயல்புபற்றி ஐம்பொறிகளை வேடராகவும் உருவகஞ் செய்து, முதல்வனை அரசனாகவும் ஆன்மாவை அரசகுமாரனாகவும் உருவகஞ் செய்யாமையால் இது ஏகதேச உருவகம்.



ஐம்புல வேடரின் அயர்ந்து வளர்ந்தாலன்றி வளர்ந்தனையெனக் கூறமுடியாது. ஆகவே வளர்ந்தனை என்ற அநுவாதத்தால் ஐம்புவ வேடரின் அயர்ந்து வளர்தல் பெறப்பட்டது.

இச்சூத்திரத்தில், தவத்தினிலுணர்த்தவென்றது ஓரதிகரணம்; தம்முதல் குருவுமாய் என்றது ஓரதிகரணம்; ஐம்புல வேடரினயர்ந் தனை வளர்ந்தென வென்றது ஓரதிகரணம்; விட்டன்னிய மின்மையி னரன் கழல் செலுமே என்றது ஓரதிகரணம், எல்லாமாக இச் சூத்திரத்தில் நான்கு அதிகரணங்கள் உண்டு.

## முதலதிகரணம்

### தவத்தால் ஞானமுண்டா மெனக் கூறும் மேற்கோள்.

***ஈண்டு இவ்வான்மாக்களுக்கு முன்செய்தவத்தான் ஞானம் நிகழுமென்றது.***

ஏழாஞ் சூத்திரத்திற் கூறப்பட்ட அதிகாரியினாற் செய்யப்படுஞ் சாதனமும் அச்சாதனம் வரும் வழியும் பற்றி ஒவ்வொரு சமயத்தாரும் வேறு வேறு விதமாகக் கூறுவர். இதில் முத்திக்குச் சாதனம் சரியை கிரியை யோகங்களோ ஞானமோ என்பது ஐயம். இவ்வையப்பாட்டின்கண் சரியை முதலியனவென்பது பிறர் கூறும் பக்கம். அவர்களை மறுக்கு முகமாகச் சூத்திரத்தின் முதற் கூற்றைப் பதச்சேதஞ் செய்து ஞானமே சிறந்த சாதனமெனவும் அது முற்செய்தவத்தான் வருமென்றுங் கூறுகின்றது இந்த மேற்கோள்.

**இ - ள் :** ஈண்டு - இவ்வதிகரணத்தில், இவ்வான்மாக்களுக்கு - சத்தையும் அசத்தையும் அறியும் இயல்புடைய ஆன்மாக்களுக்கு, முன் செய்தவத்தான் - முற்பிறவிகளிற் செய்த சரியை கிரியை யோகங்களாகிய தவவிசேடத்தால், ஞானம் - குரவனுணர்த்தியவாறு சிவஞானங் கண்ணாகக் கொண்டறிவதாகிய சாதனஅறிவு, நிகழுமென்றது - ஐயந்திரிபின்றி விளங்கும் எ-று.

இதில் ஏழாஞ் சூத்திரத்திற் கூறப்பட்ட இயல்புடைய ஆன்மாக் களுக்கு என்று கூறக்கருதி இவ்வான்மாக்களுக்கு என்றார். முற்பிறவி களிற் சரியை கிரியை யோகங்களைப் படிமுறையாக ஒன்றன்பின் ஒன்றாகச் செய்தாலன்றி இவ்வொரு பிறவியிற் செய்த தவத்தால் ஞானம் உண்டாகாதென்பதை யுணர்த்துவதற்காக, தவத்தால் என்று கூறாமல் முற்செய்தவத்தால் என்று கூறினார். இவ்விடத்தில்

ஞானமென்றது குரு உபதேசித்தவாறு சிவஞானம் கண்ணாகக் கொண்டறிவதாகிய சாதன அறிவையேயாகும். நிகழ்தல். அந்தச் சாதன அறிவு குரு அறிவித்தவாறே சந்தேக விபரீதமின்றி விளங்குதல்.

### தவத்தால் ஞானம் நிகழுமென்பதற்குக் காட்டும் ஏது

மேற் சரியை கிரியை யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோக்ஷத்தைக் கொடாவாகலான்.

சரியை கிரியை யோகங்களாகிய தவங்களே முத்திக்குச் சாதனமென்பது பொருந்தும். அவ்வாறானால் மேற்கோளில் முத்திக்குச் சாதனமாக ஞானம் நிகழுமென்றது எதற்காக வென்பாரை நோக்கி, ஞானத்தாலன்றி முத்தி சித்தியாதெனக் கூறி முற்செய் தவத்தால் ஞானம் நிகழுமென மேற்கோளிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வேது.

**இ-ள் :** மேல் - முற்பிறகளில், சரியை கிரியா யோகங்களைச் செய்துழி - சரிஂய கிரியை யோகம் என்னும் தவங்களைச் செய்தவிடத்து அத்தவங்கள், நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லது - சன்மார்க்கமாகிய ஞானத்தைப் பயப்பித்தன்றி, மோக்ஷத்தைக் கொடாவாகலான் - முத்தியைக் கொடுப்பனவல்ல வாகலான், ஈண்டு இவ்வான்மாக்களுக்கு முற்செய் தவத்தான் ஞானம் நிகழுமென மேற்கோளிற் கூறப்பட்டது எ-று.

தவமெனப்படுவது உண்டி சுருக்குதல் முதலியனவல்ல என்பதைக் குறிப்பிடக் கருதி, இவ்விடத்தில் சரியை கிரியா யோகங்களையெனக் குறிப்பிட்டுக் கூறினார். கிரியா யோகங்க ளென்றது கிரியையும் யோகமும் என்னும் பொருளைத் தரும் உம்மைத் தொகை. கிரியை யோகம் என்னும் இரண்டுக்கும் விசேட தீட்சையொன்றே உரித்துடையதென்பது தோன்ற அவ்விரண்டையும் ஒன்றாகத் தொகுத்துக் கூறினார். தவத்தால் ஞானம் நிகழுமாயின் திருஞானசம்பந்தர் முதலாயினோருக்குத் தவமின்றியும் ஞானம் நிகழ்ந்த தெவ்வாறென்னும் வினாவுக்கு விடை கூறுமுகமாக, முற்செய்தவத்தான் ஞானம் நிகழுமென மேற்கோளிலும், சரியா கிரியா யோகங்களை மேற்செய்துழியென ஏதுவிலுங் கூறி, தவத்தினாலேயே ஞானம் நிகழுமென்பதை வலியுறுத்தினார்.

மேற் சரியை கிரியா யோகங்களை என்றதற்கு மேலாகிய உண்மைச் சரியை கிரியா யோகங்களை யெனப் பொருள் கூறினும் பொருந்தும். சரியை கிரியை யோகம் என்பன உண்மைச் சரியை



உண்மைக் கிரியை உண்மை யோகம் எனவும் உபாயச் சரியை உபாயக் கிரியை உபாயயோகம் எனவும் இரு திறப்படும். உபாய மாவது உலக போகத்தைக் குறித்துச் செய்வது. உண்மையாவது முத்தியைக் குறித்துச் செய்வது.

ஞானமின்றி மோட்சம் சித்தியாதென்பதை வலியுறுத்த வேண்டி, ஞானத்தைக் காட்டி மோட்சத்தைக் கொடுக்குமென்று உடன்பாட்டு வாக்கியத்தாற் கூறாது, ஞானத்தைக் காட்டியல்லது மோட்சத்தைக் கொடாதென எதிர்மறை முகத்தாற் கூறினார். சரியை கிரியா யோகங்களைச் செய்துழி என்பது உபலக்கணமாதலின், தீட்சை பெற்றவிடத்து அதுவும் ஞானத்தைக் காட்டியல்லது மோட்சத்தைக் கொடாதெனக் கொள்க.

தீட்சை, சரியை கிரியை யோகம் முதலியனவெல்லாம் ஞானத்தைக் காட்டியல்லது மோட்சத்தைக் கொடாமையை வலியுறுத்தற் பொருட்டு ஞானத்தை நன்னெறியாகிய ஞானமென விசேடித்துக் கூறினார். நன்மையெனப் படுவன எல்லாவற்றிலுஞ் சிறந்த நன்மை வீடுபேறு. அதனைத் தலைப்படுவதற் கேதுவாய்ச் சிறந்த நெறியாதலின் ஞானம் நன்னெறி யெனப்பட்டது. வீட்டுக்கு நெறியென அவ்வச்சமயத்தாராற் கூறப்படுவன வனைத்துந் தன்கண்ணே வந்து கூட நின்ற பெருநெறியாகலானும் அது நன்னெறி எனப்பட்டது. நன்னெறி - சன்மார்க்கம்.

சரியை கிரியை யோகம் ஞானம் முதலிய ஒவ்வொன்றும் உண்மை உபாயம் என இருவகைப்பட்டு, அவை ஒவ்வொன்றும் சரியை கிரியை யோகம் ஞானமென நால்வகைப்படும்.

### சரியை யாதிகளால் ஞானம் நிகழுமென்பதற்குக் காட்டும் உதாரணம்

***தவஞ்செய்தா ரென்றுந் தவலோகஞ் சார்ந்து***
***பவஞ்செய்து பற்றறுப்பா ராகத் - தவஞ்செய்த***
***நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதலைக்***
***கற்றார்சூழ் சொல்லுமாங் கண்டு.***

முற்பிறவிகளிற் சரியை கிரியா யோகங்களைச் செய்தவர் அவற்றால் ஞானத்தைப் பெறுதல் எவ்வாறென்பாரை நோக்கி, அவற்றால் ஞானத்தையடையும் முறையை யுணர்த்தி ஏதுவிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**இ-ள் :** தவஞ் செய்தார் - சரியை முதலியவற்றைச் செய்தவர்கள், தவலோகம்என்றும் சார்ந்து - அத்தவப் பயன்களை அனுபவிப்பதற்குச் சாலோக சாமீப சாரூப பதங்களை உறுதியாகப் பொருந்தி அப்பதங் களிலுள்ள இன்பங்களை அனுபவித்து, பற்று பவஞ்செய்து அறுப்பா ராக - முன்னுடம்பு இறக்கும் பொழுது தான் செய்த வினை காரண மாகத் தன் மனத்திற் றோன்றிய அவாவினை மீண்டும் பூமியிற் பிறந்து அனுபவித்து நீக்கிக் கொள்ளுதற் பொருட்டு, தவஞ் செய்த நற்சார்பில் வந்து உதித்து ஞானத்தை நண்ணுதலை - மீளத் தவஞ்செய்தற்குரிய உயர்ந்த குலத்தின்கண் வந்து தோன்றி (தவக்குறைவால் அவ்விடயப் பற்று முறுகாவண்ணம் அறுத்து) தத்துவ ஞானத்தை அடைவராதலை, கற்றார் சூழ் கண்டு சொல்லும் - வீட்டு நூல்களைக் கற்றவர்களது நுண்ணறிவு அந்நூல்களின் பொருளறிந்து கூறும் எ-று.

தவவினை யானாலுஞ் சரி வேறு வினையானாலுஞ் சரி இவ்வுலகத்து உடம்பொடு கூடிநின்று செய்த வினையெல்லாம் அவற்றை அனுபவிப்பதற்குரிய உலகங்களிற் செலுத்தி அவ்வினைகளுக்குரிய போகங்களைப் பயந்தே விடுமாதலால் அவ்வினைப் பயன்களை அனுபவிக்காமற் றவறமாட்டாரென்று கூறவேண்டி, தவஞ்செய்தா ரென்றுந் தவலோகஞ் சார்ந்து என்றார்.

பற்றறுப் பாராக என்றதிலுள்ள ஆகவென்னும் செயவென்னும் வாய்பாட்டு வினையெச்சம், உண்ணவந்தான் என்பது உண்ணுதற் பொருட்டுவந்தான் என்னும் பொருளைத் தருவது போல, பற்றறுத்தற் பொருட்டு என்னும் பொருளைத் தருகின்றது. பற்றறுத்தற் பொருட்டு வந்துதித்து என்றதனால், முன்னுடம்பு இறக்கும் போது உலகவிடயங் களிற் பற்றுச் செல்லவில்லையானால்அவ்வுலகத்தில் நின்றவாறே ஞானத்தை நண்ணுவர் என்பது பெறப்படும். கற்றாரது சொல்லுதற் றொழிலை அவர்களது அறிவின் மேலேற்றிச் 'சூழ் சொல்லுமாம்' என்றார். சொல்லுமாம் என்றதிலுள்ள ஆம் என்பது அசை. நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதலென்ற அருத்தாபத்திப் பிரமாணத்தால், நற்சார்பில் வந்துதியாதார் தத்துவ ஞானத்துக்குரிய ரல்ல ரென்பது பெறப்பட்டது.



**சரியை முதலிய தவத்தாலன்றி வேள்வி முதலிய தவத்தால் ஞானம் உண்டாகா தென்பதற்குக் காட்டும் உதாரணம்**

**பசித்துண்டு பின்னும் பசிப்பானை யொக்கு**
**மிசைத்து வருவினையி லின்ப - மிசைத்த**
**விருவினை யொப்பி லிறப்பி றவத்தான்**
**மருவுவனா ஞானத்தை வந்து.**

சரியை முதலிய தவங்களே தத்துவ ஞானத்தை யுண்டுபண்ணு மென வலியுறுத்திக் கூறியதேன்? வேதத்துட் கூறிய வேள்வி முதலாயினவும் தத்துவ ஞானத்தை உண்டு பண்ணு மென்பது பொருந்து மென்பர். பாட்டாசாரியர். அவர்களை நோக்கி மறுத்து, சரியை முதலியனவே ஞானத்தைத் தருமென ஏதுவிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** இசைத்து வருவினையில் இன்பம் பசித்துண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும் இசைத்த இருவினை இறப்பு இல் தவத்தான் ஒப்பில் வந்து ஞானத்தை மருவுவன்.

**இ-ள் :** இசைத்து வருவினையில் இன்பம் - (ஒரு நல்வினையைச் செய்யத் தொடங்கி அறநூலை ஆராய்வாரது அறிவின்கண் அறமெனத் தோன்றுவன, அவற்றால் உண்டாகும் சுவர்க்கம் முதலிய காமியப் பயன்களையுங் கூறிக்கொண்டே வருவனவாய்க் காணப்படும்) அவ்வாறு கூறப்படும் வேள்வி முதலிய அறங்களினால் வரும்இன்பம், பசித்துண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும் - முன்னர்ப் பசித்தபோ துண்டவனுக்குப் பின்பு பசிவரும்போது அவ்வுண்டியால் வருமின்பத்தை யொக்கு மாதலால், இசைத்த இருவினை இறப்பு இல் தவத்தான் ஒப்பில் - (ஒருவனுக்கு ஞானமுண்டாக விடாமறறடுத்துப் பந்தப்படுத்துதலிற் பொன்விலங்கும்இரும்பு விலங்கும் போலச் சமப்படுத்தி உணரப்படுவனவாகிய) அறம் பாவம் என்று சொல்லப்படும் நல்வினை தீவினைகள், (நல்வினை தீவினைகளைப் போல அனுபவிப்பதனால் அழிந்து போகாத) மேலும் மேலும் முறுகி வளர்வனவாகிய சரியை முதலிய தவங்களால் நேராக ஒத்தால், வந்து ஞானத்தை மருவுவன் - அத் தவமுதிர்ச்சியால் ஞான குருவைத் தேடியடைந்து ஞானத்தை அடைவன் எ-று.

வேள்வி முதலிய தவங்களெல்லாம் அழியுமியல்புடைய காமியப் பயன்களைப் பயப்பனவன்றித் தத்துவ ஞானத்தைப் பயவா என்பதற்கு, வேள்வி முதலியவற்றை விதித்த நூல்களே சான்றாகு

மெனக் கூறவேண்டி இசைத்து வருவினை யென்றும், அவை ஞானத்தைப் பயவாமை மாத்திரமல்லாமல், தீவினைபோல ஞானம் நிகழவிடாது தடைசெய்தலு முடையனவாதலால், வேள்வி முதலிய நல்வினைகளையும் தீவினைகளையும் நீக்குதலே ஞானமுண்டா வதற்குக் காரணமாகுமெனக் கூறவேண்டி இசைத்த இருவினை யொப்பிலென்றுங் கூறினார்.

மருவுவனாம் என்றதிலுள்ள 'ஆம்' என்பது அசை. இறப்பில் தவத்தால் என்ற இடத்தில் தேற்றப் பொருளைத் தரும் ஏகாரம் தொக்கு நின்றது. அதை விரித்து இறப்பில் தவத்தானே என்க.

பசிப்பானை ஒக்கும் என்ற இடத்தில் பசிப்பானை என்றது பசிப்பானுக்கு உண்டியால் வரும் இன்பத்தைக் குறித்தலால் ஆகுபெயர். இசைத்து வருதல் நூலின் தொழில். அத்தொழிலை அறமாகிய வினையின் மேலேற்றி, இசைத்து வருவினை என்றார்.

இசைத்து வருவினையிலின்பம் பசித்துண்டு பின்னும் பசிப்பானை யொக்குமெனவே, இறப்பில் தவமாகிய சரியை முதலியவற்றால் வரும் ஞானம், தேவருக்குப் பசித்துண்டு பின்னும் பசித்தலில்லாத அமிழ்த உண்டியால் வரும் பயனையொக்கு மென்பதும் பெறப்பட்டது. அமிழ்த உண்டி நரை திரை மூப்பின்றி நிலைபெறுதலாகியபெரும் பயனைத் தருவ தோடமையாது பசி தீர்த்தலாகிய இடைப்பட்ட பயனையும் தருவது போல, இறப்பில் தவமும் தத்துவ ஞானத்தைப் பயப்பதோடமையாது இடைப்பட்ட பயனாகிய சாலோகம் முதலிய பதமுத்திகளையுந் தருமென்பதும் பொருந்தும்.

## இரண்டாம் அதிகரணம்

### கடவுளே குருவுமாய் வருவரெனக் கூறும் மேற்கோள்.

***இனி இவ்வான்மாக்களுக்குத் தமது முதறானே குருவுமாய் உணர்த்துமென்றது.***

முதலதிகரணத்திற் கூறியவாறு சரியை கிரியை யோகங்களால் நிகழும் ஞானத்தை உணர்த்துபவர், எமக்குக் கலை ஞானங்களை யுணர்த்தும் ஆசிரியர் போல எம்போன்றோரில் ஒருவராதல் கூடுமென்பர் ஒருசாரார். இதில் ஞானகுரு கடவுளோ நம்மில் ஒருவரோ என்பது ஐயம். இவ்வையப்பாட்டின் கண் நம்மில் ஒருவரென்பது பிறர் கூறும் பக்கம். இவ்வாறு கூறுவோர் சாங்கியரும் நையாயிகரும். அவர்களை மறுக்கு முகமாகச் சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைப் பதச் சேதஞ் செய்து கூறப்பட்டது இந்த மேற்கோள்.

**இ-ள் :** முதலதிகரணத்திற் கூறியவாறு சரியை கிரியை யோகம் என்னும் மூன்றையும் முறையாக அனுட்டித்து முற்றுப்பெற்ற பின், அது காரணமாக மலபரிபாகமும் சத்திநிபாதமுந் தோன்றி உண்மை ஞானத்தை அடைய விரும்புகின்ற உயிர்களுக்கு இதுவரை உயிர்க்குயிராய் நின்றுணர்த்திவந்த பரம்பொருளே அப்பருவத்தை அறிந்து குருமூர்த்தமாய் எழுந்தருளி வந்து உண்மை ஞானத்தை உணர்த்தும் எ-று.

கடவுள் குருவுமாய் வந்து உண்மை ஞானத்தை உணர்த்துவர் என்றதனால் ஏனையோரால் உண்மை ஞானத்தை உணர்த்த முடியா தென்றவாறாயிற்று. இக்கருத்தே பற்றி, 'அகத்துறுநோய்க் குள்ளின ரன்றி யதனைச் சகத்தவருங் காண்பரோ தான்' என்று உமாபதி சிவாச்சாரியாருந் திருவருட் பயனிற் கூறினார். தமது முதறானே என்றதிலுள்ள ஏகாரம் கடவுளே குருவுமாய் வருவரென உறுதிப் படுத்துதலாற் றேற்றம்.

### கடவுளே குருவுமாய் வருவரென்பதற்குக் காட்டும் ஏது

***அவன் அந்நியமின்றிச் சைதன்னிய சொரூபியாய் நிற்றலான்.***

அழியாத திருமேனியை யுடைய முதல்வன் மாயாகாரியமாகிய திருமேனியைப் பொருந்தமாட்டான். பொருந்துவனெனின் அவனும் எம்மனோரில் ஒருவனாவான். ஆதலாற் கடவுள் குருமூர்த்தியை ஆதாரமாகக் கொண்டு நின்று உணர்த்துவனென்றலே பொருந்து மென்பர் ஒரு சாரார். அவர், கடவுள் எங்கும் வியாபித்து நின்று எவற்றையுஞ் செலுத்துவதாகிய பொதுவான அதிட்டானத்தையே குருவிடத்துங் கொள்ளுவர். அவரை மறுத்துக் கடவுள் குருவினிடத்து நிற்றல் அதிட்டான மன்றிப் பேயாற் பிடிக்கப்பட்டவனிடத்துப் பேய் விளங்கித் தோன்றும் ஆவேசம் போலச் சிறப்பான அதிட்டானமாய்க் கடவுள் குருவின் ஆன்மாவை ஆவேசித்து நிற்பரென்றுணர்த்தி மேற்கோளை வலியுறுத்துகின்றது இவ்வேது.

**இந்த ஏதுவின் பொருள்:** பாலினிடத்து நெய் விளங்கித் தோன்றாது பாலின் வேறாய் மறைந்து நிற்பது போல, குருவினிடத்து வேறாய் மறைந்து நிற்றலின்றிச் சுத்த ஆன்ம சைதன்னியமே தனக்குச்

சொரூபமாகக் கொண்டு தயிரின் நெய்போல அவ்வான்மாவிடத்து விளங்கி நிற்றலால் இனி இவ்வான்மாக்களுக்குத் தமது முதறானே குருவுமாய் உணர்த்துமென மேற்கோளிற் கூறப்பட்டது.

சைதன்னியம் - மும்மலங்களாகிய மாசு நீங்கப்பெற்றது.

பாலினிடத்து நெய் மறைந்து வேறாய் நிற்றல்போல, ஞானகுருவல்லாத ஏனைய உயிர்களிடத்து மறைந்துவேறாய்நிற்றல் பொதுவான அதிட்டானம். ஞான குருவினிடத்து விளங்கி ஒன்றாயும் பொருளின் தன்மையால் வேறாயும் நிற்றல் சிறப்பான அதிட்டானம். இவற்றுள் சமயதீட்சை விசேட தீட்சைகளுக்குரிய குருவினிடத்துக் கொள்ளும் அதிட்டானம் பொதுவான அதிட்டானம்; ஞான குருவினிடத்துக் கொள்ளும் அதிட்டானம் சிறப்பான அதிட்டானம். குருவின் வடிவம் மாயாகாரியமாயினும் குருவாகிய ஆன்மா மாசுநீங்கிச் சைதன்னிய சொரூபியாய் விளங்குதலால் முதல்வன் அவ்வான்மாவையே திருமேனியாகக் கொண்டு குருவாய் வருவன் என்பது கருத்து.

**முதல்வன் குருவுமாய்த் தோன்றி உணர்த்தும் முறைமையை விளக்கிக் காட்டும் உதாரணம்**

***மெய்ஞ்ஞானந் தானே விளையும்விஞ் ஞானகலர்க்***
***கஞ்ஞான வச்சகலர்க் கக்குருவாய் - மெய்ஞ்ஞானம்***
***பின்னுணர்த்து மன்றிப் பிரளயா கலருக்கு***
***முன்னுணர்த்துந் தான்குருவாய் முன்.***

சிலருக்குக் குருவாய் வந்து உபதேசித்தலின்றியும் ஞானம் நிகழ்கின்றது. அஃதெவ்வாறென்பர் ஒருசாரார். அவர்களை நோக்கிக் குருவாய் வந்துணர்த்தும் முறைமையை வரையறுத்துக் கூறி மேற்கோளிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** விஞ்ஞானகலர்க்குத்தானே மெய்ஞ்ஞானம் விளையும் அன்றி பிரளயாகலருக்கு தான் குருவாய் முன் உணர்த்தும் அஞ்ஞான அச்சகலர்க்கு அக்குருவாய் பின்மெய்ஞ்ஞானம் உணர்த்தும் முன்.

**இ-ள் :** விஞ்ஞானகலர்க்குத் தானே மெய்ஞ்ஞானம் விளையும் - அம்முதல்வன் மூவகை ஆன்மாக்களுள் விஞ்ஞானகலருக்கு அறிவுக்குள் அறிவாய்த் தன்மையில் நின்றவாறே தத்துவ ஞானத்தை விளைவிப்பன், அன்றி பிரளயாகலருக்குத் தான் குருவாய்



முன்உணர்த்தும் - அவ்வாறன்றிப் பிரளயாகலருக்கு நாற்றோள் முக்கண் கறைமிடறு முதலிய உறுப்புகளுடன் முத்தொழில் நடத்துகின்ற தன் இயற்கை வடிவத்தையே குருவடிவமாகக் காட்டி முன்னிலையில் நின்று தத்துவஞானத்தை உபதேசித்து உணர்த்துவன், அஞ்ஞான அச்சகலர்க்கு அக்குருவாய்பின் மெய்ஞ்ஞானம் உணர்த்தும் - அவிச்சையையுடைய சகலருக்கு அவர்களுடைய வடிவு போன்ற வடிவுடைய குருவின் பின்னால் மறைந்து நின்று தத்துவ ஞானத்தை உணர்த்துவன். முன் - அவ்வேறுபாட்டைஅறிவாயாக எ-று.

வெண்பாவின் இறுதியிலுள்ள முன் என்பதற்கு அறிவாயாக எனப்பொருள் கூறாது, முன்னைப் பொருளாகிய முதல்வன் என்று பொருள் கூறி அதை எழுவாயாகக் கொள்ளுதலும் பொருந்தும்.

மெய்ஞ்ஞானம் தானே விளையும் என்றதில் விவ்விகுதி தொக்கு நின்றது. அதைவிரித்து விளைவிக்கும் எனக்கொள்க. இது அரசனெடுத்த ஆலயம் என்பதை அரசன் எடுப்பித்த ஆலயம் எனக் கொள்வது போலாகும். இவ்வாறன்றி, எளிதில் அடப்படுதல் காரணமாக அரிசி தானே அட்டது எனக் கூறுவதுபோல, விஞ்ஞான கலருக்கு உருவத் திருமேனி கொள்ளாமலும் குருவடிவின் மறைந்து நில்லாமலும் உள் நின்றவாறே மெய்ஞ்ஞானத்தை விளைவிப்பதால், மெய்ஞ்ஞானந் தானேவிளையுமெனக் கூறினாரெனினும் பொருந்தும். இக்கருத்துப்பற்றியே உமாபதி சிவாச்சாரியாரும் போற்றிப் பஃறொடையில் "உண்ணின்றறுத் தருளி" எனக் கூறினார்.

இவ்விடத்தில் அஞ்ஞானமென்றது அவிச்சையை. அஞ்ஞான மென்பது ஆவணவத்தைக் குறிக்குமானாலும் இவ்விடத்தில் ஆணவத்தைக் குறிக்காது மாயா மலத்தின் காரியமாகிய அவிச்சை யைக் குறிக்கின்றது.

அஞ்ஞான அச்சகலரென்றது, முதலதிகரணத்து முதல்வெண்பா வில் தவஞ் செய்தாரெனக் கூறப்பட்ட சகலரைக் குறிக்கின்றது. அக்குருவென்றது இவ்வதிகரணத்து மேற்கோளிற் கூறப்பட்ட குருவைக் குறித்து நிற்கின்றது.

தானே விளையும் முன்னுணர்த்தும் பின்னுணர்த்தும் என்றத னால் விஞ்ஞானகலர்க்குத் தன்மையிலும் பிரளயாக லருக்கு முன் னிலையிலும் சகலருக்குப் படர்க்கையிலும் நின்று உணர்த்துமென உணர்த்தும் முறையை வரையறுத்துக் கூறியவாறு காண்க. இவற்றுள் விஞ்ஞானகலருக்குக் கொள்ளும் அறிவுத் திருமேனியும் பிரளயாக

லருக்குக் கொள்ளும் உருவத்திருமேனியும் முதல்வனுக்குச்சுதந்திர வடிவமாதலால் நிராதாரமெனவும், சகலருக்குக் குருவடிவத்தை ஆதாரமாகக் கொண்டுநிற்றலால் சாதாரமெனவுங் கூறப்படும்.

நிராதாரம் -ஆதாரமில்லாதது. சாதாரம் - ஆதாரத்தோடு கூடியது.

**முதல்வன் மூன்று வகையாய் நின்றுணர்த்துதற்குக் காரணங் காட்டும் உதாரணம்**

***அறிவிக்க வன்றி யறியா வுளங்கள்***
***செறியுமா முன்பின் குறைக - ணெறியிற்***
***குறையுடைய சொற்கொள்ளார் கொள்பவத்தின் வீடென்***
***குறைவில்சகன் சூழ்கொள் பவர்க்கு.***

விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் முதலிய மூவர்க்கும் ஒரே விதமாக உணர்த்தாது முன்னைய வெண்பாவிற் கூறியவாறு தன்மையிலும் முன்னிலையிலும் படர்க்கையாகிய பின்னிலையிலும் நின்றுணர்த்துதல் எதற்காக வென்பாரை நோக்கி, அவ்வாறுணர்த்து தற்குக் காரணங்கூறி முதல்வன் குருவுமாய் உணர்த்து மென்பதை வலியுறுத்துகின்றது. இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** உளங்கள் நெறியின் அறிவிக்க அன்றி அறியா. குறைவு இல் சகன் சூழ் கொள்பவர்க்கு குறைகள் முன்பின் செறியுமாம் குறையுடைய சொல் கொள்ளார் கொள்பவத்தின் வீடு (ஆம்) என்.

**இ-ள் :** உளங்கள் நெறியின் அறிவிக்க அன்றி அறியா - உயிர்களெல் லாம் தமக்குரிய படிமுறையில் வைத்து முதல்வன் அறிவிக்க அறியும் இயல்பினவன்றி ஒரேவிதமாக அறிவிக்க அறியும் இயல்பினவல்ல வாதலால், குறைவு இல் சகன்சூழ் கொள்பவர்க்கு - அறிவாற் குறைபாடில்லாத உலகத்துக்குக் கருத்தாவாகிய சகக்கடவுளது உபதேசமொழியைக் கொண்டுணரும் இயல்பினராகிய பிரளயாக லருக்கும் சகலருக்கும், குறைகள் முன்பின் செறியுமாம் - அறிவித்தால் அறிவதாகிய குறைகள் முன்னிலையிலும் பின்னிலையிலும் நிகழ்வனவாம், குறையுடைய சொல் கொள்ளார் கொள் பவத்தின் வீடு (ஆம்) என் - அறிவித்தால் அறிதலாகிய குறையினையுடைய உபதேச மொழியைக் கொண்டுணர வேண்டாத விஞ்ஞானகலருக்கு முதல்வனாற் கொள்ளப்படும் உண்மைத் திருமேனியாகிய அறிவுருவால் வீடு பயக்கும் அறிவுண்டாகுமென் றறிவாயாக எ-று.



முன்பின் குறைகள், குறையுடையசொல், குறைவில் சகன் என்ற இடங்களில், குறையென்பது அறிவிக்கவேண்டியதன் இன்றியமை யாமையைக் குறித்து நின்றது. குறையென்பது இன்றியமையாமைப் பொருளில் வருமென்பதை "வினைக்குறை தீர்ந்தாரிற் தீர்ந்தன் றுலகு" என்பதற்குப் பரிமேலழகர் எழுதிய உரையால் அறிக.

பவம், சம்பவம், உண்மை என்பன ஒருபொருட்சொற்கள். இவ்வெண்பாவில் வீடென்பது வீடுபயக்கும் உணர்வையும் சூழ் என்பது சூழ்ச்சியைத் தரும் உபதேச மொழியையுங் குறிக்கின்றன. சூழ்ச்சி - நுண்ணுணர்வு.

ஆம் என்னுஞ் சொல்லை வருவித்து. வீடு ஆம் எனக் கொண்டு உரை செய்யப்பட்டது. சொற்கொள்ளார் என்பது., கொள்ளார்க்கு என்னும்பொருளைத் தருதலால் நான்காம் வேற்றுமைத்தொகை.

**சகலர்க்குக் கடவுள் குருவாய் வருதலில்லை என்பாரைமறுத்து வருமென்பதற்குக் காட்டும் உதாரணம்**

***இல்லா முலைப்பாலுங் கண்ணீரு மேந்திழைபா***
***னல்லா யுளவாமா னீர்னிழல்போ - வில்லா***
***வருவாகி நின்றானை யாரறிவார் தானே***
***யுருவாகித் தோன்றானே லுற்று***

முதல்வன் தன்மையிலும் முன்னிலையிலும் பின்னிலையிலும் நின்றுணர்த்துவன் எனக் கூறிய மூன்று வகையுள், இவ்விடத்திற் கூறப்படும் மாயா மலத்தையுடைய சகலருக்கு முதல்வன் குருவாய் வருமென்பது உபசாரமேயன்றி, விஞ்ஞானகலருக்கும் பிரளயாக-லருக்கும் குருவாய் வருதல் போல உண்மையாகா தென்பாரை நோக்கி,முதல்வன் சகலருக்கும் குருவாய் வருவனென்ப துண்மை யாதலை உவமை முகத்தான் வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** நல்லாய் ஏந்து இழைபால்முலைப்பாலும் கண்ணீரும் இல்லா உள ஆம் நீர் நிழல் போல் இல்லா அரு ஆகிநின்றானை ஆரறிவார் தானே உருவாகி உற்றுத் தோன்றானேல்.

**இ-ள் :** நல்லாய் -அறிவால் நன்மையுடைய மாணாக்கனே, ஏந்து இழைபால் முலைப்பாலும் கண்ணீரும் இல்லா உளவாம் - ஏந்திய ஆபரணங்களையுடைய பெண்ணுக்குத் தன் குழந்தையிடத் துளதாகிய அருவாகிய அன்பைப் பிறரறியுமாறு வெளிப்படுத்தும் முலைப்பாலுங் கண்ணீரும் குழந்தை பிறக்குமுன் அவளிடத்

தில்லாதனவாய்க் குழந்தை பிறந்தபின் உண்டாவனவாகும், (அதுபோல) நீர் நிழல் போல் இல்லா அருவாகி நின்றானை ஆரறிவார் தானே உருவாகி உற்றுத் தோன்றானேல் - நீரின் நிழல் வெளிப்பட்டுத் தோன்றாது அந்நீருடன் கலந்து நிற்றல் போல உயிர்களிடத்து வெளிப்பட்டுத் தோன்றாது அவற்றோடு கலந்து அருவாய் நின்ற முதல்வனை அவனே குருவடிவாய்த் தோன்றி நின்று உணர்த்தானாயின் யார் தாம் அறிவார்? ஒருவருமில்லை எ-று.

இதில், உவமானம் அன்பு; உவமேயம் முதல்வன். உவமேய மாகிய முதல்வனுக்கு வெளிப்பட்டு விளங்காத தன்மையையும் குருவடிவாய்த் தோன்றுவதையுங் கூறி, உவமானமாகிய அன்பிற்கு வெளிப்பட்டு விளங்காத தன்மையையும் அது முலைப்பாலாகவும் கண்ணீராகவும் தோன்றுவதையும் கூறியமையால் எடுத்துக்-காட்டுவமை.

முதல்வனை அறியவேண்டுமானால் அவனே வெளிப்பட்டுத் தோன்ற வேண்டும். இல்லையானால் அவனை அறியமுடியா தென்பதை வலியுறுத்துவதற்காக 'தோன்றானே லாரறிவார்' என எதிர்மறை முகத்தாற் கூறினார்.

முதல்வனுக்குக் கூறிய 'நீர்நிழல் போல்' என்றதனை உவமானமாகிய அன்புக்குங் கூறுக. அவ்வாறு கூறினால், நீரின்கண் நிழல் நீரின் வேறாய் வெளிப்பட்டுத் தோன்றாமல் நீரோடு கலந்து நிற்பது போல, முதல்வன் உயிரின் வேறாய் வெளிப்பட்டுத் தோன்றாமல் உயிரோடு கலந்து நிற்பன். அவ்வாறே அன்பும் தாயின் வேறாய் வெளிப்பட்டுத் தோன்றாமல் தாயோடு கலந்து நிற்கும். நீரிடத்து நிழல் எப்பொழுதும் இருப்பதுபோல உயிரிடத்து முதல்வன் எப்பொழுது மிருப்பன். அவ்வாறே அன்பும் தாயிடத்தில் எப்பொழுதுமிருக்கும் எனவரும்.

முலைப்பாலுங் கண்ணீரும் அன்பை விளக்கு மென்பதை.

***"சுரந்த திருமுலைக்கே துய்யசிவஞானஞ்***
***சுரந்துண்டார் பிள்ளையெனச் சொல்லச் - சுரந்த***
***தனமுடையா டென்பாண்டி மாதேவி தாழ்ந்த***
***மனமுடையா ளன்பிருந்த வாறு" என்னும்***
***திருக்களிற்றுப் படியாராலும்,***
***"அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர்***
***புன்கணீர் பூச றரும்" என்னுந் திருக்குறளாலு மறிக.***



முலைப்பாலுங் கண்ணீரும் அன்பின் வடிவேயன்றி வேறல்ல வென்பதை அவை அன்பு நிகழ்தற்குரிய காரணமுள்வழி வெளிப்பட்டுக் காரணமில்லாத விடத்து வெளிப்படாத ஒற்றுமை நோக்கிக் கண்டுகொள்க.

இல்லா முலைப்பாலும் என்றதிலுள்ள இல்லா என்பது இல்லாதன என்னும் பொருளைத் தந்து முற்றாயும், இல்லாதனவாகி உளவாம் என முடிதலால் வினைக் குறிப்பாயும் நிற்றலால் முற்றெச்சக் குறிப்பு. உளவாமால் என்றதிலுள்ள ஆல் என்பது அசை.

நீர் தன்னிடத்து இயங்கும் உயிர்களுக்கு இடங் கொடுத்தலால் நீரினிடத்து வெளியுண்டென்பதும் வெளியுண்டெனவே அவ்வெளி யில் நீரின் நிழல் இருக்குமென்பதும் பெறப்பட்டன. அந்நிழல் நீரின் வேறாக நில்லாது நீரோடு கலந்து நிற்றலால் நீர் வெளிப்பட்டுத் தோன்றுவது போல வெளிப்பட்டுத் தோன்றாதாயிற்று. அது போலச் சிவசைதன்னியமும் யான் என்னும் அறிவினால் அறியப்படும் பொருளாகிய ஆன்ம சைதன்னியத்தோடு கலந்து புலப்படாது நிற்பதொன் றாகுமெனக் கூறவேண்டி நீர்நிழல் போலில்லா வருவாகி நின்றானை என்றார்.

## மூன்றாம் அதிகரணம்

### ஐம்பொறிகள் தத்துவ ஞானத்தை விளக்காது மறைக்குமெனக் கூறும் மேற்கோள்

***இனி இவ்வான்மாக்கள் ஐயுணர்வுகளான் மயங்கித் தம்மை யுணரா வென்றது***

பசுகரணமாய் நின்று உலகப் பொருள்களை விளக்கும் ஐம்பொறிகளே சிவகரணமாய் நின்று தத்துவ ஞானத்தை விளக்கக் கூடும். அதனால் தத்துவ ஞானத்தைவிளக்குதற்குத் தம்முதல் குருவுமாய் வருதல் வேண்டாமென்பர் ஒருசாரார்.இதில், ஐம்பொறிகள் தத்துவஞானத்தை விளக்குமோ விளக்காதோ என்பது ஐயம். இவ்வையப் பாட்டின்கண் விளக்குமென்பது பிறர் கூறும் பக்கம். இவ்வாறு கூறுவோர் சிவசங்கிராந்தவாத சைவர். அவர்களை மறுக்குமுகமாகச் சூத்திரத்தின் மூன்றாங் கூற்றைப் பதச் சேதஞ் செய்து ஐம்பொறிகள் தத்துவ ஞானத்தை விளக்காவெனக் கூறுகின்றது இந்த மேற்கோள்.

**இ-ள் :** உணர்த்த உணரும் இயல்பினையுடைய ஆன்மாக்கள் ஐம்பொறிகளால் மயங்கித் தமது சொரூபத்தை அறியா எ-று.

ஐயுணர்வு என்றது ஐம்பொறிகளைக் குறித்தலால் ஆகுபெயர்.

### ஐம்பொறிகள் தத்துவ ஞானத்தை விளக்காது மறைக்கும் என்பதற்குக் காட்டும் ஏது

***அவைதாம் பளிங்கிலிட்ட வன்னம்போற் காட்டிற்றைக் காட்டி நிற்றலான்.***

அறிவை விளக்கும் கருவியாகிய இந்திரியங்களால் ஆன்மாவுக்கு மயக்க முண்டாவ தெவ்வா றென்பாரை நோக்கி மேற்கோளிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வேது.

**இ-ள் :** படிகத்திற் பதிந்த பலவேறு நிறங்கள் அப்படிகத்தின் ஒளியைக் கீழ்ப்படுத்தித் தத்தம் நிறங்களையே காட்டி நிற்பதுபோல, ஐம்பொறிகள் ஆன்ம சொரூபத்தைக் கீழ்ப்படுத்தி எந்தெந்த இந்திரியம் எந்தெந்த விடயத்தைக் காட்டுமோ அந்தந்த இந்திரியம் அந்தந்த விடயத்தையே ஆன்மாவுக்குக் காட்டுமாதலால், இனி இவ்வான்மாக்கள் ஐயுணர்வுகளான் மயங்கித் தம்மை யுணராவென மேற்கோளிற் கூறப்பட்டது.எ-று

விடயங்களுள்ளும் ஒவ்வொரு இந்திரியமும் அதற்குரிய விடயத்தையே காட்டுமெனக் கூறவேண்டி, ஏதுவில், காட்டிற்றை என ஒருமையாற் கூறினார்.

### ஐம்பொறிகளோடு கூடியவிடத்தும் ஞானத்தை யடைதற்கு உபாயங்கூறி ஐம்பொறிகள் தத்துவ ஞானத்தை மறைக்கும் என்பதை வலியுறுத்தும் உதாரணம்

***பன்னிறங் காட்டும் படிகம்போ லிந்திரியந்***
***தன்னிறமே காட்டுந் தகைநினைந்து - பன்னிறத்துப்***
***பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய்பொய்யா மெய்கண்டான்***
***மெய்ப்பொருட்குத் தைவமாம் வேறு.***

ஐம்பொறிகள் தத்தம் விடயத்தையே ஆன்மாக்களுக்குக் காட்டி நிற்குமாயின், அவ்விந்திரியங்கள் உள்ளவிடத்து முதலதிகரணத்திற் கூறியவாறு முதல்வன் குருவாய் வந்துணர்த்தினும் தன்னுண்மையை உணரமுடியாது போலுமென்பாரை நோக்கி, இந்திரியங்கள் உள்ளவிடத்தும் தன்னுண்மையை உணர்வதற்கு உபாயங்கூறி ஏதுவிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.



**இ-ள் :** பல்நிறம் காட்டும் படிகம் போல் இந்திரியம் தன்னிறமே காட்டும் தகை நினைந்து - தன்னாற் சாரப்பட்ட நிறங்களின் இயல்பையே தன்னிடத்துக் காட்டி நிற்கும் பொதுவியல்புடைய படிகம் போலத் தன்னாற் சாரப்பட்ட இந்திரியங்களின் இயல்பையே தன்னிடத்தில் விளக்கி நிற்குந் தனது பொதுவியல்பைச் சிந்தித்தறிந்து கொண்டு, பல்நிறத்துப் பொய்ப்புலனை வேறு உணர்ந்து - பின்னர் படிகத்தினிடத்துத் தோன்றும் நிறங்கள் படிகத்துக்கு வேறென் றறியுமாறு போல பல்வேறு வகையான பொது இயல்புகளைச் செய்யும் ஐம்பொறிகளைத் தன்னின் வேறெனத் தெளிந்து, பொய் பொய்யா மெய்கண்டான் - இந்திரியங்களா லுண்டாகிய பொது வியல்பு பொய்யாய் ஒழியுமாறு தனது சிறப்பியல்பை உணர்ந்தா னாயின், வேறு மெய்ப்பொருட்குத் தைவம் ஆம் -அவ்வுணர்ச்சி அசத்தாகிய பொறிகளின் வேறாகிய சிவத்தின் இயல்பைத் தன்னிடத்து விளங்கச் செய்யுமாதலால் அவ்வான்மா அச்சிவத்துக்கு அடிமையாம் எ-று.

இவ்வெண்பாவில் பொய்யென்றது பொதுவியல்பையும் மெய்யென்றது சிறப்பியல்பையுங் குறிக்கின்றன. பொய் மெய் என்பதற்கு இவ்வாறு பொருள் கூறலாமென்பது ஏழாஞ் சூத்திரத்து முதலதிகரணத்து ஏதுவிற் கூறப்பட்டிருக்கிறது. தைவம் என்பது தேவனது உடைமை யென்னும் பொருளைத்தரும் வடமொழிப் பகுபதம்.

கருவிகள் உள்ளவிடத்து அவை விடயங்களையே காட்டிநிற்ற லால் முதல்வன் குருவாய் வந்துணர்த்தினும் உண்மை ஞானத்தை அறிய முடியாது. கருவிகள் நீங்கிய விடத்துக் கேவலாவத்தை வந்து கூடும். ஆதலால் தன்னுண்மையாகிய உண்மை ஞானத்தை அறிவ தெவ்வாறென்னும் ஐயத்தை நீக்குதற்கு கருவிகள் உள்ள போதே அவற்றின் இயல்பைப் பொதுவியல்பென்று கண்டுகழிக்கும் உபாயத்தால் சிறப்பியல்பாகிய தன்னுண்மையை அறியலாமென அறிதற்கு உபாயங்கூறி, அவ்வுபாயத்தால் இந்திரியங்கள் காட்டிற் றைக் காட்டி நிற்றலால் இழுக்கில்லையென வலியுறுத்தியவாறு காண்க.

மெய்ப்பொருட்டுத் தைவமாம் என்றதனால், முதல்வனது சீபாதத்தை அணையுமென்று கூறும் நான்காம் அதிகரணத்துக்குத் தோற்றுவாய் செய்தவாறாயிற்று.

# நான்காம் அதிகரணம்

## கருவிகள் நீங்கியவிடத்து உயிர் முதல்வன் திருவடியை அடையுமெனக் கூறும் மேற்கோள்

***இனி இவ்வான்மாத் தன்னை இந்திரியத்தின்வேறாவான் காணவே தமது முதல் சீபாதத்தை யணையுமென்றது.***

பொதுவியல்பை உண்டுபண்ணும் இந்திரியங்களைத் தன்னின் வேறென்றுணர்ந்து அவற்றால் உண்டாகிய பொதுவியல்பு பொய்யா யொழியுமாறு தனது சிறப்பியல்பாகிய மெய்யைக் கண்டவர்க்கு. அவ்வாறு காண்டலே போதும். கருவிகள் நீங்கிய விடத்து ஒரு செயலையுஞ் செய்ய முடியாதாதலால், சிறப்பியல்பை அறிந்தவிடத்து மெய்ப்பொருளுக்கு அடிமையாதல் கூடாதென்பர் ஒருசாரார். இதில், இந்திரியங்களினின்றும் நீங்கிய விடத்து முதல்வனுக்கு அடிமையாதல் கூடுமோ கூடாதோ என்பது ஐயம். இவ்வையப்பாட்டின்கண் அடிமையாதல் கூடாதென்பது பிறர் கூறும் பக்கம். இவ்வாறு கூறுவோர் பேதவாத சைவர் முதலியோர். அவர்களை மறுக்கு முகமாகச் சூத்திரத்தின் நான்காம் கூற்றைப் பதச்சேதஞ் செய்து இந்திரியங்களைத் தன்னின் வேறெனக் கண்டவிடத்து முதல்வனுக்கு அடிமையாதல் கூடுமெனக் கூறுகின்றது. இந்த மேற்கோள்.

**இ-ள் :** இவ்வான்மா - ஐம்பொறிகளால் மயங்கித் தன்னை யுணராதெனக் கூறப்பட்ட ஆன்மா, தன்னை - சித்தாயும் வியாபகமாயுமுள்ள தனது சிறப்பியல்பை, இந்திரியத்தின் வேறாவான் காணவே - சடமாயும் ஏகதேசமாயுமுள்ள இந்திரியங் களின் வேறெனக் குருவின் உபதேசத்தால் உணரின், தமது முதல்சீபாதத்தை யணையுமென்றது -வேறு காரணம் வேண்டாது அவ்வுணர்ச்சியினால் முதல்வனது திருவடியை அணையும். எ-று.

இந்திரியத்தின் வேறானவிடத்துத் துரியாதீத மாகிய கேவலாவத் தையை அடைதலுங் கூடுமாகையால் அதனை நீக்குவதற்காக, வேறாக என்று கூறியதோடமையாது வேறாவான் காணவே என்றார். வேறாகக் காண்டலே திருவடியை அடைதற்கமையுமென்ற உறுதியைத் தருதலால், காணவே என்றதிலுள்ள ஏகாரம் தேற்றம்.



## கருவிகள் நீங்கினவிடத்து முதல்வன் திருவடியை உயிர் அணையும் என்பதற்குக் காட்டும் ஏது

***ஊசல் கயிறற்றாற் றாய்தரையே யாந் துணையான்***

தன்னை இந்திரியத்தின் வேறாகக் காண்டலே சீபாதத்தை அடைவதற்குப் போதுமென்ப தெவ்வாறு பொருந்துமென்பர் பேதவாத சைவர். அவர்களை நோக்கி, வேறாகக் காண்டலே போதுமென்பதை உவமையில் வைத்துக் காட்டி மேற்கோளிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வேது.

**இ-ள் :** ஒருவன் ஏறியிருந்தாடுதற்கு ஆதாரமான ஊசலின் கயிறு அறுந்தால், அப்போது அவனுக்கு உற்றுழியுதவுந் தாய்போலத் தாங்குவது நிலமேயன்றி வேறில்லை. அதுபோல, இனி இவ்வான்மாத்தன்னை இந்திரியத்தின் வேறாவான் காணவே தமது முதல் சீபாதத்தை அணையுமென மேற்கோளிற் கூறப்பட்டது எ-று.

ஆன்மா வியாபகப் பொருளாதலால் ஒரு பொருளையும் நீக்க முடியாது. இந்திரியங்களின் பற்றறுதலால் ஆன்மா தன்னை இந்திரியங்களின் வேறென்று காண்டலே இந்திரியத்தின் நீக்கமாகும். அதனால் ஊசல் கயிறறுதல் இந்திரியத்தின் வேறாகக் காணும் பற்றறுதலுக்கு உவமையாயிற்று.

## கருவிகள் நீங்கினவிடத்து முதல்வன் திருவடியை உயிர் அடையு மென்பதற்கும் கருவிகளிடத்து மீண்டு வராது என்பதற்குக் காட்டும் உதாரணம்

***சிறைசெய்ய நின்ற செழும்புனலி னுள்ளஞ்***<br>
***சிறைசெய் புலனுணர்விற் றீர்ந்து - சிறைவிட்***<br>
***டலைகடலிற் சென்றடங்கு மாறுபோன் மீளா***<br>
***துலைவிலரன் பாதத்தை யுற்று.***

கருவிகள் நீங்கினவிடத்துக் கருவிகளின் வேறாய்த் தனித்து நில்லாது சிவத்தைப் பொருந்துமாயின் அவ்வுயிருக்கும், கருவிகள்நீங்கித் துரியாதீதமாகிய கேவலத்தைப் பொருந்திய உயிருக்குப் பின்னும் கருவிகளோடு கூடுதலாகிய சாக்கிரம் வருதல் போல, மீண்டும் கருவிகளைக் கூடுதல் உண்டுபோலுமென்பர் பேதவாத சைவர். அவரைநோக்கி அவ்வுயிர் மீளுதலில்லை யென்று கூறி மேற்கோளை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** சிறை செய்ய நின்ற செழும்புனலின் உள்ளம் சிறைவிட்டு அலைகடலின் சென்று அடங்கும் ஆறுபோல் சிறைசெய் புலன் உணர்வில் தீர்ந்து உலைவு இல் அரன் பாதத்தை உற்று மீளாது.

**இ-ள் :** சிறைசெய்ய நின்ற செழும்புனலின் உள்ளம் - அணையை உயர்த்திக் கட்டித் தடைசெய்ய அதனிடத்துத் தேங்கிநின்ற ஆற்று நீர் போல கருவிகளாலான பாசஞானந் தனது வியாபகத்தைத் தடைசெய்ய அப்பாச ஞானத்தின் கண் ஏகதேசமாய் அடங்கித் தடைப் பட்டு நின்ற உயிர், சிறைவிட்டு அலை கடலின் சென்று அடங்கும் ஆறுபோல் - அவ்வணை யுடைந்து தடை நீங்கியவழி யாதொரு தடையு மின்றி வேகமாய்ச் சென்று கடல் நீரேயாய் அதனுள் அடங்கி நிற்பது போல, சிறை செய் புலன் உணர்வில் தீர்ந்து - தனது வியாபகத்தைத் தடைசெய்யும் கருவிகளினாலாய பாசஞானத்தடை நீங்கியவிடத்து, உலைவுஇல்அரன் பாதத்தை உற்றுமீளாது -தனக்குக் கேடில்லாத சிவபெருமானது திருவடியைத் தலைக்கூடி அத்திருவடி நிறைவேயாய் அதனிடத் தடங்கிப் பின்பு கருவிகளிடத்து மீண்டு வராது எ-று.

சிறைசெய்ய நின்ற செழும்புனலின் என்றதில், உவமானம் சிறைசெய்ய நின்ற செழும்புனல். உவமேயம் பாச ஞானத்தாற் றடையுண்டு நின்ற உயிர். உவமானமாகிய புனலுக்கும் உவமேய மாகிய உயிருக்கும் பொதுத்தன்மையாகிய தடையுண்டுநிற்றல் என்பது தொக்குநிற்றலால் இது தொகை உவமம்.

செழும் புனலின் என்றதிலுள்ள இன் உவம உருபு. தேக்கத்தி லுள்ள நீரின் மிகுதியை உணர்த்தக்கருதிச் செழும் புனலென்றார்.

மலசத்திக்குக் கேடுண்டு. அதனால் மலத்தோடு கூடிக் கேவலாவத்தையைப் பொருந்திய உயிர் மலசத்தி கெடுதலினாற் கருவிகளிடத்து மீளும். சிவசத்திக்குக் கேடில்லை. அதனால் சிவசத்தியைக் கூடிய உயிர் கருவிகளிடத்து மீளாதென்பதைக் குறிப்பிடக்கருதி உலைவில் அரன்பாதம் என விசேடித்துக் கூறினார்.

இதில்உவமானத்துக் கூறியவினையை உவமேயத்தோடும் உவமேயத்துக்குக் கூறியவினையை உவமானத்தோடும் கூட்டினால் அது சிறைசெய்ய நின்ற செழும்புனல் தடைநீங்கியவிடத்துக் கடலிடத்துச்சென்று அதனுள்அடங்கித் திரும்பிவராதவாறு போல, பாசஞானத்தாற் றடைப்பட்டு நின்ற உயிர் அத்தடை நீங்கியவிடத்துச் சிவபெருமானது திருவடியைத் தலைக்கூடித் திரும்பிவராது எனவரும்.



### திருவடியை அடைந்த உயிர் கருவிகளிடத்து மீளுதல் குற்றமெனக் கூறி மீளாதென்பதை வலியுறுத்தும் உதாரணம்

***எவ்வுருவுந் தானென்னி னெய்துவா ரில்லைதா***
***ளிவ்வுருவின் வேறே லிறையல்ல -னெவ்வுருவுங்***
***கண்போ லவயவங்கள் காணாவக் கண்ணில்லார்***
***கண்பேறே காணக் கழல்.***

திருவடியை அடைந்து எல்லாஞ் சிவமாய்க் கண்டவர்க்கு மீளக் கருவிகளைப் பொருந்துதலாலோ பொருந்தாமையாலோ வருவ தொன்றுமில்லை. ஆதலால் அவ்வுயிர் கருவிகளின் மீளாதென்று கூறவேண்டாமென்பர் சிவாத்துவித சைவர். அவர்களை நோக்கி, கருவிகளை மீளக் கூடுதலாற் குற்றமும் கூடாமையாற் குணமும் இல்லையெனக் கூறுதல் பொருந்தாதெனக் கூறி மீண்டும், திருவடியை அடைந்த உயிர் கருவிகளின் மீளாதென்பதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** எவ்வுருவுந் தான் என்னின் தாள் எய்துவார் இல்லை. இவ்வுருவின் வேறேல் இறையல்லன் எவ்வுருவும் அவயவங்கள் கண்போல் காணா. அக்கழல் அக்கண் இல்லார் கண் போறே காண்.

**இ -ள் :** எவ்வுருவுந் தான் என்னின் தாள் எய்துவார் இல்லை - திருவடி அடைதலால் உயிரின் அறிவு சிவமாதலேயன்றி கருவிகளால் அறியும்புலனுணர்வும் சிவமேயாமாயின் பாசஞானத்தை விடப் பதிஞானத்துக்கு விசேடமில்லை. ஆதலால் புலன்களின் வழியொழு குஞ் சகல நிலையைக் கைவிட்டுத் திருவடியை அடைய வேண்டுவ தில்லை. அதனால், திருவடியடைவார் ஒருவரும் இல்லையாய் முடிவதுடன் 'பாசத்தைப் பசுக்கள் விட்டுப் பதியினை அடைய முத்தி' என்னும் சித்தியார்ப் பரபக்கச் செய்யுளும் இதே கருத்தைக் கூறும் வேதாகமங்களும் போலியாய் முடியும், இவ்வுருவின் வேறேல் இறையல்லன் -அதனால்முதல்வன் புலனுணர்வோடு பொருந்தாமல் கருவிகளின் வேறாய் நிற்பனெனின் கருவிகளின் அறிவுக்கு முதல்வனால் ஆவதொன்றும் இல்லாமையால் அவன்அவற்றுக் கிறைவனல்லன் எனப்பட்டு அவனது முதன்மைக்கு இழுக்காய் முடியும். (அவ்வாறானால் கருவிகளின் இயல்பென்னவெனின்) எவ்வுருவும் -உயிர் உணர்வுபோலப் புலனுணர்வுங் கலப்பினாற் சிவமேயாயினும் இரண்டும்தம்முள் ஒப்பனவல்ல. அவயவங்கள்

கண்போல் காணா- (உயிர்ஐம்பொறிகளோடும் ஒப்பநிற்பினும்) அவற்றுள் மெய், வாய், மூக்கு,செவி நான்கும் கண்ணின் ஒளி ஆன்மா வின் அறிவோடு கலந்து சென்று தூரத்திலுள்ள பொருள்களையும் வியாபித்தறிவது போல வியாபித்தறியாது தம்மிடத்து வந்த விடயங்களையே அறிவனவாம், அக்கழல் அக்கண் இல்லார் கண் பேறே காண் -அக்கண்ணினது வெற்றிப் பாட்டைக் கண்ணொளி இழந்தவர் மீளக் கண்ணொளியைப்பெற்றவிடத்துப்பொருள்களை அறிவதாலுணர்க எ-று.

கண்போல் அவயவங்கள் என்ற இடத்தில், கண்ணும் அவயவங்களும் உறுப்புக்களைக் குறியாமல் உறுப்புகளுக் குள்ளீடான இந்திரியங்களைக் குறிப்பதால் ஆகுபெயர்.

கழல் என்பது வெற்றியின் சின்னமாக அணியப்படுங் காலணி. இவ்விடத்தில் கழலணிவார்க் குளதாகிய வெற்றிப்பாட்டைக் கழலென்று உபசரித்துக் கூறினார். கண்ணுக்கு வெற்றியாவது மற்றை இந்திரியங்களைப் போலன்றிப் பொருள்கள் இருக்குமிடத்துக்குச் சென்றறிதல்.

'கண்போல் அவயவங்கள் காணா அக்கண்ணில்லார் கண்பேறே காண் அக்கழல்' என்றதில் உயிருணர்வு ஐந்து இந்திரியங்களோடும் ஒப்பக் கலந்திருப்பினும் கண் வியாபித்து அறிவதுபோல மற்றை இந்திரியங்கள் வியாபித்து அறியா என்பது உவமானம். இவ்வுவ மானத்துக் குரிய உவமேயம் இவ்வெண்பாவிற் கூறப்படவில்லை. ஆனாலும் இந்த உவமானத்தின் மூலம் முதல்வன் பசு பாசம் என்னும் இரண்டோடும் ஒப்பக்கலந்து நிற்பினும் உயிருணர்வு வியாபித்தறிவது போலப் புலனுணர்வு வியாபித்தறிய மாட்டாதென் பதையும், உயிருணர்வின் மேம்பாட்டைப் பாசத்தால் வியாபக உணர்வை இழந்தவர்களிடத்துக் காணமுடியாதாயினும் பாசம் நீங்கிச் சிவப் பேறடைந்த உயிரிடத்துக் காணலா மென்பதையும் நூலாசிரியர் விளக்குகின்றார். இவ்வாறு உவமானத்தைக் கூறி உவமேயத்தை அறியச் செய்தல் ஒட்டென்னும் அலங்காரம்.

பசு பாசங்களிடத்துச் சிவம் வியாபித்திருப்பினும் பசுவுக்கு வியாபித்தறிதலும் பாசத்துக்கு ஏகதேசமாய் அறிதலுமாகிய வேற்றுமை யுண்டு. அதனால் திருவடியை அடைந்து வியாபக அறிவுடையதாய் விளங்கும் உயிர் திரும்பக் கருவிகளோடு கூடி ஏகதேசமாய் அறிதல் குற்றமாகும்.



**திருவடியை அடைந்த உயிர் பழைய வாசனையால் கருவிகளிடத்து மீளுமாயின் அம்மீட்சியை நீக்குதற் குபாயங்கூறி மீளாதென்பதை வலியுறுத்தும் உதாரணம்**

***ஐம்பொறியி னல்லையெனு மந்த தரசிவனை***
***ஐம்பொறியை விட்டங் கணைசகல - னைம்பொறியி***
***னீங்கானீர்ப் பாசிபோ னீங்குமல கன்மம்வரி***
***னீங்கானை நீங்கு நினைந்து.***

தடை நீங்கிய வழி அலைகடலிற் சென்றடங்குதலேயன்றி 'ஆற்றாலலை கடற்கே பாய்ந்த நீர் அவ்வாற்றான் மறித்தலு' முண்டு. அதுபோல அரன்பாதத்தை அடைந்த உயிருக்குச் சில சந்தர்ப்பங் களில் இந்திரியத்தின் மீளுதலுமுண்டென்பது பெறப்படுதலால், அவ்வுயிர் இந்திரியத்தின் மீளாதென்பது பொருந்தாதென்பர் சிவாத்துவிதசைவர். அவர்களை நோக்கி, அவ்வாறு மீளுதற்குக் காரணம் பழைய வாசனையென்றும் அதனை நீக்குவதற்குரிய வழி திருவடியைச் சிந்தித்தலே யெனவுங் கூறி, மீளாதென்பதை வலியுறுத்துகின்றது. இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** ஐம்பொறியின் அல்லையெனும் அந்ததர அங்கு ஐம்பொறியை விட்டுச் சிவனை அணை சகலன் ஐம்பொறியின் நீங்கான். நீர்ப்பாசி போல் நீங்கு மலகன்மம் வரின் நீங்கானை நினைந்து நீங்கும்.

**இ-ள் :** ஐம்பொறியின் அல்லையெனும் அந்ததர - ஐம்பொறிகளைப் போல ஏகதேச அறிவுடைய பொருளாக மாட்டாயென்று உபதேசிக் கப்படும் சித்தாந்த மகாவாக்கியத்தைப் பெற்றுடைய மாணவனே, அங்கு ஐம்பொறியை விட்டுச் சிவனை அணைசகலன் ஐம்பொறியின் நீங்கான் - சிறைவிட் டலைகடலிற் சென்றடங்குமாறு போலென இவ்வதிகரணத்து முதல் வெண்பாவிற் கூறப்பட்டவாறு ஐம்பொறி களால் உலகப் பொருள்களை அறியும் அறிவை விட்டுச் சிவபெரு மான் திருவடிகளை அணைந்த சகலன் மீள அவ்வைம்பொறிகளோடு கூடிச் சிவபெருமானது திருவடிகளை விட்டு நீங்கமாட்டான், நீர்ப்பாசிபோல் நீங்குமல கன்மம் வரின் நீங்கானை நினைந்து நீங்கும் - கல்லால் எறியும் போது நீங்கிய நீர்ப்பாசி எறியாமல் விடும்போது பரப்பது போல திருவடியை அடைதலால் நீங்கிய மலம் கன்மம் மாயைகள் பழைய வாசனையால், திருவடியை மறந்த விடத்து வந்து கூடுமாயின், அது காரணமாகப் பொறிகளிடத்து மீளாமல்,

அப்போதும் தன்னை விட்டு நீங்காத முதல்வனை இதன் பின்னர்க் கூறப்படும் உபாயங்களாற் சிந்தித்து நீங்கிக் கொள்ளுவன் எ-று.

வரின் என்றதனால் திரும்புதல் உறுதியன்று, திருவடியை அடைந்த உயிர் வாசனை இருப்பின் திரும்பும் வாசனை இல்லை யாயின் திரும்பாதென்பது பெறப்படும்.

நீங்குமல கன்மம் என்பதை நீங்கி மலகன்மமென்று கொண்டால் அதற்கு நீங்கினவாகிய மலகன்மமெனப் பெயராக வைத்துப் பொருள் கொள்க. சித்தாந்தத்தை அந்தமென்றது தலைக்குறை. சித்தாந்தம் = சித்தம் + அந்தம். சித்தாந்தம் என்பதற்கு முடிந்த முடிபென்பது பொருள். தரம் என்றது சித்தாந்தத்தின் கண்ணுள்ளதொரு சிறந்தவார்த்தை.

ஐம்பொறியை விட்டங்கு என்றதில் அங்கு என்பது மேற்கூறிய படி என்னும் பொருளில் வந்தது. ஐம்பொறியை விட்டுத் திருவடியை அடைதற்குரியவர் சகலரேயாதலால் ஐம்பொறியை விட்டங்கணை சகலன் என்றார்.

நீங்கும் நினைந்து என்பது சந்திநோக்கி மகர ஒற்றுக்கெட்டு நீங்கு நினைந்து என நின்றது.

முன்னைய வெண்பாவில் திருவடியை அடைந்த உயிர் கருவிகளிடத்து மீளாதென்று கூறியதை வலியுறுத்து முகமாக, ஐம்பொறியினல்லை யெனு மந்ததர சிவனை ஐம்பொறியை விட்டங்கணை சகல - னைம் பொறியினீங்கானென்றும், ஒருவேளை மீளுமாயின் அதற்குக் காரணங் கூறவேண்டி 'நீர்ப்பாசிபோல் நீங்குமல கன்மம் வரின்' என்றும், நீங்கும் மல கன்மம் வருவதை நீக்குவதற்கு உபாயங் கூறக் கருதி நீங்கானை நினைந்து நீங்கு என்றுங் கூறினார்.

மல, கன்மம் என்று கூறியதனால் இனம் பற்றி மாயையுங் கொள்ளப்பட்டது.

'மங்கலமென்ப மனைமாட்சி மற்றத னன்கல னன்மக்கட் பேறு' என்றதனால் வள்ளுவர் அடுத்த அதிகாரத்துக்குத் தோற்றுவாய் செய்தது போல, நீங்கானை நினைந்து நீங்கும் என்றதனால் பாசத்தினின்று நீங்கும் முறையைத் தொகுத்துக்கூறி அதனைவிரித்துக் கூறும் ஒன்பதாஞ் சூத்திரத்திற்குத் தோற்றுவாய் செய்தவாறாயிற்று.



இம்மூன்று உதாரணங்களும் முறையே, திருவடி ஞானத்தைப்பெற்ற உயிர் கருவிகளாலாகும் புலனுணர்வின் மீளுவதில்லை யெனவும், அவ்வாறு மீளுதல் குற்றமெனவும், பழைய வாசனையால் பாசஞானத்தின் மீளவருமாயின் மீளாதவாறு செய்ய வேண்டுமெனவுங் கூறி, ஏதுவில் 'தாய் தரையேயாம்' எனக் கூறியதை வலியுறுத்தி, இந்திரியத்தின் வேறாவான் காணவே தமது முதல் சீபாதத்தை யணையுமென்பதையே வலியுறுத்தியவாறு காண்க.

எட்டாஞ் சூத்திரம் முற்றிற்று.

★★★

# ஒன்பதாஞ் சூத்திரம்

**எட்டாஞ் சூத்திரத்தால் சாதன அறிவு குருவால்வருமெனக்கூறி அச்சாதனத்தை யனுட்டிக்கு முறை இவ்வொன்பதாஞ் சூத்திரத்தாற் கூறுகின்றார்**

***ஊனக்கண் பாச முணராப் பதியை***

***ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி***

***யுராத்துனைத் தேர்த்தெனப் பாச மொருவத்***

***தண்ணிழலாம் பதிவிதி யெண்ணுமஞ் செழுத்தே.*** என்பது சூத்திரம்

**கருத்துரை**

***ஆன்ம சுத்தி பண்ணு மாறுணர்த்துத னுதலிற்று.***

**இ-ள்:** தம்முதல் குருவுமாய் வந்து உபதேசிக்கக் கேட்ட உயிர் அவ்வுப தேசத்தைச் சிந்திக்கும் முறையைக் கூறி, அவ்வாறு சிந்தித்தலினால் ஐம்புல வேடரோடு கூடி வளர்ந்த அசுத்தத்தை நீக்கித் தன்னைத் தூய்மைப்படுத்தும் முறையைக் கூறுதல் இவ்வொன்பதாஞ் சூத்திரத்தின் கருத்து எ-று.

சிவப்பிரகாசத்தில் ஆன்ம சுத்தியாவது தான் பணியை நீத்தல் என்று கூறப்பட்டிருக்கிறது. அவ்வான்ம சுத்தி இந்நூலின் பத்தாஞ் சூத்திரத்தில் 'இறைபணி நிற்க' எனக் கூறப்படுகின்றது. அழுக்கு நீக்கமே ஆடைக்குச் சுத்தியாவது போல, பாசநீக்கமே உயிருக்குச் சுத்தியாவதன்றி வேறில்லை. பாசநீக்கஞ் செய்யுமுன் ஆன்ம சுத்தியுண்டாகாது.

பத்தாஞ் சூத்திரக் கருத்துரையில் பாசக்ஷயம் பண்ணுமாறுணர்த்து த னுதலிற்று எனக் கூறப்பட்டிருப்பதால்,பாச நீக்கத்தாலுண்டாகும் ஆன்ம சுத்திபற்றிக் கூறுதலே பத்தாஞ் சூத்திரத்தின் கருத்தாகும். இச்சூத்திரத்தில் பதியை நாடியெனவும் தண்ணிழலாம் பதி எனவும்சிவதரிசனம் பண்ணும் முறை கூறப்படுகின்றது. சிவதரிசனம் பண்ணு முறையைக் கூறும் இச்சூத்திரத்துக்கு, பத்தாஞ் சூத்திரத்திற் கூறப்படும் ஆன்ம சுத்தியைக் கருத்துரையாகக் கூறியது பொருந்துமா வென மலையவேண்டாம்.



சிவதரிசனத்தின் உடனாக நிகழ்வது ஆன்மசுத்தி யென்பதை உணர்த்துதற்கும், பதியை நாடுகவெனக் கூறும் இச்சூத்திரத்துக்கும் ஏகனாகி இறைபணி நிற்கவெனக் கூறும் பத்தாஞ் சூத்திரத்திற்கும் சிறு வேறுபாடிருப்பினும், இச்சூத்திரத்திற் பாசம் ஒருவ எனவும் பத்தாஞ் சூத்திரத்தில் மலமாயை தன்னொடு வல்வினையின்றே எனவும் கூறப்படுவதால் இவ்விரு சூத்திரங்களும் பாசநீக்கமென்னும் ஒரு பொருளையே கூறுகின்றன என்பதை உணர்த்துதற்குமாக இச் சூத்திரத்துக்கு ஆன்ம சுத்தியையும் பத்தாஞ் சூத்திரத்துக்குப் பாசநீக்கத்தையுங் கருத்துரையாகக் கூறினார்.

இது இவ்வாறாக, எட்டாஞ் சூத்திரத்தில் நான்காம் அதிகரணத்து மேற்கோளில் 'ஆன்மாத் தன்னை இந்திரியத்தின் வேறாவான் காணவே தமது முதல் சீபாதத்தை அணையும்' எனக் கூறப்பட்டிருத்த லால், இந்திரியத்தின் வேறாகத் தன்னைக் காணுதலே உயிருக்குச் சுத்தியாகு மெனக் கூறியதன் பின் எதற்காக இச்சூத்திரத்திலும் ஆன்ம சுத்தி பற்றிக் கூறவேண்டுமென வினவினால், அவ்வாறு வினாவுதல் பொருந்தும்.

ஒரு பொருளைப் பகுத்துணர்தலின்றிப் பிண்டமாகக் காண்ட லும் அதுவோ இதுவோவென ஐயுற்றுக் காண்டலும் தெளிவாகக் காண்டலுமெனக் காட்சி மூவகைப்படும். இந்திரியத்தின் வேறாகத் தன்னைக் காணும் முறையில், அதிதீவிரதர பக்குவமுடையவர் களுக்குக் குருவின் உபதேசத்தைக் கேட்டவுடன் இந்த மூவகைக் காட்சிகளும் ஒருங்கே நிகழும். மந்ததர, மந்த, தீவிர பக்குவ முடையவர்களுக்குக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் என்னும் மூவகைக் காட்சிகளும் குருவின் உபதேசத்தைக் கேட்டவுடன் நிகழாது படிமுறையாகவே நிகழும்.

ஆதலால் அதிதீவிர பக்குவருக்கு எட்டாஞ் சூத்திரத்திற் கூறியதே போதுமாயினும் ஏனையோருக்கு எட்டாஞ் சூத்திரத்திற் கூறியவாறு சிவரூபத்தில் நிகழும் ஆன்மதரிசனமும் இச்சூத்திரத்திற் கூறிய சிவதரிசனத்தில் நிகழும் ஆன்மசுத்தியும் வேண்டப்படு

மாதலால், எட்டாஞ் சூத்திரத்தில் சிவரூபத்தில்நிகழும் ஆன்ம தரிசனமும் இச்சூத்திரத்தில்சிவதரிசனத்தில் நிகழும் ஆன்ம சுத்தியுங் கூறப்பட்டன.

இக்கருத்தே பற்றிச் சிவஞான சித்தியார் எட்டாஞ் சூத்திரத்தில் 'நேசமொடும்திருவடிக்கீழ் நீங்காதே தூங்கு நினைவுடையோர் நின்றிடுவர் நிலையதுவேயாகி -யாசையொடு மங்கு மிங்கு மாகியல மருவோரரும் பாச மறுக்கும் வகை யருளின்வழி யுரைப்பாம்' என வழி நூலாசிரியருங் கூறினார்.

**சூத்திரத்தின் பொருள் :** ஊனக்கண்-குறையினையுடைய பசுஞானத்தாலும், பாசம் - பாசஞானத்தாலும், உணராப்பதியை - அறியப்படாத முதல்வனை, ஞானக் கண்ணினில்சிந்தை நாடி - திருவடி ஞானத்தால் ஆன்மாவாகிய தன்அறிவின் கண்ணே ஆராய்ந்தறிக, பாசம் உராத்துனை தேர்த்தென ஒருவ- அத்திருவடி ஞானத்தால் நிலம்முதல்நாதமீறாகிய பாசக் கூட்டம் பரந்து திரிதற்கண்அதி வேகமுடைய பேய்த்தேர் தோன்றிப் பொய்யாய்க் கழிவது போலக் கழிவதென் றறிந்துஅப்பாசக் கூட்டத்தினின்றும் நீங்கவே. பதி தண்நிழலாம் -அப்பதி ஞானம் பிறவித் துன்பமாகிய வெப்பந்தீர்க்குங் குளிர்ந்த நிழலாய் வெளிப்பட்டு விளங்கும், அவ்வாறு பாசத்தைவிட்டு ஞானத்தைப்பெற்று அதனால் முதல்வனைக் கண்டகாட்சி சலியாமல் நிலைபெறுதற்பொருட்டு, அஞ்செழுத்தே விதி எண்ணும்- பாசத்தைவிட்டுப்பதியினைப் பற்றுக என்னும் பொருளைத்தருந் திருவஞ்செழுத்து அவ்விதிப்படியறிந்து செபிக்கப்படும் எ-று.

ஊனம்-குறை. ஊனம் குறையென்னும் பொருளில் வருமென் பதைச் சிவஞான சித்தியார் ஊனமேற் கிரியை வித்தையெனக் கூறுவதாலறிக. (1ஆம் சூத் -65 ஆம் செய்யுள்)

'நாடி' என்பது வினையெச்சமல்ல, நாடுக என்னும் பொருளைத் தரும் முன்னிலை ஏவல். 'உரா' என்பது முதனிலைத்தொழிற்பெயர். அது உராவல் என்னுஞ்சொல்லின் அல்விகுதி கெட்டு, உரா என நின்று, உலாவல் என்னும் பொருளைத் தருகின்றது.

உராத் துனைத்தேர் என்பது, பறவாக் குழவி, பாயா வேங்கை என்பன பறவாத மலைப் பச்சையையும் பாயாத வேங்கை மரத்தை யுங் குறிப்பதுபோல, ஒருவனால் ஊரப்படாத அதிவேக முடைய தேர் என்னும்பொருளையுந்தரும். உரா என்பதை ஊரா எனக் கொண்டால்,



அதில் ஊர் பகுதி; ஆ எதிர்மறை விகுதி. இதில்ஊர்என்னும்பகுதி 'உர்' எனக்குறுகி நிற்றலாற் குறுக்கல் விகாரம். தண்ணிழலாம் பதி என்றதில் பதி என்பது பதி ஞானத்தைக் குறித்தலால் ஆகுபெயர்.

இச்சூத்திரத்தில், ஊனக்கண் பாசம் உணராப் பதியை ஞானக் கண்ணினிற் சிந்தைநாடி என்றது. ஓரதிகரணம்; உராத் துனைத் தேர்த் தெனப் பாசமொருவத் தண்ணிழலாம் பதி என்றது ஓரதிகரணம்; விதி எண்ணு மஞ்செழுத்தே என்றது ஓரதிகரணம்.எல்லாமாக இச்சூத்திரம் மூன்று அதிகரணங்களை யுடையது.

## முதலதிகரணம்

### பதிஞானத்தால் பதியைக் காண வேண்டுமெனக் கூறும் மேற்கோள்

***ஈண்டு அம்முதலை ஞானக் கண்ணாலே காண்க வென்றது.***

எட்டாஞ் சூத்திரத்திற் கூறியவாறு முதல்வன் பாசஞானத்தால் அறியப்படானாயினும் பசுஞானத்தால் அறியப்படுவனென்பதிற் குற்றமில்லை யென்பர் ஒருசாரார். இதில் முதல்வன் பசு ஞானத்தால் அறியப்படுவனோ பதி ஞானத்தால் அறியப்படுவனோ என்பது ஐயம். இவ்வையப் பாட்டின்கண் முதல்வன் பசு ஞானத்தால் அறியப்படு வன் என்பது பிறர் கூறும்பக்கம். இவ்வாறு கூறுவோர் சிவசமவாத சைவர். அவர்களை மறுக்குமுகமாகச் சூத்திரத்தின் முதற்கூற்றைப் பதச்சேதஞ் செய்து கூறப்பட்டது இந்த மேற்கோள்.

**இதன் பொருள் :** ஈண்டு- இவ்வதிகரணத்தில், அம்முதலை - பாசஞான பசுஞானங்களால் அறியப்படாத முதல்வனை, ஞானக் கண்ணாலே காண்க - சிவஞானத்தால்அறிக எ-று.

ஞானக் கண்ணாலே என்றதிலுள்ள ஏகாரம் பதிஞானத்தா லன்றி முதல்வனைக் காண முடியாதென்பதை உறுதிப் படுத்துதலால் தேற்றம்.

### பதிஞானத்தாலேதான் முதல்வன் அறியப்படுவன் என்பதற்குக் காட்டும் ஏது

***அவன் வாக்கு மனாதீத கோசரமாய் நிற்றலான்.***

முதல்வன் பாசஞான பசுஞானங்களா லறியப்படாது சிவஞானத்தால்அறியப்படுவன்என்பதற்குப் பிரமாணமென்ன.

வென்பாரை நோக்கி, ஞானக் கண்ணாலே காண்க வென மேற்கோளிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வேது.

**இ-ள் :** நாதவடிவான பாசஞானத்தாலும், மனம் -பசுஞானத்தாலும், அதீதமாய் -அறியப்படாததாய், கோசரமாய் நிற்றலான் - அம்முதல்வனோடு பிரிப்பின்றி நின்றுணரும் சிவஞானத்தாலே அறியப்படுவனாதலால் 'ஈண்டு அம்முதலை ஞானக்கண்ணாலே காண்க' வென மேற்கோளிற் கூறப்பட்டது எ-று.

### பதிஞானத்தாலே தான் முதல்வன் காணப்படுவன் என்பதற்குக் காட்டும் உதாரணம்

***நாடியோ வென்போ நரம்புசீக் கோழையோ***
***தேடி யெனையறியேன் றேர்ந்தவகை - நாடியரன்***
***றன்னாலே தன்னையுங் கண்டு தமைக்காணா***
***ரென்னா மெனவறிவா ரின்று***

பதிஞானத்துக்குப் பதி எட்டுமேயன்றி, பாசஞானத்துக்கும் பசுஞானத்துக்கும் எட்டாதென்று கூறுவானேன்? சுட்டியறிவதாகிய பசுத்துவம் நீங்கியவிடத்துச் சுட்டிறந்தறிவதாகிய உயிரின் அறிவு பதிஞானத்தோ டொக்கும். அதனால் அந்த உயிரின் அறிவினிடத்துப் பதி விளங்கித் தோன்றுமென்பதே பொருந்து மென்பர் சிவசமவாத சைவர். அவர்களை மறுத்து, சுட்டிறந்தறியும் அறிவு சிவஞானத் தாலன்றி உண்டாகாதென ஏதுவிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**இ-ள் :** நாடியோ என்போ நரம்பு சீ கோழையோ தேடி எனை அறியேன் தேர்ந்தவகை நாடி - இவ்வுடலிற் காணப்படும் நாடி, என்பு, நரம்பு, சீ, கோழை என்பவற்றுள் நான் யாரென்று என்னைத் தேடியும் அறிகின்றிலேன். இவ்வாறு என்னை அறிகின்றிலே னென்று தேர்கின்ற தேர்ச்சியறிவின் கண்ணே, யான் அறிகின்றிலே னென்று எனக்குஅறிவிப்பதோர் அறிவு அத்தேர்ச்சியறிவின் வேறாயுண்டென ஆராய்ந்து பார்க்கின், அரன்தன்னாலே தன்னையுங் கண்டு தமைக் காணார் - அவ்வாறு ஆராய்ந்து பார்க்கும் போது விளங்கித்தோன்றுந் திருவடிஞானத்தால் முதல்வனையுங் கண்டு முதல்வனை விட்டு நீங்காமல் நின்று முதல்வனை அறியும் பொருளாகிய தம்மையுங் காணாதார், என் என அறிவார் இன்று - இம்முத்திக் காலத்தில் தனித்து நில்லாத தம்மை வேறெவ்வியல்பினரென்று அறியவல்லார் எ-று.



நாடி என்றது இடைகலை பிங்கலை முதலியவற்றை, நரம்பென் பதில் இடைகலை பிங்கலை முதலியனவும் அடங்குமேனும் அவற்றின் தலைமைபற்றி நரம்பின் வேறாக நாடியையுங் கூறினார். சீ-புண்ணீர். கோழை - ஐ.சளி.

கோழையோ என்றதிலுள்ள ஓகாரம் நாடி முதலியவற்றை ஆராய்கின்ற தெரிநிலையைக் குறிக்கின்றது. தேடியெனையறியேன் என்றவிடத்தில், என்று என்பது சொல்லெச்சமாய் வருவிக்கப்பட்டது. தேர்ந்தவகை என்றதில் வகை என்பது தேர்ச்சி அறிவைக் குறிப்பதால் ஆகுபெயர். ஒற்றுமைபற்றி, திருவடி ஞானத்தால் என்று கூறவேண்டி யதை 'அரன்றன்னாலே' என்று உபசரித்துக் கூறினார். தன்னையும் என்றதிலுள்ள உம்மை தமை என்பதையுந் தழுவி நிற்றலால் எதிரது தழுவியது. 'என்னாம்' என்றதிலுள்ள 'ஆம்' என்பது அசை.

நாடியோ என்போ நரம்பு சீக் கோழையோ என்ற உபலக்கணத்தால் ஏனைய தத்துவ தாத்துவிகங்களிலும் இவற்றுள் யான் யார் எனத் தேர்தலுங் கொள்ளப்படும்.

இவ்வெண்பா,தன்னையறியுமா றுணர்த்தும் முறையில், தலைவனை அறிந்தபின் தம்மை அறிவரெனக் கூறினமையால், தலைவனை அறிந்த பின் அறியப்படுவதாகிய தம்மறிவு கொண்டு தலைவனை அறிவதெவ்வாறென வினாவி ஆன்ம அறிவுக்குப் பதிவிளங்கித் தோன்றுமென்னும் சிவசமவாத சைவரது கருத்தை மறுத்து, பதிஞானத்துக்கே பதி விளங்கித் தோன்றுமென ஏதுவிற் கூறியதை வலியுறுத்தியவாறு காண்க.

### பதிஞானத்தாலன்றி ஆன்மாவிற்குப் பதியைக் காணுந்தன்மை இல்லையென்பதற்குக் காட்டும் உதாரணம்

***காட்டிய கண்ணே தனைக்காணா கண்ணுக்குக்***
***காட்டாய வுள்ளத்தைக் கண்காணா - காட்டிய***
***வுள்ளந் தனைக்காணா துள்ளத்தின் கண்ணாய***
***கள்வன்றா னுள்ளத்திற் காண்.***

தனக்கு எதிரிலுள்ள ஒரு பொருளைக் கண்ட கண் திரும்பிப் பார்த்தவிடத்து முதுகுப் புறத்திலுள்ள பொருளையுங் காண வல்லதாகும். அதுபோல நாடி முதலியவற்றில் நான் யாரென்று தேர்ந்தறிந்த உயிரே தம்மையும் தலைவனையும் தெளிந்தறிய வல்லதாகு மென்பதே பொருந்து மென்னும் சிவசமவாத சைவரை

நோக்கி, தன்னையுந் தலைவனையுந் தானே அறியமாட்டாத உயிரின் தன்மையை விளக்கி, அரன் தன்னாலே தன்னையுந் தலைவனையும் அறிய வேண்டுமென முன்னைய வெண்பாவிற் கூறியதை வலியுறுத்துகிறது இவ்வுதாரணம்.

**இ-ள் :** காட்டிய கண் தனைக்காணா - உயிராற் காட்டப்பட்டு ஒரு விடயத்தைக் காண்கின்ற கண் தன்னியல்பைக் காணமாட்டாது. கண்ணுக்குக் காட்டு ஆய உள்ளத்தைக் கண் காணா - தனக்கு அப்பொருளைக் காண்பித்துக் கருத்தாவாய் நிற்கும் உயிரையும் அக்கண் காணமாட்டாது. காட்டிய உள்ளம் தனைக் காணாது - அதுபோல முதல்வனால் மறைந்து நின்று அறிவிக்கப்பட்டு ஒரு விடயத்தைத் தேர்ந்தறிகின்ற உயிர் தன்னியல்பையும் அறியமாட்டாது (தனக்கறிவிக்கும் முதல்வனையும் அறியமாட்டாது). உள்ளத்தின் கண் ஆய கள்வன் தான் - யான் யாரென்று தேர்கின்ற தேர்ச்சியறிவினிடத்தும் உடனாய் மறைந்து நின்று அறிவிக்கும் கள்வன் அம்முதல்வனாதலால், உள்ளத்தில் காண் - அவனை அவனருளால் உண்டாகும் தெளிந்த அறிவின் கண் வைத்து நாடித் தெளிவாயாக எ-று.

காட்டிய என முன்வந்த சொல்லும் பொருளும் பின்பும் வருதலால் இது சொற் பொருட் பின்வரு நிலை. கண்ணே என்றதிலுள்ள ஏகாரம் அசை. தனைக்காணா கண்காணா என்ற இடங்களில் துகரம் தொக்கு நின்றது. அதை விரித்து காணாது எனக் கொள்க. நாலாம் வரியிலுள்ள உள்ளம் என்பது தேர்ச்சி அறிவைக் குறிக்கின்றது.

மூன்றாம் வரியிலுள்ள உள்ளத்தின் கண் என்ற இடத்திற் சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கு நின்றது. அதை விரித்துத் தேர்ச்சி அறிவின் கண்ணும் என்க.

தேர்ச்சியறிவின் கண் உயிரோடு கலந்து நின்றும் உயிருக்குத் தோன்றாமையால் கள்வன் என்றார். கண்ணுக்கு உயிர் மறைந்து நின்று காட்டுவதாகலான் கண் தன்னையும் உயிரையும் அறிய மாட்டதாயிற்று. அது போல முதல்வன் இதுவரையும் உயிருக்குத் தோன்றாமல் மறைந்து நின்றே அறிவித்ததால் அது தன்னையும் முதல்வனையும் அறியமாட்டா தாயிற்றெனப் பொருள் கொள்ளும்படி நிற்றலால் கள்வன் என்பது குறிப்புமொழி.



உள்நோக்கி உள்ளத்திற் காண வல்லார்க்கு, தோன்றாது மறைந்து நிற்குங் கள்ளம் தீர்தலால், தம்மையும் முதல்வனையுங் காணக் கூடும். திருவுந்தியாரில் "கள்ள ரோடில்ல முடையார் கலந்திடின் வெள்ள வெளியாமென்றுந்தீபற" என்றதும் இக்கருத்துப் பற்றியே யாகும்.

இவ்வெண்பாவில் உவமானம் கண்; உவமேயம் உயிர். கண்ணுக்குக் காட்டாய வுள்ளத்தைக் கண் காணாவென உவமானத்துக் கூறியதை உவமேயமாகிய உயிருக்கும் கூறி , உயிருக்குக் காட்டாய முதல்வனை உயிர் காணாது எனக் கொள்க. இது எடுத்துக் காட்டுவமை. இதில் காட்டக் கண்டு, கண்ட தன்னையும் காட்டிய பொருளையுங் காணாமை பொதுத் தன்மை.

## இரண்டாம் அதிகரணம்

### பதிஞானத்தைப் பெறுதற்குபாயம் இதுவெனக்கூறும் மேற்கோள்

***இனி அசத்தாயுள்ள வன்னபேதங்களை அசத்தென்றுகாண உளதாய் நிற்பது ஞான சொரூபமென் றுணரற்பாற்று.***

அம்முதலை ஞானக் கண்ணாலே காண்க வென்று உணர்த்திய விடத்து, அந்த ஞானக் கண்ணைப் பெறுவது எவ்வாறென்னும் வினா எழும். அந்த வினாவுக்கு விடைகூறுமுகமாக முதலதிகரணத்துக் கோர் புறனடையாய் இச்சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைப் பதச்சேதஞ்செய்து பிரபஞ்சத்தை அசத்தென்று காணச் சிவஞானம் விளங்கித் தோன்றுமெனக் கூறுகின்றது இந்த மேற்கோள் - இதில், அசத்தை அசத்தென்று கண்டவிடத்து ஞானசொரூபந் தோன்றுமோ தோன்றாதோ என்பது ஐயம். தோன்றாதென்பது பிறர் கூறும் பக்கம்.

**இ-ள் :** அசத்தாயுள்ள வன்னபேதங்களை - நிலையில்லாத பிரபஞ்சங்களை, அசத்தென்று காண - இவை நிலையில்லாதன வென்றறிந்தவிடத்து, உளதாய் நிற்பது-விளங்கித் தோன்றுவது, ஞானரூப மென்றுணரற்பாற்று - பதிஞானத்தின் இயல்பென்றறிந்து கொள்க எ-று.

பாசமொருவத் தண்ணிழலாம் பதி என்றதில் பாசமென்றது தோன்றியழியும் தனு கரண புவன போகங்களாகிய காரியப் பிரபஞ்சத்தையெனக் கூறக்கருதி 'அசத்தாயுள்ள' என்றார். வன்ன

பேதங்கள் அசத்தாதல் போல என, ஏதுப் பொருளை வன்னபேதம் என்னும் உடம்பொடு புணர்த்திக் கூறியதனால் இது உடம்பொடு புணர்த்தல்.

படிகத்திற்றோன்றும் வன்னபேதங்கள் அசத்து. அவ்வன்ன பேதம் போலப் பிரபஞ்சமும் அசத்தென்று ஏதுப்பொருளை விரித்துக் கூறாமல், சொற் சுருக்கமாகக் கூறும் பொருட்டுப் பிரபஞ்சத்தை வன்ன பேதமென உருவகஞ் செய்தார். எனவே வன்னபேதம் என்பது உருவகத்தால் பிரபஞ்சத்தைக் குறிக்கின்றது.

வியாபகப் பொருளுக்கு ஒருவுதலாவது அறிதலே யாகுமெனக் கூறக்கருதி, 'அசத்தென்று காண' என்றார்.

ஆன்மாவோடு பிரிப்பின்றி நிற்கும் சிவஞானம் எப்போதும் அதற்குத் தண்ணிழலாகவே யிருக்கும். ஆனாலும் பிரபஞ்சத்தைத் தானெனவும் தன்னுடையதெனவும் எண்ணும் போது சிவஞானம் விளங்கித் தோன்றுவதில்லை. பிரபஞ்சந் தானுமன்று தன்னுடையது மன்றென்றறிந்த போது அச்சிவஞானம் விளங்கித் தோன்றும். அதனால் பதி தண்ணிழலாய் நிற்றல் புதிதன்று, என்று முள்ளதென்று கூறக்கருதி, உளதாய் நிற்பது என்றார். பதி என்பது ஆகுபெயராய்ப் பதிஞானத்தைக் குறிக்கின்றதெனக் கூறக்கருதி ஞானசொரூபம் என்றார். பதி தண்ணிழலாய் விளங்கித் தோன்றுவதை அனுபவத்தால் அறியலாமே தவிரச் சொல்லளவையால் அறியமுடியாதெனக் கூறக் கருதி உணரற் பாற்று என்றார்.

பிரபஞ்சத்தை வன்னமாக உருவகஞ் செய்து ஞானசொரூபத் தைப் படிகமாக உருவகஞ் செய்யாமையால் இது ஏகதேச உருவகம்.

இந்த மேற்கோளிற் கூறப்படும் ஏதுப் பொருளை மற்றைய அதிகரணங்களிற் கூறியிருப்பது போல மேற்கோளின் வேறாக வைத்துக் கூறினால் அதைப் பின்வருமாறு கூற வேண்டும்.

**மேற்கோள்**

***இனி அசத்தாயுள்ள பிரபஞ்சத்தை அசத்தென்றுகாண உளதாய் நிற்பது ஞான சொரூபமென்றது.***

**ஏது**

***வேற்றியல் பாகிய வன்னபேதங்களை வேற்றியல்பென்று கண்டுகழிப்பின் உளதாய் நிற்பது படிகசொரூபமாந் துணையான்.***



இவ்வாறு பகுக்கப்பட்ட மேற்கோளின் பொருளை முன்பு கூறினமையால், இனி ஏதுவின் பொருளையே கூற வேண்டும். அது வருமாறு:

படிகத்திற் பதிந்து அதன் சொரூபத்தைக் காட்டாது மறைத்து நின்ற சிவப்பு, நீலம் முதலிய நிறங்களை இவை படிக ஒளியின் வேறானவை யெனவும் நிலையில்லாதவை யெனவும் அறியின் அப்போது விளங்கித் தோன்றுவது பளிங்கினது சொரூபமேயாகும். இந்த ஒப்புமையால் நிலைபேறுடைய தனது சொரூபத்தைக் காட்டாது மறைத்து நிற்கும் நிலையற்ற பிரபஞ்சத்தை இவை நிலைபெறுத லுடையனவல்ல வென்று விவேகித்து அறியின் அவ்விடத்து நிராலம்பமாய் விளங்கித் தோன்றுவது ஞானசொரூபமென மேற்கோளிற் கூறப்பட்டது எ-று.

ஆலம்பம் - ஆதாரம் நிராலம்பம் - அதாரமில்லாதது.

வன்னபேதத்தைச் சித்திரமெனக் கொண்டு, அதைச் சித்திரம் வரையப்பட்ட சுவர்மேல் ஏற்றிக் கூறுவாருமுண்டு, அவ்வாறு கொண்டால் சுவரின் மீது வரையப்பட்ட சித்திரங்களை இவை நிலையற்றவை என அறியின் அப்போது நிலைபேறுடையதாய்த் தோன்றுவது சுவரேயாகும். அதுபோல ஆன்ம சொரூபத்தை மறைத்து நிற்கும் பிரபஞ்சத்தை நிலையற்ற தென்றறியின் அப்போது விளங்கித் தோன்றுவது ஞான சொரூபம் என்பது கருத்து.

அசத்தாயுள்ள பிரபஞ்சத்தை அசத்தென்று காண்டலாவது ஆசிரியன் உபதேசித்த உபதேசமொழியை உறுதியாகப் பற்றி நின்று, சிவஞான சித்தியாரில் (சூத் 9 செய்யுள் 6) "அட்டகுண மெட்டுச் சித்தி கோகனதன் முதல்வாழ்வு குலவு பதமெல்லாம் வெறுத்து நெறி யறுவகையு மேலொடு கீழடங்க" வெறும் பொய்யென நினைத்திருத்தல்.

**அசத்தை அசத்தென்று கண்டவிடத்துத் தோன்றும் பதிஞானத்தின் இயல்பு கூறி மேற்கோளை வலியுறுத்தும் உதாரணம்**

***நிர்க்குணனாய் நின்மலனாய் நித்தியா னந்தனாய்த்***<br>
***தற்பரமாய் நின்ற தனிமுதல்வ - னற்புதம்போ***<br>
***லானா வறிவா யளவிறந்து தோன்றானோ***<br>
***வானே முதல்களையின் வந்து.***

அசத்தை அசத்தென்று கண்டு நீங்கிய வழித் தோன்றுவது சூனியமேயன்றி ஞானசொரூபந் தோன்றாதென்பர் மாயாவாதிகள். அவர்களை நோக்கி ஞானசொரூபத்தின் இயல் பிதுவெனக் கூறி. அசத்தென்றுணர உளதாய் நிற்பது ஞான சொரூபமென மேற்கோளிற் கூறியதை வலியுறுத்துகின்றது. இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** நிர்க்குணன் ஆய் நின்மலன் ஆய் நித்தியானந்தன் ஆய் தற்பரமாய் நின்ற தனி முதல்வன் வான் முதல் களையின் அளவு இறந்து அற்புதம் போல் வந்து ஆனா அறிவாய்த் தோன்றானோ.

**இ-ள் :** நிர்க்குணன் ஆய் - முதல்வன் பிரகிருதி மாயாகாரியமாகிய சாத்துவிகம் இராசதம் தாமதம் என்னும் முக்குணரூபமாய் அளந்தறியப்படும் அசுத்தப்பிரபஞ்சம் போல முக்குணரூபமாய் அளவிட்டறியப் படுவானுமல்லனாய், நின்மலனாய் - முக்குணங் களைக் கடந்த சுத்தா சுத்தப் பிரபஞ்சம் போல ஆணவமல காரிய மாகிய மோகம் முதலியனவாகவும் கன்மமல காரியமாகிய சுகதுக்க ரூபமாகவும் அளந்தறியப் படுவானு மல்லனாய், நித்தியானந்தன் ஆய் - மலகன்மங்களைக் கடந்த சுத்தப் பிரபஞ்சம் போல அநித்தியமாகிய ஆனந்த ரூபனாய் அறியப்படாத வனுமாய், தற்பரமாய் - சுத்தம், சுத்தாசுத்தம் அசுத்தமென்னும் மூன்று பிரபஞ்சங்களோடுங் கூடி நிற்கும் பொதுவியல்பு காரணமாக சகலராகவும் பிரளயாகலராகவும் விஞ்ஞானகலராகவும் அறியப்படும் உயிர்போலன்றி அதற்கு மேலாய், நின்ற தனி முதல்வன் - இவ்வாறு பிரபஞ்சங்களையும் உயிர்களையுங் கடந்து நிற்றலால் பிரபஞ்சத்தின் இயல்பு பற்றியாவது உயிரின் இயல்பு பற்றியாவது அறியப்படாத தனி முதலாகிய இறைவன், வான் முதல்களையின் - ஆகாயம் முதலிய பிரபஞ்சங் களை அசத்தென்றறிந்து அவற்றினீங்கியவிடத்து, அளவு இறந்து அற்புதம் போல் வந்து - அப்பிரபஞ்சங்களோடு பழகி அவற்றை அறிந்து வரும் தனது சுட்டறிவைக் கடத்தலான் (இன்னதென் றறிய முடியாத) சூனியப்பொருள் போலத் தோன்றி, ஆனா அறிவாய்த் தோன்றானோ - பின்னர்ச் சுட்டிறந்தறியும் ஆன்மாவாகிய தன்னறிவினிடத்தில் நீங்காது நிலை பெறுவதாய்ச் சோதிக்குட் சோதியாய் விளங்கித் தோன்ற மாட்டானோ? தோன்றுவன் எ-று.

தற்பரமென்றது தனக்குப் பரமென விரியும். இதில் தன் என்றது உயிரை. அற்புதமென்றது இவ்வெண்பாவில் சூனியத்தைக் குறிக்கின்றது. பிரபஞ்சத்தி னீங்கிய விடத்து முதல்வன் இதுவரையும் அறிந்துவந்த பொருள்களைப் போலன்றி விளங்கித் தோன்றுவன்.



அதனால் அவனை, இது இன்னதென்றறிய முடியாத சூனியமோ வென்று ஆன்மா எண்ணக்கூடும். அதன்பின், சூனியமாயின் இன்பந்தராது, இன்பந்தருதலால் இது சூனியமன்று; அறிவு ரூபமான சோதியென்று பின்னர் அறியப்படுமாதலால், அற்புதம் போல் வந்து ஆனா அறிவாய்த் தோன்றானோ என்றார்.

ஆனா அறிவு - நீங்காத அறிவு.

தோன்றானோ என்றதிலுள்ள ஏகாரம் எதிர்மறை. அது தோன்றுவன் என்றும் பொருளைத் தருகின்றது. வானே முதல் என்றதிலுள்ள ஏகாரம் அசை. வானே முதல் என்றதனால் தோற்றமுறை பற்றி வான்முதலாகத் தோன்றும் ஐந்து பூதங்களும் ஒடுக்க முறை பற்றிப் பூதங்களுக்கு மேற்பட்ட முப்பத்தொரு தத்துவங்களும் அடங்கும்.

நிர்க்குணனாய், நின்மலனாய், நித்தியானந்தனாய், தற்பரமாய் என்ற இடங்களில் வந்த 'ஆய்' என்னும் ஆக்கச்சொல் எப்பொழுதும் உள்ளது என்னும் பொருளைத் தருகின்றது. ஆய் என்பதற்கு உள்ளதெனப் பொருள் கொள்ளுதல் வடமொழி வழக்கு. ஆனா அறிவாய் என்ற இடத்தில் ஆய் என்னும் ஆக்கச் சொல் சூனியத்தின் வேறென்பதைக் குறித்து நின்றது. முதல்வனுக்கும் ஞானத்துக்குமுள்ள ஒற்றுமை பற்றி ஞானந் தோன்றுமென்று கூற வேண்டியதை முதல்வன் தோன்றுவனென உபசரித்துக் கூறினார்.

**அசத்தை அசத்தென்று கண்டவிடத்துத் தோன்றுவது பதிஞானமேயன்றிப் பிறிதில்லை யென்பதற்குக் காட்டும் உதாரணம்**

***சுட்டி யுணர்வதனைச் சுட்டி யசத்தென்னச்***
***சட்ட வினியுளது சத்தேகாண் - சுட்டி***
***யுணர்ந்த நீ சத்தல்லை யுண்மையைத் தைவம்***
***புணர்ந்ததனாற் பொய்விட்டுப் போம்.***

ஆகாயம் முதலிய தத்துவங்களை நீக்கியவிடத்து அற்புதம் போற்றோன்றுவது ஞானசொரூபமன்று வேறொன்றெனக் கொள்வோம். அதை ஞானசொரூப மென்பதற்குப் பிரமாணமென்ன வென்பாரை நோக்கிப் பிரமாணங்கூறி, பிரபஞ்சத்தை அசத்தென்று காண உளதாய் நிற்பது ஞான சொரூபமென்னும் மேற்கோளை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**இ-ள் :** சுட்டியுணர்வதனைச் சுட்டி அசத்தென்ன - ஏகதேச அறிவாற் சுட்டியறியப்படுவதாகிய பிரபஞ்சத்தை முன்னைய வெண்பாவிற் கூறியவாறு ஒவ்வொன்றாகச் சுட்டி இது அசத்து, இது அசத்தென் றறிந்து ஒவ்வொன்றாகக் கழித்துக் கொண்டு சென்றவிடத்து, இனி சட்ட உளது சத்தேகாண் - முடிவில் செம்மையே அறியப்படுவதெது? அது அசத்தாகிய தத்துவங்களின் வேறாகிய சத்தேயாகு மென்றறி வாயாக, அவ்வாறானால் அசத்தின் வேறாய்ச் செம்மையே விளங்கித் தோன்றுஞ் சத்து உயிரேயாகு மென்பதே பொருந்துமெனின், சுட்டி உணர்ந்த நீ சத்து அல்லை - இதுவரை அசத்தோடு கூடிச் சுட்டியறிந்து வந்த நீ அசத்தின் வேறாய் நிலைபேறுடையதாய்த் தோன்றுஞ் சத்தாவாயல்லை, (அவ்வாறானால்இச்சுட்டறிவு என்னை விட்டு நீங்காது போலுமெனின்) தைவம் (ஆய்) உண்மையைப் புணர்ந்து - அசத்தின் வசப்பட்டு நின்று அவ்வசத்தைச் சுட்டியறிந்து வந்த நீ அவ்வசத்தைவிட்டு நிலை பேறுடைய தாய்த் தோன்றிய சத்தின் வசப்பட்டு அச்சத்தைக் கூடின், அதனால் பொய் விட்டுப்போம் - அக்கூட்டத்தினாற் சுட்டுணர்வாகிய அப்பொதுவியல்பு உன்னை விட்டு நீங்கும் எ-று.

அசத்தென்ன என்றதில் என்னவென்றது அசத்தென்று கண்டு நீக்குதலைக் குறித்த உபசார வழக்கு. சட்ட என்பது செப்பம் என்னும் பொருளைத் தரும் அகரவீற்று இடைச்சொல். அது மகரவீறு பெற்றுச் சட்டமென இழிவழக்காக மருவி வழங்குகின்றது. சத்தே காண் என்றதிலுள்ள ஏகாரம் அசத்தல்ல என பிரித்தமையால் பிரிநிலைக் கண் வந்தது. உண்மை சத்து என்னுஞ் சொற்கள் இரண்டும் ஒரு பொருளைத் தருவன. 'உண்மையைத் தைவம் புணர்ந்து' என்றதை, ஆக்கச் சொல் வருவித்து, உண்மையைத் தைவமாய்ப் புணர்ந்து எனக் கொள்க. தைவம்- சிவத்தின் அடிமை. வெண்பாவில் புணர்ந்தால் என்பது புணர்ந்து எனத்திரிந்து நின்றது.

உண்மையை என்பதிலுள்ள ஐ உருபை 'கு' உருபாகக் கொண்டு உண்மைக்குத் தைவமாதல் புணரின் எனக் கொள்ளினும் பொருந்தும். உண்மையைத் தைவமாய்ப் புணர்ந்தால் சுட்டுணர்வாகிய பொது வியல்பு முற்றாக அற்றுப் போகும். மீண்டு வராது என்பதைக் குறிப்பிடு வதற்காக பொய் விடும் என்றளவில் நில்லாது பொய்விட்டுப்போம் என்றார்.



### அசத்தை அசத்தென்று கண்டு நீங்கிச் சத்தாகிய சிவத்தை அடைதற்கு உபாயங் கூறும் உதாரணம்

***கண்டதை யன்றன் றெனவிட்டுக் கண்டசத்தா***
***யண்டனை யான்மாவி லாய்ந்துணரப் - பண்டணைந்த***
***வூனத்தைத் தான்விடுமா றுத்தமனி னொன்கருட***
***சானத்திற் றீர்விடம்போற் றான்.***

பிரபஞ்சத்தை அசத்தென்று கண்டு அதை நீக்குவதெவ்வாறு? பிரபஞ்சம் நீங்கியவிடத்துச் சிவத்துக்கு அடிமையாய்ச் சிவத்தைக் கூடுவதெவ்வாறு? சிவத்தைக் கூடியவிடத்துப் பொய்யாகிய பிரபஞ்சம் விட்டுப் போவதெவ்வாறென வினாவுவாரை நோக்கி இவ்வினாக்களுக்குரிய விடையைத் தெளிவாகக் கூறி மேற்கோளை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** கண்டதை அன்று அன்று எனக் கண்டு அசத்து ஆய்விட்டு ஆன்மாவில் அண்டனை ஆய்ந்து உணர உத்தமனின் பண்டு அணைந்த ஊனத்தைத் தான் விடுமாறு ஒண் கருட சானத்தின் தீர்விடம் போல்.

**இ-ள் :** கண்டதை அன்று அன்று எனக் கண்டு அசத்து ஆய்விட்டு - சுட்டியறியப்பட்ட பிரபஞ்சத்தை இது சத்தன்று இது சத்தன்றென ஒவ்வொன்றாகக் கண்டு அசத்தென்று நீக்கி, ஆன்மாவில் அண்டனை ஆய்ந்து - அவ்வாறு கண்டு நீக்கிய தன்னறிவின் கண்ணே சுட்டுணர்வின்றி வியாபகமாய் நின்ற கடவுளை ஆராய்ந்து, உணர - சிலோகம் பாவனை செய்வானாயின், உத்தமனின் பண்டணைந்த ஊனத்தைத் தான் விடுமாறு -அப்பாவனையால் பாவிப்பவனுடைய அறிவில் அத்துவிதமாய் விளங்கித் தோன்றும் முதல்வனால் அநாதியாய்க் கூடிநின்ற பொதுவியல்பாகிய ஆணவ மலப் பற்றை உயிர் விட்டு நீங்குதல், ஒண் கருட சானத்தின் தீர்விடம் போல் - பிரகாசம் பொருந்திய கருட பாவனையால் விளங்கித்தோன்றும் மந்திர தைவிக கருடனால் கருடபாவனை செய்பவன் விடத்தை நீக்கிக் கொள்வது போலாகும். எ-று.

இவ்வெண்பாவில் முதலில் வரும் தான் என்பது எழுவாய். அது உயிரைக் குறிக்கின்றது. இரண்டாவதாக வரும் தான் அசை. சானம் என்பது தியானம் என்னும் வடமொழிச் சொல்லின் சிதைவு.

**கருடதியானமாவது :** ஆதி பௌதிகம் ஆதிதைவிகம் ஆத்தியான்-மிகம் எனக் கருடன் மூவகைப்படும். ஒவ்வொரு பொருளும்

இவ்வாறே பௌதிகம் தைவிகம் ஆன்மிகம் என மூவகைப்படும். அவற்றுள் உலகத்திற் காணப்படுங் கருடன் ஆதிபௌதிக கருடன், அதற்கு அதிதெய்வமாகிய மந்திரம் ஆதி தைவிக கருடன். அம்மந்திரமிடமாக நின்று மாந்திரிகனுக்குப் பயன் கொடுப்பதாகிய சிவசத்தி ஆத்தியான்மிக கருடன் எனப்படும். இம்மூன்றனுள் இவ்விடத்திற் கருடனென்றது கருடனுக்கு அதி தெய்வமாய் மாந்திரிகன் உள்ளத்தில் அதுபோல் வைத்துத் தியானஞ் செய்து கணிக்கப்படும். மந்திரரூபமாகிய ஆதிதைவிக கருடனை. அதனைப் பாவித்தலாவது நாள் தோறும் பயின்று வந்த பயிற்சி விசேடத்தால் அம்மந்திர ரூபமே தானாக மந்திரமெனவுந் தானெனவும் பேதமின் றித் தன்னறிவு அம்மந்திரத்தின் வசமாய் உறைத்து நிற்றல். அவ்வாறு நின்று அம்மந்திரக் கண்கொண்டு பார்க்க, அப்பார்வை விட வேகத்தை மாற்றுவ துறுதியாதலால், அக்கருட பாவனை இவ்விடத் திற் கூறிய சிவோகம் பாவனைக்கு உவமையாயிற்று. பறவை, விலங்கு மரம் முதலியவற்றுக்கெல்லாம் அதிதெய்வமும் மந்திரமும் உண்டென்பதும், மந்திரங்களைக் கணிப்பவன் சார்ந்ததன் வண்ணமாகும் படிகம் போல மந்திர சொரூபியாவான் என்பதும் சருவ ஞானோத்தர முதலியவற்றிற் கூறப்பட்டிருத்தல் காண்க. இதனாற் கருடபாவனை உண்மையல்ல வென்பார் மதம் போலியாகு மென அறிக. அன்றியும் பாவனை போலியாகும் போது அது பயன்தருவ தெவ்வாறெனக் கேட்டு, கருடபாவனை பொய் யென்பவர்களது கூற்றை மறுக்குக.

## மூன்றாம் அதிகரணம்

### பதிஞானத்தைப் பெற்றவிடத்தும் பழையவாசனை தாக்காதிருத்தற் பொருட்டுப் பஞ்சாக்கர ஜெபம் செய்ய வேண்டுமெனக் கூறும் மேற்கோள்.

***இனி இவ்விடத்து ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்க வென்றது.***

ஆன்மாவைச் சுத்தி பண்ணுதற்குப் பாசம் நீங்கிய விடத்துத் தண்ணிழலாய்ப் பிரகாசித்த ஞான சொரூப மொன்றே போதும். அதன் மேலும் ஆன்ம சுத்திப்பொருட்டுச் செய்ய வேண்டிய தொன்றுமில்லை யென்பாரை நோக்கிச் சூத்திரத்தின் மூன்றாங் கூற்றைப் பதச் சேதஞ் செய்து ஞானம் பிரகாசித்தாலும் பஞ்சாக் கரத்தை விதிப்படி உச்சரிக்க வேண்டுமெனக் கூறுகின்றது இந்த மேற்கோள். இதில் ஞானம் பிரகாசித்த பின்பு செய்ய வேண்டிய துண்டோ இல்லையோ என்பது ஐயம். இவ்வையப்பாட்டின்கண் செய்ய வேண்டிய தொன்று மில்லையென்பது பிறர் கூறும்பக்கம். அவர்களை மறுத்து ஞானம் பிரகாசித்தபின்பும் திருவைந்தெழுத்தை உச்சரிக்க வேண்டுமென்கின்றது இந்த மேற்கோள்.

**இ-ள் :** பாசம் நீங்கியவிடத்துத் தண்ணிழலாய்ப் பிரகாசித்த ஞானக் கண்ணாற் பதியை ஆன்மாவாகிய தன்னறிவின்கண் ஆராய்ந்தறிந்த பின்பு வாசனாமலம் நீங்கும் பொருட்டுத் திருவஞ்செழுத்தையும் விதிப்படி கணிக்க எ-று.

ஞானக் கண்ணாற் பதியைச் சிந்தை நாடிய பின்னர் என முன்பு கூறியதைத் தழுவி நிற்கும் இறந்தது தழுவிய உம்மை இந்த மேற்கோளில் பஞ்சாக்கரத்தை என்றவிடத்தில் தொக்கு நின்றது. அதை விரித்துப் பஞ்சாக்கரத்தையும் எனக் கொள்க. இந்த உம்மையை விரிக்க வேண்டுமென்பது பற்றியே வழி நூலாசிரியரும் *(சித்தியார் சூத் 9 செய்1)* 'பின்னுமோசை தரு மஞ்செழுத்தை உச்சரிக்க' என்றதில் பின்னும் என உம்மையை விரித்தார்.

தூலம் சூக்குமம் அதிசூக்குமமெனப் பஞ்சாக்கரம் மூவகைப்படும். தூல பஞ்சாக்கரம் நமசிவய. சூக்குமபஞ்சாக்கரம் சிவயநம. அதிசூக்கும பஞ்சாக்கரம் சிவயவசி. இது காரண பஞ்சாக்கரமெனவும் முத்தி பஞ்சாக்கரமெனவுங் கூறப்படும். இந்த மேற்கோளில் பஞ்சாக்கரத்தை என்றது முத்தி பஞ்சாக்கரத்தை.

பாசத்தை விட்டு ஞானக் கண்ணாற் பதியை நாடுக என்பதே பஞ்சாக்கரத்தின் பொருள். அதுவே முன்னர்க் கூறப்பட்ட சாதித்து நிற்கும் முறையுமாகும். அந்த முறையே பஞ்சாக்கரத்தை ஓதும் முறையுமென அறிவிக்கவேண்டி இவ்விடத்தில் அதை வகுத்துக் கூறாமல் விதிப்படி உச்சரிக்கவென முன்னர்க் கூறிய நிற்கும் முறையை இவ்வதிகரணப் பொருளோடு மாட்டெறிந்துரைத்தார்.

மாட்டெறிதல் - தொடர்புபடுத்துதல்.

இவ்வாறு மாட்டெறிந்ததை உணராதார் சாதித்து நிற்கும்முறை வேறு ஓதும் முறை வேறெனச் சித்தாந்த வழக்குக்கு முரணாகக் கூறுவர். நிற்கும் முறைக்கும் ஓதும் முறைக்கும் தொடர் பில்லாத விடத்து, நிற்கும் முறைக்கு ஓதும் முறை சாதனமாவ தெவ்வாறென வினாவி, நிற்கும் முறைவேறு ஓதும் முறை வேறென்பாரை மறுக்குக.

மந்திரங்களை உச்சரித்தல் மானதம், மந்தம் உரையென மூவகைப்படும். மானதமாவது மனத்தாற் கருதுதல். மந்தம் தன்செவிக்கு மாத்திரம் கேட்கும்படி உச்சரித்தல். உரை தனக்கும் பிறருக்கும் கேட்கும்படி உச்சரித்தல். இவற்றுள் உச்சரிக்கவென்ற தனால், சுத்தமானதமாகிய அறிவாற் கணித்தலைக் குறிப்பிடக்கருதி, சூத்திரத்தில் உச்சரிக்கவென்னாது 'எண்ணும்' எனக் கூறினார். வடமொழிச் சிவஞான போதச் சூத்திரத்தில் தியானிக்கவெனக் கூறியதும் இக்கருத்துப்பற்றியேயாகும். மேலும் இம்முத்தி பஞ்சாக்கரத்தின் இயல்புகளையெல்லாம் உண்மைவிளக்கம், சிவப்பிரகாசம் திருவருட்பயன், கொடிப்பாட்டு, நெஞ்சுவிடுதூது முதலியவற்றுட் காண்க.

### பதிஞானத்தைப் பெற்றவிடத்தும் வாசனையை நீக்குதற் பொருட்டு பஞ்சாக்கர ஜெபம் செய்ய வேண்டுமென்பதற்குக் காட்டும் ஏது

***இவ்வான்மாக்களுக்கு ஞானம் பிரகாசித்தும் அஞ்ஞானத்தை வேம்பு தின்ற புழுப்போல் நோக்கிற்றை நோக்கி நிற்குமாகலின் அது நீக்குதற் கெனக் கொள்க.***

முத்தி பஞ்சாக்கரத்தை அறிவாற் கணித்தல் அந்தரங்க வழிபாடா தலின், சிந்தைக் கெட்டாத சிவனைச் சிந்தைக் கெட்டுபவனாகக் கண்டு வழிபடும் முறையோடு சேர்த்துக் கூறவேண்டிய, பஞ்சாக் கரத்தை உச்சரிக்க வென்பதை வேறாகப் பிரித்து, பின்பு சித்திக்கும் பொருளையே சாதிப்பதாகிய சித்தசாதனமாய் இவ்விடத்திற் கூறியதேனென்று வினாவுவாருக்கு, வாசனாமலத்தை நீக்குதற் பொருட்டென விடைகூறி, இவ்விடத்து ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்கவென மேற்கோளிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வேது.

**இ-ள் :** வேம்பு தின்ற புழு அதனை விட்டுக் கரும்பை அடைந்து அதன் சுவையை அநுபவித்தறிந்த பின்பும், பழக்கவசத்தால், முன்னநுபவித்த வேம்பின் சுவையையே நோக்கி நிற்பது போல, அசத்தாயுள்ள பிரபஞ்சங்களை அசத்தென்று கண்ட உயிர்களும் அதனால் ஞானசொரூபம் விளங்கிப் பதிதோன்றிய விடத்தும் பழக்க வாசனையாகிய பண்டைச் சுட்டுணர்வால் பிரபஞ்சத்தையே நோக்கி நிற்கும். ஆதலால் அப்பழக்க வாசனையை நீக்கும் பொருட்டு இவ்வழிபாடு வேண்டப்படுதலால், இனி இவ்விடத்து ஸ்ரீ



பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்கவென மேற்கோளிற் கூறப்பட்டது எ-று.

இவ்விடத்து என்றதனால், சிவனையணைந்த சீவன்முத்தர் தன்மையைச் சாரவைத்துக் கூறவேண்டிய பஞ்சாக்கர தியானத்தை, சிவோகம் பாவனை பற்றிக் கூறும் இவ்விடத்துக் கூறினாரெனக் கொள்க. ஏதுவில் 'நீக்குதற்கு' எனக் கூறினாலே போதுமானாலும், எனக் கொள்க வெனக் கூறியது பஞ்சாக்கர தியானத்தை அணைந்தோர் தன்மையைச் சாரவைத்துக் கூறவேண்டு மென்பதை அறிவித்தற் பொருட்டேயாம். இவ்வாறு பிறிதொரு பொருளைத் தன்னுள் அடக்கி நிற்கும் எனக் கொள்க. என்னும் உடம்பை இவ்வாக்கியத்திற் புணர்த்திக் கூறியிருத்தலால் இது உடம்பொடு புணர்த்தல்.

பஞ்சாக்கர தியானம் சிவோகம் பாவனையாகிய சாதனம் நிலைத்தற்கும் சிவானுபவம் நிலைத்தற்கும் வேண்டப்படுமென்பது பற்றியே உமாபதிசிவாச்சாரியார் திருவருட் பயனில் அஞ்செழுத் தருணிலையை, ஆன்மசுத்தியையும் இன்புறுநிலையையுங் கூறிய பின்னர் அணைந்தோர் தன்மையைச் சாரவைத்துக் கூறினாரென்க.

திருக்குறளில் வானோக்கிவாழும், கோனோக்கிவாழும் என்றாற் போல, இவ்விடத்தில் நோக்கென்றது பார்வையைக் குறிக்காமல் மனவெழுச்சி விசேடமாகிய எண்ணத்தைக் குறிக்கின்றது.

ஏதுவில் ஞானம் பிரகாசித்த வழியும் என்றிருக்க வேண்டியது 'ஞானம் பிரகாசித்தும்' எனத் திரிந்து நின்றது. இவ்விடத்தில் ஞானமென்றது அசத்தை அசத்தென்று கண்டவழி விளங்கித் தோன்றும் ஞான சொரூபத்தையெனவும் அஞ்ஞான மென்றது அதற்கு மறுதலையாகிய சுட்டுணர்வையெனவும் அறிக. சுட்டுணர்வாவது இது மாடு, இது வண்டி என்றாற் போல ஒவ்வொரு பொருளாகச் சுட்டியறியும் அறிவு. எவற்றையும் ஒன்றாயறியும் வியாபக அறிவை விட்டுச் சுட்டியறியும் அஞ்ஞானத்தைக் கூடவரின் அதை நீக்குதற்குப் பஞ்சாக்கர ஜெபம் செய்ய வேண்டு மென்றதனால், அது இனிமேல் சித்திப் பதைச் சாதிப்பதாகிய சித்தசாதனமன் றென்பதும் பெறப்பட்டது.

## வாசனையை நீக்குதற்குப் பஞ்சாக்கரத்தை உச்சரித்தல் சாதனமாகும் என்பதற்குக் காட்டும் உதாரணம்

***அஞ்செழுத்தா லுள்ள மரனுடைமை கண்டரனை***
***யஞ்செழுத்தா லர்ச்சித் திதயத்தி - லஞ்செழுத்தாற்***
***குண்டலியிற் செய்தோமங் கோதண்டஞ் சானிக்கி***
***லண்டனாஞ் சேடனா மங்கு.***

பஞ்சாட்சர செபம் ஞான சொரூபம் விளங்கியவிடத்தும் பிரபஞ்சத்தை நோக்கச் செய்யும் பழக்க வாசனையை நீக்குதற்குச் சாதனமாவ தெவ்வாறென்பாரை நோக்கி, அது பழக்க வாசனையை நீக்குதற்குச் சாதனமாகுமெனக் கூறி, ஏதுவிற் கூறியதை வலியுறுத்துகிறது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** உள்ளம் அரன் உடைமை அஞ்செழுத்தால் கண்டு இதயத்தில் அரனை அஞ்செழுத்தால் அர்ச்சித்து அஞ்செழுத்தால் குண்டலியின் ஓமம் செய்து கோதண்டம் சானிக்கில் அங்கு அண்டன் ஆம் சேடன் ஆம்.

**இ-ள் :** உள்ளம் அரன் உடைமை அஞ்செழுத்தால் கண்டு - உயிர் சிவனுக்கு உடைமையாதலை அஞ்செழுத்தை உச்சரிக்கும் முறையில் வைத்தறிந்து, இதயத்தில் அரனை அஞ்செழுத்தால் அர்ச்சித்து - தன் உடம்பில் இதயம் உந்தி புருவநடு என்னும் மூன்றையும் முறையே பூசைத்தானம் ஓமத்தானம் தியானத் தானமாகக் கருதிக்கொண்டு புறம்பே ஞானபூசை செய்யும் முறைப்படி இதயத் தாமரையில் முத்தி பஞ்சாட்சரத்தாலமைந்த திருமேனியையுடைய சிவபெருமான் வீற்றிருப்பதாகப் பாவித்து அம்முதல்வனைக் கொல்லாமை, ஐம்பொறியடக்கல், பொறை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு என்னும் அட்ட புட்பங்கொண்டு அம்முத்தி பஞ்சாக்கரத்தால் அர்ச்சித்து, அஞ்செழுத்தால் குண்டலியின் ஓமஞ் செய்து - அத்திருவைந்தெழுத்தாலே குண்டலித் தானமாகிய உந்தியில் ஞானமாகிய அனலை எழுப்பி அதன்கண் விந்துத் தானமாகிய புருவநடுவில் அவ்வக்கினியா லுண்டாகும் அமிழ்தமாகிய நெய்யைச் சுழுமுனை நாடி இடைநாடியாகிய சுருக்குச் சுருவங்களால் ஓமஞ் செய்து, கோதண்டம் சானிக்கில் - விந்துத் தானமாகிய புருவ நடுவில் சிகர யகர வகரங்கள் மூன்றும் முறையே தற்பதப் பொருளும் துவம்பதப் பொருளும் அசிபதப் பொருளுமாம் முறையை நோக்கி அதனாற் சிவோகம் பாவனை செய்வானாயின், அங்கு அண்டன் ஆம் சேடன் ஆம் - அப்பாவனையின் கண் அம்முதல்வன் விளங்கித் தோன்றுவன் அப்பாவனையைச் செய்த ஆன்மா அம்முதல்வனுக்குச் சேட சேடிய பாவத்தால் அடிமையாவன் எ-று.



இதில் சேடன் என்றது உயிரை, சேடியம் என்றது முதல்வனை. சேடம் என்பது மிச்சம் என்னும் பொருளைத் தரும். மிச்சம் எதாவதொரு பொருளின் மிச்சமாயிருக்குமே தவிரத் தனியானதொரு பொருளா யிருப்பதில்லை. உயிர் சிவனையின்றித் தனித்து நில்லாமையால் இவ்வெண்பாவில் உயிரைச் சேடன் என்றார்.

சுருக்குச் சுருவம் என்பன ஓமாக்கினியில் நெய்யைவிடும் துடுப்புகள். ஓமமும் தியானமும் பூசைக்கு அங்கங்கள். கோதண்டம் - புருவநடு.

தத்துவமசி மகாவாக்கியம் தற்பதம், துவம்பதம், அசிபதம் என்னும் மூன்று பதங்களையுடையது. இதில், தத் என்பது பிரமத்தை யும் துவம் என்பது உயிரையுங் குறிக்கும். அசி - ஆகிறாய். அது நீ ஆகிறாய் என்பது தத்துவமசி மகாவாக்கியத்தின் பொருள்.

ஞானசொரூபம் விளங்கியவிடத்தும் பழைய பழக்கங் காரணமாகப் புறத்தே பிரபஞ்சத்திற் சென்று சுட்டியுணரும் தன்னறிவைப் புறத்தே சொல்லாதவாறு மடக்கி, அகத்தே ஒரு குறியின்கண் நிறுத்தி நிட்டை கூடும்படி அஞ்செழுத்தோதும் முறையில் வைத்துக் கண்டு சிந்திக்கச் சிந்திக்க அச்சிந்தனை சுட்டறிவை முற்றாகக் கெடுத்து ஞானசொரூபத்தைச் செம்மையாக விளக்கிப் பூரண நிலைக்குக் கொண்டு போகுமாதலால், முத்தி பஞ்சாக்கர தியானம் பழைய வாசனையை நீக்குதற்குச் சிறந்த சாதனமாயிற்றென அறிக.

## இதயத்திற் பூசித்தலால் இறைவனைக் காண்டல் கூடுமென்பதற்கு உவமை கூறி வாசனையை நீக்குதற் பொருட்டு முத்தி பஞ்சாக்கரம் உச்சரிக்க வேண்டுமென்பதை வலியுறுத்தும் உதாரணம்

***இந்துவிற் பானுவி ராகுவைக் கண்டாங்குச்***
***சிந்தையிற் காணிற் சிவன்கண்ணா - முந்தவே***
***காட்டாக்கிற் றோன்றிக் கனல்சே ரிரும்பென்ன***
***வாட்டானா மோதஞ் செழுத்து.***

முன்னைய வெண்பாவிற் கூறியவாறு இதயத்தானத்தில் ஒரு குறியின் கண் வைத்துப் பாவித்தாலன்றி முதல்வனைக் காணமுடியா தென்பதையும், அவ்வாறு பாவித்துக் கண்டவிடத்து முதல்வன் தன்னிடத்தில் விளங்கித் தோன்றும் முறையையும், தோன்றிய விடத்துத்தான் அம்முதல்வனுக்கு அடிமையாகும் என்பதையும் உவமையில் வைத்துக்காட்டி, பழைய வாசனையை நீக்குதற்கு முத்தி பஞ்சாக்கரத்தை உச்சரிக்க வேண்டுமென்பதை வலியுறுத்துகிறது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** இராகுவை இந்துவில் பானுவில் கண்டாங்குச் சிந்தையில் காணில் உந்தவே காட்டாக்கின் சிவன் தோன்றிக் கண் ஆம் தான்கனல் சேர் இரும்பு என்ன ஆள் ஆம் அஞ்செழுத்து ஓது.

**இ-ள் :** இராகுவை இந்துவில் பானுவில் கண்டாங்கு - நவக்கிரகங்களில் மற்றைய கிரகங்களைப் போலக் காணப்படாத இராகு கேதுக்களைக் கிரகணகாலத்திற் சந்திர சூரியரிடத்திற் கண்டாற் போல, சிந்தையில் காணில் - முப்பொருள்களுள் யான்இதனை யறிந்தேன் யான் இதனை அறிகின்றிலேன் என்னும் போது யானென்றறியப்படும் பொருளாகிய ஆன்மாவும் இதனையென் றறியப்படும் பொருளாகிய பாசமும் ஆன்மாவின் அறிவுக்கு வேறாகக் காணப்படுவது போல, வேறாகக் காணப்படாத முதல்வனைத் தன் இதயத் தாமரையில் முத்தி பஞ்சாட்சரத்தைத் தியானிக்கும் முறையில் வைத்துக் காணுமாயின், உந்தவே காட்டாக்கின் சிவன் தோன்றிக் கண் ஆம் - விறகினிடத்துத் தீக்கடை கோலை நட்டுக் கயிற்றினாற் சுற்றிக் கடைய விறகிலிருந்து அக்கினி தோன்றுவது போல அவ்வறிவிற் சிவன் தோன்றி அறிவுக்கறிவாய் விளங்கி நிற்பன், தான் கனல் சேர் இரும்பு என்ன ஆள் ஆம் - அப்பொழுது தானும் அக்கினியைச் சேர்ந்த இரும்பு போலத் தனது சுதந்திரத்தை விட்டு அம்முதல்வனுக்கு அடிமையாகும், அஞ்செழுத்து ஓது - ஆதலால் அத்திருவஞ்செழுத்தை ஓதுவாயாக எ-று.

இராகுவைப் போலவே கேதுவும் சாயாக் கிரகமாகலின், இவ்விடத்தில் இராகு கேதுவென்னும் இரண்டையுங் கூறாமல் இராகுவை மாத்திரங் கூறிக் கேதுவைக் கூறாதுவிட்டார்.

சிவன் கண்ணாம் என்றதில் கண் என்பது அறிவைக் குறிக்கின்றது. மூன்றாம் அடியிலுள்ள தோன்றி என்பது இரண்டாம் அடியிலுள்ள கண்ணாம் என்பதனோடு சேரும்.



உந்துதல் - (இவ்விடத்தில்) கடைதல்

கட்டாக்கி என்பது காஷ்டாக்னி என்ற வடமொழியின் சிதைவு.

காட்டாக்கின் என்றதை, காட்டாக்கி + இன் எனக் கொள்ள வேண்டியிருப்பதால்அவ்விடத்தில் இகரம் விகாரத்தால் தொக்கது. 'இன்' உவம உருபு. இதற்கு முந்திய வெண்பாவில் அஞ்செழுத்தால் அர்ச்சிக்கும் முறையைக் கூறிய ஆசிரியர். அஞ்செழுத்தோத வேண்டுமென்பதை வலியுறுத்தற் பொருட்டு இவ்வெண்பாவிலும் ஓது அஞ்செழுத்து என்று மீண்டுங் கூறினார்.

### இதயத் தாமரையின் இயல்பு கூறிப் பஞ்சாக்கர தியானம் வாசனையை நீக்கும் என்பதை வலியுறுத்தும் உதாரணம்

***மண்முத னாளமலர் வித்தை கலாரூப***
***மெண்ணிய வீசர் சதாசிவமு - நண்ணிற்***
***கலையுருவா நாதமாஞ் சத்தியதன் கண்ணா***
***நிலையதிலா மச்சிவன்றா ணேர்.***

முப்பத்தாறு தத்துவங்களுக்கும் மேற்பட்ட முதல்வனை இதயத்தாமரையிற் கண்டர்ச்சிப்ப தெவ்வா றென்பாரை நோக்கி, அவ்விதய பங்கயத்தின் இயல்பை உணர்த்திப் பஞ்சாக்கர தியானம் வாசனையை நீக்குமென ஏதுவிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** நண்ணில் மண் முதல் நாளம் வித்தை மலர் எண்ணிய ஈசர் சதா சிவமும் கலாரூபம் சத்தி கலையுருவாம் நாதம் அதன் கண்ணாம் அதில் அச்சிவன் தாள் நிலையாம் நேர்.

**இ-ள் :** நண்ணில் - முன்னைய வெண்பாவிற் கூறிய இதய பங்கயத்தின் இயல்பை அறியப்புகின், மண்முதல் நாளம் - நிலம் முதலிய இருபத்து நான்கு தத்துவமும் உந்தியினின்றுந் தோன்றி எட்டுவிரல் அகல அளவுள்ள தண்டு வடிவாம், வித்தை மலர் - வித்தியா தத்துவங்கள் ஏழும் சுத்தவித்தையுஞ் சேர்ந்த எட்டுத் தத்துவமும் எட்டிதழ் வடிவாம், எண்ணிய ஈசர் சதாசிவமும் கலாரூபம் - அந்தத் தத்துவங்களுக்கு மேலாகக் கருதப்பட்ட ஈசுர தத்துவமும் சதாசிவ தத்துவமும் அறுபத்து நான்கு கேசரவடிவாம், சத்தி கலை உருவாம் - சத்தி தத்துவம் அக்கேசரங்களுக் குள்ளாகிய பொகுட்டு வடிவாம். நாதம் அதன் கண்ணாம் - சிவதத்துவம் அப்பொருட்டிற் காணப்படும் ஐம்பத்தொரு வீச வடிவாம், அதில்

அச்சிவன் தாள் நிலையாம் - ஆதலால் அவ்வியல்பினையுடைய இதயத் தாமரையில் முப்பத்தாறு தத்துவங்களையும் ஆசனமாக-வுடைய சிவசத்தி நிலைபெறும், நேர் - அதனையறிந்து திருவஞ்செழுத்தால் அர்ச்சிப்பாயாக எ-று.

கேசரம் - பூந்தாது.

இதனால், அண்ட பிண்டமவை சமமாதலால் புறத்திற் காணப்-படும் முப்பத்தாறு தத்துவமும் அகத்திற் சூக்குமாய் உண்டென்பதை எடுத்துக்காட்டி , அண்டத்தில் முப்பத்தாறு தத்துவங்களையுங் கடந்து நிற்கும் நிலையே இதயத் தாமரையில் முப்பத்தாறு தத்துவங்களையும் ஆசனமாகக் கொண்டு வீற்றிருக்கும் நிலையென விளக்கியவாறு காண்க.

வித்தை என்றதை இரட்டுற மொழிந்து வித்தியாதத்துவம் ஏழும் சுத்தவித்தையுமெனக் கொள்ளப்பட்டது. இக்கருத்துப் பற்றியே சித்தியாரிலும் (9ஆம் சூத் 9ஆம் செய்யுள்) 'மூட்டு மோகினி சுத்தவித்தை மலரெட்டாய்' என அருணந்தி சிவம் அருளிச்செய்தார். இதில் மோகினி என்றது அசுத்தமாயையைக் குறித்து ஆகுபெயராய் அசுத்தமாயையின் காரியங்கள் ஏழையுங் குறிக்கின்றது.

இவ்வாறன்றி, ஆன்மதத்துவம் இருபத்து நான்கும் வித்தியா தத்துவம் ஏழுங்கூடிய முப்பத்தொரு தத்துவங்களிலுமுள்ள பூதம், தன்மாத்திரை, ஞானேந்திரியம், அந்தக்கரணம், குணம், பிரகிருதி, கலாதி எனப்படும் எட்டுக் கொத்துக்களையும் எண்விரல் நாள வடிவமாகவும், அசுத்தமாயா தத்துவத்தை நாளத்துக்கும் மலருக்கும் நடுக்கண்டமாகிய கிரந்தி வடிவமாகவும், அதற்குமேல் சுத்தவித்தையில் வசிக்கும் வாமை முதலிய எட்டுச் சத்திகளையும் எட்டிதழ் வடிவமாகவுங் கூறுவதுண்டு.

வேறு சிலர் முப்பத்தொரு தத்துவங்களையுந் தண்டாகக் கொண்டு அசுத்தமாயையை முடிச்சிலுள்ள கீழிதழாகவும் சுத்தமாயையை மேலிதழாகவும் அதற்குமேல் ஈசுர தத்துவத்தில் வசிக்கும் அனந்தர் முதலிய எட்டு மூர்த்திகளையும் எட்டிதழ் வடிவாகவும் சதாசிவ தத்துவத்தை கேசரவடிவாமெனவுங் கொண்டு அதற்கேற்பக் கொண்டு கூட்டி உரைப்பர்.

கலாரூபமென்றது நிவிர்த்தி முதலிய பஞ்சகலைகளையெனவும் கலாரூபமென்பது மண் வித்தை முதலிய எல்லாவற்றோடுங் கூட்டியுரைக்கப்படுமெனவுங் கொண்டு, மண்முதனாள மலரென்ப-



தற்கு மண்ணாகிய நிவிர்த்தி கலாரூபம் நாளமும் மண்ணை முதலாகவுடைய ஏனைய இருபத்து மூன்று ஆன்மதத்துவங்களும் பிரதிட்டா கலாரூபமாகிய மலரெனவும், வித்தை எண்ணிய வீசர் சதாசிவமுங் கலையுருவாமென்பதற்கு வித்தியா தத்துவமாகிய வித்தியா கலாரூபம் கலையெனப்படும் கேசரமும், சுத்தவித்தையோடு கூட்டி எண்ணப்பட்ட ஈசுரதத்துவம் சதாசிவதத்துவம் என்னும் மூன்றும் சாந்தி கலாரூபமாகிய கலைக்குள் உருவெனப்படும் பொகுட்டாமெனவும், நாதமாம் சத்தி அதன் கண்ணாம் என்பதற்கு சிவதத்துவம் சத்தி தத்துவமாகிய சாந்தியதீத கலாரூபம் பொகுட்டின் கண்ணுள்ள வீசமாமெனவுங் கூறுவாருமுண்டு. இவையெல்லாம் அவ்வவ் வாகமபேதம் பற்றிக் கொள்ளப்படும்.

கலை அறுபத்து நான்காகலான் அது அறுபத்து நான்காகிய பூந்தாதுகளுக்குத் தொகை பற்றிக் கூறப்படும் ஆகுபெயர். ஈசர் என்றதும் ஈசுவர தத்துவத்தைக் குறித்தலால் ஆகுபெயர்.

கலையுரு என்றவிடத்தில் 'உள்' உருபை விரித்து கலைக்குள் உருவெனக் கொள்க. நிலையதில் என்றதிலுள்ள அதில் என்பது அது + இல் எனப் பிரிக்கப்படும். இதில் அன் சாரியை விகாரத்தாற் றொக்கது. அதை விரித்து அதனில் எனக் கொள்க. அதனில் எனக் கொள்வதே இலக்கண வழக்கு. இதயத் தாமரை உலகத்திற் காணப்படும் நாளம் முதலாக மேல்நோக்கித் தோன்றுந் தாமரை போலன்றி, வீசம் முதலாகக் கீழ் நோக்கித் தோன்றும் தெய்வீகத் தாமரையாகும். சிவன் தாள் அதில் நிலையா மெனவே சிவன் சத்திக்கு மேலாய் நிற்பனென்பதும் பெறப்படும்.

ஒன்பதாஞ் சூத்திரம் முற்றிற்று.

சாதன இயல் முற்றிற்று.

★★★

# பயனியல்

## பத்தாஞ் சூத்திரம்

ஒன்பதாஞ் சூத்திரத்தாற் சாதனஞ் செய்யும் முறைகூறி, இனி அச்சாதனத்தால் உண்டாகும் பயன் பாசத்தை விடுதலும் சிவனையடைதலும் சிவனை அடைந்தபின்னர்த் தேகம் இருக்குமள வும் பிராரத்த வாசனை தாக்காதிருத்தலுமாதலால் அம்மூன்றினையும் மூன்று சூத்திரத்தாற் பயனியலென வைத்துக் கூறத் தொடங்கி, இப்பத்தாஞ் சூத்திரத்தால் பாசநீக்கமாகிய பயனை வகுத்துக் கூறுகின்றார்.

***அவனே தானே யாகிய வந்நெறி***
***யேக னாகி யிறைபணி நிற்க***
***மலமாயை தன்னொடு வல்வினை யின்றே.***

என்பது சூத்திரம்

**கருத்துரை**

***பாசக்ஷயம் பண்ணுமா றுணர்த்துத னுதலிற்று.***

ஏழாம் எட்டாம் ஒன்பதாஞ் சூத்திரங்களால் முறையே சாதிக்கும் அதிகாரி ஆன்மாவெனவும் அவ்வதிகாரி செய்யவேண்டிய சாதனம் பாசநீக்கமும் பதிஞான உணர்ச்சியுமெனவும் அச்சாதனம் குருவின் உபதேசத்தால் வருமெனவுங்கூறி, இனி அச்சாதனத்தால் வரும் பயனை விரித்துக் கூறுகின்றார். சாதனத்தால் வரும் பயன் பாசநீக்கமும் சிவப்பேறுமென இருவகைப்படும். அவ்விரண்டனுள் சுட்டறிவினால் அறியப்படுவதாகிய பிரபஞ்சப் பற்றை முத்தி பஞ்சாக்கரத்தை உச்சரிப்பதாற் பற்றறத் துடைத்தவிடத்துப் பெறப்படுவதாகிய ஆன்ம சுத்திப் பயனாகிய பாசநீக்கத்தைச் செய்து கொள்ளும் பொருட்டு, ஒன்பதாஞ் சூத்திரத்திற் சிந்தனை செய்த பொருளைத் தெளியக் கூறுதல் இப்பத்தாஞ் சூத்திரத்தின் கருத்து எ-று.



ஒன்பதாஞ் சூத்திரத்திற் சிந்தனை செய்யும் முறையையும் ஆன்ம சுத்தியையுங் கூறி இச்சூத்திரத்திற் தெளியும் முறையையும் ஆன்ம சுத்தியின் பயனாகிய பாசநீக்கத்தையுங் கூறுவதனாற் சூத்திரங்-களுக்கிடையே யுள்ள தொடர்பு பெறப்படும்.

**சூத்திரத்தின் பொருள் :** அவனே - ஞானக்கண்ணாற் காணப்பட்ட அம்முதல்வன் (உயிரோடு உடனாய் நின்று உயிர் அறியும் வண்ணந் தான் அறிந்தும் அவ்வுயிரின் வேறாகக் காணப்படுதலின்றி அவ்வுயிர் தானே அறிந்ததென் றெண்ணும்படி) தானேயாகிய - அவ்வுயிரேயாய் ஒற்றுமைப்பட்டு அவ்வுயிரின் வழியில் நின்ற, அந்நெறி - அப்பெத்த நிலைபோல, (முத்தி நிலையில் உயிர் அம்முதல்வனோடு உடனாய் நின்றறியினும் தானென வேறாகக் காணப்படுதலின்றி) ஏகனாகி - அவனோடு ஒற்றுமைப்பட்டு, இறைபணி நிற்க - இறைபணியின் வழுவாது நிற்பின், மலமாயை தன்னொடு - மலம் மாயையென்னும் இரண்டோடு, வல்வினை இன்றே - வலிய கன்மமலமும் இல்லாமற் போகும் எ-று.

அவனே என்றதிலுள்ள ஏகாரம் முதல்வனையின்றி அறியாதென உயிரைப் பிரித்தமையாற் பிரிநிலை. தானே என்றதிலுள்ள ஏகாரம் முதல்வன் உயிருடன் நின்றும் நிற்பதாகத் தோற்றாமல் உயிராகவே நிற்றலைக் குறித்தலால் தேற்றம் அந்நெறி என்றதிலுள்ள நெறியென்பது உவம உருபு.

இச்சூத்திரத்தில் உவமானம் பெத்தநிலை, உவமேயம் முத்திநிலை, இதில், உவமைக்குக் கூறிய அடை 'ஏகனாகி' என்பது. உவமானத்துக்குக் கூறிய அடை உவமேயத்தோடும் உவமேயத்துக்குக் கூறிய அடை உவமானத்தோடுஞ் சென்று சேர்ந்து, அவனே தானேயாய் ஏகனாகிய அந்நெறியெனவும் அவனே தானேயாய் ஏகனாகி இறைபணி நிற்க எனவும் பொருள் தந்துநின்றன.

ஒற்றுமைப்படுதலாவது குடமுடைந்தவிடத்துக் குடத்துள் இருந்த குடாகாயமும் ஆகாயமும் ஒற்றுமைப்படுதல்போல, பாசம் நீங்கிய உயிருஞ் சிவமும் ஒரு பொருளாய் ஒற்றுமைப் படுதலோ, அல்லது குற்றியை மனிதன் என்பது போல விபரீதக் காட்சியாற் காணப்பட்ட பொருள் தெளிவாகக் காணுங்கால் இல்லாமற் போவது போல, அஞ்ஞான காலத்திற் சிவமே உயிராகத் தோன்றி அஞ்ஞானம் நீங்கியவிடத்து உயிரென்ப தில்லையாய்ச் சிவமே உளதாதல் போல ஒற்றுமைப்படுதலோ, அல்லது மண்குடமாகத் தோன்றி உடைந்த-பின் மண்ணோடு ஒற்றுமைப்படுதல் போலச் சிவமே பாசத்தோடு

கூடி உயிராகத் தோன்றிப் பாசம் நீங்கியவிடத்துச் சிவமாய் ஒற்றுமைப் படுதலோ, அல்லது வெண்மையும் தாமரையும் போலக் குணகுணித்-தன்மையால் ஒற்றுமைப்படுதலோ, அல்லது தீயுடன் கலந்த இரும்பு தீயேயாய்க் காணப்படுவது போலச் சிவத்துடன் கலந்த உயிர் சிவமேயாய் ஒற்றுமைப்படுதலோ, அல்லது பாலும் நீரும் கலந்தாற் போலப் பிரிக்கமுடியாத சையோக சம்பந்தத்தாற் சிவமும் உயிரும் ஒற்றுமைப்படுதலோ அல்லது தைவிக கருடனும் மாந்திரிகனும் ஒன்றாமாறு போல, உயிர் சிவம் நானெனப் பாவிக்கும் பாவனையால் ஒற்றுமைப்படுதலோ, அல்லது காய்ந்த இரும்பை அணைந்த நீர் கெட்டு இரும்போடு ஒற்றுமைப்படுவதுபோல உயிர்கெட்டுச் சிவத்தோடு ஒற்றுமைப்படுதலோ, அல்லது பேயாற் பிடிக்கப்பட்ட வன்அப்பேயேயாய் நிற்பது போலச் சிவம் ஆவேசித்து நிற்றலால் உயிர் சிவமேயாய் ஒற்றுமைப்படுதலோ, அல்லது விறகிற்றீ வெளிப்பட்டு விளங்காது விறகோ டொற்றுமைப்பட்டு நிற்பதுபோல முத்தியிற் சீவன் விளங்கித் தோன்றாது சிவத்தோடு ஒற்றுமைப் படுதலோ, அல்லது சூரிய ஒளியின் முன் விளக்கொளி அதன் விளங்குந் தன்மை கெட்டு ஒற்றுமைப் படுதல் போலச் சிவசத்தியின் முன் சீவனின் சத்தி செயலற்றுப் போதலால் ஒற்றுமைப் படுதலோ, அல்லது தலைவனுந் தலைவியும் இன்பானுபவத்தில் ஒற்றுமைப் படுதல்போலச் சிவானந்த அனுபவமளவிற் சிவனுஞ் சீவனும் ஒற்றுமைப்படுதலோ, அல்லது நண்பரிருவர் நட்புமிகுதியால் ஒற்றுமைப்படுதல் போலச் சிவனுஞ் சீவனும் ஒற்றுமைப்படுதலோ, அல்லது பசுவுங் காட்டுப் பசுவும் ஒப்புமையால் ஒற்றுமைப்படுதல் போலப் பசுத்துவம் நீங்கிய சீவனுஞ் சிவமும் பாசப் பற்றற்றிருக்குந் தன்மையால் ஒற்றுமைப்படுதலோ அல்ல.

மேற்கண்டவாறு சமயவாதிகளெல்லாந் தத்தம் மதம் பற்றிக் கூறுவதால் நிகழும் ஐயம்பாடுகளை யெல்லாம் அகற்றுதற்பொருட்டு, பெத்த நிலையில் முதல்வன் உயிரோடு ஒற்றுமைப்பட்டு நிற்பதற்கு உவமையாக 'அவனே தானேயாகிய வந்நெறி' என்பதை எடுத்துக் காட்டினார்.

சிவன் உயிரோடு ஒற்றுமைப்பட்டு நிற்றலும் உயிர் சிவத்தோடு ஒற்றுமைப்பட்டு நிற்றலும் அத்துவித சம்பந்தமேயானாலும், முத்திநிலையில் உயிர்சிவத்தோடு ஒற்றுமைப்பட்டு நிற்பதற்கு இச்சூத்திரத்தில் உவமை கூறப்படவில்லை. அது வருகின்ற சூத்திரத்திற் கூறப்படும்.



இச்சூத்திரம், அவனே தானேயாகிய அந்நெறி ஏகனாகி என்பது ஓரதிகரணமும் இறைபணி நிற்க மலமாயை தன்னொடு வல்வினை-யின்றே என்பது ஓரதிகரணமுமாக இரண்டு அதிகரணங்களை யுடையது.

## முதலதிகரணம்

### சிவனிடத்து ஏகனாகி நிற்கவேண்டுமெனக் கூறும் மேற்கோள்

***ஈண்டுப் பரமேசுரன் இவ்வான்மாவாய் நின்ற முறைமையான் அவனிடத் தேகனாகி நிற்க வென்றது.***

ஞானம் பிரகாசித்து முதல்வனைக் காண்டலே வீடு பேறடைவதற் கமையும். அதற்காக முதல்வனோடு ஏகனாகி நிற்கவேண்டியதில்லை யென்பர் ஒருசாரார். இவ்வாறு கூறுவோர் சிவசமவாத சைவர் முதலியோர். இதில், வீடுபேறடைவதற்கு முதல்வனோடு ஏகனாகி நிற்க வேண்டுமோ வேண்டாமோ என்பது ஐயம். இவ்வையப்பாட்டின் கண் சூத்திரத்தின் முதற் கூற்றைப் பதச் சேதஞ் செய்து வீடு பேறடைவதற்கு முதல்வனோடு ஏகனாகி நிற்கவேண்டுமென்பதை வலியுறுத்துகின்றது இந்த மேற்கோள்.

**இ-ள் :** இவ்வதிகரணத்தில், ஞானக் கண்ணாற் காணப்பட்ட முதல்வன் இவ்வான்மாவாய் ஒற்றுமைப்பட்டு உயிரின் வழியில் நின்ற முறைமைபோல, உயிர் முதல்வனோடு ஒற்றுமைப்பட்டு நிற்கவேண்டுமெனக் கூறப்படுகின்றது எ-று.

### சிவனிடத்து ஏகனாய் நிற்கவேண்டு மென்பதற்குக் காட்டும் ஏது.

***அவ்வாறு நிற்கவே யான் எனதென்னுஞ் செருக்கற்று அவனது சீபாதத்தை அணையுமாகலான்.***

சிவனைக் காண்டலே யன்றி அவனோடு ஏகனாகி நிற்கவேண்டிய தேனென்பாரை நோக்கி, யான் எனது என்னுஞ் செருக்கறுதற் பொருட்டு ஏகனாகி நிற்க வேண்டுமெனவும் செருக்கற்றாலே ஆன்மா முதல்வனது சீபாதத்தை அணையுமெனவும் விடைகூறி 'ஏகனாகி நிற்க' என்று மேற்கோளிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வேது.

**இ-ள் :** மேற்கோளிற் கூறியவாறு சிவனோடு ஏகனாகி நின்றாற்றான் உயிர் தன்னை யானெனவும் சிவனை எனதெனவும் பகுத்தறியும்

மயக்கவுணர்விற் கேதுவாகிய மலம் நீங்கி, முதல்வனது திருவடி யாகிய சிவானந்தத்தைப் பெறுமாதலால், யான் எனதென்னுஞ் செருக்கறுதலுக்குக் காரணமாதல் பற்றி, ஈண்டுப்பரமேசுரன் இவ்வான்மாவாய் நின்ற முறைமையான் அவனிடத்து ஏகனாகி நிற்கவென மேற்கோளிற் கூறப்பட்டது எ-று.

ஏகனாகி நிற்காவிட்டால் மலமறாது. மலம் அறாவிட்டால் சீபாதத்தையணைய முடியாதெனக் கூறக்கருதி, 'நிற்கவே' எனத் தேற்றேகாரத்தாற் கூறினார். யானெனப்படுவது ஞாதிரு எனதெனப் படுவன ஞான ஞேயங்கள்.

ஞாதிரு - அறிபவன், உயிர். ஞேயம் - அறியப்படும் பொருள். செருக்கென்பது செருக்குக்குக் காரணமாகிய மலத்தைக் குறித்தலால் ஆகுபெயர். அற்றணையு மென்றது. மழைபெய்யக் குளம் நிறையும் என்றாற் போலக் காரண காரியப் பொருள்பற்றி வந்த செயவெனெச்சத்திரிபு. மலமறுதல் காரணமாகச் சீபாதத்தை அடைதலாகிய காரியம் நிகழுமென்பது கருத்து.

### சிவனிடத்து ஏகனாய் நின்றாற்றான் மலம் அறும் என்பதற்குக் காட்டும் உதாரணம்

***நானவனென் றெண்ணினற்கு நாடுமுள முண்டாத***
***றானெனவொன் றின்றியே தானதுவாய் - நானெனவொன்***
***றில்லென்று தானே யெனுமவரைத் தன்னடிவைத்***
***தில்லென்று தானா மிறை.***

யானென்றும் எனதென்றும் பகுத்துணரும் உணர்வை மயக்கவுணர்வென்று கூறியதேனென வினாவுவாரை நோக்கி, ஏதுவில் அவ்வாறு கூறியது பொருந்துமென்பதை வலியுறுத்துகின்றது. இவ்வுதாரணம்.

**கொண்டுகூட்டு :** நான் அவன் என்று எண்ணினற்கும் நாடும் உளம் உண்டாதல் தான் என ஒன்று இன்றியே தான் அதுவாய் நான் என ஒன்று இல் என்று தானே எனும் அவரைத் தன்னடியில் என்று வைத்துத் தான் ஆம் இறை.

**இ-ள் :** நான் அவன் என்று எண்ணினற்கும் நாடும் உளம் உண்டாதல் தான் என ஒன்று இன்றியே தான் அதுவாய் - யானென்றும் அவனென்றும் அறியும் பொருளாகிய உயிரையும் அறியப்படும் பொருளாகிய சிவத்தையும் பகுத்தறிந்து நிற்பார்க்கும் யானே என



நிற்பார்க்குப் போல அவ்வாறு பகுத்துக் காண்கின்ற உயிருணர்வு முனைத்துத் தோன்றுமாதலால் அப்போது முதல்வன் தான் இருப்பதாகக் காணப்படாமல் தற்போதத்தால் முனைத்துத் தோன்றும் உயிரின் உணர்வேயாய் நிற்பன், நான் என ஒன்று இல் என்று தானே எனும் அவரைத் தன் அடியில் என்று வைத்துத் தான் ஆம் இறை - இனி யானென்றொரு பொருள் தனித்துக் காணப்படு மாறில்லை யென்றறிந்து எல்லாப்பொருளுஞ் சிவமேயெனக் காணுந்தெளிந்த அறிவுடையாரைத் தனது திருவடி வியாபகத்துள் அடங்கி நிற்கச் செய்து முதல்வன் எல்லாப் பொருளுமாய் நிற்பன் எ-று.

இதில், தான் அதுவாய், தானாம் என்னும் இரண்டு வாக்கியங் களுக்கும் எழுவாய் இறை என்பது. தானதுவாய்த் தானாம் இறை என்பது, 'நள்ளார்க்கு நஞ்சொத்து நட்டார்க் கமிழ்தொக்கு மிவன்' என்றாற் போல, அதுவாதலும் தானாதலும் முதல்வன் வினையாகு மென்பதை உணர்த்தி நின்றது.

'நான் அவன் என்று எண்ணினற்கும்' என்றதிலுள்ள உம்மை, யானேயென நிற்பார்க்கன்றி என்பதையுந் தழுவி நிற்றலால் இறந்தது தழுவியது. எண்ணினற்கும் என்பது சந்தி நோக்கி மகரவொற்றுக்கெட்டு' எண்ணினற்கு" என நின்றது.

நாடுமுளம் உண்டாய் உயிரின் அறிவு முனைத்துத் தோன்றிய விடத்து முதல்வன் இல்லையாதலும் உயிரின் அறிவு முனைத்துத் தோன்றாத விடத்து முதல்வன் விளங்கித் தோன்றுதலும் எவ்வாறு பெறப்படுமெனின் அதுபற்றிக் கூறுவோம். தூல ஒளியாகிய கண் ணொளியும் சூக்கும ஒளியாகிய விளக்கொளியும் அத்துவிதமாய்க் கலந்து நிற்கும் நிலையை உற்று நோக்கின் அவ்விரு ஒளிகளையும் பிரித்தறிய முடியாது. ஆயினும் கண்ணொளி தானுளதெனக் காணுமிடத்துக் கண்ணின் காணுந் தன்மையே முனைத்துத் தோன்றும். அப்போது விளக்கொளியிருந்தும் அது முனைத்துத் தோன்றாமையால் இல்லையாயிற்று. விளக்கொளியின் உதவியின்றிக் கண் காணாதபோது விளக்கொளியின் காட்டுந் தன்மையே முனைத் துத் தோன்றுமாதலால் அப்பொழுது கண்ணொளியிருந்தும் இல்லை யாயிற்று. இனி, இது கண்ணொளி இது விளக்கொளியெனப் பிரித்தறிய முற்படினும் கண்ணின் காணுந் தன்மையே முற்பட்டுத் தோன்றுமாதலால் அப்போது காட்டுந் தன்மையுடைய விளக்கொளி மயக்க அறிவாலன்றித் தெளிந்த அறிவால் அறியப்படுவதில்லை.

அதுபோலத் தூல அறிவாகிய உயிரும் சூக்கும அறிவாகிய சிவமும் அத்துவிதமாய்க் கலந்து நிற்கும் நிலையையும் வேறு வேறாகப் பிரித்தறிய முடியாமையால், உயிர் தானுளதெனக் காணுமிடத்து உயிர் அறிவே முனைத்துத் தோன்றும்; சிவம் இருந்தும் இல்லையாயிற்று. உயிர் சிவந்தா னுளதெனக் காணுமிடத்துச் சிவமே முற்பட்டுத் தோன்றும். உயிர் இருந்தும் இல்லையாயிற்று. உயிரும் உளது சிவமும் உளதெனப்பிரித்தறிய முற்படினும் அவ்வாறறியும் உயிரின் தன்மையே முற்பட்டுத் தோன்றுமாதலால் அப்பொழுது அறிவிக்குந் தன்மையுடைய சிவத்தை மயக்க அறிவாலன்றித் தெளிந்த அறிவால் அறியமுடியாது. ஆதலால் உயிருக்குத் தானென்னும் எண்ணம் உள்ளவரை சிவம் விளங்கித் தோன்றாதென்பது பெறப்படும்.

யானே உளன் முதல்வன் இல்லையென எண்ணுவோருக்கும் யானும் இருக்கிறேன் முதல்வனும் இருக்கிறான் என எண்ணு வோருக்கும் சிவம் வெளிப்பட்டு விளங்குவதில்லை யென்னுங் கருத்துப் பற்றியே 'கண்ணொளி விளக்கின் சோதி கலந்திடுங் கருத் தொன்றன்றே' (சிவப் 3 ஆம் சூத் 7ஆம் செய்) என்றும் "காண்பானுங் காட்டுவதுங் காண்பதுவும் - நீத்துண்மை - காண்பார்கணன் முத்தி காணார்கள் காண்பானும் காட்டுவதுங் காண்பதுவுந் தண்கடந்தைச் சம்பந்தன் வாட்டு. நெறி வாரா தவர்" (வினா வெண்பா) என்றும் புடை நூலாசிரியர் அருளிச் செய்தார்.

அவ்வாறாயின் கண்ணொளியை வேறாகக் காண்டலும் விளக்கொளியோடு கலந்து விளக்கொளியாகக் காண்டலுமாகிய இருவகைக் காட்சிகளுள் எது மயக்கக் காட்சி எது தெளிவுக் காட்சியெனின், கண்ணொளி எந்த ஒளியோடு கூடினும் அந்த ஒளியாகக் காணப்படுவதேயன்றித் தனித்துக் காணப்படாது. ஆதலால் கண்ணொளியை வேறாகத் தனித்துக் காண்டல் மயக்கக் காட்சியெனவும் விளக்கொளி சூரியஒளி சந்திரஒளி முதலியவற்றோடு கண்ணொளி கூடியவிடத்து அந்தந்த ஒளியாகவே காணப்படுதலால், விளக்கொளி முதலியனவாகக் கண்ணொளியைக் காண்பது தெளிவுக் காட்சியெனவுங் கொள்ளப்படும். இவ்வாறே உயிரைத் தனித்துக் காணுதல் சிவமேயாய்க் காணுதல் என்னும் இருவகைக் காட்சிகளுள், ஏதாவதொன்றைச் சார்ந்ததன்றி நிற்கமாட்டாத உயிரைத் தனித்து நிற்பதாய்க் காணுதல் மயக்கக் காட்சியெனவும் சிவமாய்க் காண்டல் தெளிவுக் காட்சியெனவுங் கொள்க.



இவ்வாறன்றி விளக்கொளியின் முன்னர்க்கண்ணொளி வலிகெட்டுப்போதலால், அது விளக்கொளியைக் காண்பது போலத் தனித்துக் காணப்படா தாயிற்றெனக் கூறலாகாதோ வெனின், அவ்வாறு கூறக்கூடாது. கண்ணொளி வலிகெட்டுப் போனதெனில் எக்காரணங் கொண்டும் விளக்கொளி கண்ணுக்கப் புலப்படாது. அவ்வாறானால் மின்மினியளவாவது விளங்குந் தன்மையில்லாத கண்ணுக்கு ஒளிக்குணம் உண்டென்பதற்குப் பிரமாணமென்ன வென்று கேட்டால், அது அறியாதார் வினாவும் வினாவேயாகும். ஆகாயத்திலுள்ள சத்தகுணம் வாத்தியம் முதலிய ஏதாவதொன்றின் துணையினாலன்றிச் சிறிதும் விளங்காமையின், அதுகாரணமாக எதிரொலி வடிவாகிய சத்தத்தை ஆகாயத்தின் குணமன்று வாத்தியத்தின் குணமென்பார் எவருமில்லை. அதுபோலக் கண்ணின் ஒளியும் அதை விளக்குந் துணையுள்ளவிடத்து விளங்கி விளக்குந் துணையில்லாத விடத்து விளங்காதிருத்தலால், கண்ணுக்கு ஒளியில்லையெனக் கூறுதல் பொருந்தாது. கண்ணொளி விளக்குந் துணை சிறிதாயிற் சிறிதாயும் பெரிதாயிற் பெரிதாயும் விளங்கும் இயல்புடையது. கண்ணொளியைப் போலவே உயிரும் துணையின்றி அறியமாட்டாது. உயிரின் அறிவு கருவி கரணங்களோடு கூடிற் சிறிதாயும் திருவருளோடு கூடிற் பெரிதாயும் விளங்கும்.

கண்ணொளி விளக்கின் சோதி கலந்திடும் என்பதற்குப் பிராமண மென்ன? ஒரு பொருளில் வீழ்ந்த கண்ணொளிகள் ஒன்றோ டொன்று கலப்பதில்லை. அதுபோல ஓரிடத்திற் பொருந்திய கண்ணொளியும் விளக்கொளியும் ஒன்றோடொன்று கலப்பதில்லை யென்பதே பொருந்து மென்று கூறினால். அவ்வாறு கூறுதல் அறியாதார் கூற்றேயாகும்.

ஒருபொருளின் மீது வீழ்ந்த கண்ணொளிகள் ஒன்றையொன்று காண்பதுமில்லை ஒன்றுக்கொன்று காட்டுவதுமில்லை யாதலால் அவை தம்முட் கலப்பதற்குக் காரணமில்லை யென்பது பொருந்தும். அவ்வாறன்றிக் கண் விளக்கைக் காணுதலும் விளக்குக் கண்ணுக்குக் காட்டுதலுமுண்டு. இவ்வாறு ஒன்றையொன்று காணுதலும் ஒன்றுக்கொன்று காட்டுதலுமில்லாத கண்ணொளிகளை, காட்டுவ தும் காணுதலுமுள்ள விளக்கொளிக்கு உவமை கூறுதல் பொருந்தாது.

கண்முதலிய இந்திரியங்கள் தாம் அறியக் கூடிய விடயங்களை அவற்றோடு கலந்தன்றி அவற்றின்முன் நின்றளவில் அறிவதில்லை யென்பது ஆகமத்துணிபாகலான், பொருளோடு கலந்தன்றி அதை

அறிய மாட்டாத கண்ணொளிக்கும் விளக்கொளிக்குந் தம்முட் கலப்பில்லை யென்று கூறுதல் காண்டல் விரோதம்.

இவ்வாறே, ஓர் உயிரும் வேறோர் உயிருங் கலவாதவாறுபோல, உயிருஞ் சிவமும் கலப்பதில்லை யென்பதும் பொருந்தாது. உயிருக்கு அறியுந் தன்மையேயன்றி உள்ளீடாய் நின்று அறிவிக்குந் தன்மையில்லை. சிவத்துக்கு உள்ளீடாய் நின்று அறிவிக்குந் தன்மையுண்டு. அதனால் உயிருஞ்சிவமுங் கலத்தல் கூடும்

அவ்வாறானால் இவ்விடத்தில் உதாரணமாக எடுத்துக் காட்டிய கண்ணொளிகள் ஒன்றையொன்று காணாதவாறுபோல உயிர்களும் தம்முள் ஒன்றையொன்று அறியாவோவெனக் கேட்டால், அதற்குரிய விளக்கம் வருமாறு:-

கண்ணொளிகள் ஒன்றையொன்று காண்பதில்லை யெனக் கூறியதன் கருத்து, விளக்கொளியும் காணப்படும் பொருளும் கண்ணொளிக்கு வேறாகத் தனித்துக் காணப்படுவது போல, ஒரு கண்ணொளிக்கு வேறாக இன்னொரு கண்ணொளி தனித்துக் காணப்படாதென்றதே யன்றி வேறில்லை. விளக்கொளியைக் கண்காணுங்கால் அவ்விளக்கொளியோடு கலந்து நின்று காண்பது போல, தன்னையும் அவ்விளக்கொளியின் வண்ணமாய்க் காணு மென்பது வெளிப்படை. ஆதலால் மற்றைய கண்ணொளிகளையும் அந்தக்கண்ணொளிகளின் வண்ணமாய்க் காணுதல் கூடும். (கண்ணொளிகளின் வண்ணமாய்க் காணுதலாவது தன் கண்ணுக்கு ஒளியிருப்பதனால் பிறருடைய கண்களுக்கும் ஒளியுண்டென அறிதல்)

அதுபோலத் தனித்தனி ஒன்றோடொன் றியைபில்லாத உயிர்களுஞ் சிவத்தோடு கூடி நின்று தம்மையும் பிற உயிர்களையுஞ் சிவமாக அறிதல் கூடும். இக்கருத்துப் பற்றியே 'நாடியரன் -றன்னாலே தன்னையுங் கண்டு தமைக்காணா, ரென்னா மென வறிவார்' (இந்நூல் 9 ஆம்சூத் 1ஆம் அதி) எனவும் 'தன்னாலே தனையறிந்தால் தன்னையுந் தானே காணும் தானது வாகி நின்றே (சிவப் 8ஆம் சூத் 2ஆம் செய்யுள்) எனவும் 'அதிலறிவடங்கி மன்னிட வியாபியாய' வான் பயன்றோன் றும், (சிவப் 9ஆம் சூத்3 செய்) எனவும் "என்னையுங் கண்டேன் பிறரையுங் கண்டே னின்னிலை யனைத்தை யுங்கண்டே னென்னே - நினைக்காணா மாந்தர் தம்மையுங் காணாத்தலைமையோரே, (திருவிடை மருதூர் மும்மணிக்கோவை



செய்யுள் 13) எனவுங் கூறினர். இன்னும் இவ்வாறோதும் அநுபவ முடைய தேசிகர் திருவாக்குக்களாலும் உயிர் சிவத்துடன் கூடிச் சிவமாய் நின்று தன்னையும் பிறரையும் அறியுமென்பதை யுணர்ந்துகொள்க.

## இரண்டாம் அதிகரணம்

### இறைபணி நிற்க வேண்டுமெனக் கூறும் மேற்கோள்.

***இனி இறைபணி வழுவாது நிற்கவென்றது.***

உடம்புள்ள வரை அவ்வுடம்புக்கென வரையறுக்கப்பட்ட வினைப் பயனையும் அதனை அனுபவிப்பதற்குத் துணைக் காரணமாய் அதனோடு உடன் நிற்கும் முயற்சியையும் வினைப் பயனை அனுபவித்தன்றி வேறுவிதமாக நீக்க முடியாதாதலால் அவையிரண்டும் ஏகனாகி நிற்பதற்குத் தடையாகும். அத்தடைகளைக் கடக்க முடியாதென்பர் ஒருசாரார். இதில் சிவனோடு ஏகனாகி நிற்பதைத் தடைசெய்யும் பிரார்த்தவினையையும் முயற்சியையும் நீக்கக் கூடுமோ கூடாதோ என்பது ஐயம். இவ்வையப்பாட்டின்கண் அவற்றை நீக்க முடியாதென்பது பிறர் கூறும்பக்கம் இவ்வாறு கூறுவோர் சுத்த சைவர் முதலியோர். அவர்களது கூற்றை மறுக்கு முகமாகச் சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைப் பதச்சேதஞ்செய்து வினைப்பயனையும் முயற்சியையும் நீக்கக் கூடுமென்பதை வலியுறுத்துகின்றது இந்த மேற்கோள்.

**இ-ள் :** முதல்வன் அருள் வழியில் வழுவாது நிற்க எ-று. நிற்றலாவது சலியாது நிலைபெறுதல் என்பதை அறிவிக்க வேண்டி வழுவாது நிற்கவென்றார்.

இம்மேற்கோளில் இறைபணியெனக் கூறியது அருள்வழி நிற்றலை. இதை, 'அவன் அருளாலல்லது ஒன்றையுஞ் செய்யானாகவே' என ஆசிரியர் ஏதுவிற் கூறியிருப்பதனால் அறிக.

### இறைபணி நிற்கவேண்டுமென்பதற்குக் காட்டும் ஏது

அவன் அருளாலல்லது ஒன்றையுஞ் செய்யானாகவே அஞ்ஞான கன்மம் பிரவேசியா வாகலான்.

ஏகனாகி நின்றாலே போதும். இறைபணி நிற்கவேண்டியதேன் என்பாரை நோக்கி மறுத்து மேற்கோளிற் கூறியதை வலியுறுத்து கின்றது இவ்வேது.

**இ-ள் :** முதல்வன் உடனாய் நின்று செய்தாலன்றி ஒன்றையுஞ் செய்யமுடியாத ஆன்மா தான்செய்வன வெல்லாவற்றையும் முதல்வனது அருள் வழிநின்று செய்யுமாயின் மாயேயங் காரணமாக வரும் முயற்சியும் முயற்சி காரணமாக வரும் கன்ம மலத்தின் பயனாகிய இன்ப துன்பங்களும் ஏகனாகி நிற்பதற்குத் தடையாய் வந்து தாக்கமாட்டா. ஆதலால் அவை தாக்காமைப் பொருட்டு, இனி இறை பணி வழுவாது நிற்கவென மேற்கோளிற் கூறப்பட்டது எ-று.

அஞ்ஞான கன்மம் என்றது உம்மைத் தொகை. அதனால் அதை அஞ்ஞானமும் கன்மமும் எனக் கொள்க. அஞ்ஞானம் என்பது ஆணவமலத்தைக் குறிக்குமானாலும் முதலதிகரணத்தில், ஏகனாகி நிற்க யான் எனதென்னுஞ் செருக்கறுமெனக் கூறப்பட்டதால், இவ்விடத்தில் அஞ்ஞானமென்றது மாயாமலத்தின் காரியமாகிய மயக்கமென்பது பெறப்பட்டது. உடம்புள்ள வரை முயற்சியும் இன்ப துன்ப அனுபவமும் அற்றுப் போகாவாதலால் அஞ்ஞான கன்மம் அறுமென்னாது, அஞ்ஞான கன்மம் பிரவேசியா என்றார்.

**இறைபணி நிற்றலால் அஞ்ஞான கன்மம் பிரவேசியா என்பதற்குக் காட்டும் உதாரணம்**

***நாமல்ல விந்திரியம் நம்வழியி னல்லவழி***
***நாமல்ல நாமு மரனுடைமை - யாமென்னி***
***லெத்தனுவி னின்று மிறைபணியார்க் கில்லைவினை***
***முற்செய்வினை யுந்தருவான் முன்.***

உடம்போடு கூடி நிற்பார் இன்ப துன்பங்களை அனுபவிப்பதற்கு வேண்டப்படும் பிராரத்த வினையும் பிராரத்தத்தை அனுபவிப்பதற்காகச் செய்யப்படும் ஆகாமிய வினையும் உண்டென்பது துணிபு. ஆகவே இறைபணி நிற்றலால் பிராரத்த வினையும் ஆகாமிய வினையும் பிரவேசியாவென்று ஏதுவிற் கூறியது. பொருந்தாதென்பாரை நோக்கி, ஏதுவிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** இந்திரியம் நாமல்ல நம்வழியின் அல்ல வழி நாமல்ல (நம் வழியின் அல்ல) நாமும் அரன் உடைமை ஆம் என்னில் இறை பணியார்க்கு எத்தனுவில் நின்றும் வினை இல்லை முன் செய்வினையும் தருவான் முன்.

**இ-ள் :** இந்திரியம் நாம் அல்ல - வினைப் பயன்களாகிய இன்ப துன்பங்களை அனுபவிப்பதற்கும் வினைகளைச் செய்வதற்குங் கருவியாகிய இந்திரியங்கள் மாயாகாரியங்க ளாவனவன்றி யாமாவனவல்ல, நம் வழியின் அல்ல - அவை தொழிற்படுதலும் முதல்வன் வயத்தாலன்றி நம் வயத்தானல்ல, வழி நாமல்ல நம்வழியின் அல்ல - வினை செய்வதற்கு வேண்டப்படும் உலகப் பொருள்களும் அவ்விந்திரியங்கள் போல மாயா காரியங்களாவன வன்றி யாமாவனவல்ல, அவை தொழிற்படுதலும் முதல்வன் வயத்தானன்றி நம் வயத்தானல்ல, நாமும் அரன் உடைமை - இந்திரியங்களோடும் உலகப் பொருள்களோடுங் கூடிநின்று மேல்வினையை ஈட்டியும் பிராரத்தத்தை அனுபவித்தும் வரும் நாமும் முதல்வன் அறிவித்தால் அறிந்து அறிவிக்காவிட்டால் அறியாமையால் அம்முதல்வன் வயத்தராவோமல்லது. சுதந்திரமாக மாட்டோம், ஆம் என்னில் - என்றிவ்வாறு பசு பாசங்களதியல்பை உள்ளவாறுணர்ந்து செய்யவனவெல்லாம் அவன் அருள்வழி நின்று செய்து கொண்டிருப்பாராயின், இறை பணியார்க்கு எத்தனுவில் நின்றும் வினை இல்லை - இவ்வடிமைத் திறமுடையார் எவ்வுடம்பில் நின்று எவ்வினைகளைச் செய்தாலும் அவர்களை அவ்வினைகள் பந்திக்க மாட்டா, முன்செய் வினையும் தருவான் முன் - அவ்வாகாமிய வினையை உடன்கொண்டு வருவதாகிய பிராரத்த வினையும் இறைபணியில் நிற்பாரைக் கட்டுப்படுத்தாமல் தன்னை உயிரோடு கூட்டும் முதல்வன் சந்நிதியில் உடலூழாய்க் கழியும் எ-று.

உடலூழாய்க் கழிதல் -உடலின் அநுபவமாய்க் கழிதல்.

நம்வழியின் அல்ல என்பது வழி நாமல்ல என்பதனோடுங் கூட்டப்பட்டது.

'எத்தனுவில் நின்றும்' என்றதிலுள்ள உம்மை பந்தப்படுத்துதலுக்குரிய உடம்பில் நின்றும் பந்தப்படாது என்னும் பொருளைத் தருதலாற் சிறப்பு. நாமும் என்றதிலுள்ள உம்மை இந்திரியம் வழி முதலிய மாயா காரியங்களே யன்றி நாமும்' என்னும் பொருளைத் தருதலாலும், 'முற்செய்வினையும்' என்றதிலுள்ள உம்மை ஆகாமிய வினையே யன்றிப் பிராரத்த வினையும் என்னும் பொருளைத் தருதலாலும் இறந்தது தழுவிய உம்மைகள்.

பிராரத்த வினையும் சஞ்சித வினையும் முற்செய் வினைகளே-யானாலும் சஞ்சிதவினை, தீட்சையினால் நெருப்பைச் சேர்ந்த வித்து முளையாதவாறு போலப் பயன்தராமற் கெட்டொழிதலால், இவ்விடத்தில் முற்செய்வினை என்றது பிராரத்த வினையைக்

குறிக்கின்றது. உடலூழாய்க் கழியுமென்ற விடத்தில், 'கழியும்' என்பது சொல்லெச்சமாய் வருவிக்கப்பட்டது. கழியுமென்பது எவ்வாறு கழியும் என்னும் வினாவுக்குரிய விடையை அவாவி நிற்றலால் அந்த அவாய் நிலை பற்றி, உடலூழாய் என்பது வருவிக்கப்பட்டது.

**முத்தருக்கு வினைப்பயனைத் தாக்கவொட்டாது உடலூழாய்க் கழியும்படி செய்தல் இறைவன் கடமையெனக் கூறி ஏதுவை வலியுறுத்தும் உதாரணம்**

***சார்ந்தாரைக் காத்த றலைவர் கடனாதல்***
***சார்ந்தாரைக் காத்துஞ் சலமிலனாய்ச் - சார்ந்தடியார்***
***தாந்தானாச் செய்துபிறர் தங்கள்வினை தான்கொடுத்த***
***லாய்ந்தார் முன் செய்வினையு மாங்கு.***

இறைபணி நில்லாத ஏனையோரைப் பிராரத்த வினைப்பயனை அனுபவிக்கும்படியும் இறைபணி நிற்பவர்க்குளதாகிய பிராரத்தத்தை அவரனுபவியாதபடி உடலின் அனுபவமாய்க் கழியும்படியும் இருவேறு வகைப்படச் செய்யும் முதல்வன் நடுவு நிலையின்றி ஒரு பக்கஞ்சாரும் அநீதியுடையவனாவான் என்பாரை மறுத்து, அவ்வாறு செய்தல் இறைவன் கடமையெனக் கூறி ஏதுவை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**இ-ள் :** சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடன் ஆதல் சார்ந்தாரைக் காத்தும் - தம்மிடத்து அடைக்கலம் அடைந்தவர்களுக்கு வருந்துன்பத்தை நீக்கிப் பாதுகாவலாய் நின்று அவர்களைக் காப்பது தலைமைக் குணமுடையவர்களது கடமையாதலால் முதல்வன் தன்னைச் சாராதாரை விலக்கிச் சார்ந்தாரைக் காத்தும், சலம் இலனாய் - அதுபற்றிப் பக்கச் சார்பற்றவனாய், சார்ந்து அடியார் தானாய்ச் செய்து பிறர் தங்கள் வினைகொடுத்தல் - தன்னைச் சார்ந்து தன்னடித் தொண்டு செய்வாரைத் தன்னைப்போல ஆகாமிய வினைத் தொடக்கிலராகச் செய்து பிறருக்கு வரும் ஆகாமிய வினையை அவர்களுக்குக் கொடுப்பனாதலால், ஆய்ந்து ஆர் முன்செய்வினையும் ஆங்கு - தன்னைச் சார்ந்தாரிடத்தும் சாராதாரிடத்தும் நுணுகி வந்து கூடுவதாகிய பிராரத்த வினையையும் அவ்வாறே இருவேறு வகைப்படச் சார்ந்தார் அனுபவிக்காமலும் சாராதார் அனுபவிக்கவுஞ் செய்வன் எ-று.

முன்னைய வெண்பாவில் 'இறைபணியார்க் கில்லைவினை முற்செய்வினையும் தருவான்முன்' என்று கூறியதனால், இறைபணியில் நில்லாதோருக்குப் பக்குவமான முறையில் வினைப்பயனை ஊட்டி, இறைபணியில் நிற்போருக்கு வினைப்பயனை ஊட்டா திருத்தல் நடுவுநிலையன் றென்பாரை நோக்கி, அவ்வாறு செய்தலை ஒப்புக்கொண்டு, அதற்குச் சமாதானங் கூறுமுகமாக 'சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடன்' என்னும் பழமொழியை எடுத்துக் காட்டினார். சார்ந்தாரைக் காத்தல் நடுவு நிலைமையே யென்பதை வலியுறுத்தக் கருதிச் சார்ந்தடியார் தாந்தானாச் செய்து பிறர் தங்கள் வினை தான் கொடுத்த லுண்டென்பதையும் அவ்வாறு கொடுத்தல் பக்கச் சார்பல்ல நடுவு நிலையேயாகு மென்பதையும் எல்லாச் சமயத்தாரும் ஒப்புக் கொள்வராதலால் இறைபணியார்க்கு ஆகாமிய வினையை இல்லையாகச் செய்தல் பிராரத்த வினையை உடலூழாய்க் கழியச் செய்வதற்கு உவமையாயிற்று.

இக்கருத்தையே, "தன்னை யடைந்தார் வினை தீர்ப்பதன்றோ தலையாயவர் தங்கடனாவது தான்" எனவும் "சலமிலன் சங்கரன் சார்ந்தவர்க்கலால் நலமிலன்" எனவுங் கூறுந் தேவாரங்களும் வலியுறுத்துகின்றன. 'சார்ந்தாரைக் காத்தும்' என்றதிலுள்ள உம்மை சார்ந்தாரைக் காத்தும் சலமிலனாய் இருக்குஞ் சிறப்பைக் குறித்தலாற் சிறப்பும்மை.

சலம் - வஞ்சனை. இவ்விடத்தில் சலமென்பது கோட்டமுடைமையைக் குறிக்கின்றது. மூன்றாம் அடியின் முதலில் வரும் 'தாம்' என்பதும் தங்கள் வினை என்றதன்பின் வரும் 'தாம்' என்பதும் அசைகள்.

கடனாதல் என்பதைக் கடனாதலான் எனவும் கொடுத்தல் என்பதைக் கொடுத்தலான் எனவும் 'ஆன்' உருபு விரித்துக் கூறுக.

'தானாச் செய்து' என்பது தானாகச் செய்து என விரியும். இதில்வரும் ஆக்கச்சொல் உவம உருபு. அதனால், தானாச் செய்து என்பதற்குத் தன்னைப் போற்செய்து எனப் பொருள் கொள்க.

ஆகாமிய வினை அறியப்படுவதுபோல, பிராரத்தவினை அறியப்படாது அதி சூக்குமமாய் வருதலால் அதனியல்பை அறிதல் அரிதென்பார் 'ஆய்ந்தார் முன் செய்வினையுமாங்கு' என்றார். முன்செய் வினையும் என்றதிலுள்ள உம்மை ஆகாமிய வினையேயன்றிப் பிராரத்த வினையுமென்னும் பொருளைத் தருதலால் இறந்தது தழுவியது. ஆர் என்பது வினைத்தொகை. ஆய்தல் - நுணுகுதல்.

**முத்தருக்குப் பிராரத்த வினைப் பயன் தாக்குமாதலால்அதுபற்றி ஆகாமியம் ஏறும் என்பாரை மறுத்துபிராரத்தவினை தாக்கினும் ஆகாமியம் ஏறாது எனக்கூறி மேலை வெண்பாவை வலியுறுத்தும் உதாரணம்**

***இங்குளி வாங்குங் கலம்போல ஞானிபான்***
***முன்செய் வினைமாயை மூண்டிடினும் - பின்செய்வினை***
***மாயையுட னில்லாது மற்றவன்றான் மெய்ப்பொருளே***
***யாயவத னாலுணரு மச்சு.***

இறைபணி நிற்பார்க்குப் பிராரத்தவினை தாக்குத லுண்டென் பதற்கு 'தினைத் துணையேனும் பொறேன்றுய ராக்கையின் றிண்வலையே' (திருவாசகம் நீத்தல் விண்ணப்பம் 39) என்பது முதலாக மாணிக்கவாசக சுவாமிகள் கூறிய கூற்றுக்களே சான்றாகு மாதலால், அது அவர்களுக்கப் பிராரத்த அனுபவமாய்க் கெடுமென் பது பொருந்தாது. பிராரத்தம் உண்டாகவே அது காரணமாக வரும் முயற்சியாகிய ஆகாமியமும் பிறவிக்கு வித்தாய் நிலைபெறு மென்பாரை நோக்கி, பிராரத்தவினை தாக்குவதற்குக் காரணம் பழக்க வாசனையேயெனவும் அதனால் ஆகாமியம் ஏறாதொழியு மென்பதிற் குற்றமில்லை யெனவுங் கூறி முன்னைய வெண்பாவிற் கூறியதை வலியுறுத்துகிறது இவ்வுதாரணம்.

**இ-ள்:** இங்குளி வாங்கும் கலம் போல - தன்னிடத்தில் வைத்தெடுத்து முடிந்த பெருங்காயத்தினின்றும் அதன் வாசனையை வாங்கிக் கொள்ளும் பாத்திரத்தில் அவ்வாசனை மங்கிப்போய் மெலிதாய் வீசுவது போல, ஞானி பால் முன்செய்வினை மாயை மூண்டிடினும் - இறைபணி நிற்கும் தத்துவஞானிக்குப் பழக்கவாசனை காரணமாகச் சில சமயங்களில் உடம்பைத் தானென எண்ணுதலும் உண்டாதலால் அது காரணமாகப் பிராரத்த வினையும் அதை அனுபவிப்பதற்கு வேண்டிய தனு கரண புவன போகங்களாகிய மாயா காரியங்களும் மங்கிப் போய் மெலிதாய் வந்து தாக்கினாலும், பின்செய்வினை மாயை உடன் நில்லாது - அது காரணமாக, நிகழும் முயற்சியென்னும் ஆகாமிய வினை மேலும் பிறவியைத் தருவதற்கு வித்தாய் நிலைபெறாமல் அம் முயற்சிக்கு வாயிலாகிய உடலோடு கெட்டொழியும், அவன் தான் மெய்ப்பொருளே ஆய அதனால் மற்று அச்சு உணரும் - இறைபணி நிற்கும் அவன் சத்தாயுள்ள சிவமேயாய் நிற்றலாற் சில சமயங்களில் வாசனா மலங் காரணமாகச் சிவமாந் தன்மையினின்று பிறழவரினும் பிறழவிடாது செய்யும் சிவமாகிய அவ்வச்சினை நோக்கி நிற்பனாதலால் உடம்பு காரணமாக வரும் ஆகாமியம் ஏறாது எ-று.

ஒளி இருளைக் கெடுப்பதுபோலச் சிவனையே உணரும்உணர்வு ஆகாமிய வினையைப் பிறவிக்கு வித்தாகாமற் கெடுக்குமென்பதைச் சிவப்பிரகாசம் (சூத் 10.செய்10) "தொல்லையில் வருதல் போலத் தோன்றிரு வினைய துண்டே, லல்லொளி புரையும் ஞானத் தழலுற வழிந்து போமே" எனக் கூறுவதாலுமறிக.

உளி என்பது, மந்திர விதியின் மரபுளிவழாஅ - அந்தணர் வேள்வி (திருமுருகாற்றுப்படை) என்றாற் போல ஐந்தாம் வேற்றுமை 'இன்' உருபுப் பொருள்பட நின்றது.

இங்கு - பெருங்காயம். இங்குளி வாங்குங்கலம் - பெருங்காயத்தி-லிருந்து வாங்குங்கலம். எனவே, பெருங்காயத்திலிருந்து எதை வாங்கும்? என்னும் வினா அதற்குரிய விடையை அவாவி நிற்பதால், வாசனை என்பது செயப்படுபொருளாய் வருவிக்கப்பட்டது.

மூண்டிடினும் என்றதனால் மூளுமென்பதை உறுதியாகக் கூற-முடியாது எனக்கொள்க. மாயை என்பது ஆகுபெயர். அது மாயையின் காரியங்களைக் குறிக்கின்றது. மற்று என்பது வினைமாற்று. அது பிறழவரினும் பிறழவிடாமற் செய்யும் என்னும் பொருளைத் தருகின்றது. மற்றவன் தான் என்பதிலுள்ள 'தான்' என்பது இறைபணி நிற்றலை அநுவதித்து இறைபணி நிற்பவனைக் குறித்து வந்த இடைச் சொல்.

சில்லைப் பிறழவிடாது செய்யும் அச்சுப் போல வாசனா மலங் காரணமாக ஞானியைத் தன்நிலையிலிருந்து பிறழவிடாமற் செய்யும் மெய்ப்பொருளை அச்சாக உருவகஞ் செய்தார்.

**முத்தருக்குப் பிராரத்த வினைதாக்கினும் அவர் மெய்ப்பொருளையே நோக்கி நிற்றலுக்கு உவமை கூறி மேலை வெண்பாவை வலியுறுத்தும் உதாரணம்**

***நண்ணனல் வேவாத நற்றவர் தம்மினும்***
***பண்ணமர மாச்செலுத்தும் பாகரினு - மெண்ணி***
***யரனடி யோர்பவ ரைம்புலனிற் சென்று***
***மவர்திற னீங்கா ரதற்கு.***

இறைபணியில் நிற்பவரைப் பிராரத்த வினையும் அதுகாரணமாக வரும் தனு கரண புவன போகங்களும் வந்து தாக்கினவிடத்தும் இறைபணி நிற்றலிலிருந்து பிறழவிடாத சிவனையே உணர்ந்து நிற்றல் எவ்வாறென்பாரை நோக்கி, அவ்வாறு நிற்றல் கூடுமென்பதற்கு உவமை கூறி, முன்னைய வெண்பாவிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**இ-ள் :** நண் அனல் வேவாத நற்றவர் தம்மினும் பண் அமர மாச்செலுத்தும் பாகரினும் - அங்கித் தம்பனஞ் செய்து அதனாற் சுடப்படாமைக் கேதுவாகிய நற்றவமுடையார் அக்கினியுட் கிடப்பினும் அதனால் தம்வலி கெடாதவாறு போலவும் செலுத்த வேண்டிய கதிக்கேற்றவாறு குதிரையைச் செலுத்தும் பாகநூல் கற்றுவல்லார் குதிரை செல்லும் வேகத்தினால் தம்வலி கெடாதவாறு போலவும், எண்ணி அரன் அடி ஒர்ப்பவர் - புலன்களின் வழியிற் செல்லாதிருப்பதற்குரிய உபாயம் யாதென்றெண்ணி முதல்வன் திருவடியாகிய அச்சை உணர வல்லார், ஐம்புலனில் சென்றும் அதற்கு அவர் திறல் நீங்கார் - முன் செய்வினை காரணமாக மாயா காரியங்கள் வந்து தாக்குதலால் சத்த பரிசரூப ரச கந்தங்களாகிய ஐவகை விடயங்களிற் சென்றாலும் அதனால் திருவடியினின்றும் நீங்கி அவ்வைம் புலன்களிற் கட்டுப்படார் எ-று.

இவ்வெண்பாவில் நற்றவரும் பாகரும் உவமானம், அரன் அடி ஓர்பவர் உவமேயம். இதில் உவமேயத்துக்குக் கூறியவினை 'அவர் திறல்நீங்கார்' என்பது. இது உவமானத்தோடுஞ் சென்று சேர்ந்தது.

'அனல் நண்' என்பது நண்அனல் என நின்றது. இது நீர்க்கீழ் என்பது கீழ் நீர் என வருவது போல முன்பின்னாகத் தொக்க ஆறாம் வேற்றுமைத் தொகை. நள்ளனல் என்பது நண்ணனலென மருவி வந்தது. இது நீளுலகெலாம் என்பது நீணுலகெலாமென மருவி நிற்பது போலாகும்.

நள் - நடு. நண்ணனல் என்பதற்குத் தம்மால் நண்ணப்படும் அனல் என்றுரைப்பினும் பொருந்தும். நண்ணுதல் - அடைதல்.

பண்ணுதல் - கதிப்பித்தல், செலுத்த வேண்டிய முறையிற் செலுத்துதல்

தம்மினும் பாகரினும் என்பவற்றிலுள்ள 'இன்' இரண்டும் உவம உருபுகள். உம்மைகள் இரண்டும் எண்ணும்மைகள். ஐம்புலனிற் சென்றும் என்றதிலுள்ள உம்மை செல்லக்கூடாத இடத்திற் சென்றும் திறல் நீங்கார் என்னும் பொருளைத் தருதலாற் சிறப்பு. வெண்பாவில் அதற்கு என்பது அதனால் என்னும் பொருளைத் தருகின்றது. அதனால் என்பதிள்ள ஆல் உருபு 'கு' உருபாக மயங்கியமையால் இது உருபு மயக்கம்.



**முத்தரைப் பிராரத்தவினை தாக்குங்கால் அவர் மெய்ப்பொருளில் நிலைத்திருப்பரென்றது பொருந்தாதென்பாரை மறுத்து பொருந்து மெனக்கூறி மேலை வெண்பாவை வலியுறுத்தும் உதாரணம்**

***சதசத்தா மெய்கண்டான் சத்தருளிற் காணினி***
***தமித்தல் பாசத்தி வின்றிக் - கதமிக்***
***கெரிகதிரின் முன்னிருள்போ லேவா வசத்தி***
***னருகணையார் சத்தணைவா ராங்கு.***

சார்ந்ததன் வண்ணமாதலால் சதசத்தெனப்படும் இயல்புடைய உயிர் சித்தாகிய முதல்வன் திருவடியை அடைந்து அதை உணரினும் சத்தம் முதலிய ஐம்புலன்களிற் சென்றவிடத்து அவற்றிற் கட்டுப்படா திருக்கும் வலியுடையதாதல் எவ்வாறென்பாரை நோக்கி, திருவடியை அடைதலால் உண்டாகும். விசேடத்தால் ஐம்புலனிற் கட்டுப்படா-திருத்தல் கூடுமென முன்னைய வெண்பாவிற் கூறியதை வலியுறுத்து-கின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** சதசத்து ஆம் மெய்கண்டான் சத்து அருளின் காணின் பாசத்தில் இதமித்தல் இன்றிச் சத்து அணைவார் கதம் மிக்கு எரிகதிரின் முன் இருள்போல் ஆங்கு ஏலா அசத்தின் அருகு அணையார்.

**இ-ள் :** சதசத்து ஆம் மெய்கண்டான் சத்து அருளின் காணின் - சத்தைச் சார்ந்து சத்தாயும் அசத்தைச் சார்ந்து அசத்தாயும் நிற்றலால் சதசத்தெனப்படுந் தன்மை தனக்குண்டென்பதை அறிந்தவன், சத்தாகிய முதல்வன் திருவருளாலல்லது ஒன்றையுங் காணானாய் அவனருளின் வழிநின்று ஐம்புலன்களைக் காணுமாயின், பாசத்தில் இதமித்தல் இன்றி - பாசமாகிய அசத்து இன்பஞ் செய்தலின்மையால், சத்து அணைவார் கதம் மிக்கு எரி கதிரின் முன் இருள்போல் ஆங்கு ஏலா அசத்தின் அருகு அணையார் - சத்தாகிய முதல்வனைக் கூடி நிற்பவர் கோபம் மிக்கு எரிகின்ற சுடரின்முன் இருள் போலச் சத்தெதிர் முனைத்து நிற்கமாட்டாத அசத்தாகிய ஐம்புலன்களிற் கட்டுப்பட்டு நிற்பாரல்லர் எ-று.

அருளின் என்றதிலுள்ள இன் உருபு அருளால் என்னும் பொருளைத் தருதலால் ஏதுப் பொருளில் வந்தது. இதஞ்செய்தல் என்றது இதமித்தல் என நின்றது. இது, இதம் என்னும் பெயரடியாகப் பிறந்த தொழிற்பெயர். இதஞ்செய்தல் - பற்றுச் செய்தல். 'இன்றி' என்னும் செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சக் குறிப்பு சத்தணைவார் என்பதனோடு முடிந்தது. இது, அசத்து இதஞ்செய்தல் இன்மையாற் சத்தணைவார் எனக் காரணப் பொருளில் வந்தது.

இதமித்த லின்மைக்குக் காரணங் கூறக்கருதி 'கதமிக்கு எரிகதிரின் முன் இருள்போல் ஏலா அசத்' தென்று சத்தின் முன் அசத்து முனைத்து நில்லாமைக்கு ஏதுக்கூறினார். கதம் - கோபம். கோபம் வந்தால் மனந் துடிப்பதுபோல தீச்சுடருந் துள்ளிக் குதித்து மேலெழுவதால், கதம் மிக்கு எரிகதிர் என்றது கோபத்துக்கு ஒப்புமைபற்றிய உபசார வழக்கு. இதை அமர்நீதி நாயனார் புராணத்தில் (26) "எல்லையில்லவன் எரி துள்ளினாலென வெகுண்டான்" எனக் கூறப்படுவதனாலறிக. துள்ளுதல் - துடித்தல்.

இவ்வெண்பா, சத்தும் அசத்தும் ஒன்றுக் கொன்று சமவல்லவாதலால், அரனடியை உணர்பவர் அசத்தாகிய ஐம்புலனிற் சென்றாலும் அதுகாரணமாக அரனடியை விட்டு ஐம்புலனிற் கட்டுப்படாரெனக் கூறி, முன்னைய வெண்பாவில் அவர் திறல் நீங்கார் எனக் கூறியதை வலியுறுத்துகின்றது.

ஏகனாகி நிற்றலால் மலம் இல்லையாதலும் இறைபணி நிற்றலால் மாயையும் வினையும் இல்லையாதலும் பெறப்பட்டமை- யால், "மலமாயை தன்னொடு வல்வினை யின்றே" என்பதை இச்சூத்திரத்தில் வேறோர் அதிகரணமாக வைத்துக் கூறாதுவிட்டார்.

பத்தாஞ் சூத்திரம் முற்றிற்று.

★★★



# பதினோராஞ் சூத்திரம்

பத்தாஞ் சூத்திரத்தில் பயன் இரண்டனுள் பாசநீக்கமாகிய பயன்கூறி பாசப்பற்று நீக்கத்தின் பொருட்டு இடையறாது சிவபெருமான் திருவடியைப் பற்றுதலாகிய ஏனைச் சிவப்பேறு என்னும் பயனை இப்பதினொராஞ் சூத்திரத்தாற் கூறுகின்றார்.

***காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற்***
***காண வுள்ளத்தைக் கண்டு காட்டலி***
***னயரா வன்பி னரன்கழல் செலுமே.*** என்பது சூத்திரம்

**கருத்துரை**

**பரமேசுரனது சீபாதங்களை யணையுமா றுணர்த்துதனுதலிற்று.**

**இ-ள் :** பத்தாஞ் சூத்திரத்திற் கூறியபடி சிவனோடு ஒற்றுமைப்பட்டு ஏகனாகி நின்று பிராரத்த வினை தாக்குமிடத்து அவ்வினை தாக்கா வண்ணம் இறைபணி நிற்பார்க்குத் தமக்கெனச் செயலில்லாமையால் அவர்களுடைய அறிவு இச்சை செயல்கள் தொழிற்படுவதற்கு முன்னிலையாகும். பொருளும் இல்லையாகும் என்பாரை நோக்கி, அறிவு இச்சை செயல்கள் இல்லாதவிடத்து முத்திநிலை புத்தர் கூறும் ஆலய விஞ்ஞானம் போலச் சூனியமாகும். அறிவு இச்சை செயல்களாகிய குணம் சூனியமாகவே குணியாகிய உயிருஞ் சூனியமாகும். இவ்வாறு, முத்திநிலையில் உயிர் இல்லையாகு மென்பது பொருந்தாது.

முத்தியில் முதல்வனுடன் உயிர் கலந்து நிற்றலால் அவனுடைய அருளுடன் உயிரின் அறிவு இச்சை செயல் மூன்றுங் கலந்து நின்று தொழிற்படுமெனக் கூறுமுகத்தால், பாசநீக்கமுஞ் சிவப்பேறு

மென்னும் பயன் இரண்டனுள், பத்தாஞ் சூத்திரத்திற் பாசநீக்கம் பற்றிக் கூறினமையால், கூறப்படா தெஞ்சி நின்ற சிவபெருமானது திருவடியைக் கூடுதலாகிய நிட்டையின் இயல்புணர்த்துதல் இப்பதினொராஞ் சூத்திரத்தின் கருத்து எ-று.

இதனாற் சூத்திரங்களுக்கிடையேயுள்ள தொடர்பு இனிது விளங்கும்.

ஏகனாகி இறைபணி நின்றவர் திருவடியை அடைந்தவரே யாதலால், அவர்கள் இனிச் செய்ய வேண்டியதொன்று மில்லாமை-யாலும் இருள் நீங்குதலும் ஒளி தோன்றுதலும் ஒன்றாக நிகழ்வது போலப் பாச நீக்கமுஞ் சிவபெருமானது திருவருள் விளக்கமும் இடையீடின்றி உடன் நிகழ்வனவாதலால் திருவடி யடைதலைப் பற்றி வேறாகக் கூறவேண்டாமையாலும் முதல் நூலாகிய வடமொழிச் சிவஞான போதத்தில் பத்தாஞ் சூத்திரத்திற் சுவானுபூதியாகிய சிவபெருமானது திருவடியடைதலைப் பாசநீக்கத்தோடு ஒன்றாக வைத்துக் கூறுதலாலும் சிவப்பேற்றை இச்சூத்திரத்தில் வேறாகக் கூறுதல் பொருந்தாதெனின் அது பற்றிக் கூறுதும்:

ஏகனாகி இறைபணி நிற்பது நின்மல துரிய நிலையாகிய அருள் விளக்கமேயாதலால், அத்துரிய நிலையில் மலம் நீங்கிய துணையால் சுகத்தின் ஒளிமாத்திரம் விளங்குவதன்றி, நின்மல துரியாதீத நிலையில் விளங்கும் சிவத்துவ விளக்கம் எனப்படும் சிவபெருமானது திருவடியைக் கூடியின்புறும் பரமசுகம் விளங்காது. அவனருளா-லல்லது ஒன்றையுஞ் செய்யாமையால் மாத்திரம் பரமசுகம் விளங்காது. ஆதலால் பரமசுகம் விளங்குவதற்கு இறைபணி நின்றதன் மேலுஞ் செய்ய வேண்டிய துண்டென்பது தானே விளங்கும். அச்செயல் திருவடி யடைதலேயாகும்.

இருள் நீக்கத்தில் ஒளி விளங்குவது போலப் பாசநீக்கத்தில் அருள் விளங்குமேயன்றிப் பரமசுகமாகிய ஆனந்த விளக்கம் உடன் நிகழாது. அருள் விளக்கத்துக்கும் ஆனந்த விளக்கத்துக்குமுள்ள வேறுபாடு பின்னர்க் காட்டப்படும்.

முதல் நூலிற் பத்தாஞ் சூத்திரத்தில் பாச நீக்கஞ் செய்யும் முறையைக் கூறியவிடத்துப் பாசநீக்கம் மாத்திரமே முத்தியெனக் கொண்டவர்களை மறுத்தற் பொருட்டுப் பாச நீக்கம் பெற்றோன் சுவானுபூதி யுடையவனாவ னெனப் பதினொராஞ் சூத்திரத்துக்குத் தோற்றுவாய் செய்யப்பட்டது.



சுவானுபூதி நிகழ்வதற்குச் செய்ய வேண்டியன வெல்லாம் முதனூலிற் பதினொராஞ் சூத்திரத்திலேயே கூறப்படுகின்றது. ஒன்பதாஞ் சூத்திரத்தில் எடுத்துக்கொண்ட ஆன்ம சுத்தி பண்ணும் முறை பத்தாஞ் சூத்திரத்திற் சென்றியைந்து முற்றுப் பெற்றாற் போல, பத்தாஞ் சூத்திரத்தில் எடுத்துக்கொண்ட சுவானுபூதி நிலை பதினொராஞ் சூத்திரத்திற் சென்றியைந்து முற்றுப் பெறுகின்றது. இவ்வாறு ஒரு சூத்திரப் பொருள் அடுத்த சூத்திரத்திற் சென்றியைந்து முற்றுப்பெறுமோவென மலையாதிருத்தற் பொருட்டு, முதல் நூல் பத்தாஞ் சூத்திரத்தில் சுவாநுபூதிமானாவா னென்றதனை இந்நூலின் பதினொராஞ் சூத்திரத்தில் அரன்கழல் செலுமேயென மொழிபெயர்த்து அதனைச் சுவாநுபூதி உண்டாவதற்கு முதனூல் பதினொராஞ் சூத்திரத்திற் கூறிய பத்தி செய்க என்றதனோடு சேர்த்து 'அயரா அன்பின் அரன்கழல் செலுமே' என்றார். ஆதலால், வடமொழிச் சிவஞானபோதப் பத்தாஞ் சூத்திரத்திற் சுவாநுபூதி பற்றிக் கூறியதற்கு மாறாக இந்நூலின் பதினொராஞ் சூத்திரத்திற் சுவாநுபூதி பற்றிக் கூறியது பொருந்துமோவென மலையற்க.

நூல் செய்தல், தொகுத்துச் செய்தல், விரித்துச் செய்தல், தொகுத்தும் விரித்துஞ் செய்தல், மொழி பெயர்த்துச் செய்தல் என நான்கு வகைப்படும். "தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்ப் பெனத்தகு நூல் யாப் பீரிரண் டென்ப" என்பது நன்னூல் சிறப்புப் பாயிரம்.

மொழிபெயர்த்தல் யாப்பால் இந்நூலைச் செய்யத் தொடங்கிய ஆசிரியர் முதனூலோடு மாறுபட்டு நூல்செய்யார். அதனால், முதனூலிற் சுவாநுபூதிமானெனச் சும்மா கூறியதைப் பதினொராஞ் சூத்திரத்திற் பத்திசெய்க என்றதன் பின்னாகக் கொண்டு கூட்டிக் கூறுதலே வடமொழிப் பத்தாஞ் சூத்திரத்திற் சுவாநுபூதி மான் எனக் கூறியதன் கருத்தென்பது பெறப்பட்டது.

அதனாலன்றோ பத்தாஞ் சூத்திரத்துக்குப் பாசக்ஷயம் பண்ணுமா றுணர்த்திற் றெனவும் பதினொராஞ் சூத்திரத்துக்குப் பரமசிவனது சீபாதங்களை யணையுமா றுணர்த்திற் றெனவுங் கருத்துரை செய்யப்பட்டது. இவ்வாறு கருத்துரை செய்ததை அறியாதார். இச்சூத்திரம் சீவன்முத்தி நிலைபற்றிக் கூறுவதாகத் தத்தமக்கு வேண்டியவாறே கூறுவர்.

**இ-ள் :** காணும் கண்ணுக்கு காண காட்டி - காட்டக் காணுந் தன்மையுடைய கண் உருவத்தைக் காணும்படி அதனோடு ஒன்றாய்க்

கலந்து நின்று காட்டி, காணும் உளம் போல் - அவ்வுருவத்தைக் காண்கின்ற உயிரைப் போல, காணும் உள்ளத்தை காண காட்டி காண்டலின் - அறிவிக்க அறியும் இயல்புடைய ஆன்மா பொருளை அறியும்படி முதல்வன் ஆன்மாவோடு ஒன்றாய்க் கலந்து நின்று காட்டிக் கண்டு வருதலால், அயரா அன்பின் - அவ்வத்துவித நிலையை மறவாது அன்புசெய்தலால், அரன் கழல் செலுமே - அம்முதல்வன் திருவடியாகிய சிவானந்தானுபூதியைத் தலைப்படும் எ-று.

இச்சூத்திரத்தில், காணுங் கண்ணுக்குக் காட்டும் உளம் என்பது உவமானம். உள்ளத்தைக் கண்டு காட்டல் என்பது உவமேயம். உவமானத்துக்குக் கூறிய 'காணும்' என்னும் அடை உவமேயத்தோடும் உவமேயத்துக் கூறிய 'கண்டு' என்னும் வினை உவமானத்தோடுஞ் சென்றியைந்தன. 'காண' என்பதை உவமானத்தோடும் உவமேயத்தோடுங் கூட்டுக. இவ்வாறு சூத்திரத்தை விரித்துக் கூறினால் அது காணுங் கண்ணுக்குக் காணக் காட்டிக் காணும் உளம்போல் காணும் உள்ளத்தைக் காணக் காட்டிக் காண்டலின் அயரா அன்பின் அரன்கழல் செலுமே என விரியும்.

காட்டிக் கண்டு என்றிருக்கவேண்டியது கண்டு காட்டி என முன்பின்னாக மாறிக் கூறப்பட்டது. இது விழுமியோர் வியர்த்து வெகுளார் என்றிருக்க வேண்டியதை வியர்த்து வெகுளார் விழுமியோர் என்றது போலாகும்.

இக்கருத்துப் பற்றியே வழிநூலாசிரியர் சிவஞான சித்தியாரில் 'காட்டிக் கண்டிடுமா போலக் காட்டிக் கண்டிடுவன்' எனக் கூறினார் (சூத் 11- செய்யுள் 1) அயராமைக்குச் செயப்படுபொருள் அத்துவிதநிலை. அதனால் அயரா அன்பு என்றது அத்துவித நிலையை மறவாமையாலாகிய அன்பு எனவிரியும். இது ஆறு சென்ற வியர் என்பதுபோல நின்றது. இதனை வழிநூலாசிரியர் "இத்தை ஆயும் அறிவுடையனாய் அன்பு செய்ய" (சித்தி 11 ஆம் சூத் 1 ஆம் செய்யுள்) என்றதனாலும் அறிக.

ஆறு சென்ற வியர் - வழி நடந்தமையால் உண்டாகிய வியர்வை. ஆயும் அறிவுடைமை என்பது அயராமையைக் குறிக்கின்றது.

உள்ளத்தை என்ற இடத்தில் ஐ உருபுக்குப் பதிலாக கு உருபு நிற்க வேண்டும். அதனால் உள்ளத்தை என்பது உருபுமயக்கம்.

அறிவு இச்சை செயல்களால் அயராமையும் அன்பு செய்தலும் அரன் கழல் செல்லுதலும் முறையே காரண காரியங்களாகும்.



அத்தவித நிலையை அயராமையால் அன்பு செய்தலும் அன்பு செய்தலால் அரன்கழல் செல்லுதலும் நிகழ்வதால் அரன்கழல் செல்லுதலாகிய ஒரு பொருளையே குறித்து அறிவு இச்சை செயல்கள் மூன்றும் ஒருங்கே நிகழுமெனக் கூறக்கருதி "அயரா அன்பின் அரன் கழல் செலுமே" என்றார்.

**இச்சூத்திரத்திற் கூறப்பட்டதென்னவெனில் :** உயிரறிவின் கலப்பின்றி ஒன்றையுங் காணமாட்டாத கண் ஒரு உருவத்தைக் காணும்போது உயிரறிவெனவும் கண்ணொளியெனவும் வேற்றுமையின்றி உடனாய்க் கலந்து நின்று, உயிர் கண்ணுக்குக் காட்டிய பொருளைக் கண் கண்டதென்றும் கண்ணை இடமாகக் கொண்டு நின்ற உயிர் கண்டதென்றும் பிரித்தறிய முடியாதபடி, கண்ணினுடைய காணுந் தொழிலும் உயிரினுடைய காணுந் தொழிலும் ஒன்றை யொன்று விடாது அத்துவிதமாய் ஒருங்கே நிகழும்.

அதுபோல, முதல்வனையின்றி ஒன்றையுஞ் செய்யமாட்டாத உயிர் ஒரு பொருளை அறியும்போது முதல்வனது சிற்சத்தி, உயிரின் அறிவோடு கலந்து ஆன்மாவினதறிவென்றும் தன்னறிவென்றும் வேறாகாது உடனாய்க் கலந்து நிற்க, முதல்வனும் அவ்வாறு கலந்து நின்று, ஆன்மாவுக் கறிவித்ததொரு பொருளை அவ்வான்மா அறிந்ததென்றும் அதனையிடமாகக் கொண்டு நின்ற தான் அறிந்தானென்றும் பகுத்தறியமுடியாதபடி உயிரின் அறிவும் முதல்வனது அறிவும் ஒன்றை யொன்றுவிடாது அத்துவிதமாய் ஒருங்கே நிகழும்.

இவ்வாறு ஆன்மாவோடு கலந்து நின்று காட்டிக் கண்டுவரும் இவ்வுபகாரம் பெத்த முத்தி இரண்டினும் ஒரே விதமாக நிகழும். ஆதலால் ஏகனாகி இறைபணி நிற்கும் உயிர், முதல்வன் அத்துவிதமாய்க் கலந்து நின்று காட்டியுங் கண்டும் உபகரித்து நிற்கும் உரிமையை நோக்குமாயின் நோக்குந்தோறும் முதல்வனிடத்துச் செல்லும் இச்சை அடங்காது மேலும் அதிகரிக்கும். ஆதலால் அப்போது அவ்விச்சையே தானாய் விளங்கித் தோன்றும். பேரானந்தத்தை உயிர் அனுபவிக்கும். இவ்வாறு அத்துவிதமாய் நிற்கும் உரிமையை நோக்குதலால் அறிவின் தொழிலும் இச்சை அதிகரித்தலால் இச்சையின் தொழிலும் பேரானந்தத்தை அனுபவித்தலால் செயலாகிய கிரியையின் தொழிலும் நிகழுமென்பது பெறப்படும். அவ்வாறு நிகழினும் அறிவிச்சை செயல்கள்

தொழிற்பட்டதாகப் பிரித்தறிய முடியாத, நின்மல துரியாதீத நிலையின் இயல்பு கூறியவாறு காண்க.

அத்துவிதமாவது பேதப்பொருள் இரண்டும் தம்முள் அபேத மாதற்குரிய சம்பந்த விசேடம். இக்கருத்தே பற்றி" அறிவொளிபோற் பிறிவரு மத்துவிதம்" என்று புடை நூலாசிரியர் சிவப்பிரகாசத்திற் கூறினார்.

சம்பந்தம் சையோக சம்பந்தம் சமவாய சம்பந்தம் என இருவகைப்படும். சையோக சம்பந்தம் பிரிக்கவும் பொருத்தவுங் கூடியது. உதாரணம்: கண்ணும் கண்ணாடியும். பிரிக்க முடியாத சம்பந்தத்துக்குச் சமவாய சம்பந்தமென்று பெயர். சமவாய சம்பந்தம் இரண்டு வகைப்படும். ஒன்று குணத்துக்கும் குணிக்குமுள்ள சம்பந்தம். இதற்கு உதாரணம் நெருப்புக்குஞ் சூட்டுக்குமுள்ள சம்பந்தம். இதைத் தாதான்மிய சம்பந்தம் என்பர். மற்றது குணி குணி சம்பந்தம். இதற்கு அத்வைதம் என்று பெயர்.

குணி - குணத்தையுடையது.

அக்கினியும் விறகு முதலிய ஏதாவதொன்றிற் றங்கி நின்றல்லது சுடுதல் முதலிய தன் தொழில்களைச் செய்யாது. அதுபோல முதல்வனும் உயிரை இடமாகக் கொண்டு நின்றே எத்தொழிலையுஞ் செய்வனென்றுணர்க. உயிர் ஏதாவதொரு பொருளை அறிதல், முதல்வன் உடன்நின்று அறிந்தாலன்றி அறிவித்த மாத்திரத்தில் அமையாது. இவ்வுண்மையை, "தொண்டனே னினையுமா நினையே," "விரும்புமா விரும்பே", "தொடருமா தொடரே" "நுகருமா நுகரே" என்றிவ்வாறு திருமாளிகைத் தேவர் திருவிசைப்பாவிற் கூறியதாலறிக. அறிவித்தல் காட்டுமுபகாரம். காட்டுமுபகாரத்தால் என்ன செய்யலாமென்று தோன்றும். காணும் உபகாரத்தால் அறிந்தவாறு செய்தல் கூடும். இவ்வியல்பு பற்றியே காரைக்-காலம்மையார் அற்புதத் திருவந்தாதியில் "அறிவானுந் தானே அறிவிப்பான் தானே" எனக் கூறியதோடமையாது "அறிவாயறி-கின்றான் றானே" எனவுங் கூறினார். இதில் முன்னறிதல் அறிவித்தற் பொருட்டெனவும் பின்னறிவாயறிதல் அழுந்தி அனுபவிக்கச் செய்யும் பொருட்டெனவுங் கொள்க. அத்துவித நிலையை இனிது விளக்குவதற்காகவே முத்தி நிலை பற்றிக் கூறும் இச்சூத்திரத்திற் காணும் உபகாரத்தையுங் கூறினார்.



இவ்வாறன்றிக் காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற் காணவுள்ளத்தைக் கண்டு காட்டலென்பதற்குக் காட்டுமுபகார முணர்த்துதல் மாத்திரமே கருத்தென் றுரைப் பாருமுளர். அது பொருந்தாதென்பதைச் சூத்திரத்தைப் பதச்சேதஞ் செய்து கூறிய முதலதிகரணத்து மேற்கோளில் "அவனும் அவற்றது விடயத்தை யுணரும்" எனக் காணும் உபகாரத்தை மாத்திரமே கூறியதாலறிக. சூத்திரத்திற் 'கண்டு' என்று மட்டுங் கூறாமல், 'கண்டு காட்டலின்' எனக் காட்டுமுபகாரத்தையுஞ் சேர்த்துக் கூறியது காணும் உபகாரம் காட்டுமுபகாரத்தின் பின் நிகழுமென்பதை அறிவித்தற் பொருட்டேயாகும். இவ்வாறு கொள்ளவில்லையானால், ஐந்தாஞ் சூத்திரத்திற் கூறப்பட்ட காட்டுமுபகாரத்தை இவ்விடத்திற் கூறியது, கூறியது கூறல் என்னும் குற்றமாகும். அவ்வாறானால் முதனூலிற் பதினொராஞ் சூத்திரத்திற் காட்டுவானெனக் கூறப்பட்டதே யன்றி காண்பானெனக் கூறப்படவில்லையேயெனில், அதில் காட்டுவானு மென்றதிலுள்ள உம்மை காண்பானுமென எதிரது தழுவி, நிற்றலால் 'காணும்' உபகாரம் பற்றிக் கூறவில்லையென்ப தெவ்வாறு பொருந்தும்? அவ்வும்மைக்குப் பொருள் காண மாட்டாதார் பாடம் வேறாக ஓதுவர்.

இச்சூத்திரத்தில் 'காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல் காண உள்ளத்தைக் காட்டிக் காண்டல்' என்றது ஓரதிகரணம், அதனை அயரா அன்பின் அரன் கழல் செலுமே என்றது ஓரதிகரணம். ஆக இச்சூத்திரம் இரண்டு அதிகரணங்களை யுடையது.

## முதலதிகரணம்

### முதல்வன் உயிருடன் அத்துவிதமாய் நின்று காணும் உபகாரத்தைச் செய்வன் எனக்கூறும் மேற்கோள்

***ஈண்டு அவனும் அவற்றது விடயத்தை யுணருமென்றது.***

முதல்வனிடத்தில் உயிருக்குக் காட்டுமுபகாரம் மாத்திரமே யுள்ளது. காணுமுபகாரம் இல்லையென்பர் ஒருசாரார். இதில் முதல்வனிடத்திற் காணும் உபகாரம் உண்டோ இல்லையோ என்பது ஐயம். இல்லையென்பது பிறர் கூறும் பக்கம். இவ்வையப்பாட்டின்-கண் முதல்வனுக்குக் காணுமுபகாரம் இல்லையென்பாரை மறுக்கும் பொருட்டு, அத்துவித நிலையை உணர்த்துவதற் கெடுத்துக் கொண்ட

இச்சூத்திரத்தின் முதற்பகுதியைப் பதச்சேதஞ் செய்து கூறப்பட்டது. இந்த மேற்கோள்.

**இ-ள் :** முதல்வனும் உயிர்களால் உணரப்படும் விடயங்களை அவ்வுயிர்களோடு உடன் நின்றுணருவன் எ-று.

அவனும் என்றதிலுள்ள உம்மை உயிர்கள் உணர்தலேயன்றி முதல்வனும் உணருவன் என்னும் பொருளைத் தருதலால் இறந்தது தழுவியது. இதனால் உயிர் உணரும் விடயத்தை உயிரோடு உடனாய் நின்று முதல்வனும் உணருவன் என்பது பெறப்படும். இதை அறியாதார் உணருமென்றது, உயிருக்கு அறிவிப்பதற்காக அறிவிக்க வேண்டியதை யறியு மெனக் கூறுவர். அறிவித்தற் பொருட்டு அறிதல் பற்றி ஐந்தாஞ் சூத்திரத்திற் கூறியிருப்பதால், அவ்வாறு கூறுதல் முன்னர் சித்தித்ததைப் பின்பும் சாதிப்பதாகிய சித்தசாதன மென்னுங் குற்றமாகும். அன்றியும் அத்துவித நிலையைப் பற்றிக்கூறும் இச்சூத்திரத்தில் வேறாய் நின்று அறிவதாகிய காட்டுமுபகாரத்தைக் கூறுதல் பொருந்தாது.

இரண்டாஞ் சூத்திரத்தில் 'அவையே தானேயாய்' எனவும் ஐந்தாஞ் சூத்திரத்தில் 'தாம் தம் உணர்வின் தமி அருள்' எனவும் முன்னர்ப் பொதுவாகக் கூறப்பட்ட அத்துவித நிலையை இச்சூத்திரத்திற் காணும் உபகாரத்தில் வைத்துணர்த்திச் சிறப்பாக விளக்கியவாறு காண்க.

### முதல்வன் காணும் உபகாரத்தைச் செய்வன் என்பதற்குக் காட்டும் ஏது

***இவ்வான்மாக்கள் அவனையின்றி யமைந்து ஒன்றையும் விடயியாவாகலான்.***

கண் சடப்பொருளாதலாலும் காண்பதனால் வரும்பயன் உயிருக்கே யாதலாலும் கண் காணும்போது உயிரும் உடனின்று காணு மென்பது பெறப்படும். கண்ணைப் போல உயிர் சடமல்ல வாதலாலும் அறிதற் பயன் உயிருக்கே யாதலாலும் அதனை யெடுத்துக் காட்டி, அவனும் அவற்றது விடயத்தை உணருமென்றது பொருந்தாதென்பாரை நோக்கி மேற்கோளை வலியுறுத்துகின்றது இவ்வேது.

**இ-ள் :** விளக்கொளி கண்ணொளியோடு கலந்து, கண்ணொளியோடு கூடி உருவத்திலுங் கலந்தாலன்றிக் கண்ணொளி உருவத்தைக் காணமாட்டாது. அதுபோல, அறிவிக்க அறியும் இயல்பினையுடைய உயிர்களும் முதல்வனது அறிவு தம்மறிவோடு கலந்து நின்று, தம்மோடு கூடச் சென்று பொருளிலுங் கலந்தால் அறிவு விளங்கி அதனை அறியும் இயல்பினவன்றித் தனித்து ஒரு பொருளை அறியவும் மாட்டா அனுபவிக்கவும் மாட்டா. ஆதலால் அறிவு விளங்குவதற்கு மாத்திரமன்றிப் பொருளைப் பற்றுதற்கும் முதல்வன் உயிருடன் நின்றறிதல் வேண்டுமென்பது துணியப்படும். அதனால் அவனும் அவற்றது விடயத்தை யுணருமென மேற்கோளிற் கூறப்பட்ட தென்றவாறு.

அறிவு விளங்குதல் அவனையின்றி யமையாமையால் அறிவிப்பதாகிய காட்டுமுபகாரம் முதல்வனுக் குண்டென்பது விளங்கினாற் போல, அவனையின்றி ஒன்றையும் அனுபவியாமையாற் காணுமுபகாரமும் முதல்வனுக் குண்டென்பது இனிது விளங்குமெனக் கூறக்கருதி 'அவனையின்றி யமைந் தொன்றையும் விடயியா வாகலான்' என்றார்.

அமைந்து விடயியா என்பது அமைதலுமில்லை விடயித்தலு மில்லை என்னும் பொருளைத் தருகின்றது. இது கந்தித்தும் சுழல் வித்தும் எனக் கூறவேண்டியதைக் 'கந்தித்துச் சுழலும்' எனக் கூறியது போலக் கொள்க. (சித்தியார் 10ஆம் சூத் 6ஆம் செய்யுள்)

ஒன்றையும் என்றதிலுள்ள உம்மை எல்லாப் பொருள்களையும் உணர்த்தியமையால் முற்றும்மை. விடயியா என்பது பெயரடியிற் பிறந்த எதிர்மறை வினைச்சொல். உயிருக்கு அறிவு விளங்குதலும் பொருளைப் பற்றி அனுபவித்தலும் முதல்வனையின்றி யமையாமையால் முதல்வனிடத்திற் காணும் உபகாரமும் காட்டும் உபகாரமும் உண்டென்பதை வழிநூலாசிரியர்.

***"எவ்விடத்து மிறையடிய்ய யின்றியமைந் தொன்றை***
***யறிந்தியற்றி டாவுயிர்க ளீசன் றானும்***
***செவ்விதினி னுளம்புகுந்து செய்தியெலா முணர்ந்து***
***சேட்டிப்பித் தெங்குமாய்ச் செறிந்து நிற்பன்***
***இவ்வுயிர்க டோற்றும்போ தவனையின்றித் தோற்றா***
***இவற்றினுக்கம் முதலெழுத்துக் கெல்லாமாய் நிற்கும்***
***அவ்வுயிர்போ னின்றிடுவ னாத லானாம்***
***'அரனடியை யகன்றுநிற்ப தெங்கே யாமே'*** என விரித்துக் கூறினார்.

எவ்விடத்துமென்றது பெத்தம் முத்தி இரண்டையும். இதனுள் 'இறையடியையின்றி யமைந்தொன்றை யறிந்தியற்றி யிடாவுயிர்கள்' எனவும், 'ஈசன்றா னெங்குமாய்ச் செறிந்து நிற்பன்' எனவுங் கூறியது பொருளின் கண் முதல்வன் கலந்து நிற்றலை உணர்த்துதற் கெனவும் 'இவ்வுயிர்கள் தோற்றும் போதவனையின்றித் தோற்றா' எனவும் 'அவ்வுயிர் போல் நின்றிடுவன்' எனவுங் கூறியது உயிர்களோடு கலந்து நிற்றலை உணர்த்துதற் கெனவுங் கொள்க. இவ்வாறு கொள்ளா விடத்து முன்னர்க் கூறியதையே பின்னுங் கூறியதாய் முடியும்.

இனி, விளக்கொளி கண்ணொளியோடும் பொருளோடுங் கலக்க வேண்டுமென்பதை 'விளக்கொளி கலந்தவற்றை' எனப் பொருளோடு கலத்தலையும் 'கண்ணொளி விளக்கின் சோதி கலந்திடும்' எனக் கண்ணொளியோடு கலத்தலையும் புடைநூலாசிரியர் சிவப்பிரகாசத்திற் கூறியதாலறிக.

பரமுத்தியில் உயிருக்கு அறியப்படுவதொன்று மில்லாமையால் வழிநூலாசிரியர் எவ்விடத்து மென்றது எவ்வாறு பொருந்துமெனக் கேட்டால் 'சுத்த அநுபோகத்தைத் துய்த்தல் அணு' எனவும் (உண்மைவிளக்கம்) 'ஒன்றி நின்றுணருமுண்மை' எனவும் (சிவப்பிரகாசம்) இவ்வாறே பிற இடங்களிலும் கூறப்படுவதால், பரமுத்தியில் உயிர் சிவானந்தத்தை அனுபவித்த லுண்டென்பதும் அவ்வனுபவம் முதல்வனையின்றி யமையாமையால் முத்தியில் அவனும் சிவானந்தாநுபூதியை உயிரோடு உடன் நின்று அறிவனென-வும் உணர்க.

## முதல்வன் காணும் உபகாரத்தைச் செய்வன் என்பதற்குக் காட்டும் உதாரணம்

***ஐந்தையு மொக்க வுணரா தவற்றுணர்வ***
***தைந்தும்போ னின்றுணரு மாகலா - னைந்தினையு***
***மொன்றொன்றாப் பார்த்துணர்வ துள்ளமே யெவ்வுலகு***
***மொன்றொன்றாப் பார்க்கு முணர்ந்து.***

முதல்வனும் உயிர்கள் உணரும் விடயங்களை அவ்வுயிர்-களோடு உடனின்று அறிவானாயின் முதல்வன் அறிவதற்கும் உயிர்கள் அறிவதற்கும் வேற்றுமை இல்லையே யென்பாரை நோக்கி, உடன் நின்றறியினும் உயிர் அறிவதற்கும் முதல்வன் அறிவதற்கும் வேற்றுமை உண்டெனக் காட்டி 'அவனும் அவற்றது விடயத்தை யுணரும்' என மேற்கோளிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டுகூட்டு :** உள்ளமே அவற்று ஐந்தும்போல் நின்று உணர்வது உணரும் ஆகலான் ஐந்தையும் ஒக்க உணராது. ஐந்தினையும் ஒன்று ஒன்று ஆப் பார்த்து உணர்வது ஒன்று எவ்வுலகும் ஒன்றா உணர்ந்து பார்க்கும்.

**இ-ள் :** உள்ளமே - ஆன்மாவானது, அவற்று ஐந்தும் போல் நின்று உணர்வது உணரும் ஆகலான் - சுவை உருவம் பரிசம் சத்தம் நாற்றம் என்னும் ஐந்து விடயங்களிலும் வாய் கண் மெய் செவி மூக்கு என்னும் ஐம்பொறிகள் அதுவதுவாய்க் கலந்து நின்று தத்தம் விடயத்தை அறிவது போல ஐந்து விடயங்களிலுங் கலந்து நின்று உணரக் கூடியதை உணருந் தன்மையுடைய தாதலால், ஐந்தையும் ஒக்க உணராது ஐந்தினையும் ஒன்று ஒன்றுஆப் பார்த்து உணர்வது - அவ்வைம் புலன்களையும் ஒன்றாக அறியமாட்டாது அவ்வைந்தினையும் ஒவ்வொன்றாய் அறிந்தனுபவிக்கும், ஒன்று எவ்வுலகும் ஒன்றா உணர்ந்து பார்க்கும். அவ்வான்மாவைப் போலச் சார்ந்ததன் வண்ணமாய்ப் பலதிறப்படுதலின்றி என்றும் ஒரு தன்மையாயிருக்குஞ் சிவம் எல்லா உயிர்களது எல்லாவிடயங்களையும் அவ்வுயிர்களோடு கலந்து நிற்குந் தன்மை பற்றிப் பொதுவாக ஒருங்கே யுணர்ந்து, அவ்வுயிர்களுடன் நின்று சிறப்பாகவும் அறியும் எ-று.

இவ்வெண்பாவில் ஐந்து என முன்பு வந்த சொல்லும் பொருளும் பின்பும் வருதலால் இது சொற்பொருட் பின்வரு நிலையணி. உள்ளமே என்றதிலுள்ள ஏகாரம் சிவத்தைப் பிரித்தமையாற் பிரிநிலைக்கண் வந்தது. ஒன்று என்பது ஒரு தன்மையாய் இருத்தலாற் பந்தமடையாதென ஏதுப்பொருளைக் குறிப்பாலுணர்த்தி. சிவத்தின் பெயராய் நிற்றலாற் குறிப்பேதுவாய் நின்றபெயர்.

## முத்தியிலும் முதல்வன் உடனின்று உணருவன் எனக் காணும் உபகாரத்தை வலியுறுத்தும் உதாரணம்

***ஏகமாய் நின்றே யிணையடிக ளொன்றுணரப்***
***போகமாய்த் தான்விளைந்த பொற்பினா - னேகமா***
***யுள்ளத்தின் கண்ணானா னுள்குவா ருள்கிற்றை***
***யுள்ளத்தாற் காணானோ வுற்று.***

ஆன்மா பெத்த நிலையில் உலகப்பொருள்களை அறிவது போல முத்திநிலையில் முதல்வனை அறியும் போதும் முதல்வன்

ஆன்மாவோடு உடன் நின்று தன்னைத்தான் அறிவனெனின் அது தன்னைப் பற்றுதலென்னுங் குற்றமாகும்; ஆதலால் அவனும் அவற்றது விடயத்தை உணருமென மேற்கோளிற் கூறியது செல்லாதென்று கூறுவாரை நோக்கி முத்தியிலும் முதல்வன் ஆன்மாவுடனின் றுணர்த்து வதுண்டென அறிவித்து அதனை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** ஒன்று ஏகமாய் நின்று இணையடிகள் உணரவே தான். போகமாய் விளைந்த பொற்பினான் உள்ளத்தின்கண் ஏகமாய் ஆனான் உள்குவார் உள்கிற்றை உள்ளத்தான் உற்றுக்காணானோ.

**இ-ள் :** ஒன்று ஏகமாய் நின்று இணையடிகள் உணரவே தான் போகமாய் விளைந்த பொற்பினான் - ஆன்மா முதல்வனைச் சார்ந்தவழி முதல்வன் தன்மையேயாய் அவனோடு ஒற்றுமைப்பட்டு நின்று அவனது திருவடிகளை உணரவே தான் அவ்வான்மாவுக்குப் பரபோகமாய் மேலும் மேலும் விளைகின்ற பொலிவினை யுடைய னாதலாலும், உள்ளத்தின் கண் ஏகமாய் ஆனான் - அவ்வாறுண ருங்கால் அவ்வான்மாவின் அறிவில் ஒன்றுபட்டு அவ்வறிவை விட்டு நீங்காதவனாதலாலும், உள்குவார் உள்கிற்றை உள்ளத்தான் உற்றுக் காணானோ - கருதுவார் கருதிய பொருளாகிய தன்னை அவரறிவோடு கூடி நின்று அறியமாட்டானோ? அறிவான் எ-று.

போகமாய்த் தான் விளைந்த பொற்பினான் ஏகமாய் உள்ளத்தின் கண் ஆனான் என்னும் அடைமொழிகள், போகமாயும் ஏகமாயும் நிற்றலால் அப்போகத்தை ஏகமாய் நின்று அறிவான் எனக் கூறியதனால் ஏதுப்பொருளைத் தந்து நின்றன.

பெத்தத்தில் ஆன்மாவாற் கருதப்படும் உலகப்பொருள்களையும் முத்தியில் ஆன்மாவாற் கருதப்படும் சிவத்தையும் முதல்வன் உடன் நின்று அறிவனென்பதை உணர்த்துவதற்காக 'உள்குவாருள்கிற்றை... காணானே' என்றார். உள்குவார் உள்கிற்றை என்பது "வேண்டுவார் வேண்டுவதே ஈவான்" என்றாற் போலப் பொருள் தந்து நின்றது.

'உள்ளத்தான்' என்றதிலுள்ள ஆன் உருபு உயிர் அறியும்போது முதல்வனும் உடனின்று அறிவானென உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது. காணானோ என்றதிலுள்ள ஓகாரம் எதிர்மறை. அது காண்பன் என்னும் பொருளைத் தருகின்றது.

ஆன்மாக்கள் முதல்வனை அறியும்போது அவ்வான்மாக்களால் அறியப்படும் பொருளாகிய முதல்வன், கருதுவார் கருதிய



பொருளாதலால், அவற்றோடுடன் நின்று தன்னையும் அறிவன்.

முன்னைய வெண்பாவில் ஐம்பொறிகளைப் போல் ஆன்மா அறியப்படும் விடயங்களோடு அதுவதுவாய்க் கலந்து நின்று காணுமெனக் கூறியதை உவமானமாக வைத்து அனுமானப் பிரமாணங் கூறக்கருதி 'உள்குவார் உள்கிற்றை உள்ளத்தான் உற்றுக் காணானோ' என்றும், கருதுவார் கருதிய பொருளாதல் பெத்தம் முத்தி இரண்டிலுமொக்குமெனக் கூறக்கருதி, 'ஏகமாய் நின்றே இணையடிக ளொன்றுணரப் போகமாய்த் தான் விளைந்த பொற்பினான்' என அறியப்படுதலின்கண் நிகழும் இயல்பையும், 'ஏகமாய் உள்ளத்தின் கண்ணானான்' என் அறிவை விளக்குதலின்கண் நிழும் இயல்பையும் இவ்வெண்பாவிற் கூறினார்.

பரபோகமாயென்னாது போகமாயென்றது பெத்தத்தில் விடய போகமாகவும் முத்தியிற் சிவபோகமாகவும் முதல்வன் விளங்குவன் என்பதை அறிவித்தற் பொருட்டேயாம். இறைவன் பரபோகமாய் நிற்றல் என்றும் உள்ளதேயாகும். அவ்வாறானால் போகமாய்த் தான்விளைந்த பொற்பினான் என்றதில் ஆக்கச் சொல்லைச் சேர்த்துக் கூறியதேனெனில், சேற்று நிலத்தில் மிதித்துச் சென்றவனுக்கு வலிய நிலத்தில் மிதிக்கும்போது அந்நிலத்தின் வலிமை சேற்று நிலத்தோ டொப்பிடும்போது செயற்கையாகவே தோன்றும். அது போல, உலகபோகத்தை அனுபவித்த உயிர், அதைவிட்டுச் சிவனை உணரும்போது பரபோகந் தோன்றியதால் அப்பரபோகம் செயற்கைப் பொருளாயிற்று. இதில், இணையடிகள் ஒன்றுணர வெனப் பரபோகம் விளைவதற்கான காரணத்தையும், இணையடிகளை உணர்வதாலாகும் பரபோகமென்னும் காரியத்தையும் முன்பின்னாக வைத்துக் கூறினார்.

இணையடிகளை உணருந்தோறும் போகம் மேலும் மேலும் விளையுமென்பதை "புணர்ந்தாற் புணருந்தோறும் பெரும் போகம் பின்னும் புதிதாய் - மணந்தாழ் புரிகுழலாள் அல்குல்போல வளர்கின்றதே" எனத் திருச்சிற்றம்பலக் கோவையார் கூறுவதாலு மறிக. பரபோகம் விளையும் என்னும் துணிபுபற்றி, விளையும் எனக் கூறாது,'விளைந்த' என இறந்த காலத்தாற் கூறினார்.

கண் கண்ணாடியில் நின்று தன்னைக் கண்டாற் போல முதல்வன் ஆன்மாவுடனின்று தன்னைக் காண்டல் பொருத்த முடைமையால் இவை போன்றவையெல்லாம் தன்னைப் பற்றுதல் என்னும் குற்றமாகாதென்றறிக. கண்ணாடிக் குள்ளாகத் தோன்றுவது

போன்ற பிரதிவிம்பம், விம்பமேயன்றி வேறல்லவென்பது சிவாகம நூற்றுணிபு.

இவ்வதிகரணத்தில்அவனும் அவற்றது விடயத்தை உணருமென முதல்வனுடைய அறிவு பற்றியே கூறினாரேனும் சிவஞான சித்தியார் "எத்திறம் ஞானம் உள்ளது அத்திறம் இச்சை செய்தி" எனக் கூறியவாறு, இச்சை செய்திகட்கும் அஃதொக்கும், ஒக்கவே பெத்தம் முத்தி இரண்டினும் ஆன்மா அறியும் பொருளை முதல்வன் உடனின்றறிவன்; இச்சிக்கும் பொருளை உடனின்று இச்சிப்பன்; செயலை உடனின்று செய்வன் என அறிக.

பெத்தத்தில் முதல்வன் உயிராய் நின்று அறிகின்றான். முத்தியில் உயிர் இறைவனாகி நின்று அறிகின்றது. பெத்தத்தில் முதல்வன் உயிராக நின்று அறிதலினால் வினைப்பயன்கள் உயிர்க்காயின. முத்தியில் உயிர் இறைவனாக நின்று அறிதலால் முதல்வனை அனுபவிக்கும் சிவானுபவத்தைத் தவிர்ந்த அனைத்தும் இறைவனுக்காயின வென்பது இனிது விளங்கும்.

உயிர் இறைவனாகி நின்று செய்யும் வினை உயிரைக் கட்டுப்படுத்தாதென்ற இக்கருத்துப் பற்றியே, உலகத்தில் ஒரு பொருளை ஈவாரும் ஏற்பாரும் அதைச் சிவார்ப்பணமாகக் கருதாமல், தான் பிறருக்குக் கொடுத்ததாகவும் தனக்குப் பிறர் தந்ததாகவுங் கருதுவது குற்றமென்று ஆகமங்களிற் கூறப்பட்டது.

'யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வ மாகி யாங்கே - மாதொரு பாகனார். தாம் வருவார்' எனக் கூறியதும், இவ்வுண் மையை அறிந்தவிடத்து எல்லாஞ்சிவமாகவே தோன்றுமாதலால் 'எத்தனுவில் நின்றும் இறைபணியார்க் கில்லை வினைமுற்செய் வினையுந் தருவான் முன்' எனவும், திருவுந்தியாரில் "பெற்ற சிற்றின்பமே பேரின்பமாய்" எனவும் திருக்களிற்றுப் படியாரில் "உடம்புடைய யோகிகள் தாம் உற்றசிற்றின்ப மடங்கத்தம் பேரின்பத் தாக்கி" எனவும் திருவாசகம் பண்டாய நான்மறைப்பதிகத்தில் 'காணுங் காரணங்க ளெல்லாம்பே ரின்பமெனப் பேணுமடியார்' எனவும் எல்லாஞ்சிவமா யிருந்ததே" எனவும் இவ்வாறு கூறினாரென அறிக.



# இரண்டாம் அதிகரணம்

## அத்துவித நிலையை மறவாது பத்தி செய்தலால் முதல்வன் திருவடியைக் கூடுதலாகிய நிட்டை கூடுமெனக் கூறும் மேற்கோள்

***இனிப் பத்தியினான் மறவாதேத்த அவனது சீபாதத்தை யணையுமென்றது.***

முதல்வனோடு ஏகனாகி நின்றவர்க்கு, அந்நிலையில் அறிவு இச்சை செயல்கள் மூன்றும் தொழிற்படுவதெவ்வாறென்பர் ஒருசாரார். இதில் ஏகனாகி நிற்கும் நிலையில் அறிவு இச்சை செயல்கள் தொழிற்படுமோ தொழிற்படாதோ என்பது ஐயம். இவ்வையப்பாட்டின் கண் தொழிற்படாதென்பது பிறர்கூறும் பக்கம். அவர்களை மறுக்குமுகமாக, நிட்டையின் இயல்பை அறிவித்தற் கெடுத்துக்கொண்ட இச்சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைப் பதச்சேதஞ் செய்து கூறப்பட்டது இந்த மேற்கோள்.

**இ-ள் :** இனி அத்துவித நிலையை மறவாது செய்யும் அன்பினால் அவனது அருள்வழியில் நிற்பின் முதல்வனது திருவடியை அணையும் எ-று.

பத்தியினால் மறவாதேத்தவென மேற்கோளிற் கூறியிருப்பினும் "இத்தையாயும் அறிவுடையனாய் அன்புசெய்ய" என வழிநூலாசிரியருங் கூறுதலால், சூத்திரப் பொருளுக்கேற்ப மேற்கோளிற் கூறியதை "மறவாது பத்தியினா லேத்த என மாறிக் கூறுக. ஏத்த என்று கூறியது உபசார வழக்கு. அன்பு, பக்தி, காதல் என்னுஞ் சொற்கள் இச்சையின் மிகுதியைக் குறிக்கும். இச்சை பரமுத்தியிலு முண்டென்பதை அறியாதார் பத்தி சீவன்முத்தி நிலைக்குரியதொரு சாதனமெனவும் பரமுத்தி நிலைக்குப் பத்தி சாதனமாகாதெனவும் மயங்கித் தத்தமக்கு வேண்டியவாறே கூறுவர். பரமுத்தியில் இச்சை நிகழாதவிடத்துச் சிவபோகத்தை அனுபவித்தல் கூடாது. ஆதலாற் பரமுத்தியிலும் இச்சை யுண்டென்பது பெறப்படும். பத்தி செய்தல் சீவன் முத்திநிலைக்கே உரியதொன்றாயின். அதைச் "செம்மலர் நோன்றாள்" என்னும் பன்னிரண்டாஞ் சூத்திரத்தோடு சேர்த்துக் கூறினாற்போதும். அதை இச்சூத்திரத்தில் வேறாகக் கூறவேண்டியதில்லை. அதனால் பத்தியென்பது பரமுத்தியில் இல்லையெனக் கூறுவது பொருந்தாதெனவும் பரமுத்தி சீவன்முத்தி என்னும் இரண்டுக்கும்

பத்தி வேண்டப்படுமெனவும் இச்சூத்திரம் பரமுத்தி நிலையையே கூறுகின்றதெனவு மறிக.

### பத்தி செய்தலால் திருவடி அடைதல் கூடுமென்பதற்குக் காட்டும் ஏது

***அவன் அந்நியமின்றிச் செய்வோர் செய்திப் பயன் விளைத்து நிற்றலான்.***

பத்தியினால் மறவாதேத்தினும் பரமுத்தியிலன்றி அவனது சீபாதத்தை அடைய முடியாதென்பாரை நோக்கி, மேற்கோளிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வேது.

**இ-ள் :** அம்முதல்வன் உயிரின் வேறாக நில்லாது செய்வோர் செய்வனவற்றை அறிந்து அவ்வச் செயலுக்குத் தக்க பயனை, அச்செயல்கள் மிகுதியாக நிகழுமாயின் செய்தபோதே கொடுத்தும் மிகுதியாக நிகழாதவிடத்துக் காலப்போக்கிற் கொடுத்தும் உயிர்களோடு உடனாய் நிற்பன். ஆதலால் இனிப்பத்தியினால் மறவாதேத்தவே அம்முதல்வனது சீபாதத்தை அணையுமென மேற்கோளிற் கூறப்பட்டது எ-று.

### மறவாது பத்திசெய்தலால் அப்பொழுதே திருவடி அடைதல் கூடுமென்பதற்குக் காட்டும் உதாரணம்

***அருக்கனேர் நிற்பினு மல்லிருளே காணார்க்***
***கிருட்கண்ணே பாசத்தார்க் கீச - னருட்கண்ணாற்***
***பாசத்தை நீக்கும் பகலலர்த்துந் தாமரைபோ***
***னேசத்திற் றன்னுணர்ந்தார் நேர்.***

அரன்கழல் செல்லுதல் உடம்பின் நீங்கிய பின்னன்றி உடம்போடு நிற்கும் போதுங் கூடுமாயின், அது சூரியனது ஒளி ஒருவருக்கன்றி அவருக்குப் பக்கத்தில் இருப்பவருக்கும் புலனாதல் போல உடம்புடைய ஏனையோருக்கும் புலனாதல் வேண்டுமென்பாரை நோக்கி, அரன்கழல் செல்லும் அந்நிலை ஏனையோருக்குப் புலனாகாதெனவும் அயரா அன்பு செய்வோருக்கே புலனாகுமெனவும் உவமைகூறி விளக்கி ஏதுவிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டுகூட்டு :** அருக்கன் நேர் நிற்பினும் காணார்க்கு அல் இருளே ஈசன் பாசத்தார்க்கு இருட்கண்ணே பகல் (நீக்கி) அலர்த்தும் தாமரைபோல் நேசத்தில் தன் உணர்ந்தார் நேர் அருட் கண்ணால் பாசத்தை நீக்கி (அலர்த்தும்)

**இ-ள் :** அருக்கன் நேர் நிற்பினும் காணார்க்கு அல் இருளே - சூரியன் எல்லோர்க்கும் ஒரே விதமாக நிற்பினும் அது பார்வையுடையவர்களது கண்ணுக்கன்றிப் பார்வையற்றவர்களுடைய கண்ணுக்கு இரவின் கண்ணுள்ள இருளாகவே தோன்றுவன். அதுபோல, ஈசன் பாசத்தார்க்கு இருட்கண்ணே - முதல்வன் எவ்விடத்திலுஞ் சமமாகக் கலந்து நிற்பினும் மலம் நீங்கிய முத்தர்க்கன்றி மலமுடைய பெத்தர்களுக்கு அவன் அம்மலத்தா லுண்டாகும் அறியாமையாகவே தோன்றுவன், (சீவன் முத்தரும் ஏனையோரைப்போல உடம்புடைமையாற் பாசத்தாராவர். அவர்களுக்கும் பெத்தருக்கும் வேற்றுமையில்லை யெனின்) பகல் (நீக்கி) அலர்த்தும் தாமரைபோல் - (ஏனைய தாமரைகளோ டொப்ப ஒருங்கு நிற்பினும் பக்குவமுடைய) தாமரையைக் கூம்புதலை நீக்கி அலர்த்தும் சூரியன் போல, நேசத்தில் தன் உணர்ந்தார் நேர் அருட் கண்ணால் பாசத்தை நீக்கி (அலர்த்தும்) - ஏனையோர் போல் உடம்போடு நிற்பினும் பக்குவ முடையவராய்ப் பத்தியினாற் றன்னை மறவா துணர்வார்க்கு முதல்வன் தனது திருவருட் பார்வையாற் பாசத்தை நீக்கி அறிவை விளங்கச் செய்வன் ஆதலால் உடம்புள்ள வழியும் முத்தர் பாசத்தாரல்லர் எ-று.

'ஆதலால் உடம்புள்ள வழியும் முத்தர் பாசத்தாரல்லர்' என்பது குறிப்பாற் கொள்ளப்பட்டமையாற் குறிப்பெச்சம்.

அல்லிருளே என்றதிலுள்ள ஏகாரம், இருளென்பதில் ஐயமில்லை என்பதை உணர்த்துதலால் தேற்றப் பொருளில் வந்தது. செறிந்த இருளெனக் கூறக்கருதி, அல்இருள் என்றார். மலத்துக்குக் கண்ணாவது மலத்தினா லுண்டாகும் அறியாமை.

காணார் என்பது கட்புலனை யிழந்த கண்ணைக் குறித்தலாலும் பகல் என்பது பகற் காலத்தைச் செய்யும் சூரியனைக் குறித்தலாலும் ஆகுபெயர்கள். அருக்கன் ஒப்ப நிற்பினுங் கட்புலனுடையார்க்கு விளங்கித் தோன்றி கட்புலனில்லா தார்க்கு விளங்கித் தோன்றாதவாறு போல, முதல்வன் முத்தருக்கு விளங்கித் தோன்றிப் பெத்தர்க்கு விளங்கித் தோன்றான் என்பதை எடுத்துக் காட்டுவதால் அருக்கன் எடுத்துக் காட்டுவமை.

தன்னுணர்ந்தார் என்றதிலுள்ள 'தன்' என்றவிடத்தில் 'ஐ' உருபு தொக்கு நின்றது. அதை விரித்து 'தன்னை' எனக் கொள்க.

நேர் என்பது ஏழாம் வேற்றுமைப் பொருளைத் தரும். அது இவ்விடத்தில் உருபு மயக்கமாய் நாலாம் வேற்றுமைப் பொருளைத் தருகின்றது. அதனால் தன்னுணர்ந்தார் நேர் என்பதற்குத் 'தன்னை உணர்ந்தார்க்கு' எனப் பொருள் கொள்க.

பாசத்தை நீக்குமென்றதிலுள்ள நீக்குமென்பது தாமரை என்பதோடு கூடி நீக்குதற்குச் செயப்படு பொருளாகிய கூம்புதலையும், பகல் அலர்த்தும் என்றதிலுள்ள அலர்த்தும் என்பது பாசத்தை நீக்கி என்பதோடு கூடி, அலர்த்துதற்குச் செயப்படு பொருளாகிய அறிவையுமின்றி முடியாமையால் அவற்றை வருவித்து, தாமரையைக் கூம்புதலை நீக்கி அலர்த்து மெனவும் பாசத்தைநீக்கி அறிவை அலர்த்து மெனவுங் கொள்க.

**பாசத்தை நீக்கி அறிவை விளங்கச் செய்யும் முறைமை கூறிப் பத்தியினால் அப்பொழுதே திருவடி அடைதல் கூடுமென்பதை வலியுறுத்தும் உதாரணம்**

***மன்னு மிருளை மதிதுரந்த வாறன்பின்***
***மன்னு மரனே மலர்ந்துரந்து - தன்னின்***
***வலித்திரும்பைக் காந்தம் வசஞ்செய்வான் செய்தல்***
***சலிப்பில் விகாரியலன் றான்.***

நேசத்தினாற் றன்னை யுணருஞ் சீவன்முத்தருக்குப் பாசத்தை நீக்கி அறிவை விளங்கச் செய்தல் பரமுத்தியிலன்றி இல்லையென முரண்பட்டுக் கூறுவாரை நோக்கி, பாசத்தை நீக்கி அறிவை அலர்த்தும் முறைமை இவ்வாறென்றுணர்த்தி அதனை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** அன்பின் மன்னும் அரனே மன்னும் இருளை மதிதுரந்தவாறு மலந்துரந்து காந்தம் இரும்பைத் தன்னின் வலித்து வசஞ்செய்வான் செய்தல் சலிப்பு இல் விகாரியலன்தான்.

**இ-ள் :** அன்பின் மன்னும் அரனே மன்னும் இருளை மதி துரந்தவாறு மலந்துரந்து - உயிரைத் தன்வண்ண மாக்கிக் கொள்ள வேண்டுமென் னுங் கருணை மிகுதியால் அநாதியே உயிரோடு கூடி நிலைபெறும் முதல்வன் கண்ணின்கண் நிலைபெறும் இருளைப் பிறைச் சந்திரன் நாடோறுஞ் சிறிது சிறிதாகநீக்கிப் பூரணையிலன்று முற்றாக நீக்குவது போல உயிரிடத்துள்ள மலசக்தியை அவ்வப் பருவந் தோறும் சிறிது சிறிதாகப் படிமுறையினீக்கி முற்றாக இல்லாமற் செய்து, காந்தம்



இரும்பைத் தன்னின் வலித்து வசஞ் செய்வான் செய்தல் சலிப்பு இல் - காந்தம் இரும்பைத் தன்னிடத்திழுத்துத் தன்வசமாகச் செல்தல் போல மலஞ் சிறிது சிறிதாக நீக்கிப்படுந்தோறும் மலத்தை நீக்குகின்ற தனது திருவருட் சத்தியைப் பதிவித்து உயிரைத் தன்பாலிழுத்துத் தன்வசமாகச் செய்துவருஞ் செய்கையில் அவனுக்கு ஒருநாளும் சலிப்பு ஏற்படுவதில்லை, விகாரி அலன் தான் - அவ்வாறு காந்தம்போலச் சந்நிதி மாத்திரையிற் சலிப்பின்றிச் செய்து வருதலால் முதல்வன் வேறுபடுவானு மல்லன் எ-று.

இவ்விடத்தில் மதி என்றது ஏற்புழிக்கோடல் என்னும் உத்தியால் வளர்பக்கத்துச் சந்திரனைக் குறிக்கின்றது. துகளறு போதத்தில் "அந்த அருள் உனக்கு இங்கு ஆதாரமாய் அல்லின் -இந்துவென வெறித் திட்டு" என்றவிடத்தில் அல்லின் இந்து என்றதும் வளர்பக்கத்துச் சந்திரனையே குறிக்கின்றது.

'அரனே' என்றதிலுள்ள ஏகாரம், மலந்துரத்தல் உயிரின் செயலால் ஆவதன்று திருவருட் செயலால் ஆவதாகுமெனப் பொருள் தந்து உயிரின் செயலைப் பிரித்தமையாற் பிரிநிலைக் கண் வந்தது.

'வான்' என்பது வினையெச்ச வாய்பாடாயினும் 'வசஞ்செய் வான்' என்ற விடத்தில் தொழிற் பெயர் விகுதியாய் நின்று வசஞ்செய்தல் என்னும் பொருளைத் தருகின்றது. வசஞ்செய்வான் என்ற இடத்தில் உவம உருபை விரித்து, வசஞ்செய்வான்போல் எனக் கொள்க. சலித்தல் - இளைத்தல். செய்தல் என்ற இடத்தில் ஏழாம் வேற்றுமைக் கண் உருபை விரித்து, செய்தற்கண் என்க.

மதி துரந்தவாறு மலந்துரந்து என்றதனால் உடம்பு நீங்கியபின் பரமுத்தியிலேயே மலம் நீங்குமென்பார் மதம் மறுக்கப்பட்டது. படிமுறையில் மலத்தை நீக்குதலாலன்றோ சத்திநிபாதம் சிவபுண்ணியம் முதலியன மந்ததரம் மந்தம் தீவிரம் தீவிர தரமென நால்வேறு வகைப்பட்டதும் அவையொவ்வொன்றும் நான்கு நான்காகப் பதினாறு வகைப்பட்டதும், அவையொவ்வொன்றும் பல்வேறுவகைப்பட்டு விரிந்ததுமென அறிக.

**மலம் அனாதியாயினும் நீக்கப்படுமெனக் கூறி மலம் நீங்குமென மேற்கூறியதை வலியுறுத்தும் உதாரணம்**

***நசித்தொன்றி னுள்ள நசித்தலா லொன்றா***
***நசித்திலதே லொன்றாவ தில்லை - நசித்துமல***
***மப்பணைந்த வுப்பி னுளமணைந்து சேடமாங்***
***கப்பின்றா மீசன் கழல்.***

உயிருக்குக் குணம் போல ஆன்மாவோடு அனாதியாயுள்ள சகசமலம் அவ்வுயிரின் வேறாய் நீக்கப்படக் கூடியதன்றாகலால் முன்னைய வெண்பாவில் மலந்துரந்து எனக் கூறியது பொருந்தா தென்பர் பாடாணவாத சைவர். அவர்களை நோக்கி, அருத்தாபத்திப் பிரமாணங் கொண்டு மலம் அனாதியானாலும் ஆன்மாவின் கிரியா சத்தியால் நீங்குமெனக் கூறி முன்னைய வெண்பாவிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** நசித்து ஒன்றின் உள்ளம் நசித்தலால் ஒன்றா நசித்திலதேல் ஒன்று ஆவது இல்லை. அப்பு அணைந்த உப்பின் மலம் நசித்து உளம் ஈசன் கழல் அணைந்து சேடம் ஆம் கப்பு இன்று ஆம்.

**இ-ள் :** நசித்து ஒன்றின் உள்ளம் நசித்தலால் ஒன்றா நசித்திலதேல் ஒன்று ஆவது இல்லை - (அரன்கழல் செல்லும்போது அதனை ஆன்மா கெட்டு ஒன்றுமோ கெடாதொன்றுமோ எனக் கேட்போ ருக்கு) கெட்டொன்று மென்று கூறின் ஆன்மா கெட்டுப் போதலால் ஒன்றாக மாட்டாது, கெடாது ஒன்றுமெனில் ஆன்மா கெடாத போது அரனும் ஆன்மாவும் இருபொருளாய் நிற்றலால் ஒன்றாவதில்லை, ஆகவே மலம் நீங்கினாலன்றித் திருவடியைக் கூட முடியாதென்னும் அருத்தாபத்திப் பிரமாணத்தால், அப்பு அணைந்த உப்பின் மலம் நசித்து உளம் ஈசன் கழல் அணைந்து சேடம் ஆம் - உப்புத் தனது கடினத் தன்மை நீங்கி நீரோடு ஒன்றாவது போல ஆன்மா தன்னோடு இயல்பாகவே கூடியிருந்த ஆணவ மலங்கெட்டொழியஅரன் கழலை அடைந்து அவ்வரன் திருவடிக்கு அடிமையாகும், கப்பு இன்றாம் - அவ்வாறு அடிமையாகிய ஆன்மா மீள மலத்தைப் பற்றுதல் இல்லை எ-று.

வெண்பாவில் ஒன்றா என்ற இடத்தில் 'து' விகுதி செய்யுள் விகாரத்தாற் கெட்டது. அதை விரித்து, ஒன்றாது என்க. நசித்து மலம் என்றதில் நசித்து என்பது நசிக்க என்னும் பொருளைத் தருகின்றது. நசிக்க என்பது செயவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். அது நசித்து எனத் திரிந்து நின்றது.

எந்த ஒருபொருள் வேறொரு பொருளைப் பற்றித் தனக்கெனச் சுதந்திரமின்றி நிற்கின்றதோ, அப்பொருள் தான் பற்றி நிற்கும் பொருளுக்குச் சேடமாகும். இந்நூலின் இரண்டாஞ் சூத்திரத்து நாலாம் அதிகரணத்தில் "அவை உடைமை ஆளாம் நாம் அங்கு" எனக் கூறப்பட்டிருப்பதால், திருவடியை அடையாத உயிர்களும் பாசங்களும் முதல்வனுக்குப் பொதுவகையாற் சேடமாயினும்



திருவடியை அடைந்த உயிரைப் போலச் சிறப்பு வகையால் அடிமையாதல் இல்லை. அதனால் அரனடியை அடைந்த ஆன்மா சிறப்பான அடிமையாதலை இவ்விடத்தில் வேறாக எடுத்துக் கூறினார்.

இதுவரை முத்திநிலை பற்றிக் கூறிமுடித்தமையால், இறுதியில் மலம் நீங்குமெனக் கூறிய தோடமையாது, மலம் மீளப் பற்றுதல் இல்லையெனவுங் கூறி, பற்றாமைக்குக் காரணம் திருவடியை விட்டு நீங்காமை யென்பதையுங் கூறினாரெனக் கொள்க.

**கேவல சகல சுத்தம் என்னும் மூன்று நிலையை ஆன்மா அடைதலால் சார்ந்ததன் வண்ணமாம் தன் தன்மையினின்றும் வேறுபடாதெனக் கூறி மலம் நீக்கப்படுமென்று மேற்கூறியதை வலியுறுத்தும் உதாரணம்**

***பொன்வாண்முன் கொண்மூவிற் புக்கொடுங்கிப் போயகலத்***
***தன்வாளே யெங்குமாந் தன்மைபோன் - முன்வாண்***
***மலத்தின் மறைந்துள்ள மற்றுலகை யுண்ணு***
***மலத்திரித்துச் செல்லும் வரத்து.***

நான்காஞ் சூத்திரம் முதல் இதுவரை கூறப்பட்ட கேவலம் சகலம் சுத்தமென்னும் மூன்றுவிதமான அவத்தைகளிலும் ஆன்மா சார்ந்ததன் வண்ணமாய் நிற்குந் தன்னியல்பு கெடுதலின்றியே நிற்குமென்பதை உவமையில் வைத்துக் காட்டி மலம் நீக்கப்படுமென முன்பு கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** பொன்வாள் முன் கொண்மூவில் புக்கு ஒடுங்கிப் போய் அகல எங்கும் தன் வாளே ஆம் தன்மைபோல் உள்ளம் முன்வாள் மலத்துள் மறைந்து மற்று (ஒடுங்கி) உலகை உண்ணும் (மற்று) மலத்து இரித்து (எங்குமாம்வாள்) வரத்துச் செல்லும்.

**இ-ள் :** பொன் வாள் முன் கொண்மூவில் புக்கு - சூரியன் காலைப்பொழுதில் முகிற்படலத்துள் மறைந்து, ஒடுங்கி - அம்முகிற் படலத்தின் ஒருபகுதி நீங்கியபோது தன்னொளி சிறிதே விளங்கித் தோன்றி, போய் அகல எங்கும் தன்வாளே ஆம் தன்மைபோல் - அம்முகிற் படலம் பெருங்காற்றால் அடியுண்டு முழுவதும் நீங்கியபோது எவ்விடத்தும் தன்னொளியேயாய் விளங்கித் தோன்றுந் தன்மைபோல, உள்ளம் முன்வாள் மலத்துள் மறைந்து - ஆன்மா அநாதியே தன்னறிவு மலத்துள் மறைப்புண்டு கேவலப்பட்டு, மற்று (ஒடுங்கி) உலகை உண்ணும் - பின்பு கருவிகளோடு கூடிச் சிறிது அறிவு விளங்கப் பெற்று ஐம்பொறிகளால் உலகப் பொருள்களை

அறிந்து அனுபவிக்கும், மற்று மலத்து இரித்து (எங்குமாம் வாள்) வரத்துச் செல்லும் - பின்பு அம்மலத்தை முதல்வன் அருளால் பற்றற நீக்கி வியாபகமாய் அறிவு விளங்கப்பெற்று அவனது திருவடியை யணைந்து சுத்தப்படும் எ-று.

முகிற் கூட்டத்துள் மறைந்தபோதும் ஒளிகெடாது ஒடுங்கி இருத்தலால் ஒளியுடைமையைச் சூரியனது தன்மை என்றார். தன்வாளே என்றதிலுள்ள ஏகாரம் எங்குமாய் விளங்கும் ஒளி ஒடுங்கியும் சிறிதாயும் விளங்கும் ஒளியின் வேறன்று என்பதை உணர்த்துதலால் தேற்றம்.

'முன்வாள்' என்ற இடத்தில் வரும் வாள் என்பது ஆன்மாவின் அறிவைக் குறித்தலால் ஆகுபெயர். மற்று என்னும் இடைச்சொல் வினைமாற்றின்கண் வந்தது. 'மற்றுலகை உண்ணும்' என்ற இடத்திலுள்ள 'மற்று' என்பது மலத்துள் மறைந்து கிடந்ததற்கு மாறாகக் கருவிகளோடு கூடி உலகை உண்ணும் எனவும், மலத்திரித்துச் செல்லும் என்ற இடத்திலுள்ள மற்று என்பது, உலகை உண்பதற்கு மாறாக மலத்திரித்து வரத்துச் செல்லும் எனவும் பொருள் தந்து நின்றது.

ஒடுங்கி எனவும், எங்குமாம் எனவும் உவமையாகிய சூரியனுக்குக் கூறிய வினைகள் உவமேயமாகிய ஆன்மா என்பதனோடுஞ் சென்று சேர்ந்தன. அதனால் ஆன்மா தன்னறிவு மலத்துள் மறைப்புண்டு கேவலப்பட்டு எனவும் வியாபகமாய் அறிவு விளங்கப் பெற்று எனவும் உரை செய்யப்பட்டது.

ஆன்மாவின் அறிவு மறைந்தும் ஒடுங்கியும் மறைப்பு நீங்கி எங்குமாய், விளங்குதலுக்கும் மாத்திரமே சூரிய ஒளி உவமையாகக் கூறப்பட்டது. அது முற்றுவமை அன்றென்பதை உணர்த்தக் கருதிச் சகலத்தில் ஆன்மா உலகை யுண்ணுமெனவும் சுத்தத்தில் மலத்திரித்து வரத்துச் செல்லுமெனவும் உவமானத்துக்கும் உவமேயத்துக்குமுள்ள வேற்றுமையையும் உடன் கூறினார்.

மலம் நசித்தலாவது மலத்தினுடைய மறைத்தற் சத்தி மடங்கிக் கீழ்ப்படுதல் மாத்திரமேயன்றி வேறல்ல வென்பது இவ்வுவமையாற் பெறப்படும். இதனை மேகமண்டலத்திலுள்ள முகிற்படலம் சூரியனை மறைக்குஞ் சத்திகெட்டும் தான் கெடாதிருப்பதாலறிக.

பதினொராஞ் சூத்திரம் முற்றிற்று.

★★★



# பன்னிரண்டாஞ் சூத்திரம்

பதினொராஞ் சூத்திரத்தால் சிவப்பேறு கூறி, அப்பேறுபெற்ற ஞானிகள் உடம்போடு கூடியிருக்கு மளவும் எவ்வாறிருப்பர் என்பதை இப்பன்னிரண்டாஞ் சூத்திரத்தாற் கூறி, மேல் ஆசங்கை இன்மையின் நூலை முடிக்கின்றார்.

***செம்மலர் நோன்றாள் சேர லொட்டா***
***ம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ***
***மாலற நேய மலிந்தவர் வேடமும்***
***ஆலயந் தானும் அரனெனத் தொழுமே.*** என்பது சூத்திரம்

**கருத்துரை**

***அசிந்திதனாய் நின்ற பதியைச் சிந்திதனாகக் கண்டு வழிபடுமா றுணர்த்துத னுதலிற்று***

மேலைச் சூத்திரத்திற் பரமுத்தி கூறி இச் சூத்திரத்திற் சீவன் முத்தி கூறுதலால் சூத்திரங்களுக்கிடையேயுள்ள தொடர்பு பெறப்படும்.

**சூத்திரத்தின் பொருள் :** *(அயரா அன்பின் அரன்கழல் அணைந்த சீவன்முத்தர்)* செம்மலர் நோன்றாள் சேரல் ஒட்டா அம்மலம் கழீஇ - செங்கமல மலர்போல விரிந்து விளங்கும் முதல்வனது தாங்குந் திருவடிகளை அணையவிடாது அத்திருவடிகளை அயர்த்தலைச் செய்விக்கும் அவ்வியல்பினையுடைய மும்மல அழுக்கை ஞான நீராற்கழுவி, அன்பரொடு மரீஇ - மெய்ஞ்ஞானிகளோடு கலந்து கூடி, மாலற - மலத்தினாலுண்டாகும் மயக்கம் நீங்குதலால், நேயம் மலிந்தவர் வேடமும் ஆலயம் தானும் - சிவபெருமானிடத்து அன்பு மிக்கவருடைய திருவேடமாகிய விபூதி உருத்திராக்கங்களையும்

சிவாலயத்தையும், அரன் என தொழுமே - முதல்வனெனவே கண்டு வழிபட்டு வாழ்வன் ஏ-று.

சீவன் முத்தன் என்னும் எழுவாய் முன்னைய சூத்திரத்திலிருந்து வருவிக்கப்பட்டது. நோன்றாள் என்பது நோன்ற தாள் நோற்கின்றதாள் நோற்குந்தாள் உன விரியுமாதலால் வினைத் தொகை.

நோன்றல் - பொறுத்தல், தாங்குதல்.

இக்கருத்துப் பற்றியே உமாபதி சிவாச்சாரியார் திருவருட் பயனில் எடுத்துச் சுமப்பானை என்றார்.

கழீஇ என்றது மலத்தை அழுக்காகவும் ஞானத்தை நீராகவும் குறிப்பால் உருவகஞ் செய்யும்படி நின்ற குறிப்புருவகம்.

மாலற நேயம் மலிந்தவரென்றது, அம்மலங்கழீஇ அன்ப ரொடு மருவினாரெனப் பொருள்தந்து, மாலற நேயம் மலிந்தவரையே சுட்டி நின்றது. அன்பு மிகுதல் கூறவே அவர்கள் வழிபடுவாரென்பதும் பெறப்படும். ஆலயந்தானும் என்ற இடத்திலுள்ள தான் அசை.

அம்மலங் கழீஇ என்றதனால் சீவன்முத்தருடைய அறிவு மலத்தை நீக்குதலிலே தொழிற்படுமெனவும், அன்பரொடு மரீஇ என்றதனால் அவர்களது இச்சை அடியாரோ டிணங்குதலிலே தொழிற்படுமெனவும், தொழும் என்றதனால் திருவேடத்தையும் சிவாலயத்தையும் தொழுதலிலே செயல் நிகழுமெனவும் பெறப்பட்டது. சீவன் முத்தருக்கு அறிவு இச்சை செயல்கள் இவ்விடங்களில் தொழிற்படும் என்றதனால் அவர்களது அறிவு இச்சை செயல்கள் வேறிடங்களிற் செல்லாதென்பதும் பெறப்பட்டது. மலங்கழுவுதலால் அன்பரொடு மருவுதலும் அன்பரொடு மருவுதலால் அவர்களையும் அவர்களது வேடத்தையும் ஆலயத்தையும் வழிபடுதலும் பிரிப்பின்றி ஓரிடத்து ஒன்றாக நிகழ்வனவாதலால் அறிவு இச்சை செயல்கள் மூன்றும் அரனையே குறித்து நிகழ்வனவாமென அறிக.

தொழுக எனக் கூறாது தொழும் என்றமையால் தொழுதல் திருவடியடைந்த சீவன்முத்தரது தன்மையென்பது பெறப்பட்டது. அதனாலன்றோ இதனைச் சாதன இயலில் வையாது பயனியலாகிய இவ்விடத்தில் வைத்தார்.

தொழும் என்பதனை இரட்டுற மொழிந்து கொண்டு, தொழுக என முன்னிலை ஏவலாகவுங் கொள்க.



செல்வப் பெருக்குடையார்க்கு உணவாகிய பசுவின்பால் உடம்பு நோயின்றி வளரச் செய்யும் மருந்துமாதல்போல, சீவன்முத்தர் செய்யும் இவ்வழிபாடு வாசனா மலஞ் சிறிதுந் தாக்காதிருப்பதற்கும் சிவானந்தத்தை மேலும் மேலும் வளரச் செய்வதற்குமுரிய சாதனமாகவும் இருத்தலால், சிவானந்தானுபவ வளர்ச்சி பற்றி வழிபடுதலைச் சீவன்முத்தரது இலக்கணமாகவும், மலத்தை நீக்குதல் பற்றி வழிபடுக என்பதைச் சீவன் முத்தருக்குரிய விதியாகவும் கொள்க.

இச்சூத்திரத்தில் செம்மலர் நோன்றாள் சேரலொட்டா அம்மலங் கழீஇ என்றது ஓரதிகரணம், அன்பரொடு மரீஇ என்றது ஓரதிகரணம், மாலற நேய மலிந்தவர் வேடமும் ஆலயந்தானும் அரனெனத் தொழுமே என்றது ஓரதிகரணம். ஆக மூன்றதிகரணங்களை யுடையது இச்சூத்திரம்.

## முதலதிகரணம்

**சீவன் முத்தர் முதலாவது செய்ய வேண்டுவது மும்மலங்களைக் களைதல் எனக்கூறும் மேற்கோள்.**

***ஈண்டு ஆணவ மாயை கான்மியமென்னு மலங்களைக் களைகவென்றது.***

சூத்திரத்தின் முதற் கூற்றைப் பதச்சேதஞ் செய்து, ஆணவம் மாயை கான்மியமென்னும் மலங்களைக் களைக என்று கூறுகின்றது இந்தமேற்கோள். இதில், சீவன் முத்தர் மலங்களைக் களைய வேண்டுமோ வேண்டாமோ என்பது ஐயம். இவ்வையப்பாட்டின் கண் மலங்களைக் களைய வேண்டாமென்பது பிறர் கூறும் பக்கம்.

இருவினையால் உடம்பும் உடம்பால் இருவினையும் மாறி மாறி வரும். கேவலத்தினின்றும் நீங்கி உடம்பெடுத்தற்குக் கன்மம் வேண்டும். அந்தக் கன்மமே மூலகன்மம் எனப்படும். மூலகன்மம் ஆன்மாவின் இச்சாசத்தியின் காரியமாகிய விருப்பு வெறுப்பேயாகும். மூலகன்மத்தின் சம்பந்தமாய் நிகழும் இருவினைகளும் கான்மிய-மெனப்படும்.

கான்மியம் என்பதற்குக் காமியமெனப் பாடபேதங்கொண்டு, காமிய மென்பது ஆகாமியமென்பதன் தலையெழுத்துக் குறைந்து நின்றதெனக் கொள்வாருமுண்டு.

## சீவன் முத்தர் மும்மலங்களைக் களைய வேண்டும் என்பதற்குக் காட்டும் ஏது

***அவைதாம் ஞானத்தை யுணர்த்தாது அஞ்ஞானத்தை யுணர்த்து மாகலான்.***

"மலமாயை தன்னொடு வல்வினையின்றே" எனப் பத்தாஞ் சூத்திரத்திற் பாச நீக்கங் கூறப்பட்டமையால், அவ்வாறு பாசநீக்கம் பெற்று பதினொராஞ் சூத்திரத்திற் கூறியவாறு மெய்யுணர்ந்து அரன் திருவடி அடைதலாகிய நிட்டை கூடியபின் ஆன்மா மும்மலங்களை-யுங் களையவேண்டுமென்பது எவ்வாறு பொருந்துமென்பாரை நோக்கி, சூத்திரத்தில் "செம்மலர் நோன்றாள் சேரலொட்டா அம் மலம்" என்ற உடம்போடு புணர்த்திக்கூறிய 'அயர்த்தலைச் செய்விக்கும்' என்றதனை விளக்கிக் கூறி மேற்கோளை வலியுறுத்து-கின்றது இவ்வேது.

**இ-ள் :** ஆணவம் கன்மம் மாயையென்னும் மும்மலங்களும் மெய்யுணர்ந்து நிட்டை கூடியவர்களிடத்தும் ஏதாவதொரு வழியால் நுழைந்து அவர்களது மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்திப் பிறவிக்கு வித்தாகிய முன்னைய விபரீதவுணர்வை மேம்படுத்துவனவாம். அவ்விபரீத வுணர்வு மெய்யுணர்ந்து நிட்டை கூடியவர்களுக் காகாமையால், மேற்கோளில், ஆணவ மாயை கான்மிய மென்னும் மலங்ளைக் களைகவெனக் கூறினார்.

உணர்த்துதல் - உணர்வதற்குக் காரணமாதல். இவ்விடத்தில் அஞ்ஞானமென்றது விபரீத உணர்வை. விபரீத உணர்வாவது தான் அல்லாத உடம்பைத் தானெனவும் தனதல்லாத பொருள்களைத் தனதெனவுங் கருதுதல்.

## சீவன் முத்தர் மும்மலங்களைக் களைய வேண்டும் என்பதற்குக் காட்டும் உதாரணம்

***புண்ணிய பாவம் பொருந்துமிக் கான்மியமு***
***மண்முதன் மாயைகாண் மாயையுங் - கண்ணிய***
***வஞ்ஞானங் காட்டுமிவ் வாணவமு மிம்மூன்று***
***மெய்ஞ்ஞானிக் காகா விடு.***

ஆணவம் மாயை கான்மியம் என்னும் மும்மலங்களும் அஞ்ஞானத்தை உண்டு பண்ணுவதற் கேதுவாய் வந்து நுழையும் முறையையும், மும்மலங்கள் வந்து நுழைதல் சீவன் முத்தர்க்கு



ஆகாதென்பதையும் தெளிவாகக் கூறி ஏதுவிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**இ-ள் :** புண்ணிய பாவம் பொருந்தும் இக் கான்மியமும் - புண்ணிய பாவப் பயனாயும் புண்ணிய பாவத்துக்குக் காரணமாயும் பொருந்து-கின்ற இக்கன்ம மலமும், மண்முதல் மாயை காண் (இம்) மாயையும் - நிலம் முதல் அசுத்த மாயையீறாக முப்பத்தொரு தத்துவங்களாகக் காணப்படுகின்ற மாயாமலமும், கண்ணிய அஞ்ஞானம் காட்டும் இவ்வாணவமும் - சுட்டியறிவதாகிய விபரீத உணர்வை உண்டு பண்ணும் இவ்வாணவமலமுமாகிய, இம்மூன்றும் மெய்ஞ்ஞானிக்கு ஆகா விடு - இம்மலங்கள் மூன்றும் மெய்யுணர்வையுடைய உனக்காகாமையால் அவற்றை விடுவாயாக எ-று.

எல்லா மலங்களையும் முற்றாகக் களைந்து இறைவன் அத்துவிதமாய் நின்று உபகரித்துவரும் உண்மையை உணர்ந்து நிட்டை கூடிய முத்தருக்கு உடம்பு நிற்குமளவும் பிராரத்தவினை அவ்வுடம் பைப் பற்றி நிற்கும். அதனால் அப்பிராரத்தம் அவர்களையும், உடம்போடு கூடிநிற்கும் பழக்க வாசனை காரணமாகப் பெருங்காயம் வைத்தெடுத்த பாத்திரத்திற் பெருங்காயம் இல்லாத போதும் அதன் வாசனை தங்கியிருந்து தாக்குவதுபோல வந்து தாக்கும்.

பிராரத்தவினை தாக்குவதால் அவ்வினைப்பயனை அனுபவிக்கும்போது அவ்வனுபவம் "பிற்செயா தனுபவிப்ப தின்று" எனச் சித்தியாரிற் கூறப்பட்டது போலச் செயல் வழியாகவே நிகழும். ஆதலால், அது சார்பாக விருப்பு வெறுப்புக்கள் உண்டாகும். விருப்பு வெறுப்புக்கள் உண்டாகவே பரமே பார்த்திருக்கும் முத்தருக்கு நிலம் முதலிய உலகப் பொருள்கள் தோன்றும்.

உலகப்பொருள்கள் காட்சிப்படவே சுட்டியறிவதாகிய விபரீத உணர்வு மேம்பட்டு மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்திப் பிறவிக்கு வித்தாகும். இவ்வாறு விருப்பு வெறுப்புகளைச் செய்யுங் கன்ம மலமும், உலகப்பொருள்களைத் தோற்றச் செய்யும் மாயாமலமும், விபரீத உணர்வை உண்டுபண்ணும் ஆணவ மலமுமாகிய மூன்றும் திருவடியைக் கூடிய உணர்வு பிராரத்தவினை காரணமாக மறக்குஞ் சமயம் பார்த்து வந்து கூடும்.

இவ்வாறு கன்ம மலமும் மாயா மலமும் ஆணவ மலமும் ஒன்றன்பின் ஒன்றாக வந்து சேருமெனக் கூறக்கருதி, கன்மம் மாயை ஆணவமென்றிம் முறையில் வைத்து, அம்மலங்களின் காரியங்களை

யும் எடுத்துக் காட்டி அவை ஒவ்வொன்றும் எந்தெந்த மலத்தின் காரியமெனவுங் கூறினார்.

இக்கான்மியமும் இவ்வாணவமும் எனக் கூறியதற் கேற்ப, இகரச் சுட்டை இடையிலுள்ள மாயை என்பதனோடுஞ் சேர்த்து இம்மாயையும் எனக் கொள்க. புண்ணியத்தின் பயனாகிய இன்பத்தையும் பாவத்தின் பயனாகிய துன்பத்தையும் புண்ணிய பாவங்களுக்குக் காரணமாகிய நல்வினை தீவினைகளையும் புண்ணிய பாவம் என்றது உபசாரம்.

மாயை காண் மாயை என்றதில் முதலில் வந்த மாயை முப்பத்தொராவது தத்துவத்தை உணர்த்தி விடாத ஆகுபெயராய்த் தன்னை இறுதியாக வுடைய ஏனைய தத்துவங்களையும் தழுவிற்று.

காண்மாயை என்பது வினைத்தொகை. காண்மாயை - காணப்படுகின்ற மாயை.

மும்மலங்களும் சிவபோகத்தை அனுபவிக்கும் பெருவாழ்வை இழக்கும்படி செய்யுமாதலால் மெய்ஞ்ஞானிக் காகாவாயின. மேலும்மேலும் முறுகி வளரும் இம்மலங்களைத் தோன்றும்போதே துடையாவிட்டால்' களைகுநர் கைகொல்லும் காழ்த்த விடத்து என வள்ளுவர் கூறியது போல முடியுமென்னுங் காரணத்தால், மெய்ஞ் ஞானிக் காகாவிடு என இவ்வுதாரணத்திலும் வலியுறுத்தப்பட்டது.

விடுதலாவது விபரீத உணர்வாகிய அஞ்ஞானம் பிரபஞ்சக் காட்சியாகிய சுட்டுணர்வினால் வந்ததெனவும், பிரபஞ்சக் காட்சி விருப்பு வெறுப்புக்களது தோற்றத்தால் வந்ததெனவும், விருப்பு வெறுப்புக்கள், பிராரத்த வினையை அனுபவிக்கும் பொருட்டுச் சென்ற தற்போதத்தால் வந்ததெனவும் அறிந்து, தற்போதம் முளையாதவாறு தடுத்து, நான் என்னும் தற்போதமின்றிச் சிவ ஞானத்துள் அடங்கிச் சிவஞான சித்தியாரிற் கூறியபடி சிவாநுபவம் சுவாநுபூதியாம்படி ஞான நிலையில் உறைத்து நிற்றலேயாம்.

மாயை கன்மங்கள் அஞ்ஞானத்தை உணர்த்துதல் ஆணவ மலத்தோடு கூடிய செயற்கை என்பதை உணர்த்துவதற்காக, கன்மம் மாயை ஆணவம் என்னும் மூன்றுக்கும் பொதுவாக, மூன்றும் அஞ்ஞானத்தை உணர்த்துமென ஏதுவிற் கூறியதை இவ்விடத்தில்; அஞ்ஞானங் காட்டுமிவ் வாணவமுமென ஆணவத்துக்கு மாத்திரமே சிறப்பாக எடுத்துக் கூறினார்.



# இரண்டாம் அதிகரணம்

## சீவன் முத்தர் இரண்டாவது செய்ய வேண்டுவது களைந்த மலங்கள் மீளப் பற்றாத வண்ணம் சிவனடியாரோடு இணங்கவேண்டும் எனக்கூறும் மேற்கோள்

***இனிச் சிவபத்தர்களோ டிணங்குக வென்றது.***

மும்மலங்களையுங் களைந்த சீவன்முத்தர் அம்மலங்கள் தம்மை மீளப் பற்றாதிருக்கும் பொருட்டுச் செய்ய வேண்டியது சிவபத்தர்-களோடு இணங்குதலே யெனச் சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைப் பதச்சேதஞ் செய்து கூறப்பட்டது இந்த மேற்கோள். இதில், சீவன்முத்தர் சிவபத்தர்களோடுதான் இணங்கவேண்டுமோ சிவபத்தரல்லாதாரோடு இணங்கக் கூடாதோ என்பது ஐயம். இவ்வையப்பாட்டின்கண் அல்லாதரோடும் இணங்கலா மென்பது பிறர் கூறும்பக்கம்.

இவ்விடத்திற் சிவபத்தரென்றது பத்தியினால் மறவாதேத்திச் சிவபெருமானது சீபாதத்தை யடைந்த சீவன்முத்தரைக் குறிக்கின்றது.

இணங்குதல் - நட்புச்செய்தல். சிவபத்தர்களோடு இணங்குக என்றதனால், அதன் எதிர்மறையாகச் சிவபத்தர் அல்லாதாரோடு இணங்கற்க என்பதும் பெறப்பட்டது.

## சீவன்முத்தர் சிவபத்தர்களோடு இணங்கவேண்டும் என்பதற்குக் காட்டும் ஏது

***அல்லாதார் அஞ்ஞானத்தை யுணர்த்துவராகலான்.***

உறவினர், பகைவர் என்ற வேறுபாடின்றி எல்லாரையும் சமமாகக் கருதும் மெய்ஞ்ஞானிகள் சிலரிடத்து நட்பும் சிலரிடத்து நட்பின்மையும் உடையராய் இருத்தல் பண்பல்லவெனக் கூறுவாரை நோக்கி மேற்கோளிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வேது.

சிவபத்தரல்லாதார் அஞ்ஞானத்தை உணர்த்துமாறு:-

***"தெய்வ மென்பதோர் சித்தமுண் டாகி***
***முனிவி லாததோர் பொருளது கருதலு***
***மாறு கோடி மாயா சத்திகள்***
***வேறு வேறுதம் மாயைக டொடங்கின***
***வாத்த மானா ரயலவர் கூடி***
***நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்***

*சுற்ற மென்னுந் தொல்பசுக் குழாங்கள்*
*பற்றி யழைத்துப் பதறினர் பெருகவும்*
*விரத மேபர மாகவே தியருஞ்*
*சரத மாகவே சாத்திரங் காட்டினர்*
*சமய வாதிக டத்த மதங்களே*
*யமைவ தாக வரற்றி மலைந்தனர்"* என்றது முதலாக மாணிக்க வாசக சுவாமிகள் கூறுந் திருவாக்குகளா லறிக.

தற்போதம் முனைத்துத் தோன்றும் சந்தர்ப்பங்களில் மாத்திரமே மும்மலங்களும் அஞ்ஞானத்தை யுணர்த்துவதற் கேதுவாகும். அவ்வாறன்றிச் சிவபத்தரல்லாதார் தற்போதந் தோன்றாத சந்தர்ப்பத்திலும் தற்போதத்தைத் தோன்றச் செய்து, பலவேறு உபாயங்களாலும் மெய்ஞ்ஞானிகளையும் தம்மோடொத்த விபரீத உணர்வுடையவராகச் செய்தே விடுவர். அதனால் அம்மலங்களிலுங் கொடியவராகிய சிவபத்தரல்லாதாருக்கு மலங்களுக்கு அஞ்சுவதிலும் பார்க்கக் கூடுதலாக அஞ்சி அவர்களை விட்டு நீங்குவதே அறிவுடைமையாகும்.

### சீவன் முத்தர் சிவபத்தர்களோடு இணங்க வேண்டும் என்பதற்குக் காட்டும் உதாரணம்

*மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்குஞ்*
*சிறப்பில்லார் தந்திறத்துச் சேர்வை - யறப்பித்துப்*
*பத்த ரினத்தாய்ப் பரனுணர்வி னாலுணரு*
*மெய்த்தவரை மேவா வினை.*

அஞ்ஞானத்தை உண்டுபண்ணும் சிவபத்தரல்லாதாரோடு இணங்காதிருப்பது மாத்திரமே போதும்; சிவபத்தர்களோடு இணங்க வேண்டுமென்பது எதற்காக வென்பாரை நோக்கி, சிவபத்தர்களோடிணங்க வேண்டுமென மேற்கோளிற் கூறியதை வலியுறுத்துகின்றது. இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** தம்மை மறப்பித்து மலங்களின் வீழ்க்கும் சிறப்பு இல்லார் தம் திறத்துச் சேர்வை அற பத்தர் இனத்துப் பித்துஆய் பரன் உணர்வினால் உணரும் மெய்த்தவரை வினைமேவா.

**இ-ள் :** தம்மை மறப்பித்து மலங்களின் வீழ்க்கும் சிறப்பு இல்லார் தம் திறத்துச் சேர்வை அற - முதல்வன் காட்டியும் கண்டும் உபகரித்து வரும் அத்துவித நிலையை மறவாத சீவன் முத்தருக்கு அவர்களது ஞானக் கண்ணை இழக்கச் செய்து தீய நெறியிற் கொண்டு சென்று



மலங்களால் உண்டாகும் பிறவிக் குழியில் வீழ்த்தித் துன்புறுத்துபவராகிய அன்பில்லாதாரோடு தொன்றுதொட்டுப் பழகிவந்த சேர்க்கை அறும்படி, பத்தர் இனத்துப் பித்து ஆய் பரன் உணர்வினால் உணரும் மெய்த்தவரை - ஞானக் கண்ணை இழக்கச் செய்த அம்மறதியை மாற்றி ஞானக் கண்ணைக் கொடுத்துப் பிறவிக் குழியிலிருந்தெடுத்து நன்னெறியிற் செலுத்தி வாழ்விக்கும் சிவபத்தரோடு பேரன்புடையராய் அவ்வன்பு சார்பாக விளங்கும் சிவஞானக் கண்ணால் அவ்வத்துவித நிலையைக் கடைப்பிடித்து உண்மை உணரப்பெற்ற மெய்த்தவராயினாரை, வினை மேவா - எல்லாத்துன்பங்களுக்கும் மூலகாரணமாய்ச் சிவபத்தரல்லாதார் சேர்க்கையை உண்டுபண்ணும் பிராரத்த வினைகள் தாக்கமாட்டா எ-று.

அல்லாதார் அஞ்ஞானத்தை உணர்த்துவரென ஏதுவிற் கூறியதை அநுவதித்து "மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்குஞ் சிறப்பில்லார்" என முன்பு கூறிய பொருளையே இவ்வுதாரணத்தில் விரித்துக் கூறினார். இவ்வாறு விரித்துக் கூறியதன் மூலம் அதன் எதிர்மறையாக, மறதியை மாற்றி ஞானக் கண்ணைக்கொடுத்துப் பிறவிக் குழியினின்றும் எடுத்து நன்னெறியிற் செலுத்தி வாழ்விக்கும் சிறப்புடையாரெனச் சிவபத்தரது பெருமையை உணர்த்தியவாறு காண்க.

மலம் என்றது மலங்களினாலாகிய பிறவிக் குழியைக் குறித்தலால் ஆகுபெயர். வீழ்க்குமென்றது உருவகமாதலால் அவ்வுருவகத்திற்கேற்ப மலங்களினாலாகும். பிறவியைக் குழியாக உருவகஞ்செய்தார். எல்லாவற்றினுஞ் சிறந்தது அன்பாதலால் அன்பைச் சிறப்பென்றார்.

பித்து - அன்பு. தீவிரதர அன்புடையவர் பித்துப் பிடித்தவர் போலத் தம்மை மறந்து அன்பு செய்யும் பொருளையே நினைத்திருப்பராதலால் அன்பு பித்தெனப்பட்டது.

சிவஞானம் மாத்திரமே மலங்களின் நீங்கி நின்று செய்யுந் தவமாதலாலும் ஏனைய தவங்கள் மலசம்பந்த முடையவர்களாற் செய்யப்படுவன வாதலாலும் பரனுணர்வினால் உணரும் சிவஞானமொன்றே மெய்த்தவம் எனப்படும். அதனால் சிவஞானிகளை மெய்த்தவர் என்றார். வினை என்பது பால்பகா அஃறிணைப் பெயர்.

சிவபத்தர்களிடத் தன்புடையராய் மனம், வாக்கு, செயல்களால் அவர் வழியில் நிற்போருக்கு உலக அனுபவ உணர்வு மாறிச்

சிவாநுபூதி உணர்வே மேம்பட்டு நிகழும். சிவாநுபூதி யுணர்வு நிகழவே பூதகாரிய மாகிய பௌதீக உடம்பைப் பற்றி வரும் பிராரத்த வினைகள் சிவானுபவ உணர்வுடையோருக்கு அனுபவ மாகாமை-யால் அவர்களைத் தாக்கமாட்டா. பிராரத்தவினை தாக்கமாட்டா தொழியவே அது காரணமாக நிகழும் சிறப்பில்லார் தந்திறத்துச் சேர்வை முற்றாகக் கெடுமெனக் கூறக்கருதி, "சேர்வை -யறப்பித்துப் -பத்தரினத்தாய்ப் பரனுணர்வினாலுணரு மெய்த்தவரை மேவா வினை" என்றார். எனவே சிவானுபவ உணர்வை நிலைபெறச் செய்யும் சிவபத்தர்களோ டிணங்கினாலன்றி வினைகாரணமாகத் தொன்று தொட்டுப் பழகி வந்த சிவபத்தரல்லாதாருடைய இணக்கம் அற்றுப் போகாது. அதனால், சிவபத்தருடைய இணக்கம் அவசியம் வேண்டப்படுமென மேற்கோளிற் கூறியதை இவ்வுதாரணத்தால் வலியுறுத்தியவாறு காண்க.

## மூன்றாம் அதிகரணம்

### சீவன் முத்தர் மூன்றாவதாகச் செய்யவேண்டுவது சிவபத்தர் இணக்கம் நிலைபெறுதற் பொருட்டுத் திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவனெனக் கண்டு வழிபடுதல் எனக் கூறும் மேற்கோள்

***இனிப் பத்தரது திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் பரமேசுரனெனக் கண்டு வழிபடுக வென்றது.***

சிவபத்தரோடு இணங்கியவர்கள் அவ்விணக்கத்தை நிலைபெறச் செய்யும் பொருட்டு, அதன் பின்னர்ச் சிவாலயத்தையும் திருவேடத்தையும் சிவனெனக் கண்டு வழிபட வேண்டுமெனச் சூத்திரத்தின் மூன்றாங் கூற்றைப் பதச்சேதஞ் செய்து கூறப்பட்டது இந்த மேற்கோள். இதில் சீவன்முத்தருக்கு எல்லாஞ் சிவமாகத் தோன்றுமாதலால் அவர்கள் திருவேடத்தையும் சிவாலயத்தையும் வழிபட வேண்டுமெனக் கூறுவது பொருந்துமோ பொருந்தாதோ என்பது ஐயம். இவ்வையப்பாட்டின் கண் பொருந்தாதென்பது பிறர் கூறும் பக்கம்.

பரமேசுரனெனக் கண்டு என்றதில், காண்டல் சந்தேகமின்றிப் பரமேசுரன் எனவே தெளிதல். காமக் கிழத்தியர் வடிவிற் காணப்படும் ஆடை சாந்து ஆபரணம் முதலியன காமுகரை வசீகரித்து அவர்களுக்கு இன்பஞ் செய்வது போலத் திருவேடமும் சிவாலயமும்



மறைக் கண்டளவில் மெய்யுணர்வுடையாரை வசீகரித்து அவர்களுக்கு இன்பஞ் செய்தலால், திருவேடத்தையும் சிவாலயத்தை யுமென உபசரித்தார்.

விலை மகளிரது ஆடை அணிகள் காமுகருக்கு இன்பஞ் செய்வது போலத் திருவேடம் மெய்யுணர் வுடையாருக்கு இன்பஞ் செய்யும் என்பதை "சேலுங் கயலுந் திளைக்குங் கண்ணாரிளங் கொங்கையிற் செங்குங்குமம் - போலும் பொடியணி மார்பிலங்கு மென்று புண்ணியர் போற்றிசைப்ப" என்னும் திருப்பல்லாண்டால் அறிக.

திருவேடத்தினியல்பை "தூய வெண்ணீறு துதைந்த பொன் மேனியுந் தாழ்வடமு - நாயகன் சேவடி தைவரு சிந்தையுநைந் துருகிப் - பாய்வது போலன் நீர்பொழி கண்ணும் பதிகச் செஞ்சொன் மேய செவ்வாயு முடையார் புகுந்தனர் வீதியுள்ளே" (திருநாவுக்கரசு நாயனார் புராணம் 140)

சிந்தையிடை யறாவன்புந் திருமேனி தனிலசையுங் - கந்தை மிகையாங் கருத்துங் கையுழவாரப் படையும் -வந்திழி கண்ணீர் மழையும் வடிவிற்பொலி திருநீறு - மந்தமிலாத் திருவேடத் தரசு "மெதிர் வந்தணைய" (திருஞான சம்பந்தர். புராணம் 269) "கண்டகவு ணியக்கன்றுங் கருத்திற்பரவு மெய்க்காதற் - றொண்டர் திருவேட நேரரே தோன்றிய தென்று தொழுதே" (திருஞானசம்பந்தர் புராணம் 270) என்னுந் திருவாக்குகளாலறிக.

### திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவன் எனக் கண்டு வழிபடல் வேண்டும் என்பதற்குக் காட்டும் ஏது

***அவன் மற்றிவ் விடங்களிற் பிரகாசமாய் நின்றே அல்லாதவிடத்து அப்பிரகாசமாய் நிற்றலான்.***

திருவடியடைந்த மெய்யுணர்வுடைய சீவன்முத்தர் சிலவிடங் களிற் பிரித்துக் காண்டலின்றி எவ்விடத்தும் பரமேசுரனெனக் காண்டலே பொருந்து மாதலாலும் நின்ற திருத்தாண்டகம் முதலியவற்றுள்" இருநிலனாய்த் தீயாகி நீருமாகி யியமானனா யெறியுங் காற்றுமாகி - அருநிலைய திங்களாய் ஞாயிறாகி யாகாசமா யட்ட மூர்த்தியாகி" எனக் கூறப்படுதலாலும், திருவுருத்திரத்துள் உயிர்ப் பொருள் உயிரில் பொருள் எல்லாவற்றையுந் தனித்தனி யெடுத்தோதி அப்பொருள்கள் எல்லாவற்றையும் பரமேசுரன் எனக் கண்டு வழிபாடு கூறுதலானும், அவ்வாறு கூறாமல் இவ்வதிகரணத்து

மேற்கோளில் திருவேடத்தையும் சிவாலயத்தையும் மாத்திரமே சிறப்பாக எடுத்துக் கூறியதேன் என்பாரை நோக்கி, எல்லா விடங்களிலும் பரமேசுரன் நிற்பினும் இவ்விடங்களில் மாத்திரம் விளங்கித் தோன்றுவன் எனக்கூறி மேற்கோளிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வேது.

**இ-ள் :** அம்முதல்வன் எல்லா இடங்களிலும் வியாபகமாய் நிற்பினும் திருவேடத்திலும் சிவாலயத்திலும் மாத்திரமே தயிரில் நெய் விளங்கித் தோன்றுவது போல விளங்கித் தோன்றி நிலை பெற்று மற்றைய இடங்களில் பாலில் நெய் விளங்கித் தோன்றாது மறைந்து நிற்பதுபோல நிற்றலால்'இனிப் பத்தரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் பரமே, சுரனெனக் கண்டு வழிபடுகவென மேற்கோளிற் கூறப்பட்டது எ-று.

இந்த ஏதுவில் மற்று என்பது அசை. எல்லாப் பொருள்களிலும் இறைவன் கலந்திருக்கிறான் என்பதை உணர்த்துவதற்காகத் திருவுருத் திரத்துள் உயிர்ப்பொருள் உயிரில் பொருள் எல்லாவற்றுக்கும் வழிபாடு கூறப்பட்டது. இறைவன் சிறப்பாக விளங்கித் தோன்றும் இடங்கள் இவையென்பதை உணர்த்துவதற்காக சிவாலயத்தையும் திருவேடத்தையும் வழிபடுகவென இவ்வதிகரணத்திற் கூறப்பட்டதென அறிக.

### திருவேடத்தினிடத்து முதல்வன் பிரகாசமாய் நிற்கின்றான் என்பதற்குக் காட்டும் உதாரணம்

***தன்னுணர வேண்டித் தனதுருவைத் தான்கொடுத்துத்***
***தன்னுணரத் தன்னு ளிருத்தலாற் - றன்னுணரு***
***நேசத்தர் தம்பா னிகழுந் ததிநெய்போற்***
***பாசத்தார்க் கின்றாம் பதி.***

திருவேடத்தில் இறைவன் பிரகாசமாய் நிற்குமாறு எவ்வாறென் பாரை நோக்கி, திருவேடத்தினிடத்து முதல்வன் விளங்கித் தோன்றும் முறையைக் கூறி ஏதுவிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**இ-ள் :** பதி - சிந்தனைக் கெட்டாது நின்ற பரம்பொருளே, தன் உணரவேண்டி - உலகத்துள்ளார் தன்னை அறிதற் பொருட்டு, தனது உருவைத் தான்கொடுத்து - திருநீறு உருத்திராக்கம் முதலிய திருவேடமாகிய தனது திருவடிவத்தைத் தன் அன்பர்க்குக் கொடுத்து



அவர்களிடமாக நிற்றலாலும், தன் உணர - அவ்வன்பர் தன்னைச் சிவோகம் பாவனையால் அறியச் செய்தலாலும், தன்னுள் இருத்தலால் - அவ்வாறு சிவோகம் பாவனையாகிய ஒரு குறியின்கண் நின்றுணரும் அன்பரைத் தனது வியாபகத்துள் இருத்துதலாலும்,தன் உணரும் நேசத்தர் தம்பால் ததிநெய்போல் திகழும் - ஒரு குறியுமின்றி நின்று தன்னை உள்ளவாறுணர்கின்ற அன்பரிடத்தில் தயிரினிடத்து நெய் விளங்கித் தோன்றுவது போல விளங்கித் தோன்றுவன், பாசத்தார்க்கு இன்றாம் - பாசக்கட்டுடையாரிடத்தில் பாலின் கண்நெய் விளங்கித் தோன்றாதது போல விளங்கித் தோன்றான் எ-று.

தன் என்ற இடத்தில் 'செய்து' என்னுஞ் சொல் எச்சமாய் நின்றது. அதனால், தன்னுணர என்பதற்கு தன்னைச் சிவோகம் பாவனையால் அறியச் செய்தலாலும் என உரை செய்யப்பட்டது.

தன்னுள் இருத்தலால் என்ற இடத்திலுள்ள இருத்தல் என்பது அல் ஈற்றுப் பிறவினைத் தொழிற்பெயர்.

இவ்வெண்பாவுக்கு, தனதுருவைத் தான் கொடுத்து தன் உணரச் செய்து தன்னுள் இருத்தலால் ததிநெய்போல் நிகழுமென இயைத்துப் பொருள் கொள்க.

நேசத்தர் என்னும் பெயருக்குத் தன்னுணரும் என அடை கொடுத்தார். அந்த அடையாலும் நேசத்தர் தன்னை உணர்தலால் எனத் ததி நெய்போல் நிகழ்வதற்கோர் ஏதுக் கூறப்பட்டது.

தன்னுணர என்ற இடங்களிலும் தன்னுணரும் என்ற இடத்தி லும் 'ஐ' உருபு தொக்கு நின்றது அதை விரித்து, உலகத்துள்ளார் தன்னை அறிதற் பொருட்டு எனவும், தன்னைச் சிவோகம் பாவனையால் அறியச் செய்தலாலும் எனவும், ஒரு குறியுமின்றி நின்று தன்னை உள்ளவாறுணர்கின்ற அன்பர் எனவும், உணர்தல் என்பதற்கு வேறு வேறு விதமாக உரை கூறப்பட்டது.

பாசத்தார்க்கு என்பது உருபு மயக்கம், பாசத்தாரிடத்து என்றிருக்க வேண்டிய ஏழாம் வேற்றுமை உருபு, நான்காம் வேற்றுமை 'கு' உருபாக மயங்கி நின்றது.

பாசத்தார்க்கு இன்றாம் என்ற இடத்திலுள்ள 'இன்று' என்பது இவ்வுதாரணத்தில் விளங்கித் தோற்றாமையைக் குறித்து நின்றது.

## சிவாலயத்தினிடத்து முதல்வன் பிரகாசமாய் நிற்கின்றான் என்பதற்குக் காட்டும் உதாரணம்

***கண்டதொரு மந்திரத்தாற் காட்டத்தி லங்கிவே***
***றுண்டல்போ னின்றங் குளதாமாற் - கண்டவுருத்***
***தானதுவா யன்றானான் றானதுவாய்த் தோன்றானோ***
***தானதுவாய்க் காணுந் தவர்க்கு***

சிவபத்தரது திருவேடம் உலகத்தார் தன்னை அறியும் பொருட்டுச் சிவபெருமானாற் கொடுக்கப்பட்டதால் அதிற் சிவபெருமான் விளங்கித் தோன்றுவன் என்பது பொருந்தும். திருவேடத்தை அணியும் சிவபத்தர் சிவபெருமானை உள்ளவாறுணர் வது போல, சிவாலயங்களிலுள்ள தாவர வடிவமாகிய சிவலிங்கம் முதலிய மூர்த்தங்களுக்குச் சிவபெருமானை உள்ளவாறுணரும் இயல்பில்லை. ஆதலால் அத்தாவரங்களில் மந்திரம் கிரியை பாவனை முதலியவற்றால் சிவபெருமான் விளங்கித் தோன்றுவனே யன்றி, அவையில்லாத விடத்து விளங்கித் தோன்றான். ஆதலால் அம்மூர்த்திகளையுடைய சிவாலயத்தையும் பரமேசுரனெனக் கண்டு வழிபடுகவென மேற்கோளிற் கூறியது பொருந்தாதென்பாரை நோக்கி, சிவாலயத்தினிடத்தும் இறைவன் பிரகாசமாய் நிற்பன் என்பதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** காட்டத்தின் அங்கி வேறு உண்டல் போல் கண்ட உருத் தான் அதுவாய் அன்று ஆனான் கண்டது ஒரு மந்திரத்தால் நின்று அங்கு உளது ஆம் அது தான் ஆய்க் காணுந்தவர்க்கு அதுதான் ஆய்த் தோன்றானோ.

**இ-ள் :** காட்டத்தில் அங்கி வேறு உண்டல் போல் - விறகில் தீ கடைகோலாற் கடைந்தபோது விறகின் வேறாய் விளங்கித் தோன்றிக் கடையாதவிடத்து விளங்கித் தோன்றாதவாறு போல, கண்ட உருத் தான் அதுவாய் அன்று ஆனான் - உயிர்களுக்குப் போகத்தையும் முத்தியையுங் கொடுத்தற் பொருட்டுக் காணப்பட்ட தாவர வடிவின்கண் கலப்பினால் அவ்வடிவமே தானாயும் பொருளின் தன்மையால் வேறாயுமிருக்கும் இயல்புடைய முதல்வன், கண்டது ஒரு மந்திரத்தால் நின்று அங்கு உளது ஆம் - அவ்வடிவத்தையே சிவபெருமானாகக் காணாதவர்களுக்கு அவர்களால் அறியப்பட்ட மந்திரம் கிரியை பாவனை இல்லாதவிடத்து அவ்வடிவத்தில் விளங்கித் தோன்றாது நின்று. மந்திரக் கிரியை உள்ளவிடத்து



விளங்கித் தோன்றுவன், அதுதான் ஆய்க் காணுந்தவர்க்கு அதுதான் ஆய்த்தோன்றானோ - அவ்வாறன்றி அவ்வடிவத்தையே சிவபெரு மானாகக் காணப்பெறும் உண்மைத் தவமுடையாருக்கு அவ்வடிவ மேயாய் விளங்கித் தோன்றமாட்டானோ? தோன்றுவன் எ-று.

காணுந் தவர்க்குத் தான் அதுவாய்த் தோன்றானோ என்றதனால், காணாதார்க்கு என்பது சொல்லெச்சமாய் வருவிக்கப்பட்டது.

இவ்வெண்பாவில் உவமானம் காட்டம்; உவமேயம் கண்ட உரு. (தாவர வடிவம்) தாவரவடிவமாகிய உவமேயத்துக்கு 'மந்திரத்தான் உளதாம் என்று கூறியதற் கேற்ப, உவமானமாகிய காட்டத்துக்கு,' 'கடை கோலாற் கடைந்தபோது' என்பது வருவித்துக் கூறப்பட்டது.

'உண்டல் போல்' என்ற இடத்தில் வரும் 'உண்டாதல்' என்பது விளங்கித் தோன்றுதலைக் குறிக்கின்றது.

'உளதாமால்' என்ற இடத்தில் வரும் 'ஆல்' என்பது அசை.

'தானதுவாய் அன்றானான்' என்றதில் ஆனான் என்பது முதல்வனைக் குறிக்கும் பெயராய் நின்றது.

'தோன்றானோ' என்றதிலுள்ள ஓகாரம் எதிர்மறை. அது தோன்றுவன் என்னும் பொருளைத் தருகின்றது.

உளது, அன்று என்பன இயல்பு பற்றிக் கூறப்பட்டன. உளதாதல் என்பது விளக்கித் தோன்றும் இயல்பையும் அன்று என்பது விளங்கித் தோன்றா இயல்பையும் குறிக்கின்றன.

'தானதுவா யன்றானான்' என்றதனால் கலப்பினால் அதுவாயும் பொருட்டன்மையால் வேறாயும் விளங்குவனென அவரவர் பாவனைக் கேற்ப விளங்குவதற்குக் காரணங் கூறினார்.

முதல்வன் அதுவாதலும் அன்றாதலும் தாவரவடிவுக்கு மாத்திரமன்றிச் சங்கம வடிவுக்கும் ஒக்கும். ஆனாலும் அதைச் சிவபத்தரைப் பற்றிக் கூறிய முன்னைய வெண்பாவிற் கூறாமல் இவ்விடத்திற் கூறியதேனெனில், தாவர வடிவங்களுக்குச் சிவபெருமானை உள்ள வாறுணரும் இயல்பின்மையால், அவற்றிற் சிவபெருமான் விளங்கித் தோன்றுதல் எவ்வாறென்னும் ஐயத்தை, 'தானதுவாய் அன்றானான்' என்பதனாலன்றி நீக்க முடியாதாகையால் அதை இவ்விடத்திற் கூறினார். அதுவாதலும் அன்றாதலும் தாவர சங்கமம் என்னும் ஈரிடத்தும் ஒக்குமென்பது பின்னர்க் கூறப்படும்.

## நான்காவது ஒழிபு அதிகரணம்

***இந்த அதிகரணம் சூத்திரத்திலுள்ள மூன்று அதிகரணப் பொருள் களின் சம்பந்தமான சங்கைக்குச் சமாதானமாக அவ்வதிகரணங் களின் சேடமாகலின் ஒழிபு ஆயிற்று.***

### திருவேடத்தினிடத்தும் சிவாலயத்தினிடத்தும் வழிபாடு செய்யவேண்டுமென்ற விதியை வலியுறுத்தும் மேற்கோள்

***இனி இவ்விடங்களில் வழிபடுக வென்றது.***

முன்னைய மூன்று அதிகரணங்களிலுங் கூறப்பட்ட மலங்களைக் களைதல், சிவபத்தரோடு இணங்குதல், சிவாலயத்தையும் திருவேடத்தையும் சிவனெனக்கண்டு வழிபடுதலாகிய மூன்றும் சீவன் முத்தருக்குரிய இலக்கண மாதலால் அநுவாதமாக வைத்துக் கூற வேண்டிய அம்மூன்றினையும் களைவர், இணங்குவர், வழிபடுவரெனக் கூறாது. களைக, இணங்குக, வழிபடுகவென விதியாகக் கூறியதே னென்பாரை நோக்கி, அம் மூன்றதிகரணங்களின் சேடமாகக் கொண்டு விதியாகக் கூறியது பொருந்து மென்பதை வலியுறுத்து முகமாகக் கூறப்பட்டது இந்த மேற்கோள். இதில் சீவன் முத்தருக்கு இயல்பாயுள்ள வழிபாடு முதலியவற்றை விதியாக வைத்துக் கூறியது பொருந்துமோ பொருந்தாதோ என்பது ஐயம். இவ்வையப்பாட்டின் கண் பொருந்தாதென்பது பிறர் கூறும் பக்கம்.

அனுவாதமாகக் கூறுதல் - முன்னர்க் கூறியதைப் பிறிதொன்றைக் கூறும்பொருட்டுப் பின்பும் கூறுதல்

விதியாகக் கூறுதல் - இதைச் செய்க எனக் கூறுதல்.

**இ-ள் :** மூன்றாம் அதிகரணத்திற் கூறியபடி திருவேடத்தையும் சிவாலயத்தையும் வழிபாடு செய்க எ-று.

இவ்விடங்களிலென்றது மேற்கூறிய திருவேடம் சிவாலயம் என்னும் இரண்டையும்.

திருவேடம் சிவாலயம் என்னும் இரண்டையும் வழிபடுவர் என அநுவாதமாகக் கூறுதலே பொருந்து மென்பாரை நோக்கி, வழிபடுக வென உரத்துக் கூறும் எடுத்தலோசையால், அநுவாதமாகக் கூறுதல் பொருந்தாதெனவும் விதியாகக் கூறுதலே பொருந்து மெனவும் வலியுறுத்துகின்றது இந்த மேற்கோள். இனம் பற்றி முதலாம் இரண்டாம் அதிகரணங்களிற் கூறிய களைதல் இணங்குதல்களையும் விதியாகக் கூறி வலியுறுத்துதல் பொருந்தும்.



### வழிபாடு செய்யவேண்டுமென்ற விதியை வலியுறுத்திய மேற்கோளை வலியுறுத்தற்குக் காட்டும் ஏது.

***நரம்பு நாடி முதலானவற்றைத் தானதுவாய் வரும் புருடன் அவையாகாவாறு அப்புருமடனு மாகலான்.***

சீவன் முத்தருக்கு இயல்பாயுள்ள வழிபாடு முதலியவற்றைச் செய்கவென விதித்தல் பயனற்ற செயலாகு மென்பாரை நோக்கி மறுத்து, மேற்கோளிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வேது.

**இ-ள்:** நரம்பு நாடி என்பு தோல் முதலிய சரீர தாதுக்கள் ஒவ்வொன்றோடும் வேற்றுமையின்றிக் கலந்து அதுவதுவாய் நிற்கும் உயிர், நாடியோ என்போ நரம்போ சீயோ கோழையோ என்றிவ்வாறு பைம்மறியாப் பார்ப்பார்க்கு அந்நரம்பு நாடி முதலியவையாகாது அவற்றின் வேறானாற்போல, உயிர்க்குயிராகிய முதல்வனும் உயிர்ப்பொருள் உயிரில்பொருள் எல்லாவற்றிலுங் கலந்து அதுவது வாகியும் பொருளின் தன்மையால் அவையல்ல னாகியும் நிற்பன். கலப்பினால் அப்பொருள்களாய் நிற்கும் உண்மையை அறிந்தவிடத்துத் திருவேடத்தினிடத்தும் சிவாலயத்தினிடத்தும் சீவன்முத்தருக்கு உண்டாகிய வழிபாடு வேறாய் நிற்றலை அறிந்தவிடத்து உண்டாகாது. ஆதலால், வேறாய் நிற்றலை யறிந்தவிடத்தும் வழிபாடு செய்விக்க வேண்டி, இனி இவ்விடங்களில் வழிபடுகவென மேற்கோளிற் கூறப்பட்டது எ-று.

பைம்மறியாப் பார்த்தல் - பையின் உட்பக்கத்தை வெளிப்பக்க மாகப் புரட்டிப் பார்த்தல்.

அவையாகாவாறு அப்புருடனும் என்றதனால், வேறாய் நிற்குங் காலத்தும் வழிபாடு செய்யவேண்டு மென்பது தாற்பரிய மாயிற்று. மேற்கோளில் இவ்விடங்களை யென்னாது இவ்விடங்களிலென வேறுபடுத்திக் கூறியதும் இவ்விடங்களில் வழிபாடு செய்ய வேண்டுமென்பதை உணர்ந்து கொள்ளும் பொருட்டேயாகும்.

இதனால், எய்தாததொன்றை எய்தவேண்டுமென விதிப்பதும் எய்திய தொன்றை நீங்காமற் காக்க வேண்டுமென விதிப்பதும் எய்தியதில் ஒரு பகுதியை நீக்கவேண்டுமென விதிப்பதும் என்னும் விதிமூன்றனுள், சீவன் முத்தருக்கு விதித்த இவ்விதி எய்தியதை நீங்காமற் காக்கவேண்டுமெனக் கூறியதென அறிக.

அவையாகாவாறு என்றதில் வாறு என்பது உவம உருபாய் நின்றது. முதலானவற்றை என்பது முதலானவற்றின் கண் என்னும் பொருளைத் தருதலால் உருபு மயக்கம்.

### திருவேடத்தி னிடத்தும் சிவாலயத்தினிடத்தும் வழிபாடு செய்யவேண்டு மென்பதற்குக் காட்டும் உதாரணம்

***அதுவிது வென்ற ததுவல்லான் கண்டார்க்***
***கதுவிது வென்றதைய மல்லான் - பொதுவதனி***
***லத்துவித மாத லகண்டமுந் தைவமே***
***யத்துவிதி யன்பிற் றொழு.***

முதல்வனுக்குக் கலப்பினால் அவ்வப் பொருட்களேயாயும் பொருட்டன்மையால் வேறாயும் நிற்றல் எல்லாப் பொருள்களிடத்தும் உண்டாயினும் அவற்றுள் திருவேடம் சிவாலயம் என்னும் இடங்களில் மாத்திரமே வழிபாடு செய்ய வேண்டுமென விதித்ததேன் என்பாரை நோக்கி, அவ்விடங்களில் வழிபாடு செய்ய வேண்டுமென்பதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** கண்டார்க்கு அது இது என்றது (அல்லான்) அது (என்றது) அல்லான் அது இது என்றதையும் அல்லான் பொதுவதனில் அத்துவிதம் ஆதல் அகண்டமும் தைவமே அத்துவிதி அன்பின் தொழு.

**இ-ள் :** கண்டார்க்கு - முதல்வன் உயிர்ப்பொருள் உயிரில் பொருள் எல்லாவற்றிலும் நிற்கும் நிலையை அறியப் பெற்றோர்க்கு, அது இது என்றது (அல்லான்) - சூரியனுங் கண்ணொளியும் போல அதுவும் இதுவுமெனப் பிரித்துக்கூறப்படும் பேதநிலை யுடையவனுமல்லனாய், அது (என்றது) அல்லான் - உடலும் உயிரும் பிரிக்கப்படாதிருத்தலால் அது வென்று கூறப்படுவது போல அபேத நிலையுடையவனுமல்லனாய், அது இது என்றதையுமல்லான் - குணமும் குணியும் போல ஒருவாற்றாற் பேதமும் ஒருவாற்றால் அபேதமு மாதலால் அது விது வெனப் பிரிக்காமற் கூறப்படும் பேதாபேத நிலையுடையனுமல்லனாய், பொதுவதனில் அத்துவிதம் ஆதல் அகண்டமுந் தைவமே - உயிரின் அறிவும் கண்ணொளியும் கலப்பால் அபேத மாயும் பொருளின் தன்மையால் பேதமாயும் உடனாகச் செலுத்துந் தன்மையால் பேதாபேதமாயும் நிற்குமாறு போல பேதம் அபேதம் பேதாபேதம் என்னும் மூன்றுக்கும் பொதுவான அத்துவித நிலையுடையனாய் நிற்பனாதலால் எல்லாப் பொருளும் அவன் வடிவமேயாயினும், அத்துவிதி அன்பின் தொழு - அத்துவித சித்தாந்தத்தைப் பெற்றுடைய நீ அவற்றுள் கண்டவுடன் அன்பு விளையுமிடத்தில் வழிபடுவாயாக எ-று.



இதில், முதலில் வந்த அது இது என்றது, அதுவும் இதுவும் என்னும் பொருளைத் தருதலால் உம்மைத் தொகை. இரண்டாவதாக வந்த அது இது என்றது அதுவாகிய இது என்னும் பொருளைத் தருதலால் இருபெயரொட்டுப் பண்புத் தொகை. அது அல்லான் என்றதிலுள்ள அல்லான் என்பதை, முதலில் உள்ள அதுவிது என்றது, என்பதோடு கூட்டி, அது இது என்றது அல்லான் எனவும், அது இது என்றது என்பதிலுள்ள, என்றது என்பதை, அது அல்லான் என்றதிலுள்ள அது என்பதனோடு கூட்டி, அது என்றது அல்லான் எனவுங் கூறுக.

அல்லான் என்பது குறிப்பு வினைமுற்று- அம்முற்று வினையெச்சமாய் அத்துவித மாதல் என்பதனோடு முடிந்தது. என்றதை என்பது, என்றது என்னும் பொருளைத் தரும் ஐகாரத்தை இறுதியிலுடைய குற்றுகரம்.

என்றதையும் என்றதிலுள்ள உம்மை, அது இது என்றது அல்லான் என முன்னர்க் கூறியதைத் தழுவி நிற்றலால் இறந்தது தழுவியது. பொதுவதனில் என்றதில், அது என்பது பொது என்னும் பகுதிப் பொருளையே குறித்தலாற் பகுதிப் பொருள் விகுதி.

தைவம் - தேவனது உடைமை. வடிவமும் அவனது உடைமையாதலால், அகண்டமும் தைவமே என்றதற்கு எல்லாப் பொருளும் அவன் வடிவமே என உரை செய்யப்பட்டது. தைவமே என்ற இடத்திலுள்ள ஏகாரம், வடிவமே என்பதை உறுதிப்படுத்துவதால் தேற்றம், தைவமே என்ற இடத்தில் ஆயினும் என்பதைச் சொல்லெச்சமாய் வருவித்து வடிவமேயாயினும் என உரைசெய்யப் பட்டது.

அன்பு என்பது ஆகுபெயர். அது அன்பு விளையும் இடத்தைக் குறிக்கின்றது. இவ்விடத்தில் ஏழாம் வேற்றுமைக் 'கண்' உருபை விரித்து, அன்பு விளையும் இடத்தின்கண் எனக் கூறுக.

உடம்பெங்கும் நிறைந்திருந்தும் காணப்படாத பால் முலையின் கண்ணே விம்மி யொழுகுவதுபோல, எங்கும் நிறைந்திருக்கும் இறைவன் திருக்கோயிலிலுள்ளிருக்குந் திருமேனியிலன்றி வெளிப்பட் டருளானாதலால், அத்திருமேனியிலன்றி அன்பு விளையாது, அதனால் சிவாலயத்திற் செய்யும் வழிபாடே அனுபவமான அத்துவித ஞானத்தை நிலைபெறச் செய்வதாகிய பயனைத் தருமெனக் கூறக்கருதி 'அத்துவித மாதலகண்டமுந் தைவமே' யென முன்னர்க் கூறியதை அநுவதித்து "அத்துவிதி யன்பிற்

றொழு" என்றார். அத்துவிதி என்பது அண்மையில் உள்ளவரை அழைக்கும் பெயர்ச்சொல். அது அத்துவித சித்தாந்தமாகிய பயனைப் பெற்றவனைக் குறித்தலால், பயனுணர நின்ற குறிப்புப் பெயர். இதனால் இவ்விடங்களில் வழிபடுக என விதித்தது அத்துவித அனுபவத்தை நிலைக்கச் செய்தற் பொருட்டெனக் கூறியது மாயிற்று.

இவ்வெண்பாவில் வந்த அது இது என்பவற்றுள் முன்னையது அதுஇது எனச் சுட்டப்படும் உடம்பையெனவும், பின்னையது அது இதுவெனச் சுட்டும் அருவமாகிய உயிரையெனவும், பொதுவதனில் என்றது அருவுக்கும் உருவுக்கும் பொதுவான சிவலிங்கத் திருமேனியை யெனவும் பொருள் கூறுவாருமுண்டு. அவர்கள், அன்பின் என்ற இடத்தில் வரும் 'இன்' னை ஏதுப் பொருளில் வரும் ஐந்தாம் வேற்றுமை உருபாகக் கொண்டு, அன்பிற்றொழு என்பதற்கு அன்பாற்றொழு எனப் பொருள் கூறுவர்.

### ஞானமே போதும் வழிபாடு வேண்டா மென்பாரை மறுத்து ஞானம் நிலைத்தற்கு வழிபாடு செய்ய வேண்டுமெனக் கூறி மேற்கோளை வலியுறுத்தும் உதாரணம்

***வினையா லசத்து விளைதலான் ஞானம்***
***வினைதீரி னன்றி விளையா - வினைதீர***
***ஞானத்தை நாடித் தொழவே யதுநிகழு***
***மானத்தா லன்பிற் றொழு.***

நிலையில்லாத பிரபஞ்ச பேதங்களை நிலையில்லாதவை யெனக்கண்டு அவற்றினின்றும் நீங்கவே சிவஞானத்தின் சொரூபந் தோன்றி அத்துவித ஞானத்தை உணர்த்தும். ஆதலால் அத்துவித ஞானத்தை நிலைக்கச் செய்யும் பொருட்டுத் திருவேடத்தையும் சிவாலயத்தையும் வழிபட வேண்டுமென விதித்தது எதற்காக வென்பாரை நோக்கி. அவற்றை வழிபட வேண்டுமென்பதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**கொண்டு கூட்டு :** வினையால் அசத்து விளைதலான் வினைதீரினன்றி ஞானம் விளையா வினைதீர ஞானத்தை நாடித் தொழவே அது நிகழும் ஆனத்தால் அன்பின் தொழு.

**இ-ள் :** வினையால் அசத்து விளைதலான் வினை தீரின் அன்றி ஞானம் விளையா - உடம்பின் கண்ணதாகிய பிராரத்த வாசனை உயிரைத் தாக்கும் வரையும் அதனால் வரும் விருப்பு வெறுப்புக்களும் அவ்விருப்பு வெறுப்புக்களால் நிகழும் மண்முதல் மாயை வரையுள்ள தத்துவப் பொருள்களின் தோற்றமும் அவற்றால் நிகழும் விபரீத உணர்வுமாகிய அசத்துக்கள் ஞானத்தால் பிரபஞ்சத்தை அசத்தென்றறிந்து நீங்கியவிடத்தும் வந்து கூடி மேம்படுவனவாகுமாதலால் அவற்றுக்கெல்லாம் மூலகாரணமாகிய பிராரத்த வாசனை பற்றறக் கழிந்தாலான்றிப் பிரபஞ்சத்தைத் தோற்ற விடாமற் கீழ்ப்படுத்தி எல்லாவற்றையும் சிவமாய்ப் பார்க்கும் மெய்யுணர்வு மேம்படுதல் கூடாதாகலின், வினை தீர ஞானத்தை நாடித் தொழவே அது நிகழும் - அப்பிராரத்த வாசனை பற்றறக் கழிதற் பொருட்டு அம்மெய்யுணர்வுடையானைத் தேடி வழிபட்டாற் பிராரத்த வாசனை நீங்கி மெய்யுணர்வு மேம்பட்டுத் தோன்றும், ஆனத்தால் அன்பின் தொழு - ஆதலால் அன்பினால் அவரை வழிபடுவாயாக எ-று.

அசத்தை அசத்தென்று கண்டு நீங்கிய விடத்துளதாகிய ஞானசொரூபம் மீண்டும் பிரபஞ்சத்தைப் பற்றாது நிலைபெறுதல், பிரபஞ்சத் தோற்றத்துக்கு மூலகாரணமாகிய பிராரத்தவினை தாக்கா திருத்தலாலாகும். ஆதலால் பிராரத்த வினையை வேரோடு களைந்து மெய்யுணர்வை நிலைபெறச் செய்யும் பொருட்டு, மெய்யுணர்வை நிலைபெறச் செய்த சிவனடியாரிடத்துச் செய்யும் வழிபாடு உறுதியாக வேண்டப்படும்.

அவ்வாறானால், பிராரத்தவினை தாக்காதிருத்தற் பொருட்டு ஒன்பதாஞ் சூத்திரத்திற் கூறியபடி ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிப்பதே போதுமெனில் அவ்வாறு கூறுதல் பொருந்தும். ஸ்ரீ பஞ்சாக்கரத்தை உச்சரிப்பதும் சிவனடியாரிடத்துச் செய்யும் வழிபாட்டையின்றி அமையாது. அதனாலன்றோ ஒன்பதாஞ் சூத்திரத்தில் "அஞ்செழுத்தால் உள்ளம் அரனுடைமை கண்டு" என்றும், "மண்முதல் நாளம் மலர்வித்தை" என்றும் அகத்து வழிபாட்டையும் உடன் கூறினார்.

விளையா என்ற இடத்தில் து விகுதி தொக்கு நின்றது, அதை விரித்து விளையாது என்க. மூன்றாம் வரியில் இடம்பெறும் ஞானம் என்பது ஆகுபெயர். அது ஞானத்தை யுடையாரைக் குறிக்கின்றது. ஆனதால் என்றிருக்கவேண்டியது ஆனத்தால் என மருவி நின்றது.

### வழிபாடு செய்யவில்லையாயின் உண்டாங்குற்றம் இதுவெனக் கூறி மேற்கோளை வலியுறுத்தும் உதாரணம்

***தன்னை யறிவித்துத் தான்றானாச் செய்தானைப்***
***பின்னை மறத்தல் பிழையலது - முன்னவனே***
***தானேதா னாச் செய்துந் தைவமென்றுந் தைவமே***
***மானே தொழுகை வலி.***

முன்னைய வெண்பாவிற் கூறியவாறு, ஞானம் நிலைத்தலாகிய பயனைப் பெறும் பொருட்டு விதிக்கப்படும் வழிபாட்டைப் பயன்பெற வேண்டாமையாலாவது, பின்பு செய்து பயன்பெறலா மெனக் கருதியாவது, வேள்வி முதலியவற்றைச் செய்யாது விடுதல் போலச் செய்யாது விடலாமோ என்பாரை நோக்கி, அவ்வழிபாட் டைச் செய்யாது விடுதலால் வருங்குற்றத்தையும்அதைச் செய்ய வேண்டியது கடமையென்பதையும் உணர்த்தித் திருவேடத்தி னிடத்தும் சிவாலயத்தினிடத்தும் வழிபடுகவென மேற்கோளிற் கூறியதை வலியுறுத்துகின்றது இவ்வுதாரணம்.

**இ-ள் :** தன்னை அறிவித்துத் தான் தான் ஆச் செய்தானைப் பின்னை மறத்தல் பிழை அலது - இறைவனது உண்மையை அறியமாட்டாது ஆணவ மலத்தால் மறைப்புண்டு குருடாய்க் கிடந்த உயிருக்குப் பலவழிகளாலும் அறியாமையை நீக்கித் தன் உண்மையை அறிவித்துச் சிற்றறிவும் சிறு தொழிலுமுடைய அவ்வுயிருக்கு முற்றறிவும் முற்றுத் தொழிலுமுடைய இறைவன் தன்மையைப் பொருந்தும்படி செய்த குருவுடைய பெரிய தோருதவியை அதன் பின்னர் மறக்குமாயின் அவ்வாறு மறத்தல் இதற்கு முன் அறியாமை யால் மறந்த குற்றம் போலத் தீர்க்கப்படுந் தன்மையுடையதோர் குற்றமன்றாகலானும், முன்னவன்தானே தானாச் செய்தும் தைவம் என்றுந் தைவமே மான்தொழுகையே வலி - முதல்வன் தானே குரு மூர்த்தங் கொண்டெழுந்தருளி வந்து உயிரைத் தானாகும் வண்ணஞ் செய்தாலும் இதுவரையுந் தனக்குச் சுதந்திரமின்றி முதல்வனது உபகாரத்தையின்றி ஒன்றையும் செய்ய முடியாததாய் அடிமை யாயிருந்த உயிர் எக்காலத்தும் அவ்வா றடிமையேயாகு மாதலாலும் இறைவன் தன்மையை அடையச் செய்த அப்பெரியோனை வழிபடுதலே அவ்வுயிருக்கு வலிமையைத் தருவதாகும் எ-று.

தமது முதல்வன்றானே குருவாதலால் இவ்வெண்பாவில் தான் தானாச் செய்தானை யென்றும், ஞானந் தோன்றுவதற்கு முன்



மறந்தகுற்றம் அறியாமையால் நிகழ்ந்ததாதலால் நீக்கப்படுமென்றும், ஞானந் தோன்றியபின் வழிபடாத குற்றம் நீக்கப்படுவதன் றென்றுங் கூறக்கருதி, "பின்னை மறத்தல் பிழை அலது" என்றுங் கூறினார். 'முன்னை மறத்தல்' என்பது வெண்பாவில் இல்லையானாலும் அது பின்னை மறத்தல் என்றதனாற் பெறப்பட்டது. "எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்றதன் கருத்தை நோக்கி வழிபாடு செய்யவில்லை யானால் உய்வில்லையெனக் கூறியது மாகும்.

பிழையலது என்றதைப் பிழையலதும் எனப் பாடபேதங் கொண்டு, இக்குற்றம் பிழையாதலன்றியு மெனக் கூறுவாருமுண்டு. முன்னவனே என்றதிலுள்ள ஏகாரம் அசை. மானே என்றதிலுள்ள ஏகாரமும் தைவமே என்றதிலுள்ள ஏகாரமும் தானே என்றதிலுள்ள ஏகாரமும் தேற்றப் பொருளில் வந்தன. 'தானே தானாச் செய்தும்' என்ற இடத்தில், செய்தால் என்றிருக்க வேண்டியது செய்து எனத்திரிந்து நின்றது. தானாச் செய்தும் என்றதிலுள்ள உம்மை ஆன்மாவைத் தானாகச் செய்யுஞ் சிறப்பைக் குறித்தலாற் சிறப்பும்மை.

தான் தானாச் செய்தல், எதை எதைப் பற்றினும் அதுவதுவாய் நிற்குந் தன்மையுடைய உயிர் இறைவனை அறிந்த விடத்து அவ்வுயிரை எண்குணங்களால் நிறையச் செய்து, அதைத் தன்வண்ணமாகச் செய்தல். அங்ஙனம் உயிரைத் தன்வண்ணமாகச் செய்தவிடத்தும் 'உயிர் தானும் சிவானுபவ மொன்றினுக்கே யுரித்து' எனக் கூறக் கருதி, தைவமென்றுந் தைவமே என்றார்.

தைவம் - தேவனது உடைமை.

மானே என்ற இடத்தில் ஐ உருபு தொக்கு நின்றது. அதை விரித்து மானையே தொழுகை வலி எனக் கொள்க. மான் என்றது மஹான் என்ற வடமொழியின் திரிபு. மகான் என்ற இடத்தில் அகரச் சுட்டு வருவித்து, தான் தானாச் செய்த அம்மகானைத் தொழுதல் வலி என்க. தொழுகை வலியைத் தருமென்று கூற வேண்டியதைத் தொழுகை வலி என்று உபசாரமாகக் கூறினார்.

இவ்வதிகரணத்திற் கூறப்பட்ட உதாரண வெண்பா மூன்றாலும் எல்லா இடங்களிலும் சிவன் நிறைந்திருப்பினும் அவனை வழிபடுவதற்கு அவன் விளங்கித் தோன்றும் இட விசேடமும் பெறல் வேண்டுமென்பதை வலியுறுத்துமுகமாக, முறையே

சிவலிங்கத்தையும் சிவபத்தர் வேடத்தையும் சிவதேசிகர்களையும் அறிந்து வழிபடுமாறு கூறப்பட்டது.

**இந்நூலுக் கதிகாரி இவர் எனக் கூறுஞ் செய்யுள்.**

***சிவமென்னு மந்தர சிந்தைநேர் நோக்கப்***
***பவமின்றாங் கண்வா சகத்திற் - சிவமுண்டா***
***மொன்று மிரண்டு மலத்தார்க்கிங் கொண்குருவா***
***வின்றிந் நூன் மும்மை மலர்க்கு***

இவ்வாறு சிவாகமத்துட் கூறப்படும் ஞானபாதப் பொருளெல் லாவற்றையும் பொதுவதிகாரம் உண்மையதிகாரமென இருவகைப் படுத்திப் பிரமாணவியல் இலக்கணவியல் சாதனவியல் பயனியலென நான்கியலாக வைத்துப் போதிப்பதாகிய இச்சிவஞானபோத நூலைக் கொள்ளுதற்குரிய அதிகாரிகள் இவரென உணர்த்துதற் கெழுந்தது இச்செய்யுள்.

**கொண்டு கூட்டு :** சிவம் என்னும் அந்தர ஒன்றும் இரண்டும் மலத்தார்க்குச் சிந்தை நேர் நோக்கக் கண் வாசகத்தின் பவம் இன்றாம் சிவம் உண்டாம் மும்மை மலர்க்கு இங்கு ஒண்குருவால் இன்று இந்நூல்.

**இ-ள் :** சிவம் என்னும் அந்தர - இறைவன் தான் தானாச் செய்ததனால் சீவனென்னுந் தன்மையி னீங்கிச் சிவமென்றோதப்படும் வேதாந்தத் தெளிவாகிய சித்தாந்தத்தையுடைய மாணவகனே, ஒன்றும் இரண்டும் மலத்தார்க்கு- ஒருமலமுடைய விஞ்ஞானா கலர்க்கும் இரண்டு மலமுடைய பிரளயாகலர்க்கும், சிந்தைநேர் நோக்கக் கண் வாசகத்தின் பவம் இன்று ஆம் சிவம் உண்டாம் - முறையே அறிவின்கண் அருட்பார்வையால் நோக்குதலாலும் மான் மழு நாற்புயங்களையுடைய தேவகுருவாய் முன்னின்று செய்யுந் திருநோக்கம் பரிசம் வாக்கு எனப்படுந் தீக்கைகளாலும் பிறவிக் கேதுவாகிய பசுத்தன்மை நீங்கிச் சிவத்துவம் விளங்குமாதலால், மும்மை மலர்க்கு இங்கு ஒண்குருவால் இன்று இந்நூல் - விஞ்ஞானாகலர் பிரளயாகலரின் வேறாகிய மும்மலமுடைய சகலருக்கே இவ்வுலகத்தில் அநுபவமுடைய தேசிகரால் இச்சிவ ஞானபோத நூல் போதிக்கப்படும் எ-று.

அந்தம் - வேதாந்தம், அந்தரம் சிந்தாந்த மாதலால் அதனைப் பெற்றவரது பெருமையைக் கூறுவதற்காக, 'சிவமென்னுமந்தர' என்றார். சிவமென்னும் என்றதில், 'படு' என்னுஞ் சொல் தொக்கு நின்றது. அதை விரித்து, 'சிவமென்றோதப்படும்' என உரை செய்யப்பட்டது.

சிந்தை - அறிவு சிந்தை என்ற இடத்தில் 'கண்' உருபை விரித்து அறிவின்கண் என்க. நேர்நோக்குதல் விஞ்ஞானாகலருக்கு முன்னைய மருட்பார்வையை மாற்றி அருட்பார்வையால் நோக்குதல். நோக்க என்றதை நோக்குதலால் எனக் கொள்க.

பிரளயாகலருக்குரிய கண் வாசகங்களாகிய நயன தீட்சை வாசக தீட்சைகளைக் கூறியதலால் இனம் பற்றிப் பரிச தீட்சையும் கொள்ளப்படும்.

பவம் - பிறப்பு, இவ்விடத்திற் பவம் என்பது பவத்துக் கேதுவான பசுத்துவத்தைக் குறித்தலால் ஆகுபெயர்.

இந்நூல் அனுபவமுடைய தேசிகரால் உப்தேசிக்கப்பட்டா லன்றி விளங்காதெனக் கூறக்கருதி, ஒண்குருவால் என்றார். 'ஒண்குருவால் இன்றிந் நூல்' என்றது முடிவு பெறுவதற்கு இன்னொரு சொல்லை அவாவி நிற்றலால், அந்த அவாய் நிலை காரணமாக, 'போதிக்கப்படும்' என்பது வருவிக்கப்பட்டது.

'இன்றிந்நூல்' என்பது இந்நூல் என்னும் பொருளையே தருகின்றது. அதற்கு இக்காலத் துரைக்கப்படும் நூலெனப் பொருள்கொள்ளினும் பொருந்தும். இன்று என்பதற்கு இக்காலத்து எனப் பொருள் கொள்ளாலா மென்பதை, இதன்பின் வரும் வெண்பாவில் 'தானுரைத்தான் ஏது திருட்டாந் தத்தாலின்று' எனக் கூறப்படுவதாலறிக. மும்மை என்றது இச்செய்யுளில் மூன்று என்னும் எண்ணைக் குறிக்கின்றது. இது எதுபோலவெனில், தெரி மாண் டமிழ் மும்மைத் தென்னம் பொருப்பன் என்றதில் மும்மை என்பது மூன்று என்னும் எண்ணைக் குறிப்பது போலாகும்.

**நான்காவது ஒழிபு அதிகரணம் முற்றிற்று.**

**பன்னிரண்டாஞ் சூத்திரம் முற்றிற்று.**

**பயனியல் முற்றிற்று.**

**இரண்டாவது உண்மையதிகாரம் முற்றிற்று.**

★★★

# பாயிரம்

***எந்தை சனற்குமர னேத்தித் தொழவியல்பாய்***
***நந்தி புரைத்தருளு ஞானநூல் - சிந்தைசெய்து***
***தானுரைத்தான் மெய்கண்டான் றாரணியோர் தாமுணர***
***வேதுதிருட் டாந்தத்தா வின்று.***

**இ-ள் :** எந்தை சனற் குமரன் - என்தந்தையாகிய சனற்குமார முனிவன் முதலிய முனிவர் கணங்கள், ஏத்தித்தொழ - துதித்து வணங்க, நந்தி - சீகண்ட பரமேசுரனிடத்துச் சிவஞானபோத நூலைக் கேட்டருளிய நந்தி பெருமான், இயல்பாய் - தான் கேட்டவாறே, உரைத்தருளும் - உபதேசித்தருளிய, ஞானநூல் - சிவஞானபோதமாகிய வடநூலை, சிந்தை செய்து - பரஞ்சோதி முனிவரிடம் கேட்டவாறே சிந்தித்து, தாரணியோர் தாமுணர - தமிழ் நாட்டார் அறிந்துய்தற் பொருட்டு, ஏது திருட்டாந்தத்தால் - மேற்கோள் ஏது திருட்டாந்தங்களுடன், இன்று - இக்காலத்தில், மெய்கண்டான் றானுரைத்தான் - மெய்கண்ட தேவர் மொழி பெயர்த்துக் கூறி வார்த்திகப் பொளிப்புரையுஞ் செய்தருளினார் எ-று.



# செய்யுள் முதற் குறிப்பு



**நூலாசிரியரைப் பற்றி.....**

நீண்டகாலமாக இந்துசமய தமிழ் இலக்கிய, அரசியல் கட்டுரைகளை எழுதி வருபவரான திரு.ஆ.நடராசா அவர்கள் இதுவரை பத்து இந்துசமய நூல்களை ஆக்கியுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

1996, 1997, 1999ம் ஆண்டுகளில் இந்துசமய கலாசார அலுவல்கள் திணைக்களத்தினால் நடாத்தப்பட்ட, அருள்நெறி விழாவில், இவரது சமய இலக்கியப் பணியினைப் பாராட்டிப் பாராட்டுப் பத்திரமும் பொற்கிளியும் மேற்படி இந்துசமய கலாசார திணைக்களத்தினால் வழங்கிக் கௌரவிக்கப்பட்டார்.

மேலும் 1978ஆம் ஆண்டு நடாத்தப்பட்ட தந்தை செல்வா நினைவுக் கட்டுரைப் போட்டியினை "சுதந்திரன்" பத்திரிகை நடாத்தியபோது, "இலங்கை அரசியலில் தந்தை செல்வா ஏற்படுத்திய தாக்கங்கள்" என்ற தலைப்பில் எழுதப்பட்ட இவரது கட்டுரைக்கு முதற்பரிசு கிடைத்தது.

வவுனியா மெய்கண்டார் நிறுவனமும் கச்சியப்ப சிவாச்சாரிய கலாசார பீடமும் இணைந்து 2002ம் ஆண்டில் "சைவசித்தாந்த கலாநிதி" என்கின்ற பட்டத்தை வழங்கி இவரைப் பெருமைப்படுத்தின.

அத்துடன் ஈழநாடு அனுசரணையுடன், யாழ் இலக்கிய வட்டம் நடாத்திய மதுரகவி இ.நாகராசன் நினைவுக் குழந்தைப் பாடல் தொகுப்புப் போட்டியில் பாராட்டுப் பெற்றார்.

ஆசிரியரின் முக்கியமான சேவையில் குறிப்பிடத்த அம்சம் சைவசித்தாந்த வகுப்புக்களைத் தாமே முன்னின்று பல ஆண்டுகாலமாக நடாத்தி வந்துள்ளமையாகும்

தற்போது தமது உடல் நலிவினைப் பொருட்படுத்தாது "சிவஞானபோதச் சிற்றுரை" என்கின்ற எளிய தமிழ் நடையிலான அரிய நூலை எழுதியுள்ளார். அனைத்து இந்து மக்களும் சிவஞானச் சிந்தனையூட்டும் இந்நூலினை வரவேற்பார்கள் என எதிர்பார்க்கின்றேன்.

சாந்தி நாவுக்கரசன்
பணிப்பாளர்
இந்துசமய, கலாசார அலுவல்கள் திணைக்களம்

ISBN 978-955-99808-1-0

விலை : 400.00